# முதலாம் இராசராச சோழன்

RAJA RAJA-I

க. த. திருநாவுக்கரசு



பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—643

# முதலாம் இராசராச சோழன்

(திருத்தப்பட்ட பாடத் திட்டத்தின்படி வெளியிடப்படுகிறது)

ஆசிரியர்
க. த. திருநாவுக்கரசு, எம்.ஏ.(தமிழ்),
எம்.ஏ.(வரலாறு), எம்.லிட்.,
இணைப் பேராசிரியர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# அணிந்துரை

**திரு. இரா. நெடுஞ்செழியன்**
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினைந் தாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பட்டப் படிப்பு வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன் வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலா சிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே, மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரி யர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழி லேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறு வதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும், சென்னைப் பல்கலைக் கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப் பிட்டுச் சொல்ல வேண்டும்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டம் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூல நூல்கள் மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளி யிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான **'முதலாம் இராசராச சோழன்'** என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **643**ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **678** நூல்கள் வெளி வந்துள்ளன. இந்நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச் சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும், கலையியற் பாடங்களை யும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளரவேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ் எங்கும் தமிழ்' என்ற குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு, தமிழகத்து ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# பொருளடக்கம்

## பிற்சேர்க்கை

# 1. வரலாற்றிற்குரிய அடிப்படைச் சான்றுகள்

பிற்காலச் சோழ மன்னரின் வரலாற்றை ஒரு நெடுங்கதை எனலாம். தமிழக வரலாற்றில், அது பொலிவு மிக்க ஒரு பகுதியாகும்; இந்திய வரலாற்றில் அது ஒளிமிக்க ஓர் இயலாகும். உலக வரலாற்றில் அது கவர்ச்சிமிக்க ஒரு பொன்னேடாகும். அப் பொன்னேட்டை ஏரும் எழிலும் மிக்கதாக விளங்கச் செய்த வேந்தன் இராசராசன் எனில், அது தவருகாது. அவனுடைய வாழ்வையும் வரலாற்றையும் வரைவதற்கு உதவி புரியும் அடிப் படைச் சான்றுகள் பலவகையாகும். அவற்றை நாம் ஆறுவகை யாகப் பாகுபடுத்திக் கூறலாம். அவை,

| | |
|---|---|
| கல்வெட்டுகள், | தொல்பொருள் சின்னங்கள், |
| செப்பேடுகள், | இலக்கியங்கள், |
| பழைய காசுகள், | வெளிநாட்டாரின் குறிப்புகள் |

என்பனவாகும். அவை, இராசராசனின் வரலாற்றை வரை வதற்குப் பயன்படும் விதத்தை இங்கு நாம் காணலாம்.

## கல்வெட்டுகள்

ஒரு நாட்டின் வரலாற்றை வரைவதற்குப் பேருதவியாக இருப்பன கல்வெட்டுகள். குறிப்பிட்ட ஓர் அரசன் வாழ்ந்த காலத்தில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகள், அவனைப் பற்றிய செய்திகள் பலவற்றை அறிவிப்பதோடு, அக்காலத்திய மக்கள் அவனைப்பற்றி என்ன கருதினர்கள் என்பதையும் குறிப்பாகத் தெரிவிக்கின்றன.

சோழப் பேரரசரின் வரலாற்றை அறிவதற்குப் பெரிதும் துணையாக இருப்பன ஆயிரக்கணக்கான கல்வெட்டுகளேயாகும். சோழருடைய ஆட்சியின் சீரையும் சிறப்பையும், வலிவையும் பொலிவையும் எடுத்துரைக்கும் கல்வெட்டுகள் கோதாவரி ஆறு

முதல் ஈழம் வரை பரவலாகக் கிடைத்துள்ளன. அவற்றுள் உலகப் புகழ் வாய்ந்த உத்தரமேரூர்க் கல்வெட்டுகள் இராச ராசனுடைய மூதாதையர் காலத்தில், ஊராட்சி முறை அமைப்பு எவ்வாறு நடைபெற்றது என்பதைத் தெளிவுறுத்துகின்றன. சோழர் ஆட்சியில் பொறிக்கப்பட்ட உக்கல் கல்வெட்டும் திருச் சேய்ஞ்ஞலூர்க் கல்வெட்டும் ஊராட்சி முறையின் வளர்ச்சியை யும், அதன் நடைமுறையில் உண்டான சிக்கல்களையும் புலப்படுத்து கின்றன.

இராசராசன் காலத்திய தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டுகள் சைவ சமயம் சிறந்தோங்கிய வரலாற்றை அறியப் பேருதவி புரிகின்றன; இறைவழிபாட்டோடு முத்தமிழும் முறை யாகப் பின்னிப் பிணைந்தும், இணைந்தும் இழைந்தும் வளர்ந்த வரலாற்றை விரித்துரைக்கின்றன.

இவையல்லாமல், நாட்டின் பல்வேறு பகுதிகளில் இராச ராசனின் கல்வெட்டுகள் பல கிடைத்துள்ளன. அவனுடைய வீர வரலாற்றை விளக்கும் வரலாற்றுத் துணுக்குகளாக அவை பயன்படுகின்றன. இராசராசன் காலம் முதல், தமிழ் நாட்டுக் கல்வெட்டு அமைப்பில் புதியதொரு திருப்பம் உண்டானதை நாம் காணுகின்றோம். தன் ஆட்சியின் தொடக்கத்தில் இராசராசன் 'கோவிராஜ ராஜகேசரி' என்று தன் கல்வெட்டைத் தொடங்கியுள்ளான். பின்னர், தன் ஆட்சியில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கால வரன்முறைப் படுத்தி, இனிய தமிழில் 'மெய்க்கீர்த்தி' யாக அவன் வெளியிட்டுள்ளான். அவை, அரசியல் வரலாற்றை வரைவதற்கு உறுதுணையாக உள்ளன. இராசராசனின் மெய்க்கீர்த்தி 'காந்தளூர்ச்சாலை கலமறுத் தருளிய' என்றும், 'திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்' என்றும் தொடங்குகின்றன. இம் மெய்க்கீர்த்தி முறையைப் பின்வந்த அரசர்கள் பலரும் போற்றிப் பின்பற்றி யுள்ளனர்.

சேர, பாண்டிய மன்னரின் கல்வெட்டுகள் சில, இராச ராசனின் வரலாற்றிற்கு ஒளியூட்டுகின்றன. இவற்றைப் போன்றே, தமிழகத்திற்கு வடக்கிலும் தெற்கிலும் ஆட்சி புரிந்த அரச மரபுகளின் பிற மொழிக் கல்வெட்டுகள் சில, நாம் எதிர் பாராத செய்திகள் சிலவற்றைத் தெரிவிக்கின்றன. மேலைச் சாளுக்கியரின் கல்வெட்டுகளும், கீழைச்சாளுக்கியரின் கல்வெட்டு களும், கங்கருடைய கல்வெட்டுகளும், இராஷ்டிரகூடருடைய சாசனங்களும் சோழருடைய கல்வெட்டுகளால் அறியப்படும் பல செய்திகளை உறுதிப்படுத்துகின்றன. அல்லது சில மாறுதல் களோடு கூடிய புதிய செய்திகளைத் தெரிவிக்கின்றன.

## செப்பேடுகள்

கல்வெட்டுகளைப் போன்று, பெரிதும் பயன்படுவன செப்பேடுகள். சோழப் பெருவேந்தர்கள், தாங்கள் வழங்கிய அறக்கட்டளைகளையும், இறையிலி நிலங்களையும் செப்புத் தகடுகளில் பொறித்து வழங்கியுள்ளனர். அத்தகடுகளை ஒரு கம்பியால் இணைத்து, தங்கள் இலச்சினையை அதன்மீது பொறித்து அவற்றை அவர்கள் அளித்துள்ளனர். பத்துக்கும் மேற்பட்ட தகடுகளில், தங்கள் ஆணையைப் பொறித்து வெளியிட்டவர்கள் நம் சோழ மன்னர்களாவர். முதலாம் இராசராசனின் லீடன் செப்பேடு இருபத்தொரு செப்புத்தகடுகளில் எழுதப்பெற்றுள்ளன. முதலாம் இராசேந்திர சோழனின் திருவாலங்காட்டுச் செப்பேடு, இராசராசனின் வரலாற்றை அறிவதற்குப் பெரிதும் பயன்படுகிறது. அது முப்பத்தொரு செப்புத்தகடுகளைக் கொண்டது; 816 வரிகளில் செய்திகள் அதில் பொறிக்கப் பெற்றுள்ளன. அதன் முற்பகுதி வடமொழியிலும் பிற்பகுதி தமிழிலும் வரையப்பெற்றுள்ளன. சங்க காலம் முதற்கொண்டு தமிழகத்தை ஆட்சி புரிந்த சோழ மன்னர்களின் பட்டியலை இயன்றவரை அது கால வரன்முறைப்படுத்திக் கூறுகிறது. இராசராசனின் வீர வரலாற்றையும், அவனுடைய முன்னோர்களின் அரும் பெருஞ்சாதனைகளையும் இலக்கிய மணங் கமழும் வகையில் அது எடுத்துரைக்கிறது.

இராசராசனின் பெரிய லீடன் செப்பேடு எனப்படும் ஆனைமங்கலச் செப்பேடும் அக்காலத்திய சமுதாய வரலாற்றையும், சமய நிலையையும் தெரிந்துகொள்ளப் பயன்படுகின்றன. முதலாம் இராசேந்திரனுடைய கரந்தைச் செப்பேடு 55 தகடுகளைக் கொண்ட மிகப் பெரிய செப்பேடாகும். அதில் காணப்படும் செய்திகள் இராசராசன் காலத்தை ஓரளவு படம் பிடித்துக் காட்டுகின்றன. இதைப்போன்ற பிற்காலச் சோழ மன்னரின் செப்பேடுகள் சில, அம்மரபின் செஞ்ஞாயிறாக விளங்கும் இராசராசனின் வரலாற்றை அறிவதற்கு ஓரளவிற்கு உதவி புரிகின்றன.

## பழைய காசுகள்

ஒரு நாட்டின் வரலாற்றை வரைவதற்கு அந்நாட்டு அரசர்கள் வெளியிட்டுள்ள பழைய காசுகளால் நாம் சில செய்திகளைத் தெரிந்து கொள்ள முடியும். இராசராசனுடைய வரலாற்றை அறிவதற்கு அக்காலத்தில் வெளியிடப்பட்ட காசுகள் ஓரளவிற்குத் துணையாகின்றன. சோழன் விசயாலயனின்

மரபிலே வந்த மன்னர்களுள், உத்தமச் சோழனுடைய ஆட்சிக் காலம் முதற்கொண்டு வெளியிடப்பட்டுள்ள காசுகள் நமக்குக் கிடைத்துள்ளன. உத்தமச் சோழனின் காசுகள் பொன், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்களால் செய்யப்பட்டவையாகும்.

மாவேந்தன் இராசராசன் வழங்கிய காசுகள் சிறப்பு மிக்கன. அவை இரண்டு வகைப்படும். முன்பக்கத்தில் புலி, இணைக்கயல், வில் ஆகிய மூன்று சின்னங்களும், அதன் கீழ் 'ஸ்ரீராஜராஜ சோழ' என்று வடமொழி நாகரி எழுத்துகளும் பொறிக்கப் பட்டவை ஒருவகையாகும். மற்றொரு வகைக் காசில், ஒரு பக்கம் ஈழ மனிதனுடைய நின்ற உருவமும், மறுபக்கம் ஈழ மனிதனின் அமர்ந்த வடிவமும் காணப்படுகின்றன. வீற்றிருக்கும் மனித னுடைய கையின் கீழ் 'ஸ்ரீராஜராஜன்' என்று நாகரி எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன. இவ்வகைக் காசை 'ஈழக்காசு' என்பர். அதாவது ஈழ நாட்டில் (இலங்கையில்) வழங்கிய காசுகள் என்பது இதற்குப் பொருளாகும். ஈழத்திற்கும் தமிழகத்திற்கும், இராசராசன் காலத்திற்கு முன்பிருந்தே நெருங்கிய தொடர்பு இருந்து வந்தது. இராசராசன் ஈழத்தின் வடபகுதியைக் கைப் பற்றித் தன்னுட்சிக்குக் கொண்டுவந்த பிறகு, இத்தகைய காசுகளை அவன் வெளியிட்டிருக்கலாம். கல்வெட்டுகளில் 'ஈழக்காசு' என்று குறிப்பிடப்படுவதைப் 'பொற்காசு' என்று பொருள் கொள்ளுவதைவிட, 'ஈழத்துக் காசு' என்று பொருள் கொள்ளுவதே சாலவும் பொருந்தும்.

கல்வெட்டுகளில் 'இராசராசன் மாடை' 'இராசராசன் காசு' என இரு வகைக் காசுகள் குறிப்பிடப்படுகின்றன. அவை இரு வகை நாணயங்களாக இருந்திருக்கலாம். அவற்றிற்குப் பொதுப் பெயர் 'பொன்' என்பதாகும். மாடை என்பது ஒரு 'கழஞ்சு எடையுள்ளதும் ஒன்பதரை மாற்றுடையதும் ஆகிய செம் பொன்னல் செய்யப்பட்ட நாணயம்' என்று காசியல் வல்லுநர் கருதுகின்றனர். ஈழக்காசுகள் அரைக்கழஞ்சு எடையும், மாடை யைப் போன்ற மாற்றும் உடையனவாக இருந்தன.

வெள்ளி நாணயங்கள் சில, இராசராசன் காலத்தில் வழக்கி லிருந்தன. அவை இருவகையாகும். ஒரு கழஞ்சு எடையுள்ள ஒரு சில காசுகளும் அரைக்கழஞ்சு எடையுள்ள வேறு சில காசு களும் கிடைத்துள்ளன. 'சோழ நாராயணன்' என்னும் பெயருடன் காணப்படும் வெள்ளி நாணயம் நம் இராசராச னுடைய காசாக இருக்கலாம் என்பது சர் வால்டர் எலியட், டாக்டர் ஹூல்ஷ் போன்றோரின் கருத்தாகும்.

தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள கல்வெட்டுகளில் 'அக்கம்' என்ற பெயருடைய நாணயம் சுட்டப்படுகிறது. ஆயினும், இது பொன்னால் செய்யப்பட்டதா அல்லது வெள்ளியால் செய்யப்பட்டதா என்பது உறுதியாகத் தெரியவில்லை.

## தொல்பொருள் சின்னங்கள்

இராசராசனின் வரலாற்றை அறிவதற்குத் துணையாகவுள்ள தொல்பொருள் சின்னங்களுள் முதன்மையானது அவன் எழுப்பிய தஞ்சைப் பெருவுடையார் கோயிலாகும். அவன் காலத்தில் வாழ்ந்த அரச குடும்பத்தினரும், குறுநில மன்னரும், படைத் தலைவரும், அரசியல் அதிகாரிகளும் பல கோயில்களைக் கட்டியுள்ளனர். அக்கோயில்களும் ஓரளவிற்கு நமக்கு உதவியாக உள்ளன. கோயில்களைத் தவிர, சிறப்பாகக் குறிப்பிடத்தக்க அக்காலத்திய தொல்பொருள் சின்னங்கள் வேறொன்றும் கிடைக்கவில்லை.

அக்கோயில்கள் அக்கால வரலாற்றை அறிவதற்குப் பெரிதும் பயன்படுகின்றன. அவை நமக்கு ஆர்வத்தை யூட்டுவனவாகவும் அறிவுறுத்துவனவாகவும் உள்ளன. விமானங்களும், அவற்றில் உள்ள சிற்பங்களும் சோழப் பேரரசரின் கலையுணர்வையும் கற்பனைத்திறனையும் உலகிற்கு உணர்த்துகின்றன. கோயில்களின் சுவர்களிலும் படிகளிலும் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகள் அக்காலத்திய வரலாற்றுப் பதிவேடுகளாக மக்களுக்குப் பல செய்திகளைத் தெரிவிக்கின்றன. கலைக்கூடங்களாகவும், சமுதாய நிலையங்களாகவும் கோயில்கள் சிறப்புற்றிலங்கியதை அவற்றிலுள்ள கல்வெட்டுகள் கூறுகின்றன.

அக்காலத்திய அரண்மனைகளின் அடிச்சுவடுகளோ, கோட்டைகளின் இடிபாடுகளோ இன்று நமக்குக் கிடைக்கவில்லை. வருங்காலத்தில் விரிவாகவும் ஆழமாகவும் அகழ்வாராய்ச்சி செய்யப்படுமானால், இராசராசன் காலத்திய தொல்பொருள் சின்னங்கள் பல கண்டுபிடிக்கப்படலாம்; அப்பொழுது பல புதிய செய்திகள் நமக்குக் கிடைக்கலாம்.

## இலக்கியங்கள்

கல்வெட்டுகளுக்கு அடுத்தாற்போல் இராசராசனின் வரலாற்றை வரைவதற்குப் பேருதவி புரிவன இலக்கியங்களேயாகும். இலக்கியச் சான்றுகள் இரு வகைப்படும். நம்முடைய தாய்மொழியில் உள்ள இலக்கியச் சான்றுகள் முதன்மையானவை.

பிற மொழி இலக்கியங்களில் இராசராசனைப் பற்றிய செய்திகள் சில இடம் பெற்றுள்ளன. அவை இரண்டாம் வகையைச் சேர்ந்தவையாகும்.

இராசராசனின் சீரையும் சிறப்பையும் நேரடியாகப் படம் பிடித்துக் காட்டும் தமிழ் இலக்கியங்கள் மிகச் சிலவேயாகும். அவற்றுள் கருவூர்த்தேவர் பாடியருளிய தஞ்சை இராசராசேச் சுரம் பற்றிய திருவிசைப்பாவே முதன்மையானதாகும். அந் நூலால் தஞ்சைப் பெருவுடையார் கோயிலின் பலவகைச் சிறப்புகளை நாம் அறிய முடிகிறது.

நம்பியாண்டார் நம்பிகள் இயற்றிய சிற்றிலக்கியங்கள் பத்து, பதினோராந் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன. அவர், இராச ராசன் காலத்தில் வாழ்ந்தவர். அவருடைய நூல்களிலிருந்து அன்றைய சமய, சமுதாய நிலைகளை நாம் ஓரளவிற்கு அறிய முடிகிறது.

இராசராசனின் வாழ்வையும் வரலாற்றையும் உணர்த்தும் இரு நூல்கள் பண்டைக் காலத்தில் இருந்தன. அவை இன்று கிடைக்கவில்லை. அவை இராசராசேசுவர நாடகம், இராசராச விசயம் என்பனவாகும்.

முதலாம் குலோத்துங்கனின் கலிங்க வெற்றியைப் போற்றிப் பாராட்டும் இலக்கியம் கலிங்கத்துப் பரணி. இதைச் செயங் கொண்டார் இயற்றியுள்ளார். இந்நூலுள் 'இராசபாரம்பரியம்' என்றொரு பகுதியுண்டு. பண்டைய சோழ மன்னர்களின் வரலாற்றையும், விசயாலயனுடைய மரபினரின் கீர்த்தியையும் அப்பகுதியில் நாம் காணலாம். பண்டைய சோழ மன்னர்களின் வரலாறு தெளிவற்றதாக உள்ளது. ஆயினும், இராசராசனைப் பற்றிய செய்திகள் விளக்கமாக அதில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

ஒட்டக்கூத்தரால் இயற்றப்பட்ட 'மூவருலாவில்' இராச ராசனின் பேராண்மை பாராட்டப்படுகிறது. இவ்வாசிரியர் இயற்றிய 'குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ்' ஓரிரு புதிய செய்தி களைத் தந்துதவுகிறது. இவற்றைத் தவிர, தமிழிலோ, சமஸ் கிருதத்திலோ இராசராசன் வரலாற்றைப் பற்றிய குறிப்புகளைக் கொண்ட நூல்கள் இருப்பதாகத் தெரியவில்லை.

## வெளிநாட்டாரின் குறிப்புகள்

இராசராச சோழன் காலத்திய வரலாற்றை அறிவதற்குத் தேவையான கருத்துகள் வெளிநாட்டாருடைய பயணக்குறிப்பு

களில் ஒன்றிலும் இடம் பெறவில்லை. ஆயினும், அக்காலத்திய சமுதாய நிலையையும், நீதி நிர்வாக முறையையும் பற்றிய செய்திகள் சிலவற்றைச் சீன வரலாற்றுக் குறிப்பேடுகள் தெரிவிக்கின்றன. மற்றும், அவற்றுள், சோங்கு (Song) அரச மரபினரின் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 1015ல்) இராசராசன் (Lo-ts'a-lo-tsa,) சீனப்பேரரசருக்கு, தூதர் குழு ஒன்றை அனுப்பினன் என்னும் செய்தி ஒன்று, சீன வரலாற்றுக் குறிப்பேட்டில் காணப் படுகிறது. மற்றும், தென்கிழக்கு ஆசிய நாடுகளோடு சோழப் பெருவேந்தர் கொண்டிருந்த தொடர்புகளையும் அவற்றிலிருந்து நாம் அறிய முடிகிறது.

இத்தகைய அடிப்படைச் சான்றுகளின் உதவியால்தான் ஓரளவிற்கு இராசராசனின் வரலாற்றைத் தெளிவாக நாம் அறிய முடிகிறது.

# 2. சோழர் குடியின் தொன்மையும் சிறப்பும்

இந்தியத் துணைக்கண்டத்தின் தென் பகுதி, பண்டைக் காலத்தில் 'தமிழகம்' என்னும் பெயரேடு சிறப்புற்று விளங்கியது. இன்று 'தமிழ்நாடு' என்று அதை நாம் சுட்டுகிறோம். தொன்றுதொட்டு வடக்கில் வேங்கடம் எனப்படும் திருப்பதி மலைகள் அதற்கு எல்லையாக இருந்துவந்தன. எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பு வரை மேற்கிலுள்ள அரபிக் கடல் அதற்கு மேற்கு எல்லையாக இருந்தது என்பதை இலக்கியங்களின் வாயிலாக அறிகிறோம். தெற்கில் குமரி முனையும், கிழக்கில் வங்காளக் கடலும் பண்டைக்காலம் முதல் எல்லைகளாக இருந்து வருகின்றன. இத்தீபகற்பப் பகுதியைக் குடபுலம், குணபுலம், தென்புலம் என்று மூன்று வகையாகப் பண்டைக் காலத்தில் பாகுபடுத்தி இருந்தனர். இவற்றை முறையே சேர, சோழ, பாண்டிய அரச மரபினர் ஆட்சி புரிந்து வந்தனர்.[1] அவர்கள் ஆட்சி புரிந்த பகுதிகள் சேர மண்டலம், சோழ மண்டலம், பாண்டிய மண்டலம் என்னும் பெயர் பெற்றிருந்தன. இவற்றுள் நடுநாயகமாக விளங்கும் சோழ மண்டலத்தை ஆட்சி புரிந்த அரச மரபினரே, 'சோழர்' எனப் போற்றப்பட்டனர்.

### சோழ நாட்டின் அமைப்பு

சோழ நாடு தஞ்சை, திருச்சிராப்பள்ளி, தென்னார்க்காடு மாவட்டங்களும் கீழைக் கடற்கரை வெளியும் சேர்ந்த பகுதியாகும். புதுக்கோட்டைக்குத் தெற்கில் ஓடும் வெள்ளாற்றினைத் தெற்கு எல்லையாகவும், தென் பெண்ணையாற்றை வடவெல்லையாகவும், விச்சிமலை, கொல்லிமலை, ஆன்பொருநை ஆறு ஆகிய

[1] வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு. (தொல். செய். 78)

வற்றை மேற்கு எல்லையாகவும் பெற்றிருந்த நிலப்பரப்பே சோழ நாடாகும்.[2]

பண்டைச் சோழ மன்னருடைய ஆட்சிக் காலத்தில், உறையூர் முதலில் தலைநகராகவும் காவிரிப்பூம்பட்டினம் துறைமுகமாகவும் விளங்கின. பின்னர், பூம்புகாரே தலைநகர மாகவும் கடற்கரைப் பட்டினமாகவும் சிறப்புற்றது. இப் பொழுது உறையூர், திருச்சிராப்பள்ளி நகரின் ஒரு பகுதியாக இருக்கிறது. பூம்புகார் எனப் புகழ் வாய்ந்த காவிரிப்பூம்பட் டினம், காவிரியாறு கடலில் கலக்குமிடத்து இருந்தது. கடல் கொந்தளிப்பின்போது அப்பட்டினம் பேரளவிற்கு அழிந்து போயிற்று. அத்துறைமுகப் பட்டினம் கி.பி. முதலிரு நூற்றாண்டுகளில் உலகப் புகழ் வாய்ந்ததாக விளங்கியது. இன்று காவிரிப்பூம்பட்டின[ம்] இருந்த இடத்தில், பழைய பெயருடைய சிற்றூர் ஒன்றுதான் இருக்கிறது.

சோழ நாடு சமவெளியில் இருக்கிறது. பெரிய மலைகளே இல்லாத, பெருநிலப்பரப்பாக விளங்குவது அதற்குரிய சிறப் பாகும். காவிரி, பல கிளையாறுகளாகப் பாய்ந்து அந்நாட்டை வளமுறச் செய்கிறது. நீர்வளத்தோடு நல்ல நிலவளமும் உடைய சோழ நாட்டைச் 'சோழநாடு சோறுடைத்து' என்று சான்றோர்கள் பாராட்டியுள்ளனர்.

விசயாலயன் மரபிலே வந்த இடைக்காலச் சோழ மன்னர்கள், தஞ்சாவூரினைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி புரிந்தனர். முதன் முதலாக விசயாலயனே தஞ்சைமா நகரை முத்தரையரிடமிருந்து கைப்பற்றி, அதனைத் தன் தலைநகராக்கிக் கொண்டான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடு[3] தெரிவிக் கின்றது. அவன், இந்நகரை விரிவுபடுத்திச் சிறப்புமிக்க தலை நகராக விளக்கமுறச் செய்தான் என்று கன்னியாகுமரிக் கல்வெட்டு[4] அறிவிக்கின்றது. இதனால், விசயாலயன் ஆட்சிக் காலம் (கி.பி. 850—71) முதற்கொண்டு தஞ்சாவூரே சோழப் பேரரசின் தலைநகராக விளங்கியது. இப்பொழுது அந்நகரத்தின் பெயராலேயே ஒரு மாவட்டம் தமிழகத்தில் உள்ளதை நாம் யாவரும் அறிவோம்.

தமிழகத்தில் நீர்வளமும், இயற்கை எழிலும் மிகுந்த பகுதி தஞ்சை மாவட்டம். இம்மாவட்டத்திற்குச் சிறப்பை அளித்து

[2] கடல்கிழக்குத் தெற்குக் கரைபொரு வெள்ளாறு
குடதிசையில் கோட்டைக் கரையாம்—வடதிசையில்
ஏணாட்டுப் பெண்ணை யிருபத்து நாற்காதஞ்
சோணாட்டுக்கு எல்லையெனச் செப்பு
(சோழமண்டலச் சதகம்: 8)

[3] S. I. I. Vol. No. 205.

[4] E. I. Vol. 18; No. 4.

வருவது காவிரியாறு. மேலணைக்கு அருகில் காவிரி இரண்டாகப் பிரிகிறது. ஒன்று காவிரி; மற்றொன்று கொள்ளிடம். இவற்றுள் காவிரியாறு தஞ்சை மாவட்டத்தில் நுழைந்தபின் பல கிளையாறுகளாகப் பிரிந்து பரவலாகப் பாய்ந்து ஓடுகிறது. எங்கும் வளமிக்க பயிர் பச்சைகள் செழித்து வளருகின்றன. இதனால் 'தமிழகத்தின் நெற்களஞ்சியம் தஞ்சை' என்னும் சிறப்பு இம்மாவட்டத்திற்கு உண்டாகி இருக்கிறது. இக்கிளையாறுகளுள் வெண்ணாறு, குடமுருட்டியாறு, அரசலாறு என்பன முதன்மையானவை. இவற்றுள் முதலிரண்டு ஆறுகளும் தஞ்சைமாநகரின் ஊடே பாய்ந்து செல்லுகின்றன. இதனால், தஞ்சை மாநகர் நிலவளத்தோடும் நீர்வளத்தோடும் சிறப்புற்றிலங்குகிறது. இவற்றின் விளைவாக அங்கு வாழும் மக்கள் மனவளமும் சிந்தனைச் சிறப்பும் பெற்று ஏற்றமுறுகின்றனர்.

## சோழரின் தொன்மை

வரலாற்று நூலின் ஒளிக்கதிர்கள், இந்திய நாட்டின் பண்டை வரலாற்றேட்டில் சுடர்விட்டு ஒளிரத் தொடங்கிய நாள் முதற்கொண்டு, தமிழகத்தில் சோழர்கள் ஆட்சிபுரிந்து வருகின்றனர், படைப்புக் காலந்தொட்டு இந்நாட்டை ஆண்டு வருகின்றவர் சேர, சோழ, பாண்டிய மரபினர் என்று நம்முடைய முன்னோர்கள் கருதினர்.[5] 'சோழன்' என்பது ஒரு குடிக்கண் பிறந்தவரைச் சுட்டும் என்று பன்னிரு பாட்டியல் குறிப்பதும்[6] இங்குக் கருதத்தக்கது.

வடமொழி இதிகாசங்களான இராமாயணம், மகாபாரதம் ஆகியவற்றுள் சோழ அரச மரபைப் பற்றிய குறிப்புகள் சில காணப்படுகின்றன. பாணினியின் இலக்கணத்திற்கு உரை விளக்கம் வரைந்தவர் காத்தியாயனர். தம்முடைய உரையில் சோழர் பெயரை அவர் மேற்கோளாகக் காட்டியுள்ளார்.[7] அவருடைய காலம் மௌரியப் பேரரசுக்கு முற்பட்ட நவநந்தரின் ஆட்சிக்காலம் என்று வடமொழி ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். அக்காலத்தை யொட்டி தமிழகத்திற்கும் வடநாட்டிற்கும் நேரடியான தொடர்புண்டாயிற்று எனலாம்.

5 குறள் 955, பரிமேலழகர் உரை.
6 குடிப்பெய ராவன கூறுங் காலைச்
சேரன் சோழன் பாண்டியன் என்றிப்
போல்வன பிறவும் பொருத்தங் கொளலே.
(பன்னிரு: 76)
7 Mukerji, R. K. : The Fundamental Unity of India, p. 54.

இந்திய வரலாற்றில் பொன்றுப் புகழ் பெற்று விளங்கும் முதற்பெரும் பேரரசன் அசோகன். அவனுடைய கல்வெட்டு களே இந்தியாவில் கிடைத்த கல்வெட்டுகளுள் மிகப் பழமை யானவை. அசோகனுடைய கற்சாசனங்களுள் இரண்டாவது கற்சாசனம் வரலாற்றுச் சிறப்புமிக்கதாகும். அதில் தென்னிந்திய அரச குடிகளைப்பற்றிய குறிப்புகள் தரப்பட்டுள்ளன. அசோக னுடைய பேரரசின் எல்லைக்கு அப்பால் சோழ, பாண்டிய, சத்தியபுத்திர, கேரள புத்திரரின் அரசுகள் இருந்தமை பற்றிய குறிப்பு ஒன்று அதில் காணப்படுகிறது.[8] மேலும், அசோக னுடைய பதின்மூன்றுவது கற்சாசனத்திலும் சோழ, பாண்டிய அரசமரபினரின் செய்திகள் பேசப்படுகின்றன.[9] போதி மாதவரின் நற்செய்தியைத் தமிழகத்தில் பரப்புவதற்குத் திருத் தொண்டர் சிலர் இந்நாட்டிற்கு அனுப்பப்பட்டமை அக் கற் சாசனங்களால் தெரியவருகிறது. மற்றும், அக்காலத்திலேயே தென்னுட்டு மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டிய மன்னர் மௌரியப் பேரரசின் ஆதிக்கத்திற்குட்படாது, தன்னுரிமைத் தனியரசுகளின் தலைவர்களாகத் திகழ்ந்தனர் என்பதும் தெரி கிறது. இக்குறிப்புகளால் சோழரின் அரசமரபு கி.மு. மூன்றும் நூற்றுண்டு அளவிலேயே, சிறப்புடன் விளங்கியமை புலனுகிறது.

தமிழ் இலக்கியத்துள் காலத்தால் முந்தியது தொல்காப்பியம். சற்றேறக் குறைய கி.மு. மூன்றும் நூற்றுண்டு அளவில் அது இயற்றப்பட்டிருக்கலாமென அறிஞர்கள் கருதுகின்றனர்.[10] அவ்விலக்கணத்தை இயற்றிய தொல்காப்பியனுர், சோழர் குடியின் அடையாளப் பூவான ஆத்தியைச் சுட்டியுள்ளார்.[11] இதனுலும், சோழ அரச மரபு தொன்மையானது என்னும் உண்மை உறுதிப்படுகிறது.

கிறித்துவ நூற்றுண்டின் தொடக்கத்தில் இயற்றப்பட்ட கிரேக்க நாட்டுக் கடலோடிகளின் பயணக் குறிப்பேடுகளில் தமிழ்நாட்டின் பல பகுதிகளைப் பற்றிய செய்திகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் சோழரைப் பற்றியும், அவர் களுடைய நாட்டைப் பற்றியும், அவர்களுடைய பட்டினங் களைப் பற்றியும் புகழ்மிக்க குறிப்புகள் காணப்படுகின்றன.

8 Sircar, D. C. (Ed.) : Inscriptions of Asoka, p. 47.

9 *Ibid*. p. 58.

10 வரதராசனர், மு., தமிழ் இலக்கிய வரலாறு, பக். 5,

11 தொல். புறத். 5., தொல்காப்பியத்துள் மற்ற இரு வேந்தரின் அடை யாளப் பூக்களும் குறிப்பிடப் பெற்றுள்ளன.

## குடிப்பெயரின் சிறப்பு

இவ்வரச மரபினருக்குச் 'சோழர்' என்னும் பெயர் எவ்வாறு வந்தது என்பதை இன்றைய நிலையில் தெளிவாக அறிந்து கொள்ள முடியவில்லை. அந்த அரச மரபிற்குரிய இயற் பெயராகவே அதைப் பண்டை அறிஞர்கள் கருதினர். ஆனால், இந்நூற்றாண்டைச் சேர்ந்த அறிஞர்கள் 'சோழன்' என்னும் பெயரைப் பலகோணங்களில் ஆராய்ந்துள்ளனர். கர்னல் ஜெரினி (Col. Gerini) என்பார், வடமொழியில் 'கருமை' எனப் பொருள் படும் 'காள' என்னும் சொல்லோடும், 'கோல' என்னும் சொல்லோடும் தொடர்புபடுத்தி அச்சொல்லை விளக்கியுள்ளார். திராவிடருக்கு முற்பட்ட பழங்குடி மக்கள் கோலர் (Kols) என்பவராவர். அவர்கள் கரிய நிறம் வாய்ந்தவர்கள். அவர் களுடைய ஒரு கிளையினரே 'சோழராக' இருந்திருக்கலாம் என்பது அவருடைய நம்பிக்கை.[12] இக்கருத்து மொழியியல் அடிப்படையிலோ, மானிடவியல் அடிப்படையிலோ ஆராய்ச்சிக் குப் பொருந்தி வரவில்லை. மற்றொரு சாரார், 'சோளம்' மிகுதி யாக விளைந்த நாட்டினை ஆண்ட அரசமரபிற்குச் 'சோளர்' என்னும் பெயர் அயலவரால் கொடுக்கப்பட்டிருக்கலாம்; அப் பெயரில் உள்ள 'ளகரம்' நாளடைவில் 'ழகர'மாகத் திரிந்திருக்க லாம் என்பர். அல்லது 'திருடன்' எனப் பொருள் தரும்'சோரன்' என்னும் வடமொழிச் சொல்லின் திரிபாகச் 'சோழர்' என்னும் பெயர் தோன்றி இருக்கலாம் என்பர் பந்தர்க்கார்.[13] முதலாவ தாக 'ளகர' வொலி 'ழகர' வொலியாகத் திரியும் என்னும் ஒலியியல் விதியை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்ட கருத்து இது. இந்த ஒலித்திரிபு முறையை நாம் உடன்படலாம். ஆனால், 'சோளம்' மிகுதியாக விளையும் நாடு என்று சோழ நாட்டைச் சுட்டுவது அவ்வாராய்ச்சியாளரின் அறியாமை யையே வெளிப்படுத்துகிறது. 'சோளம்' புன்செய் நிலத்திற் குரிய தானியம். சோழ நாடோ, நீர்வளமும் நிலவளமுமிக்க மருதநிலப் பகுதியாகும். அதில் நெல்தான் நெடுங்காலமாகப் பெரிதும் பயிரிடப்பட்டு வருகிறது. எனவே, இவ்விளக்கத்தை யாரும் ஏற்க வியலாது. மற்றும் 'திருடன்' என்று பொருள் கூறுவது, தமிழ் இனத்தவரை இழித்துப் பேச நினைப்போரின் இழி செயலாகும். மேலும், வல்லின 'றகர'ம் தான் 'ழகர' மாகத் திரியுமே யொழிய, இடையின 'ரகரம்' 'ழகர'மாகத் திரியாது என்னும் தமிழ் மொழியின் இயல்பினை அறியாதாரின் கூற்றாகவே இது கொள்ளத் தகும்.

[12] Gerini, Col. : Researches, pp.85-90.
[13] Bhandarkar, D. R. : Ancient India, pp. 8-9.

உறையூருக்குக் கோழியூர் என்று மற்றொரு பெயருமுண்டு. கோழியூரை ஆண்டவர் 'கோழியர்' எனப்பட்டனர். புறநானூற்று உரைகாரர் 'கோழி' என்னும், சொல்லிற்கு 'உறையூர்' என்றே உரையெழுதியுள்ளார். 'கோழியர்' என்ற சொல்லில் உள்ள பின்னண்ண ஒலியாகிய ககர ஒலி இடையண்ண ஒலியாகிய சகரமாக மாறும் இயல்புடையது. எனவே, கோழியர் என்னும் சொல்லில் இருந்து 'சோழியர்' சோழர் என்னும் சொற்கள் பிறந்தன எனலாம்[14] என்பது மற்றோர் ஆராய்ச்சியாளரின் கருத்தாகும்.

இவை யாவற்றையும்விட, மொழிநூல் அறிஞர் ஒருவர் தந்துள்ள விளக்கம் பேரளவிற்குப் பொருத்தம் உடையதாகத் தோன்றுகிறது. திராவிட மொழிகளுள் 'ஊகாரம்' 'ஓகார' மாகத் திரிவது இயற்கை. இவ்வொலித்திரிபினை அடிப்படையாகக் கொண்டு ஆராய்ந்தால், 'சூழ்' என்னும் வேர்ச் சொல்லடியாகச் 'சோழர்' என்னும் பெயர் தோன்றியிருக்கலாம். 'சூழ்வோர்' என்பது சோழர் என்று, காலப்போக்கில் திரிந்திருக்கலாம் என்பது அவருடைய கருத்தாகும்.[15] சூழ்வோர் என்பதற்குச் சுற்றியிருப்பவர், ஆராய்வோர், கருதுவோர் என்பன போன்ற பல பொருள்கள் உண்டு. இவற்றுள் எப்பொருளும் பொருத்தம் உடையதாகத் தோன்றவில்லை. எனவே, சோழர் எனும் குடிப் பெயரை, இடுகுறிப் பெயராகவே கொள்ளலாம்.

பண்டைக் காலத்தில் சோழருடைய குடிப்பெயர்கள் பல வழக்கிலிருந்தன. செம்பியன், சென்னி, கிள்ளி, வளவன் என்பன அவற்றுள் முக்கியமானவையாகும். அவற்றுள், செம்பியன், வளவன் என்னும் பெயர்களே பிற்காலத்தில் சோழ மன்னர்களால் போற்றப்பட்டன.[16] இதற்குமாறாக, அபயன், அநபாயன், இராசகேசரி, பரகேசரி, அகளங்கன் என்னும் சிறப்புப் பெயர்களும் பட்டப் பெயர்களுமே பிற்காலச் சோழர் காலத்தில் பெருவழக்குப் பெற்றிருந்தன. காலப் போக்கில் பழையன கழிந்து புதியன புகும் இயற்கை நியதியை யொட்டி இம்மாற்றம் உண்டாயிற்று என்று நாம் கூறலாம்.

[14] துரை அரங்கசாமி, மொ. அ, சங்க காலச் சிறப்புப் பெயர்கள், 227.
[15] Ramaswami Aiyar, C. V:. Collected Papers on Linguistics, p. 42.
[16] புலவர் பெருமக்கள் சோழர் குடிக்குரிய பழைய சிறப்புப் பெயர்களை எல்லாம் பிற்காலச் சோழ மன்னர்களின் சிறப்புப் பெயர்களாகத் தம் நூலில் வழங்கி உள்ளனர்.

# 3. பண்டைக்காலச் சோழ மன்னர்

தமிழக வரலாற்றின் தொடக்க காலத்தை நாம் 'சங்க காலம்' என்று போற்றி வருகிறோம். சங்க காலம் தமிழகத்தின் பொற்காலமாகக் கருதப்படுகிறது. சங்க காலம் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டிற்கும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்டதாகும். அக்காலத்தில் முடியுடை மூவேந்தர் தமிழ் நாட்டில் சீரும் சிறப்புமுற்றிருந்தனர். அம்மூவேந்தர் குடிகளுள் செல்வச் செழிப்பும் சிந்தனை வளமும் வாய்ந்த நாட்டுப் பகுதியை ஆட்சி புரியும் வாய்ப்பைச் சோழர்குடி பெற்றிருந்தது. ஏறக்குறைய இருபது சோழ மன்னர்கள் சங்க காலத்தில் சிறப்புற்று விளங்கினர். அவர்களுள் கரிகாலன், திருமாவளவன் எனப்படும் இரண்டாம் கரிகாலன், நலங்கிள்ளி, கிள்ளிவளவன், சோழன் செங்கணான் என்னும் ஐவரும் வரலாற்றுப் புகழ் மிக்கவராவர். அவர்களுடைய வரலாற்றை அறிவதற்கு நாம் சங்க இலக்கியங்களையே நாட வேண்டியுள்ளது. சங்க இலக்கியங்களுள் காணப்படும் குறிப்புகள் சிலவற்றைக் கொண்டு முறையானதும் முழுமையானதுமான வரலாற்றை வரைய இயலவில்லை. எனினும் ஓரளவிற்கு அவர்களுடைய வெற்றிச் சிறப்பு, கொடைத்திறன், செங்கோலின் சீர்த்தி, குடியோம்பிய முறை ஆகியவற்றைப் பற்றி நாம் அறிய முடிகிறது. அவற்றை இங்குக் கோடி காட்ட முயலுகின்றேன்.

### தமிழக வரலாற்றின் விடிவெள்ளி

முதலாம் கரிகாலன் தமிழகத்தின் வரலாற்று வானில் விடிவெள்ளியாக ஒளிருகின்றான். அவனுக்குக் கரிகாலன் என்னும் பெயர் உண்டானதைப் பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. பகைவரிட்ட தீயினின்றும் தப்பியோடியபொழுது அவனுடைய கால் தீப்பட்டுக் கரிந்து போயிற்று என்பது பழம்பாடல்கள்

இரண்டால் தெரியவரும் செய்தியாகும்.[1] அவனுடைய தாய் அடையாளத்திற்காக அவன் காலில் கரியினால் கோடிட்டமையால், கரிகாலன் என்னும் பெயர் அவனுக்குண்டாயிற்று என்று ஒரு நூல் கூறுகிறது.[2] யானையைப் போன்ற வலிமைமிக்க கால்களை யுடையவனாக இருந்தமையால், அவனைக் கரிகாலன் என்று அழைத்தனர் என்று சிலர் விளக்கம் கூறுவர். மற்றும் சிலர் கரிகாலன் என்பது சிவனுக்குரிய பெயர்களுள் ஒன்று என்று கூறுவர்.[3] இவ்விளக்கங்களுள் கரிந்த (தீய்ந்த) காலையுடையவன் என்பதே ஆராய்ச்சிக்குப் பொருந்தி வரக்கூடிய உண்மையாகும். மற்றொரு சாரார், அவன் கரி (யானை) களுக்குக் காலனை (யமனை)ப் போன்று விளங்கியதால் இப்பெயர் வந்தது என்பர்.

முதலாம் கரிகாலனுடைய பெற்றோர் யார் என்பது தெரியவில்லை. போர்க்களத்தில்தான் முதன்முதல் அவனை நாம் காணுகின்றோம். அவனை, 'இயல் தேர் வளவ' என்று கருங்குளவாதனார் விளிக்கின்றார். அவன் சிறந்த வீரமும், அறிவாற்றலும் வாய்க்கப் பெற்றவன் என்பது சங்கப்பாடல்களால் தெரியவருகிறது. அவன் சோழ நாட்டை உறையூரில் இருந்து ஆண்டு வந்தான். சோழனுக்குரிய அழுந்தூரைப் பெருஞ் சேரலாதன் என்ற சேர அரசன் தாக்கினான். இதனால், இரு மன்னருடைய படைகளும் வெண்ணிப் பறந்தலை என்னும் இடத்தில் சந்தித்தன; கடும் போர் நடந்தது; இறுதியில் கரிகாலன் வேல், சேரலாதன் மார்பில் பாய்ந்து ஊடுருவிச் சென்றது. புறப்புண்ணிற்கு நாணமுற்று, சேரலாதன் வாளோடு வடக்கிருந்து உயிர் நீத்தான். இப் போருக்குப் பின்னர், கூட்டணி அமைத்துத் தன்னை எதிர்த்த ஒன்பது குறுநில மன்னரை வாகைப் பறந்தலையில் புறமுதுகிட்டு ஓடச் செய்தான் கரிகாலன். பின்னர்ச் சோழ அரசினை நிலை பேறுடையதாக அவன் செய்தான். அவன் நாட்டினை நல்ல முறையில்[4] ஆட்சி செய்தான்; வேத வேள்விகளையும் புரிந்தான்.

### திருமாவளவன்

உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னிக்கும், அழுந்தூர் வேளின் மகளுக்கும் பிறந்த மகனே திருமாவளவன் எனப்படும் இரண்டாம் கரிகாலனாவான். தொடக்கத்தில் அவன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்தான். தன்னுடைய பாட்டன் பெயரைத் தனக்குரிய இயற்பெயராகக் கொண்டவன்.

[1] பொருநராற்றுப்படை. வெண்பா 3 ; பழமொழி, 239

[2] செவ்வந்திப் புராணம், உறையூர் அழிந்த சருக்கம், செ. 92, 93, 97.

[3] சுப்ரமணியாச்சாரியார், வெ. சு;. கரிகாலர் மூவர்., பக். 30.

[4] புறநானூறு, 224.

திருமாவளவன் என்பது அவனுடைய சிறப்புப் பெயராகும். அவன், தாய் வயிற்றில் இருக்கும்பொழுதே அரசுரிமையை எய்தியவன் என்று போற்றப்படுகிறான். பதினொரு வேளிரும் இரு பெரும் வேந்தர்களும் ஒரு கூட்டணி அமைத்து அவனை எதிர்த்தனர். திருமாவளவன் அவர்களை வெண்ணிப்பறந்தலையில் தோற்றோடச் செய்தான். ஒளியரையும் அருவாளரையும் தன்னுடைய மேலாதிக்கத்தை அவன் ஏற்கச் செய்தான்.

இளமையிலேயே பேரறிவும் பெருந்திறனும் வாய்ந்தவனாகக் கரிகாலன் விளங்கினான். அவன் நரைமுடித்து முறை செய்த—நீதிவழங்கிய வரலாற்றை அறியாத தமிழ் மக்கள் இலர். அவனுடைய ஆட்சியின் தொடக்கத்திலேயே போர்கள் முடிந்து விட்டன. அதனால், அவனுடைய ஆட்சிக் காலத்தின் பெரும் பகுதியில் அமைதி நிலவியது. அவன் ஆக்கப்பணிகள் பலவற்றில் கருத்தைச் செலுத்தினான். அவன் காடு கெடுத்து நாடாக்கினான்; குளந்தொட்டு வளம் பெருக்கினான். தொண்டை மண்டலத்தை மக்கள் வாழ்வதற்குரிய வளநாடாக்கிய சிறப்பு திருமாவளவனையே சாரும்.

சோழரின் கடற்கரைப் பட்டினமாக இருந்த காவிரிப்பூம் பட்டினத்தை, உலகப் புகழ்மிக்க பூம்புகாராகத் திருமாவளவன் மாற்றினான். தன்னுடைய தலைநகரையே காவிரிப்பூம்பட்டினத்திற்கு அவன் மாற்றிக் கொண்டான். கி.பி. இரண்டாம் நூற்றாண்டு அளவில் கடல் வாணிகத்தில் காவிரிப்பூம்பட்டினம் உலகச் சிறப்படையுமாறு அவன் செய்தான். அயல் நாட்டு வாணிகத்தாலும், பல்வகைத் தொழில்களின் பெருக்கத்தாலும் வற்றா வளங்கொழிக்கும் திரு நாடாகச் சோழ நாடு, திருமாவளவன் காலத்தில் சீரும் சிறப்பும் பெற்றது. அவனுடைய ஆட்சியின் மாட்சியைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் இயற்றிய பட்டினப்பாலை என்னும் சங்கப்பாடல், ஓடும் திரைப் படமாக்கிக் காட்டுகிறது.

கரிகாலன் வடநாட்டின் மீது படையெடுத்துச் சென்றான். அங்குத் தன்னை எதிர்ப்பார் யாரும் இல்லாமையால், அவன் இமயமலையை அடைந்து, அதன்மீது தங்கள் குடிச்சின்னமாகிய புலியின் வடிவைப் பொறித்து மீண்டான். திரும்பும் வழியில் வச்சிரம், மகதம், அவந்தி முதலிய நாடுகளின் அரசர்கள் கொடுத்த திரைப் பொருள்களைப் பெற்று, அவன் சோழன் நாட்டை அடைந்தான் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.[5] இதனைப்

[5] சிலப்பதிகாரம்,

புனைந்துரை என்று கூறுவாரும் உளர்.[6] நடுவுநிலை பிறழாது நோக்கின், ஓரளவிற்கு அம்மரபுவழிச் செய்தியில் உண்மை இல்லாமற் போகவில்லை என்பது புலனாகும்.

இலங்கையினின்று ஆயிரக்கணக்கான மக்களைக் கரிகாலன் சிறைப்பிடித்து வந்தான்; அவர்களைக் கொண்டு காவிரிக்குக் கரை கட்டினான் என்று மகாவமிசம் கூறுகின்றது. அவனுடைய ஆட்சியின்கீழ், சிற்றரசனாக இருந்த ஒருவன் காவிரிக்குக் கரை க்ட்ட உதவிக்கு வரவில்லையாம். அதனால், அவ்வரசனைப் படத்தில் எழுதிப் பார்த்த பொழுது, அவனுக்கு மூன்று கண்கள் இருந்தமையை அறிந்து, அவனுடைய மூன்றாம் கண்ணைக் கரிகாலன் அழித்து விட்டானாம். இச் செய்தி பிற்காலச் சோழப் பேரரசர்களின் அவைக்களப் புலவர்களாக விளங்கிய ஒட்டக்கூத்தராலும்[7] செயங்கொண்டாராலும்[8] குறிப்பிடப்பட்டுள்ளன.

கரிகாலனால் கண் அழிக்கப்பட்டவன் முகரி எனப்படும் வடநாட்டு 'மௌகாரி' அரச மரபைச் சேர்ந்தவன் என்று ஒரு சிலர் கூறுவர்.[9] ஆனால், ஆந்திர நாட்டில் கிடைத்துள்ள கல்வெட்டுகள், திரிலோசன பல்லவனே கரிகாலனால் கண் அழிக்கப்பட்டவன் என்று தெரிவிக்கின்றன. அவனுக்கு 'முக்கண்டிக் காடுவெட்டி' என்றும் மற்றொரு பெயர் வழங்கியதாகவும் தெரிகிறது. அவன் பல்லவர் குடியைச் சேர்ந்தவன் என்பது அவனுடைய பட்டப் பெயரால் அறியப்படுகிறது. இவற்றையெல்லாம் 'புராணக்கதை' என்று சில வரலாற்று அறிஞர்கள் புறக்கணித்து விடுகின்றனர். தமிழ் இலக்கிய மரபும், தெலுங்கு நாட்டுக் கல்வெட்டுகளும் தெரிவிக்கும் செய்திகளும் பெரிதும் ஒத்துள்ளன. இவ்விரு அடிப்படைச் சான்றுகள் ஒத்துவருகின்ற நிலையில், தக்க காரணம் காட்டாமல் அச்செய்தியைப் 'பொய்யுரை' என்று எளிதில் புறக்கணிக்க இயலாது. எதிர்காலத்தில் கிடைக்கக் கூடிய புதிய சான்றுகள் இக்கருத்தைத் தெளிவுறுத்துவனவாக அமையலாம்.

திருமாவளவனுக்கு ஆதிமந்தி என்ற மகள் இருந்ததாகவும் அவளைச் சேரநாட்டு இளவரசன் ஆட்டன் அத்தி மணம் செய்து வாழ்ந்ததாகவும் அறிகிறோம். பூம்புகாரில் புதுப்புனல் விழா நடைபெறுவது வழக்கம். ஒரு சமயம் அவ்விழா நடைபெற்ற

6. Nilakanta Sastri, K. A. : The Colas, p. 36.
7. குலோத்துங்க சோழன் உலா, கண்ணி 8.
8. கலிங்கத்துப் பரணி, 184.
9. Aravamuthan, T. G. : Kaveri, Maukhari and the Sangham Age, P, 18.

பொழுது ஆட்டன் அத்தி காவிரியில்இறங்கிக் களிநடம் புரிந்தான். அந்நிலையில் அவன் காவிரியின் வெள்ளப் பெருக்கால் அடித்துச் செல்லப்பட்டான். அதனால், அரசனும், அரசிளங்குமரியும் ஆற்றொணா அருந்துயருற்றதைச் சங்கப் புலவர் பலரும், தங்கள் பாடல்களில் பதிவு செய்துள்ளனர்.[10]

பிற்காலத்தில் தெலுங்கு நாட்டை ஆண்ட தெலுங்குச் சோழர்கள் ரேநாண்டுச் சோழர் எனப்படுவர். அவர்கள் வரலாற்றுப் புகழ்மிக்க கரிகாலன் மரபிலே தாங்கள் வந்ததாகக் கல்வெட்டுகளிலும் செப்பேடுகளிலும் தெரிவித்துள்ளனர்.

**நலங்கிள்ளி**

திருமாவளவனுக்குப் பிறகு சோழ அரியணை ஏறிய அரசன் யார் என்பதைத் தெளிவாக அறிய முடியவில்லை. எனினும், சேட்சென்னி நலங்கிள்ளி என்பான் ஆட்சிக்கு வந்திருக்கலாமோ என்று கருதுவதற்குச் சங்க இலக்கியப் பாடல்கள் இடம் தருகின் றன. அவன் திருமாவளவனுடைய மகனாக இருக்கலாம் என்று கூறுவாருமுண்டு. நலங்கிள்ளி காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தான். அக்காலத்தில் அவனுக்கு எதிராக நெடுங்கிள்ளி உறையூரைத் தலைநகராகக் கொண்டு அரசுபுரியத் தொடங்கினான். இதனால் இவ்விரு தாயாதி களுக்கு இடையே கடுமையான போட்டியும் பூசலும் உண்டாயின. காரியாறு என்னும் இடத்தில் நெடுங்கிள்ளி இறக்கும் வரையில் இவ்விருவருக்கும் இடையே உள் நாட்டுப் போர் சிறிது இடை யீட்டுடன் நடைபெற்றுக் கொண்டே இருந்தது.

நலங்கிள்ளி நாட்டு மக்களால் நன்கு போற்றப்பட்ட சிறப் புடைய மன்னனாவான். அவனுடைய மேலாண்மையைப் பாண்டியனும் சேரனும் ஏற்றுக் கொண்டிருந்தனர். தமிழகம் முழுவதையுமே அவன் ஒரு குடைக்கீழ் ஆட்சி புரிந்ததாகத் தெரி கிறது.[11] நலங்கிள்ளி காவலனாகவும் பாவலனாகவும் விளங்கினான். அவன் இயற்றிய பாடல்களுள் இரண்டு போற்றிக் காக்கப் பட்டுள்ளன.[12] அவற்றுள், புறநானூற்றில் இடம் பெற்றுள்ள பாடல் அவனுடைய அஞ்சா நெஞ்சத்தையும், சிறப்பு மிக்க பண்பு நலத்தையும் நமக்குப் படம் பிடித்துக் காட்டுகிறது.[13]

10. அகநானூறு 76, 222, 236, 376; சிலப்பதிகாரம். வஞ்சினம். 11-15
11. புறம் 31.
12. டி 73.
13 டி.

அவனுடைய ஆட்சியில் பூம்புகாரின் புகழ் மேன்மேலும் பெருகியது. நாடு பல வகையில் சீரும் சிறப்பும் பெற்றது. இல வந்திகைப் பள்ளி என்னும் வேனிற்கால விடுதியில் நலங்கிள்ளி இறந்து விட்டான்.

**கிள்ளி வளவன்**

நலங்கிள்ளிக்குப் பின்னர் ஆட்சிக்கு வந்தவன் கிள்ளிவளவனுவான். நலங்கிள்ளியையும் நெடுங்கிள்ளியயும் பாடிய புலவர்களே கிள்ளிவளவனுடைய வீரம், செங்கோல், கொடைத் திறன் போன்றவற்றைப் புகழ்ந்து பாடியுள்ளனர். சேரனுடைய கருவூரை அவன் முற்றுகையிட்டுக் கைப்பற்றினன். கிள்ளிவளவனுடைய சிறப்புமிக்க போராக அதைப் புலவர்கள் போற்றியுள்ளனர். அவன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தான். அறிவும் ஆற்றலும் வாய்ந்திருந்த கிள்ளிவளவன், கடுஞ்சீற்றத்திற்கு அடிமையாகிக் கொடுஞ் செயல் ஒன்றைச் செய்யத் துணிந்தான். அதைக் கோவூர் கிழார் என்னும் புலவர் பாடியுள்ள பாடல் ஒன்றால்[14] நாம் அறிகிறோம். மலையமான் திருமுடிக்காரியை எதிர்த்துப் போரிட்டு, கிள்ளி வளவன் வாகை சூடினன். அப்போரில் மலையமானின் இளஞ்சிறுவர்களை அவன் சிறைப்படுத்திக் கொண்டு வந்தான். அச்சிறுவர்களை யானையின் காலில் இட்டுக் கொல்லுமாறு வளவன் ஆணை பிறப்பித்தான். இச்செய்தியை அறிந்து கோவூர் கிழார் என்னும் புலவர், அவனை அணுகினர். அவனுடைய வைரம் பாய்ந்த உள்ளமும் உருகுமாறு அவனுக்கு அறிவுரை கூறினர்.

''நீயே புறவின் அல்லல் அன்றியும், பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை;
இவரே, புலனுழுது உண்மார் புன்கண் அஞ்சி
தமது பகுத்துண் ணும்தண் ணிழல் வாழ்நர்;
களிறு கண்டு அழூஉம்; அழாஅல் மறந்த
புன்தலைச் சிறுஅர்; மன்று மருண்டு நோக்கி
விருந்திின் புன்கணோ உடையர்;
கேட்டனை யாயின், நீ வேட்டது செய்ம்மே!''

(புறநானூறு 46)

இந்த அறிவுரையால் மனத்தெளிவடைந்த மன்னன், மலையமான் மக்களை விடுதலை செய்ததாகத் தெரிகிறது.

கிள்ளி வளவனுக்கும் பாண்டிய மன்னனுக்கும் போர் மூண்டது. பாண்டியனின் படைத்தலைவனை பழையன் மாறன்

[14] புறம் 46.

மதுரை மாநகர்ப்புறத்தே வள்வனைப் புறமுதுகிட்டு ஓடுமாறு விரட்டியதக நக்கீரர் குறிப்பிட்டுள்ளார்.[15]

சோழ நாட்டிலே பஞ்சம் உண்டாயிற்று. அப்பொழுது கிள்ளிவளனுடைய அதிகாரிகள் மக்களைத் துன்புறுத்தி நிலவரியைத் தண்டிக் கொடுமை செய்தனர். இக்கொடுமையைக் கண்டு மனம்பொறாத வெள்ளைக்குடி நாகனார் என்னும் புலவர் சோழ வேந்தனை நேரில் கண்டார். அவனுக்கு மக்கள் படும் துன்பத்தை எடுத்துரைத்து உடனடியாக நிலவரியைத் தள்ளுபடி செய்யுமாறு அவர் அறிவுரை கூறினர்:

"..........................................................
கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
வெயில்மறைக் கொண்டன்றோ? அன்றே; வருந்திய
குடி மறைப்பதுவே; கூர்வேல் வளவ!.........
வருபடை தாங்கி பெயர் புறத்தார்த்து
பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே;
மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர்ப் பழிக்கும் இக்கண்ணகல் ஞாலம்;
அதுநற்கு அறிந்தனை யாயின் நீயும்
நொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது
பகடு புறந்தருநர் பாரம் ஓம்பி
குடிபுறந் தருகுவை யாயின் நின்
அடிபுறந் தருகுவர், அடங்கா தோரே"

(புறநானூறு 35)

கிள்ளிவளவனுடைய ஆட்சிக் காலத்தில் பண்ணன் என்னும் வள்ளல் ஏழை எளிய மக்களின் துன்பத்தைத் துடைக்கும் தூணைகச் சிறுகுடி என்னும் ஊரில் வாழ்ந்து வந்தான். தன்னை நாடி வருவோரின் பசியைப் போக்க வயிறார உணவளிப்பதையே, அவன் ஓர் அறமாகக் கொண்டு ஒழுகினன். இதைக் கண்டு வியப்புற்ற கிள்ளிவளவன், பண்ணனைப் 'பசிப்பிணி மருத்துவன்' என்று போற்றிப் பாடியுள்ளான்.[15a]

கிள்ளிவளவன் இறந்த பொழுது அவனுடைய அருமை பெருமைகளைப் புலவர் பெருமக்கள் பலர் பாராட்டியுள்ளார். அப்பாடல்களிலிருந்து அவனுடைய வீரதீரச்

[15] அகநானூறு, 345.
([15a]) புறம். 173.

செயல்களும், அருள் உள்ளமும், கொடைச் சிறப்பும் புலனாகின்றன. அவன் குளமுற்றம் என்னும் ஊரில் இறந்தான் என்று தெரிகிறது. ஆனால், 'இயற்கையாக இறந்தானா? அல்லது போரில் மாண்டானா?' என்பதை அறிந்து கொள்ள முடியவில்லை குராப்பள்ளியில் இறந்த கிள்ளிவளவன் என்னும் ஓர் அரசனைப் புறநானூற்றின் 373 ஆம் பாடலில் கோவூர் கிழார் பாடியுள்ளார். இவ்விரு பெயர்களும் ஒரே அரசனைக் குறிப்பதாக அறிஞர்கள் கருதுகின்றனர். 'குளமுற்றம்' என்பதற்கு குளத்தின் பக்கத்தில் அமைந்த 'கூடாரம்' என்பது பொருள். 'குராப்பள்ளி என்பதற்கும் 'சிறுகுடில்' (கூடாரம்) என்பதே பொருள் என்று டாக்டர் ஜி. யூ. போப் விளக்கம் தந்துள்ளமை இங்குக் கருதத் தக்கது. எனவே, கிள்ளிவளவன் ஒருவனே[16] என்பதும், அவன் நலங்கிள்ளிக்குப் பிறகு சோழ நாட்டைச் சிறப்புற ஆட்சி புரிந்தான் என்பதும் இதனால் பெறப்படுகின்றன.

## சோழன் செங்கணான்

கிள்ளி வளவனுக்குப் பின்னர் சோழ நாட்டுச் சிம்மாசனத்தை அணிசெய்தவர் பலர். அவர்களுள் காலத்தால் பிற்பட்டவனும் தமிழ் மக்களுடைய மனத்தில் நிலையானதோர் இடத்தைப் பெற்றவனுமாக விளங்குபவன் சோழன் செங்கணான். அவனைப் பற்றிப் பல கதைகள் வழங்கி வருகின்றன. எனினும், அவனுடைய வரலாற்றை வரைவதற்குப் பெரிதும் உதவியாக உள்ளது புறநானூற்றுப் பாடல் ஒன்றும்,[17] நாற்பது செய்யுள் களைக் கொண்ட 'களவழி நாற்பது' என்னும் சிறியதொரு நூலுமேயாகும். அவ்வரசனைப் பற்றிச் சைவ சமய குரவர்களான திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும், சுந்தரரும் போற்றிப் பாடியுள்ளனர்.[18] வைணவ சமயத்தவரான திருமங்கை யாழ்வாரின் பெரிய திருமொழியிலும் கோச்செங்கணான் சிறப்பிக் கப் பட்டுள்ளான்.[19]

சமய நோக்கில் அவனுடைய முற்பிறப்பைப்பற்றிய செய்தியை இவ்வடியார்கள் குறிப்பிட்டுள்ளனர். முற்பிறப்பில் சிலந்தியாக இருந்து சிவபெருமானை வழிபட்டமையால், அடுத்த பிறவியில் சோழ மன்னனாக அவன் பிறந்தான் என்பது பழைய

[16] Indian Antiquary, Vol. 29; p. 250, F. N. 2.
[17] புறம், 74.
[18] தேவாரம், 1714, 2152, 2774, 2990, 3002, 3336 4637, 4765, 4798, 6448, 6477, 7889 முதலியன.
[19] திவ்வியப் பிரபந்தம், பெரிய திருமொழி,:66:8.

கதை. அதை முதன் முதல் அப்பரே, தம்முடைய தேவாரத்தில் போற்றிப் பதிவு செய்துள்ளார்.[20] திருவாலங்காட்டுச் செப்பேடு, இக்கதையைச் சிறப்பாக எடுத்தியம்புகிறது.[21] விக்கிரம சோழன் உலாவிலும் கலிங்கத்துப்பரணியிலும் செங்கணானின் பழைய கதை இடம் பெற்றிருக்கிறது.

சைவ சமய நாயன்மார்கள் அறுபத்து மூவருள், சோழன் செங்கணானை ஒருவனாகச் சைவ சமயத்தினர் போற்றி வருகின்றனர். நம்பியாண்டார் நம்பிகள் இயற்றிய திருத்தொண்டர் திருவந்தாதியிலும், சேக்கிழார் இயற்றிய திருத்தொண்டர் புராணத்திலும் செங்கணானின் முற்பிறப்பு வரலாறும், சமயத் திருப்பணிகளும் விரிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

செங்கணான் எழுபது கோயில்களைக் கட்டினான் என்று திருமங்கையாழ்வார் குறிப்பிட்டுள்ளார்.

"இருக்கிலங்கு திருமொழிவா யெண்டோ ளீசர்க்கு
எழில்மாட மெழுபதுசெய் துலக மாண்ட
திருக்குலத்து வளச் சோழன்"

என்பது பெரிய திருமொழிப் பாசுரப் பகுதி யாகும். அம்பர், வைகல், நன்னிலம் என்னும் ஊர்களில் இருந்த சிவன் கோயில்களைக் கட்டியவன் செங்கணான் என்று தேவார ஆசிரியர்கள் போற்றியுள்ளனர். பொய்கையார் என்னும் புலவர் இயற்றிய களவழி நாற்பது, கோச் செங்கணான் சேரமான் கணைக்கால் இரும்பொறையைக் கழுமலம் என்னும் இடத்தில் எதிர்த்துப் போரிட்ட வரலாற்றைப் படம் பிடித்துக் காட்டுகிறது. போரில் தோல்வியுற்ற சேரமானைச் சிறைப்பிடித்து, விலங்கிட்டுக் குடவாயிற் கோட்டத்தில் சோழன் வைத்திருந்தான். சேரன் தன்மானவுணர்வு மிக்கவனாய் நீரும் பருகாது, உண்ணா நோன்பு இருந்தான். இந்த அவல நிலையைக் கண்ட பொய்கையார் என்னும் புலவர், சோழனுடைய வெற்றியைச் சிறப்பித்துக் 'களவழி நாற்பது' என்னும் நூலைப் பாடிச், செங்கணானை மகிழ்வித்தார். அதற்குரிய பரிசாகப் புலவர் பெருமான், சேரனைச் சிறை மீட்டுச் சென்றார்.

செங்கணானுடைய ஆட்சி சோழ நாட்டிற்கு வெளியிலும் பரவியிருந்தது.

'உலகமாண்ட தென்னாடன் குடகொங்கன் சோழன்'
(பெரிய திருமொழி, 6)

'தென் தமிழன் வடபுலக் கோன்'
(பெரிய திருமொழி, 5)

20. தேவாரம், 4687.
21. S.I.I., Vol. 3; No. 205.

கழல்மன்னர் மணிமுடிமேல் காகமேறத்
தெய்வவாள் வலங்கொண்ட சோழன் (ஷி 9)

என்று திருமங்கையாழ்வாரும்,

தென்னவனாய் உலகாண்ட செங்கணான்

என்று சுந்தரரும் குறிப்பிட்டுள்ளமையால் அறியலாம். அழுந்தை, வெண்ணி என்னும் இடங்களில் அவன் போர் புரிந்தமையும், விளந்தை வேள் என்னும் குறுநில மன்னனைத் தோற்றோடச் செய்தமையும் அவனுடைய வெற்றிச் சிறப்பிற்குரிய பிற சான்றுகளாகும். செங்கணானுக்கு ஒரு மகன் இருந்தான். நல்லடிக்கோன் என்பது அவனுடைய பெயராகும். இச் செய்தியை முதன் முதல் நமக்குத் தெரிவிப்பது அன்பில் செப்பேடாகும்.

இதுவரை நாம் கண்ட பண்டைச் சோழ மன்னர்கள், கி. மு. முதலாம் நூற்றாண்டு முதல் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரையில் சோழநாட்டை ஆட்சி புரிந்த மன்னர்களுள் சிறப்பு மிக்கவராவர்.

# 4. இருண்ட காலச் சோழ மன்னர்

சங்க காலச் சோழ மரபு கி. பி. மூன்றும் நூற்றாண்டில் நலிவுற்றது. அதன்பிறகு சோழர் குடியில் தோன்றிய சிலர் குறுநில மன்னராகவும், படைத்தலைவராகவும் பெருநிலக்கிழாராகவும் சோழநாட்டின் பல பகுதிகளில் வாழ்ந்துவந்தனர். இக்காலத்தில் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவொரு சோழ மன்னனைப் பற்றிய குறிப்பு பெரிய புராணத்தில் சிறப்பிடம் பெற்றுள்ளது. புகழ்ச் சோழர் என்பது அவனுடைய பெயர். அவனுக்குக் கொங்கரும் குடகு நாட்டு அரசரும் திறை செலுத்தி வந்தனர். பகைவர் தலைகளுள் சிறிய சடையுடைய தலை ஒன்றைக் கண்டு, தன் வீரர் சிவனடியார் ஒருவரைக் கொன்று விட்டதாக எண்ணி வருந்தி, அவன் தீக்குளித்து மாய்ந்தான்.[1] அவனுடைய காலம் கி. பி. 400க்கும் 600க்கும் இடைப்பட்டதாகலாம்.[2]

### பாண்டியரும் சோழரும்

நின்றசீர் நெடுமாறன் என்று போற்றப்படும் பாண்டியன் மாறவர்மன் அரிகேசரியாவான். அவனுடைய (கி. பி. 640-670)[3] பட்டத்தரசியான மங்கையர்க்கரசியின் தந்தையாரை 'மணிமுடிச் சோழர்' என்று சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார்.[4] சுந்தரரும் சேரமான் பெருமாள் நாயனாரும் மதுரைக்குச் சென்றபொழுது அங்குப் பாண்டியன் மகளை மணம் புரிந்து வாழ்ந்த சோழ இளவரசன் ஒருவனைக் கண்டதாகத் தெரிகிறது.[5]

[1] பெரிய புராணம் 41 : 38.
[2] இராசமாணிக்கனார், மா. : பெரிய புராண ஆராய்ச்சி, பக். 338
[3] பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக், xii.
[4] பெரிய புராணம், 28 : 658 — 670.
[5] தென்னவர்கோன் மகளாரைத் திருவேட்டு முன்னரே
தொன்மதுரை நகரின்கண் இனிதிருந்த சோழனார்
—பெரிய புராணம்: 37:92.

வைணவ மரபினைத் தெளிவுறுத்தும் நூல் 'குருபரம்பரை' என்பதாகும். தொண்டரடிப்பொடி ஆழ்வாரைக் கவர்ந்த தேவ தேவி என்ற கணிகை, சோழனுடைய உறையூர் அவைக்களத்தில் இருந்து திரும்பி வந்ததாக அந்நூலில் குறிப்பு ஒன்று காணப்படு கிறது. 'மனிதரை மணம் புரியேன்' என்னும் சூளுரையுடன் வாழ்ந்த 'உறையூர் நாச்சியார்' என்னும் நங்கை உறையூரை ஆண்ட சூரிய குலத்துதித்த தரும வர்மன் என்ற சோழ மன்ன ளின் மகள் என்பது இங்குக் கருதத்தக்கது. திருமங்கையாழ்வார் ஒரு சோழ அரசனிடத்துப் படைத்தலைவராகவே தம்முடைய வாழ்க்கையைத் தொடங்கினர் என்பதும் இங்கு நினைவு கூர்தற் குரியதாகும்.

மேலே, குறிப்பிடப் பெற்ற சோழ மன்னர்கள் கி பி. ஐந்தாம் நூற்றுண்டிற்கும் ஒன்பதாம் நூற்றுண்டிற்கும் இடையில் வாழ்ந்த வராவர். மேற்கண்ட இலக்கியச் சான்றுகள், களப்பிரர் இடை யீட்டுக் காலம் என்று சொல்லப்படும் கி. பி. நான்காம், ஐந்தாம் ஆறும் நூற்றுண்டுகளிலும், பல்லவப் பேரரசு காலத்திலும் சோழ அரச மரபு அழிந்து ஒழியாமல், புத்துயிர் பெறுவதற்கு ஏற்ற காலத்தை எதிர் நோக்கிக் காத்திருந்ததைத் தெரிவிக்கின்றன.

கி. பி. ஐந்தாம் நூற்றுண்டின் இறுதியில், காவிரிப்பூம்பட்டி னத்தில் ஒரு மண்டபத்தில் அமர்ந்து, புத்த தத்த மகாதேரர் 'விநயவிநச்சயம்' என்னும் பௌத்த சமய நூலை இயற்றினர். அப்பொழுது காவிரிப்பூம் பட்டினத்தின் ஒரு பகுதியைக் கடல் கொண்டு போய்விட்டதாகத் தம் நூலில் அவர் குறிப்பிட்டுள் ளார். அக்காலத்திய சோழ நாட்டில் இரு பெரும் பௌத்த விகாரைகள் கட்டப்பட்டிருந்தன என்று அவர் தெரிவித் துள்ளார்.[6]

## பல்லவரும் சோழரும்

பல்லவர் காலத்திய செப்பேடுகள், சோழரைப் பற்றிய செய்திகள் சிலவற்றைத் தெரிவிக்கின்றன. வேலூர்ப்பாளையம் செப்பேட்டில் 'சோழப் படையாகிய கடலுக்கு, வடவைக் கன லாகப் புத்தவர்மன் விளங்கினன்'[7] என்னுங் குறிப்பொன்று காணப்படுகிறது. அவ்வரசன் கி. பி. ஐந்தாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவனுகலாம். காவிரியால் வளமுற்றுத் திகழும் சோழநாட்டைச் சிம்ம விஷ்ணு (கி.பி. 575 - 600) கைப்

[6] Dr. S. K. Aiyangar's Commn. Vol., PP: 241-42.
[7] S- I. I., Vol. 2: p. 508, l. 14

பற்றியதாகச் சொல்லப்படுகிறது.[8] மகேந்திரவர்மன் (கி.பி.600—630)சோழ நாட்டைத் தன்னுடைய ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வந்தமை குறித்து மகிழ்வுற்றான். திருச்சிராப்பள்ளி மலையில் காணப்படும் அவனுடைய கல்வெட்டுக்கள், சோழநாட்டின் முடி வேந்தனாக அவனைப் போற்றுகின்றன. [9] பரமேசுவர வர்மனின் கூரம் செப்பேடு, அவ்வரசன் கைப்பற்றிய நாடுகளுள் ஒன்றாகச் சோழநாட்டைக் குறிப்பிடுகிறது.[10] சாளுக்கிய விக்ரமாதித்தனுடைய கத்வெல் பட்டயம் (கி. பி. 674) காவிரியின் தென்கரையில் உள்ள சோழர் தலைநகரமாகிய உறையூரில், தமிழகத்தில் பெற்ற பெரு வெற்றிக்குப் பின்னர் அவன் தங்கியிருந்ததாகத் தெரிவிக்கிறது.[11]

## பாண்டியரும் சோழரும்

பாண்டிய மன்னர் வழங்கிய செப்பேடுகளும், பொறித்த கல்வெட்டுகளும் சோழநாட்டையும், சோழமன்னரையும் சுட்டுகின்றன. வேள்விக்குடிச் செப்பேட்டில் பாண்டியன் கோச்சடையன் ரணதீரன் (கி.பி. 670-710) சோழநாட்டின் ஒரு பகுதியைக் கைப்பற்றியதோடு, 'செம்பியன் சோழன்' என்னும் பட்டப் பெயர்களையும் சூட்டிக் கொண்டான் என்று அறிவிக்கிறது.[12]மாறஞ் சடையனின் திருச்சிராப்பள்ளிக் கல்வெட்டு, அவனைச் சந்திர குலத்திற்கும் சூரிய குலத்திற்கும் திலகம் போல் விளங்குபவன் என்று மொழிகிறது.[13] சின்னமனூர்ச் செப்பேட்டில், குடந்தைக்கு அருகில் சீமாற சீவல்லபனிடம் (835-62) தோல்வியுற்ற பல்லவ மன்னனின் உதவிக்கு வந்தவருள் சோழரும் இருந்ததாகத் தெரிவிக்கிறது.[14]

[8] *Ibid.* ll. 16-17.
[9] S. I. I. Vol., 33.
[10] *Ibid* Vol; p. 151, ll, 14-15.
[11] E. I. Vol. 10; p. 103
[12] 'தண்ணளிச் செங்கோற் றென்னவாளவன்,
செம்பியன் சோழன் மன்னர் மன்னன்.
'(வேள்விக் குடிச் செப்பேடு 69)
காண்க: பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக், 25.
[13] A S I., 1903-4, p. 275.
[14] மடைப்பகர்நீர்த் தஞ்சையர்கோன் தானைவரை நைப்பூரிற் படைப்புரிசாரந் தந்து' (சின்னமனூர் (பெரிய) செப்பேடு, 129-130).
காண்க: பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக். 156.

இத்தகைய தொல்லியல் செப்பேட்டு, கல்வெட்டுச் சான்று களால் சோழ அரச மரபின் புகழொளி இவ்விடைக் காலத்தில் குன்றி இருந்தமையும் அது அடியோடு அழிந்தொழியாமல், நீறு பூத்த நெருப்பாக இருந்துவந்தமையும் புலனாகின்றன.

பூம்புகார், கடல் கொள்ளப்பட்ட பிறகு உறையூரே சோழ ருடைய தலைநகரமாக இருந்தது. அதை உரக புரம் என்னும் பெயரால் பல்லவ, சாளுக்கிய அரசர்களின் செப்பேடுகள் சுட்டு கின்றன. உறையூரையும் பறிகொடுத்த பின்னர், சோழ மரபைச் சேர்ந்தவர்கள் கும்பகோணத்திற்கு அருகில் உள்ள நந்திபுரம் எனப்பட்ட பழையாறையில் வாழ்ந்து வந்தனர். விசயாலயன் தஞ்சையைக் கைப்பற்றிச் சோழ நாட்டின் தலைநகராக அதை அமைத்துக் கொண்ட பிறகும், சோழ அரச குடும்பத்தினர் அந் நகரில் வாழ்ந்து வந்தனர்.

## தெலுங்கச் சோழர்கள்

தமிழகத்தில் பண்டைச் சோழ அரச மரபின் ஆட்சி கி.பி. நான்காம் நூற்றாண்டு அளவில் நலிவுற்றது. அதன் பிறகு ஆந்திர மாநிலத்தில் கடப்பை, கர்நூல் மாவட்டங்களில் பாய்ந்தோடும் குண்டேறு ஆற்றின் பள்ளத்தாக்குப் பகுதியில் கி. பி. ஆறாம் நூற் றாண்டு அளவில் ஓர் அரசு தோன்றியது. அப்பகுதிக்கு ரேனாண்டு ஏழாயிரம் என்பது பெயர். அதனால், அவ்வரச மரபிற்கு ரேனாண்டுச் சோழ மரபு என்னும் பெயருண்டாயிற்று. அவ்வரச மரபினரை 'பொத்தப்பிச் சோழர்' என்று சுட்டுவதும் உண்டு

அவ்வரச மரபினர் சோழப் பெருவேந்தன் கரிகாலனின் கால் வழியிலே வந்தவர்கள் தாங்கள் என்று பெருமிதத்தோடு பேசுகின் றனர்.[15] கரிகாலனுக்கும் தெலுங்கு நாட்டு அரச குடும்பத்தின ருக்கும் எவ்வாறு, எப்பொழுது தொடர்பு உண்டாயிற்று என் பதை நாம் உறுதியாகக் கூற இயலவில்லை. சோழப் பேரரசன் கரிகாலனுடைய ஆட்சி ஆந்திர மாநிலத்தில் கர்நூல் வரை பரவி யிருந்தது என்றும், அக்காலத்தில் சோழ அரச குடும்பத்தைச் சேர்ந்தவர் சிலர் அப்பகுதியில் அரசப் பிரதிநிதிகளாக வாழ்ந் திருக்கவேண்டும் என்றும் சில அறிஞர்கள் கருதுகின்றனர்.[16] அவர் களுடைய வழித்தோன்றல்களே கி.பி. ஆறாம் நூற்றாண்டு அளவில் எழுச்சியுற்று ஓர் அரசை நிறுவி இருக்கவேண்டும் என்பது அவர் களுடைய நம்பிக்கையாகும்.

[15] A. R. E. 1900. p 45; Rangachari' Cuddapah Ins Nos 309, 318, 350, 405, 409, 435, 453, 455, 550, 560, A. R. E. 1905,2;5-6

[16] Kanakasabhai, V: The Tamils 1800 years Ago, p. 68.

இக்கருத்து பொருத்தமற்ற ஒன்று என்பது மற்றோர் ஆசிரியருடைய கருத்தாகும். ரேநாண்டுச் சோழனுடைய புண்ணிய குமாரன் வழங்கிய 'மாலேபாடு' செப்பேட்டின் வாசகத்திலிருந்து, அக்காலத்தில் (கி.பி. ஏழாம் நூற்றாண்டு) தமிழகச் சோழ அரச மரபோடு நேரடியான தொடர்பும் உறவும் அவர்களுக்கு இருந்து வந்தமை புலனாகின்றது. எனவே, சிம்மவிஷ்ணுவின் மரபினர் காஞ்சியில் ஆட்சி புரிந்த காலத்தில் பல்லவ இராச்சியத்தின் வழியாகச் சோழர் வடக்கு நோக்கிச் சென்றிருக்கலாம் என்பது அவ்வாசிரியர் தரும் விளக்கமாகும்.[17] இத்தொடர்பு கரிகாலன் காலம் முதற்கொண்டே இருந்து வந்தது என்று கருத அம்மன்னர்களின் கல்வெட்டுகளே இடம் தருகின்றன.[18]

சங்க காலத்திற்குப் பின்னர் சிறப்புற்ற பாண்டிய அரச மரபில் வந்த சில மன்னர்கள் தெலுங்கச் சோழரின் பெண்களை மணம் செய்து கொண்டனர். அவர்களுள் சிறப்பாகச் சீமாற சீவல்லபன் இங்குக் குறிப்பிடத்தக்கவனாவான். அவன் பொத்தப்பிக் குலத்துச் சோழனுடைய சீகண்டன் மகள் அக்களநிம்மடியை மணம் செய்து கொண்டான். அவனுக்குப் பிறந்தவனே தளவாய் புரச் செப்பேட்டை வழங்கிய பராந்தக வீரநாராயணன் ஆவான். அச்சீகண்டன் தெலுங்கச் சோழர் கிளையிலே சிறப்புற்று விளங்கினான். அவன் வழங்கிய செப்பேடு ஒன்று சென்னை அரசினர் அரும் பொருள் காட்சியகத்தில் இருக்கிறது. அவன் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்ததாகத் தெரிகிறது.

இராசராச சோழனுடைய தந்தையான இரண்டாம் பராந்தகன் வழங்கிய செப்பேட்டிற்கு, அன்பில் செப்பேடு என்பது பெயர். அதில், தஞ்சை அரச மரபினை நிறுவிய விசயாலயனுக்கு முன்னர் வாழ்ந்த மூதாதையருடைய பெயர்கள் காலவரன்முறைப்படி குறிப்பிடப்பட்டுள்ளன. அவ்வரிசையில் சீகண்டனுடைய பெயர் விசயாலயனுக்கு முன்னதாக இடம் பெற்றிருக்கிறது. இதனால் ரேநாண்டுச் சோழர்களுக்கும் தமிழகத்தின் சோழமரபிற்கும் நெருக்கமான தொடர்பு இருந்து வந்தமை புலனாகின்றது. மற்றும், தஞ்சைச் சோழர்கள், பொத்தப்பிச் சோழரைத் தங்கள் குடியின் முன்னோர் என்று கூறிக்கொள்ளுவதில் பெருமிதம் கொண்டனர் என்பதும் அறியப்படுகிறது.

இந்தச் சோழ மரபு தமிழகத்தில் சோழர் வலிகுன்றி இருந்த காலத்தில் அம்மரபின் தொன்மைச் சிறப்பினையும் சீர்த்தியையும்

[17] Nilakanta Sastri, K.A.: op. cit., p. 107.
[18] Krfshnaswami Aiyangar, S.K: History of Tiruppati, Vol. I, pp. 223—224.

உலகிற்கு உணர்த்தும் அரிய தொண்டினை ஆற்றியுள்ளமை நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. 'இக்காலத்தில் தமிழ் நாட்டில் சோழர் குடியினர் வாழவில்லை; கடப்பை கர்நூல் மாவட்டங்களிலேயே வாழ்ந்தனர்[19] என்னும் கருத்து பொருத்தமற்றது என்பதற்கு இவ்வியலின் முதற்பகுதியில் தரப்பட்டுள்ள சான்றுகளே போதுமானவையாகும்.

[19] Subramaniya Aiyar, K.V.: Historical Sketches of Ancient Dekhan, Vol. I., pp. 112—3.

# 5. இராசராசனின் முன்னோர்

இருண்ட காலத்தில் சோழ மரபு இருந்த நிலையை முந்தைய பகுதியில் கண்டோம். அந்தக் காலத்தையொட்டிச் சோழரைப் பற்றிப் பல பழங்கதைகள் தோன்றின. சோழரின் குடி, வட இந்திய அரச மரபுகளுக்குரிய மூவகைக் குலங்களுள் சூரிய குலத்தைச் சேர்ந்தது என்னும் கதையும் தோன்றியது.[1] இக் காலத்திய கல்வெட்டுகளும், நூல்களும் சோழரை மனுவின் குலத்தில் வந்தவர்கள் என்றும், சூரிய மரபினர் என்றும், காசியப கோத்திரத்தினர் என்றும் கூறுகின்றன.[2] வட இந்திய மன்னர்களைப் போல, சோழரும் பழமையான அரச மரபைச் சேர்ந்தவர்கள் என்பதை அறிவிப்பதற்காகவே விசயாலய சோழனுடைய மரபினர் எழுச்சியுற்றதை யொட்டி இத்தகைய கதைகள் தோன்றலாயின.

## கன்னியாகுமரி கல்வெட்டு கூறும் கதை

வீர இராசேந்திர சோழனுடைய கன்னியாகுமரி கல்வெட்டு சோழ அரச மரபின் தோற்றத்தைப்பற்றித் தெரிவிக்கும் செய்தி இங்குக் குறிப்பிடத் தக்கது. அதில், சோழன் என்பது ஓர் இயற்பெயராகவே காணப்படுகிறது. சோழ வர்மன்[3] என்னும் அரசன் வேட்டையாடுவதற்குக் காட்டிற்குச் சென்றான். அங்குத் துறவிகள் வாழ்ந்த இடத்தில் அவன் தங்கி இருந்தான். பின்னர் ஒரு நாள் இரண்டொரு பணியாட்களோடு மான் வேட்டையாட அவன் காட்டிற்குச் சென்றான். இரசனிசரன் என்னும் அரக்கன் ஒருவன் புள்ளிமான் வேடம் பூண்டு, இச்சோழ

[1] மணிமேகலை, பதி. 912.
[2] அன்பில் செப்பேடு, திருவாலங்காட்டுச் செப்பேடு முதலியன.
[3] திருவாலங்காட்டுச் செப்பேட்டில் துஷ்யந்தன் மகனாகிய பரதனுடைய பிள்ளையே சோழ வர்மன் என்று கூறப்படுகிறது. இடைக்காலத் தமிழர் போலி மதிப்பில் கொண்ட ஈடுபாட்டிற்கு இதைச் சான்றாக காட்டலாம்.

மன்னன் முன்னால் ஓடினான். மான் வேடம் பூண்ட மாரீசனை இராமன் எப்படி விரட்டிக் கொண்டு நெடுந்தொலைவு சென்றானோ, அவ்வாறே சோழ வர்மனும் அம்மானைப் பின் தொடர்ந்து சென்றான்; இறுதியில் அதைக் கொன்றான்.

பாற்கடலைக் கடைந்து எடுத்த அமிழ்தத்தைத் தண்ணீர் வடிவிலே உலகினருக்கு வழங்கி வருவது காவிரி. அதன் கரை வழியே சிறிது தூரஞ் சென்று, அவ்வாற்றில் நீராடி, அவன் கரையேறினான். அந்தப் பகுதியில் பார்ப்பனர் ஒருவரை யும் அவன் காணமுடியவில்லையாம். அதனால், ஆரியாவர்த்தத் தினின்று தவத்தில் சிறந்த பார்ப்பனர் பலரை அழைத்து வந்து அந்நாட்டில் அவன் குடியேற்றினான். பிறகு, காட்டையழித்து நாடாக்கிப் பல்வகை வளமும் கொழிக்குமாறு அவன் செய்தான். அவர்களை அங்கேயே நிலையாக வாழுமாறு அவன் வசதிகள் செய்து கொடுத்தான். அவ்வரசனுக்குப்பின் அவனுடைய மரபினருக்குச் சோழர் என்னும் பெயர் வழங்கத் தொடங்கிய தாம்.[4]

அந்த மரபில் வந்தவருள் ஒருவன் காந்தமன் என்பவனாவான். அவன் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்து சோழ மண்டலத்தை ஆண்டு வந்தான். அவனே காவிரியாற்றை மண்ணுலகிற்குக் கொண்டு வந்தான்.[5] என்பன போன்ற பல புராணக் கதைகள் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டை யொட்டித் தோன்றியுள்ளன. இவை யாவும் தொன்மைச் சிறப்பு வாய்ந்த சோழருடைய குடிக்கு, புராண மரபையொட்டி புதுமெருகு கொடுக்கும் முயற்சியினால் உண்டான விளைவுகளாகும். இவற்றுள் ஆராய்ச்சிக்குப் பொருந்தி வராத கற்பனையே முதன்மையிடம் பெற்றிருக்கிறது.

இத்தகைய கதைகள் உண்மையான வரலாற்றை அறிவதற்கு இடையூறாக உள்ளன. மெய்ம்மையான நிகழ்ச்சிகள் திரிக்கப் பட்டு, ஒவ்வொருவரின் மனப்போக்கிற்கேற்ற வகையில் கற்பனை வண்ணம் பூசப் பெற்றுள்ளன. கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் இடம் பெற்றிருப்பதனாலேயே, இவற்றை உண்மை யென்றும் நம்பத்தக்கனவென்றும் கொள்ளுவது தவறாகும். இடைக்காலத் தமிழகத்து மக்களுடைய மனப் போக்கு எவ்வாறிருந்தது என்பதை அறிவதற்கே நாம் இவற்றைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

[4] E.I., Vol 18: pp. 51—60.
[5] மணிமேகலை, 22:25 37.

## சோழ அரச மரபின் புத்துயிர்ப்பு

பல்லவப் பேரரசு தளர்ச்சியுற்று, வளர்ச்சி குன்றி, விழ்ச்சியுறத் தொடங்கிய காலத்தில் சோழ அரச மரபு புத்துயிர் பெறத் தொடங்கியது. பல்லவர்களும் சாளுக்கியர்களும் ஓயாது போரில் ஈடுபட்டிருந்தனர். அதனால், இருதிறத்தினரும் ஆற்றல் குன்றி அழிவுப்பாதையை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். கி.பி. எட்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில், இராஷ்டிர கூடர்கள், சாளுக்கியரின் கொட்டத்தையடக்கி, அவர்களுடைய நாட்டைக் கைப்பற்றிக் கொண்டனர். இராஷ்டிர கூடர்களுக்கும் பல்லவருக்கும் இடையே மோதல்கள் உண்டாயின. அதனால், அவர்கள் தொண்டை நாட்டின் மீது பலமுறை படையெடுத்து வந்தனர்; பல்லவர் தோல்வியு முற்றனர். இத்தகைய இன்னல் மிகுந்த காலத்தில், தெற்கிலி ருந்த பாண்டியர் பையப் பையப் பல்லவப் பேரரசின் தென் பகுதியைக் கைப்பற்றி அதைத் தங்கள் ஆட்சியின் கீழ்க் கொண்டு வரலாயினர்.

இவ்வாறு ஒருபுறம் பல்லவருக்கும் இராஷ்டிர கூடருக்கும் இடையே போரும், மற்றொரு பக்கம் பல்லவருக்கும் பாண்டி யருக்கும் இடையே போரும் நடைபெற்றுக் கொண்டிருந்தன. அக்காலத்தில், சோழ அரச மரபினர் தலையெடுக்கத் தொடங் கினர். பாண்டியருக்கும் பல்லவருக்கும் இடையே போரும் பூசலும் உண்டாகிய பொழுது, இரு வல்லரசுகளுக்கும் இடைப் பட்ட பகுதியில் இருந்த சோழருக்குச் சில வாய்ப்புக்களும் வசதிகளும் கிடைத்தன. அவர்கள் தங்களுடைய உரிமையை நிலைநாட்டத் தொடங்கினர். அக்காலத்திய சோழ மண்ட லத்தைக் கொடும்பாளூர் வேளிர்களும், சந்திரலேகை முத்தரையர் களும், பழையாறைச் சோழர்களும் பகிர்ந்து கொண்டிருந்தனர். பழையாறைச் சோழர்கள் கொடும்பாளூர், வேளிரொடு திருமண உறவு கொண்டிருந்தனர். அதனால் அவ்விரு அரச குடிகளுக்கு இடையில் நெருக்கமான உறவும் தொடர்பும் இருந்து வந்தன.

பல்லவருக்கும் பாண்டியருக்கும் இடையில் அடிக்கடி போர் நடைபெற்ற பொழுது, அவர்கள் பல்லவ அரசனுக்கு உதவியாகப் போர் புரிந்தனர். ஆனால், அப்போர் முடிந்த பின்னர் அவர்கள் தங்களுக்குள்ளேயே போரிட்டுக் கொண்டனர். அதன் மூலம் தங்களுடைய படை பலத்தையும், அரசியல் ஆதிக்கத்தையும் சோழ மரபினர் பெருக்கிக் கொண்டனர்.

**சோழரின் எழுச்சி**

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் விசயாலயன் என்னும் சோழ மன்னன் முத்தரையர்களை வென்றான், அவர்களுடைய ஆட்சிக்குட்பட்டிருந்த தஞ்சையை அவன் கைப்பற்றிக் கொண்டான். அக்காலத்தில் இருந்த முத்தரைய அரசன் யாரென்பது நமக்குத் தெரியவில்லை. 'தஞ்சைக்கோன்', 'தஞ்சை நற்புகழாளன்' என்று முத்தரையருடைய கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இதனால், தஞ்சையும், தஞ்சையைச் சார்ந்த பகுதிகளும் முத்தரையருக்கு உரியனவாக இருந்தன என்பது புலனாகின்றது.

இவ்வாறு 'சோழர் குடிக்குப் புது வாழ்வை அளிக்க அடிகோலிய விசயாலயன் யார்? அவனுக்கும் பண்டைச் சோழ வேந்தர் குடிக்கும் ஏதேனும் தொடர்பு உண்டா? என்பன போன்ற ஐயங்கள் நமக்கு எழலாம். விசயாலயன் கால்வழியினருடைய ஆட்சிக் காலத்தில் வழங்கப்பட்ட செப்பேடுகளிலும், பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளிலும் அவர்களுடைய அரசமரபின் தொன்மை வரலாற்றைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. சிறப்பாக, அன்பிற் செப்பேடுகளும், ஆனைமங்கலச் செப்பேடுகளும் திருவாலங்காட்டுச் செப்பேடுகளும், கன்னியாகுமரிக் கல்வெட்டும் விசயாலயனின் முன்னோரைப்பற்றிய செய்திகள் சிலவற்றைத் தெரிவிக்கின்றன. சங்க காலத்தில் சிறப்புற்று விளங்கிய பெருநற்கிள்ளி, கரிகாலன், செங்கணான், நல்லடி போன்ற சோழப் பெருமன்னர்கள் வழியிலே வந்தவரே விசயாலயன் மரபினர் என்பதைத் தெள்ளத் தெளிவாக அவை எடுத்துரைக்கின்றன. முதலாம் இராசராசன், இராசேந்திரன் போன்ற பேரரசர், தங்கள் அரசமரபு, தொன்மைச் சிறப்பும் வரலாற்றுப் புகழும் வாய்ந்தது என்பதை நன்குணர்ந்திருந்தனர். இதற்கு அவர்கள் வழங்கிய செப்பேடுகள் தெரிவிக்கும் செய்திகளே தக்க சான்றாகும்.

எனவே, விசயாலய சோழனின் முன்னோர், சங்க காலத்திற்குப் பின்னர் புகழ் மங்கிய நிலையில் வாழ்ந்த பண்டைச் சோழ மன்னரின் கிளையினரே என்பது இவற்றால் புலனாகின்றது. ஆகவே, விசயாலயன் மரபினர் தமிழ் மண்ணிலே தழைத்தோங்கிய தனிப்பெருங்குடியினரே என்பதில் சிறிதும் ஐயமில்லை!

பிற்காலச் சோழப் பேரரசிற்குக் கால்கோள் விழா நடத்திய பெருமைக்குரியவன் விசயாலயன். அவன் மாபெரும் வீரனாகவும், செயல்திறன் வாய்ந்த தலைவனாகவும் விளங்கினான். "மீதெல்

லாம். எண்கொண்ட தொண்ணூற்றின் மேலும் இரு மூன்று, புண்கொண்ட வென்றிப் புரவலன்"[6] என்று ஒட்டக்கூத்தர் விசயாலயனைப் பாராட்டியுள்ளமை இங்குக் கருதத்தக்கது.

அம்மன்னன் சற்றேறக்குறைய 'இருபத்திரண்டு ஆண்டுகள் (கி.பி.850-71) ஆட்சிபுரிந்தான்.[7] விக்கிரம சோழனுடைய கல்வெட்டு ஒன்றால், வட ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள கீழ்ப்புத்தூரில் விசயாலயனுடைய கல்வெட்டு ஒன்று இருந்தது என்பதும், அது அவனுடைய நான்காம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்டது என்பதும் புலனாகின்றன[8] இதனால் விசயாலயனின் அரசியல் செல்வாக்கு தொண்டை மண்டலத்தின் ஒரு பகுதி வரையில் பரவியிருந்ததாகக் கூறலாம்.

அவனுடைய ஆட்சிக்காலம் முதற்கொண்டு தஞ்சாவூர், சோழருடைய தலைநகரமாகச் சிறப்புறத் தொடங்கியது. அவன் பரகேசரி வர்மன் என்னும் பட்டம் சூட்டிக் கொண்டிருந்ததாகக் கூறுவர்.[9] அவ்வரசன் தஞ்சாவூரில் நிதம்ப சூதனி என்னும் துர்க்கைக்குக் கோயில் ஒன்று கட்டியுள்ளான். மற்றும், புதுக் கோட்டைப் பகுதியில் உள்ள நார்த்தா மலையில், அவன் ஒரு கோயில் எடுப்பித்துள்ளான். அதனை விசயாலய சோழீச்சுவரம் என்று கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

விசயாலயனுக்குப் பிறகு, அவனுடைய மகன் ஆதித்தன் (கி.பி. 871-907) அரசு கட்டிலேறினான். அவன் இராசகேசரி வர்மன் என்னும் பட்டப் பெயரைப் பூண்டிருந்தான். அவன் ஆட்சிக்கு வந்த சிறிது காலத்திற்குள் (கி பி. 880 இல்) திருப்புறம் பயம் என்னும் இடத்தில் ஒரு மாபெரும் போர் நடை பெற்றது. அப்போரில் பாண்டிய மன்னனான வரகுணன், பல்லவ அரசனான அபராசித வர்மனை எதிர்த்துக் கடும் போர் புரிந்தான். பல்லவ மன்னனுக்குப் பேருதவியாகக் கங்க அரசன் பிருதிவிபதி போரிட்டான். அப்போரில் பல்லவனுக்கு உறுதுணையாக ஆதித்தன் போரிட்டிருக்கலாம் என்பது ஆராய்ச்சியாளர் கருத்தாகும்.[10] போரில் அபராசித வர்மன் வெற்றி பெற்றான். ஆனால், அவனுடைய உற்ற நண்பனான பிருதிவிபதி விண்ணுலகை அடைந்தான். அவன் "பாண்டிய அரசனான வரகுணனைக் கொன்று, தன் நண்பனைப் பெயரளவில் மட்டுமன்றி, உண்மையாகவே அபராசித (வெற்றிபெற முடியாதவ)னாகச் செய்து.

6 விக்கிரம சோழன் உலா, 28-30.
7 M. E. R, 1917, No 447.
8 No. 164 of 1915.
9 No. 665 of 1910.
10 Nilakanta Sastri, K. A : op. cit., pp. 117-18.

துறக்கம் அடைந்தான்."[11] அப்போருக்குப் பிறகு பாண்டியர்கள் தலையெடுக்கவில்லை. பல்லவ மன்னன் வெற்றியடைந்த போதிலும், பெரிய பேரரசைக் கட்டிக் காக்கும் ஆற்றலோ, வாய்ப்பு வசதியோ பெற்றவனாக அவன் விளங்கவில்லை.

இந்த நல்ல வாய்ப்பினை, ஆதித்த சோழன் நன்கு பயன் படுத்திக் கொண்டான். தன்னுடைய தனியுரிமையை அவன் நிலைநாட்டிக் கொண்டான். அபராசிதன் சோர்ந்திருக்கும் சமயம் அறிந்து அவனைத் தாக்கித் தொண்டை நாட்டையும் ஆதித்தன் கைப்பற்றிக் கொண்டான்.[12] பின்னர், கங்க நாட்டின் மீது படையெடுத்துச் சென்று, மேலைக் கங்கருடைய தலைக் காட்டையும் அவன் பிடித்துக் கொண்டான். அவனுக்குப் பிறகு ஆட்சிக்கு வந்த முதலாம் பராந்தகன் காலத்தில் கங்கவாடி சோழ அரசின் ஒரு பகுதியாக இருந்தமை இதற்குரிய சான்றாகும். மேலும், கங்கர் குலத்து மன்னனான இரண்டாம் பிருதிவிபதி ஆதித்தனின் ஆட்சிக்காலத்தில் அறக்கட்டளை வழங்கிய செய்தி ஒன்றைக் கல்வெட்டு தெரிவிக்கிறது. இதனால், ஆதித்தனின் மேலாதிக்கத்தைக் கங்கர் ஏற்றுக் கொண்டிருந்தமை புலனா கின்றது.[13] இப்போர்களில், சேரமான் தாணுரவி ஆதித்தனுக்கு உதவியாக இருந்தான். போர்முனையில், விக்கியண்ணன் என்னும் படைத்தலைவன் வியத்தகு முறையில் போரிட்டான். அவனுடைய அரும் பெருஞ் செயல்களைப் பாராட்டும் வகையில் சிம்மாசனம், சாமரை, பல்லக்கு, முரசு, களிற்றுப்படை முதலியவற்றை ஆதித்தனும், சேரமானும் அவனுக்குப் பரிசாகத் தந்தனர். அவற்றுடன் விக்கியண்ணனுக்குச் செம்பியன் தமிழவேள் என்னும் பட்டமும் அளித்துச் சிறப்புச் செய்தனர்.[14]

ஆதித்த சோழன் தொண்டை நாட்டில் திருக்காளத்திக்கு அருகிலுள்ள தொண்டைமான் ஆற்றூர் என்னும் ஊரில் உயிர் துறந்தான். அதனால் அவனுக்குத் 'தொண்டைமான் ஆற்றூர்த் துஞ்சின தேவர்' என்னும் பெயருண்டாயிற்று. அவனுக்குக் கோதண்டராமன் என்ற மற்றோர் பெயருமுண்டு.

தன் தந்தை அமைத்த அடிப்படையின் மீது, அரிதின் முயன்று ஒரு பேரரசை நிறுவும் முயற்சியில் ஆதித்தன் ஈடுபட்டான். முதன் முதலாகத் தொண்டை மண்டலமும், கங்கவாடியும் சோழருடைய ஆட்சிக்குட்படுத்திய சிறப்பு ஆதித்தனுக்குரிய தாகும்.

11 S.I.I. Vol. 2. pp. 387-8.
12 S.I.I. Vol 3 No. 205 p, 18;
13 E. I. Vol. 19. No 12. Ins. No. 5. of 1897.
14 S.I.I.,Vol. 3 pt. 3; p. 221.

## சோழப் பேரரசின் வளர்ச்சி

ஆதித்தனுக்குப் பிறகு, அவனுடைய மகன் பராந்தகன் பரகேசரி என்னும் பட்டத்துடன் அரியணை ஏறினன். அவன் நாற்பத்தெட்டு (கி.பி. 907-955) ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். முதலில் அவன் பாண்டிய நாட்டின்மீது படையெடுத்துச் சென்று, மதுரையைக் கைப்பற்றிக் கொண்டான். இதனல், 'மதுரை கொண்ட கோப்பரகேசரி வர்மன்' என்னும் சிறப்புப் பெயரை அவன் பெற்றான். பராந்தகனிடம் தோல்வியுற்றவன் இராசசிம்ம பாண்டியனுவான். தோல்வியுற்ற பாண்டிய அரசன் இலங்கையர் கோனுகிய ஐந்தாம் காசிபனின் துணையை நாடினன். காசிபனும் யானைப்படை, குதிரைப்படை, காலாட் படைகள் அடங்கிய பெரிய தானையைத் தன் படைத்தலைவனுடன் அனுப்பிவைத்தான். அப்படையின் துணையைக் கொண்டு பாண்டியன், சோழனை எதிர்த்துப் போரிட்டான். வெள்ளூர் என்னும் இடத்தில் கடுமையான போர் நடந்தது. அதில் ஈழப் படை படுதோல்வி யடைந்தது. அப்பாண்டிய அரசனுக்கு உதவியாக இருந்த இலங்கை அரசனையும் பராந்தகன் வெற்றி கொண்டான்; ஈழ நாட்டையும் கைப்பற்றினன். மற்றும், பாண்டியன் இலங்கைக்கு எடுத்துக் கொண்டு ஓடிய மணி முடியையும், மணி மாலையையும் கைப்பற்ற முயன்றான். இந் நிலையில் காசிபன் அவற்றை எடுத்துக் கொண்டு தெற்கு நோக்கி ஓடி ரோகண நாட்டிற்குள் ஒளிந்துகொண்டான். இதனல், ஏமாற்றம் அடைந்த பாண்டியன், தன் தாயினுடைய தாயக மாகிய சேர நாட்டில் அடைக்கலம் அடைந்தான். இப்போர் களின் முடிவில் பராந்தகன் 'மதுரையும் ஈழமும் கொண்ட'வன் என்னும் பேரையும் புகழையும் பெற்றான்.

அக்காலத்தில் தொண்டை மண்டலத்தின் வடபகுதியை வாணர், வைதும்பர் என்னும் குறு நில மன்னர் ஆட்சி புரிந்து வந்தனர். அவர்களை அடக்கியொடுக்கித் தன்னுடைய ஆட்சி யின் கீழ்க் கொண்டுவரப் பராந்தகன் முயன்றான். அம்முயற்சியில் அவன் வெற்றியும் பெற்றான். அப்போர்களில் அவனுக்குக் கங்க அரசனான இரண்டாம் பிருதிவிபதி உறுதுணையாக விளங்கினன். அவ்வரசனுக்குப் பாலாற்றுக்கு வடக்கே, புங்கனூருக்கும் காளத்திக்கும் இடைப்பட்ட வாணகப் பாடியை அன்புப் பரிசாகப் பராந்தகன் அளித்தான். மற்றும், பிருதிவிபதிக்குச் செம்பியன் மாவீரன் வாணராயன் என்னும் பட்டத்தையளித்து[15] அவன் பாராட்டினன். பின்னர், பராந்தகன்

[15] S. I. I. Vol. 2. No, 76.

நெல்லூர் மாவட்டத்தில் உள்ள சீட்புலி நாட்டையும் கைப்பற்றிக் கொண்டான்,[16]

பராந்தகனுடைய ஆட்சியின் இறுதிப் பகுதியில் தொண்டை நாட்டில் குழப்பம் உண்டாயிற்று. மூன்றும் கிருஷ்ணன் எனப்படும் இராஷ்டிர கூட மன்னனான கன்னர தேவன், தொண்டை மண்டலத்தைத் தாக்கினான். கி.பி. 949 ஆம் ஆண்டில் தக்கோலம் என்னும் இடத்தில் கொடிய போர் நடைபெற்றது. அதில் பராந்தகனுடைய மூத்த மகனான இராசாதித்தன் சோழப் படைக்குத் தலைமையேற்று வீராவேசத்துடன் போர் புரிந்தான். அவன் போர்க்களத்தில் யானையின்மீது இருந்து போர் புரிந்த சமயத்தில், இரண்டாம் பூதுகன் என்பவனுடைய அம்பினால் துளைக்கப்பட்டு இறந்தான். இவ்வாறு இறந்தமையால், அவனுக்கு ஆனைமேல் துஞ்சின தேவன் என்னும் பெயர் உண்டாயிற்று. இராசாதித்தனைக் கொன்றவன் கன்னர தேவனுடைய உடன் பிறந்தாளின் கணவனாவான். அப்பூதுகன் மேலைக் கங்க அரசனாவான்.

பராந்தகனுடைய வாழ்நாளின் இறுதிப் பகுதியில் இராசாதித்தன் இறந்து விட்டான். அதன் பிறகு பராந்தகன் நெடுங்காலம் உயிர் வாழவில்லை. அவனுக்கு மூன்று ஆண் மக்கள் இருந்தனர். அவர்களுள் இராசாதித்தனே மூத்த மகனாவான். கண்டராதித்தன், அரிஞ்சயன் என்போர் இளைய பிள்ளைகளாவர்.

பராந்தகன் வாழ்க்கை, போரிலேயே பெரிதும் கழிந்தது. அவனுடைய ஆட்சியிலே சோழரின் ஆதிக்கம் நெல்லூர் முதல் ஈழம் வரையில் பரவியிருந்தது, சோழ அரசு, சோழப் பேரரசாக வளர்ச்சியுற்றது. போரிலே பெரிதும் ஈடுபட்டிருந்த போதிலும் நாட்டு ஆட்சியிலும் ஆக்கப்பணிகளிலும் அவன் மிகுந்த ஆர்வம் காட்டினான். சோழர் காலத்திய ஊராட்சி முறை அவனுடைய காலத்தில் நன்கு வளர்ச்சியும் முதிர்ச்சியுமுற்றிருந்தது. இன்றும் உலகம் கண்டு வியக்கத்தக்க ஊராட்சி மன்ற அமைப்பு, உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கும் முறை, ஊராட்சி முறை போன்றவற்றைப் பற்றிய செய்திகளைப் பராந்தகன் காலத்தில் பொறிக்கப்பட்ட உத்தரமேரூர்க் கல்வெட்டுகளே தெரிவிக்கின்றன.[17] தில்லையம்பலத்திற்குப் பராந்தகன் பொன் வேய்ந்த செய்தியை ஆனைமங்கலச் சேப்பேடும் திருவாலங்காட்டுச் செப்பேடும் சிறப்பித்துப் பேசுகின்றன,[18]

[16] *Ibid.* Vol. 3, p. 108.
[17] Archaeological Survey of India, 1904-5: pp. 139-146.
[18] Epi Ind Vol. 22, No 34; S. I. I., Vol. 3, No. 205

வீரநாராயணன், வீரசோழன், பண்டிதவத்சலன், குஞ்சர மல்லன், சங்கிராமராகவன், இருமடி சோழன் என்பன அவனுக்கு வழங்கிய சிறப்புப் பெயர்களாகும். சிதம்பரத்திற்கு மேற்கே காட்டுமன்னார் கோயில் என்று ஓரூர் இருக்கிறது. அதற்கு வீரநாராயணச் சதுர்வேதி மங்கலம் என்பது பழைய பெயராகும். அதற்கு வடக்கே வீராண ஏரி என்றும் ஒன்று இருக்கிறது. அதனுடைய பழைய பெயர் வீரநாராயண ஏரி என்பதாகும். இவை இரண்டும் பராந்தகனுடைய சிறப்புப் பெயரால் பராந்தகனாலேயே அமைக்கப் பட்டனவாகும்.

பராந்தகனுக்குப் பிறகு, அவனுடைய இரண்டாம் மகனான கண்டராதித்தன் சோழ மன்னனாக முடி சூட்டப்பட்டான். அவன் சிறிது காலமே ஆட்சி புரிந்தான். அவனுடைய ஆட்சிக் காலம் போரற்று அமைதியாக இருந்தது. தன் முன்னோர் இழந்த தொண்டை மண்டலத்தின் ஒரு பகுதியை, அவன் மீட்கவும் முயலவில்லை. அவனுடைய ஆட்சிக் காலத்தில் பாண்டியர்கள் பையப் பையத் தலையெடுக்கத் தொடங்கினர். பெரிதும் ஆன்மிக விசாரணையில் கண்டராதித்தன் ஆர்வம் கொண்டிருந்தான் புறப்பகையை வெல்லுவதை விட அகப் பகையை நீக்கி, இறைவன் திருவடிகளை அடையும் நெறியில் அவன் பற்றுறுதியோடு நின்று ஒழுகினான். தெய்வபக்தியோடு தமிழ் மொழிப் பற்றும் வாய்ந்தவனாக அவன் விளங்கினான். சோழர் மரபில் தோன்றி, மெய்ப் பொருள்கண்ட 'அரசமுனிவர் (இராஜரிஷி) என்று நாம் அவனைக் குறிப்பிடலாம்.

அவனுடைய தமிழறிவு போற்றத்தக்கதாகும். அவன் நாடாளும் காவலனாக மட்டும் விளங்கவில்லை. காதலாகிக் கசிந்துருகி இறைவனுடைய அருட்பேற்றினைப் போற்றிப் பாட்டியற்றும் பாவலனாகவும் சிறப்புற்றான். இத்தகைய காவல னும் பாவலனுமான கண்டராதித்தன் தில்லைச் சிற்றம்பலப் பெருமானைப் போற்றிப் பாடியுள்ள பாடல்கள் பத்து நமக்குக் கிடைத்துள்ளன. அவை, சைவத் திருமுறைகள் பன்னிரண்ட னுள் ஒன்பதாம் திருமுறையில் உள்ள திருவிசைப்பாவினுள் சேர்க்கப் பெற்றுள்ளன. அப்பாடல்கள் அவ்வரசனுடைய முறுகிய பக்தியையும், உள்ளப் பண்பாட்டையும் இனிது உணர்த்துகின்றன. அவனுடைய மனைவி செம்பியன் மாதேவி என்பவராவர். தமிழகத்து மகளிரின் வரலாற்றில் அந்த அம்மை யாருக்கு ஒரு தனியிடம் உண்டு. தம் கணவரைப் போலவே அவ்வம்மையும் சிறந்த சிவபக்தர். திருக்கோயில் திருப்பணிகள் பலவற்றைச் செம்பியன் மாதேவியார் சிறப்புறச் செய்துள்ளார்.

கண்டராதித்த சோழர் மறைந்த பொழுது அவருக்கு ஒரு சிறு குழந்தை இருந்தது. அக்குழந்தையே பிற்காலத்தில் மதுராந்தகன் என்னும் இயற்பெயரும் உத்தம சோழன் என்னும் சிறப்புப் பெயரும் பெற்று விளங்கியது. கண்டராதித்தனின் மகன் சிறு குழந்தையாக இருந்தமையால், அவனுடைய தம்பி யான அரிஞ்சயன் அரசு கட்டில் (956—7) ஏறினன். அவனை அரிந்தமன் என்றும், அரிகுலகேசரி என்றும் கல்வெட்டுகள் சுட்டுகின்றன. பராந்தகனுக்குக் கேரளவரசன் பழுவேட்டரை யன் மகள் வயிற்றுப் பிறந்தவனே அரிஞ்சயனுவான்.

தன் முன்னோர்களிடமிருந்து இராஷ்டிர கூடர் கைப்பற்றி யிருந்த தொண்டை மண்டலத்தைத் திரும்பக் கைப்பற்றிச் சோழ நாட்டில் இணைக்க அவன் விரும்பினான். அதற்குரிய செயல்களில் அவன் ஈடுபட்டான். பெரியதோர் படையோடு அவன் வடக்கு நோக்கிச் சென்றான். இராஷ்டிர கூட மன்னனான கன்னர தேவன் சோழ மன்னனை எதிர்த்துக் கடும்போர் புரிந் தான். போரின் இடையில், அரிஞ்சயன் தொண்டை மண்டலத் தில் ஆற்றூர் என்னும் இடத்தில் இறந்து விட்டான். இதனால், அவனுக்கு ஆற்றூர்த் துஞ்சின தேவன் என்ற பெயருண்டாயிற்று. அவன் நெடுங்காலம் நாட்டை ஆண்டதாகத் தெரியவில்லை. ஓராண்டிற்குள்ளாகவே அவனுடைய வாழ்க்கை முடிந்து விட்டது போலும். அவன் காலத்திய கல்வெட்டுகள் ஒன்றும் நமக்குக் கிடைக்கவில்லை. அவனுக்கு வைதும்ப அரசனுடைய மகள் கல்யாணி என்னும் அரசியும், வீமன் குந்தவையார், கோதைப் பிராட்டியார், பூதி ஆதித்தப் பிடாரி என்னும் வேறு மனைவியரும் இருந்தனர்.

**புகழ்மிகு தந்தை**

அரிஞ்சயன் இறந்த பிறகு, அவனுடைய மகன் சுந்தர சோழன் சோழ சிம்மாசனம் (கி.பி. 957—73) ஏறினன். அவன் அரிஞ்சயன் மனைவியருள் கல்யாணி என்பவளுக்குப் பிறந்தவனு வான். அவனுடைய இயற்பெயர் பராந்தகன் என்பதாகும். எனவே, அவனை இரண்டாம் பராந்தகன் என்று ஆராய்ச்சி யாளர் சுட்டுவர். அவனை மதுரை கொண்ட கோஇராசகேசரி வர்மன் எனவும் பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமாள் ஸ்ரீசுந்தர சோழ தேவர் எனவும் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.[19]

அவன் காலத்தில் மதுரையில் இராசசிம்ம பாண்டியனுடைய மகனான வீரபாண்டியன் ஆட்சி புரிந்து வந்தான். பாண்டி யனுக்கும் பராந்தகனுக்கும் இடையே போர் மூண்டது. சேவூரில்

19. S.I.I. Vol. 3, Nos. 115, 116, 117, 118, Epi. Ind. Vol. 3, No. 15; 302 of 1908

இவ்விருவருக்கும் இடையே கடும்போர் நடந்தது. அப்போரில் சுந்தர சோழனே வாகை சூடினன். அப்போரில் பாண்டியனுக்கு உதவி புரிய சிங்கள மன்னன் நான்காம் மகிந்தன் பெரும் படையினை அனுப்பி இருந்தான். அதனால், சிங்கள மன்னனுக்குப் பாடம் கற்பிக்க, சுந்தர சோழன் விரும்பினன். தன் படைத் தலைவனும் கொடும்பாளூர்க் குறுநில மன்னனுமான பராந்தகன் சிறிய வேளான் என்பவனுடைய தலைமையில் சோழரின் கப்பற் படை இலங்கையை முற்றுகையிட்டது. ஈழத்து மண்ணில் இருதிறத்தினருக்கும் கடும்போர் நிகழ்ந்தது. போரின் இறுதியில் கொடும்பாளூர்க் குறுநில மன்னன் போர்க்களத்தே உயிர் துறந்தான்.

தனக்கு அரசியலில் உதவியாக இருக்கும் பொருட்டுத் தன்னுடைய மூத்த மகனை ஆதித்த கரிகாலனுக்குப் பராந்தகன் தான் ஆட்சிக்கு வந்த சில ஆண்டுகளில் இளவரசு பட்டம் சூட்டினன். அதுமுதல், ஆதித்தன் பராந்தகனுக்குப் பேருதவியாக இருந்து வந்தான். மீண்டும், வீரபாண்டியன் தலையெடுக்கத் தொடங்கினன். அவனை அடக்கியொடுக்க, மறுபடியும் சுந்தர சோழன் பாண்டி நாட்டின் மீது படையெடுத்துச் சென்றான். அப்படையெடுப்பில் ஆதித்த கரிகாலனும், கொடும்பாளூர் வேள் பூதிவிக்கிரமகேசரியும், தொண்டை நாட்டுச் சிற்றரசன் பார்த்தி வேந்திரவர்மனும் சோழ மன்னனுக்காகப் போரிட்டனர். ஆதித்த கரிகாலன் வீரத்தோடும் போர் புரிந்து, வெற்றி பெற்றான். வீரபாண்டியனைத் தானே எதிர்த்து நின்று போரிட்டு, அவனை ஆதித்தன் கொன்றான். இதனால், வீர பாண்டியனைத் தலைகொண்ட கோப் பரகேசரி வர்மன்,[20] என்று அவன் பாராட்டப் பெற்றான்.

இந்நிலையில், வடக்கே தொண்டை மண்டலம் கன்னர தேவனுடைய ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தது. எனவே, வடபுலம் நோக்கிச் சோழ மன்னன் தண்டெடுத்துச் சென்றான். அப்போரினும் ஆதித்தன் வாகை சூடினன். அதனால், சோழப் பேரரசு தொண்டை மண்டலம் முதல் ஈழம் வரை பரந்து விரிந்தது.

பராந்தகன் ஆட்சியில் இத்துடன் போர்கள் ஓய்ந்தன. பிறகு, நாட்டு மக்களின் நலன் கருதி ஆக்கப் பணிகள் பல செய்யப்பட்டன. மழநாட்டு அன்பில் என்னும் ஊரைச் சேர்ந்த அநிருத்த பிரமாதிராயன் என்பான் சுந்தர சோழனுக்கு அமைச்ச

[20] S. I. I. Vol. 3; No. 14;: S.I.I., Vol; 7, Nos. 74 and 800

னாக இருந்து, உதவி புரிந்தான். அவனுக்குச் சுந்தர சோழன் இறையிலியாகக் கருணாகர மங்கலம் என்னும் ஊரினை வழங்கினான். இதைத் தெரிவிக்கும் செப்பேடே, அன்பில் செப்பேடு எனப்படுவதாகும். இன்றுவரை நமக்குக் கிடைத்துள்ள சோழருடைய செப்பேடுகளுள், காலத்தால் மிகவும் பழமையானது இந்த அன்பில் செப்பேடேயாகும்.

சுந்தர சோழனுக்கு இரு மனைவியர் இருந்தனர். அவர்களுள் சேர மன்னனுடைய மகள் பராந்தகன் தேவியம்மன் என்பவள் ஒரு மனைவி. மற்றொரு மனைவியின் பெயர் வானவன் மாதேவி. திருக்கோவலூரை ஆண்ட மலையமான் குடியில் இவ்வம்மை தோன்றியவராவர். இவ்வம்மையாருக்குப் பிறந்தவர்களே ஆதித்த கரிகாலன், அருண்மொழித் தேவன் என்ற இரு ஆண் பிள்ளைகளும், குந்தவை என்னும் பெண்பிள்ளையுமாவர். இவர்களுள் குந்தவையே மூத்தவராவார். இப்பிராட்டியாரை வல்லவரையன் வந்தியத் தேவனுக்குத் திருமணம் செய்து கொடுத்தனர். சோழப் பேரரசைத் தாங்கிய தூண்களுள் தனிப்பெருஞ் சிறப்புவாய்ந்த தூணாக விளங்கியவன் வல்லவரையன் வந்தியத் தேவனாவான். அருண்மொழித் தேவனே, இந்நூலின் மாண்புமிகு தலைவனான இராசராச சோழனாவான்.

சுந்தர சோழனுடைய இறுதி நாட்கள் துன்பம் நிறைந்த அவல நாடகமாக மாறியது. அவனுடைய அருமை மகனும், அடலேறு போன்று விளங்கியவனுமான ஆதித்த கரிகாலன் வஞ்சனையாகக் கொலை செய்யப்பட்டான். இந்நிகழ்ச்சி பராந்தகனுக்குப் பேரதிர்ச்சியைக் கொடுத்தது. முதுமையால் தளர்ச்சியுற்றிருந்த சுந்தர சோழன், இவ்வதிர்ச்சியைத் தாங்கமாட்டாமல் விரைவில் விண்ணுலகை அடைந்தான். அவன் காஞ்சிமாநகரிலிருந்த பொன்மாளிகையில் உயிர் துறந்தான்; அதனால், 'பொன் மாளிகைத் துஞ்சின தேவர்' என்று போற்றப்பட்டான். அவனுடன் வானவன் மாதேவி உடன்கட்டை ஏறினாள். அவ்வம்மையின் அருஞ்செயலைத் திருவாலங்காட்டுச் செப்பேடும், திருக்கோவலூரி (வானவன் மாதேவியின் தாயகம்)ல் உள்ள கல்வெட்டு ஒன்றும் பாராட்டுகின்றன.

செந்திரு மடந்தைமன் சீராஜ ராஜன்
இந்திரசமானன் இராஜசர்வஞ்ஞனெனும்
புலியைப் பயந்த பொன்மான் கலியைக்
கரந்து கரவாக் காரிகை, சுரந்த

முலைமுகப் பிரிந்து முழங்கெரி நடுவணும்
தலைமகற் பிரியாத் தையல் நிலைபெறுந்
தூண்டா விளக்கு...........
...........மணிமுடி வளவன்
சுந்தர சோழன் மந்தரதாரன்
திருப்புய முயங்குந் தேவி

என்பது திருக்கோவலூர்க் கல்வெட்டின் பகுதியாகும்.[21]

சுந்தர சோழனுடைய ஆட்சியின் மாட்சியை இராசேந்திரனுடைய திருவாலங்காட்டுச் செப்பேட்டில் காணலாம். 'கலியுகத்தில் வழக்கு வீழ்ந்த நீதிகளை மீண்டும் நிலைநாட்ட வேண்டி, பண்டைக்காலத்தில் இருந்த மனுவே, இன்று சுந்தர சோழனாக வந்துள்ளான்' என்று குடிமக்கள் கொண்டாடினராம். அவன் காலத்தில், பூமாலையைக் குறிக்கும் ஆரம் என்னும் சொல்லின்கணுள்ள, 'ஆ' என்னும் எழுத்து ஒலியைக் கேட்டதல்லாமல் குடிமக்கள் துன்புற்று 'ஆ' என்று அலறி ஓலமிட்டு அரற்றிய ஒலியை எங்கும் கேட்டதில்லை'[22] என்று திருவாலங்காட்டுச் செப்பேடு சுந்தர சோழனின் ஆட்சியைப் போற்றிப் பாராட்டுகிறது.

## ஆற்றல்மிகு அண்ணன்

ஆதித்த கரிகாலன் யாரோ சிலரால் கொலை செய்யப்பட்டு இறந்ததாகக் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது. அந்த '' 'யாரோ சிலர்' யாராக இருக்க முடியும்?'' என்பதைக் குறித்து சோழர் வரலாற்றை ஆராய்ந்த வரலாற்றாசிரியர்களிடத்தும், ஆராய்ச்சியாளர்களிடத்தும் கருத்து வேற்றுமை இருந்து வருகிறது. பொதுவாக, எல்லாரும் கண்டராதித்த சோழனின் மகனாகிய மதுராந்தகனே இவ்வரசியல் படுகொலைக்குக் காரணமாக இருந்திருக்க வேண்டும் என்று கருதுகின்றனர்.[23] மற்றும் சிலர், பாண்டிய நாட்டு அரசியல் அதிகாரிகளே இக்கொலையைச் செய்தவர்கள் என்று சான்றுகள் தந்து நிறுவுகின்றனர்.[24] மூன்றாண்டுகளுக்கு முன்னர் இச்சிக்கலை அவிழ்க்கப் போவதாகக் கூறிக் கொண்டு முன்வந்த ஓர் ஆசிரியர், 'இராசராசனே தன் தமையனைக் கொன்றிருக்க வேண்டும்' என்னும் கருத்தைத் தெரிவித்து இராசராசனுக்கு மாசு கற்பிக்க முயன்றுள்ளார்.[25]

[21] S.I.I.. Vol 7: No. No. 863.
[22] S. I. I.; Vol. 3; No. 205; Vs. 56-58.
[23]. 577 of 1920.
[24]. Epi. Ind. Vol. 21; No. 27.
[25]. Viveka, p. 13.

எனவே, நாம் இக்கருத்துக்களின் வன்மை மென்மைகளை ஆராய்ந்து அறிதல் நம்முடைய கடமையாகிறது. ஆதித்த கரிகாலனின் கொலைக்குக் காரணமாக இருந்தவன் மதுராந்தகன் எனப்படும் உத்தம சோழனே என்பார் கூறும் கருத்துக்களை, முதலில் நாம் காண்போம். "சுந்தர சோழன் தன் ஆட்சியின் இறுதிப்பகுதியில் ஆதித்தனுக்குப் பரகேசரி என்னும் பட்டப் பெயருடன் முடி சூட்டினான். மூத்த மகன் வழிவந்த உத்தம சோழனும், தனக்கு முடி சூட்டப் பெறும் காலத்தை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஆனால், அவன் எதிர்பார்த்த தற்கு நேர்மாறாக, சோழப் பேரரசின் மணிமுடி பங்காளிக்கே உரித்தாக்கப்பட்டதைக் கண்டு அவன் சீற்றமுற்றான். அதனால் எவ்வாறாயினும் அம்மணிமுடியை அடைவதற்குரிய முயற்சியில் உத்தம சோழன் ஈடுபட்டான். அதற்காகச் சிலரைத் தனக்கு உதவியாகச் சேர்த்துக் கொண்டு, உள்நாட்டில் அவன் கலகம் செய்தான். மேலும், கொள்ளிடத்தின் வடகரையில் இப் பொழுது உடையார்குடி என்று வழங்கப்பெறும் வீர நாராயணச் சதுர்வேதி மங்கலம் என்னும் ஊரில் இருந்த சிலரைக் கொண்டு ஆதித்தனைக் கொன்றுவிடவும் அவன் சூழ்ச்சி செய்தான். அதன் விளைவாக, ஆதித்தன் தன்னலப் பேராசையும் அதிகார வெறியும் கொண்ட தன் பங்காளியால் படுகொலை செய்யப்பட்டான்"[26] என்பது வரலாற்று அறிஞர் சிலருடைய நம்பிக்கையாகும்.

இக்கருத்தினை ஏற்றுக்கொள்வதற்கு முன்பு, ஆதித்த கரிகாலன் கொலையுண்ட பிறகு நடைபெற்ற வரலாற்று நிகழ்ச்சிகளை ஆராய்ந்து பார்க்க வேண்டும்; அவற்றால் புலனாகும் உண்மை என்னவென்பதை நாம் முதலில் புரிந்து கொள்ளுதல் வேண்டும். மதுராந்தகனுக்கு அக்கொலையில் தொடர்பு இருந்திருந்தால், அண்ணனைப் பறிகொடுத்த அருண்மொழித்தேவன், தானே அரச னாவதற்கு முயன்று இருப்பான்; உத்தம சோழனை அரசனாக்குவ தற்கு அவன் உடன்பட்டும் இருக்கமாட்டான். தன் சிறிய தந்தையாகிய உத்தம சோழனுக்கு நாட்டை ஆட்சி புரிவதில் விருப்பமுள்ளவரையில், தான் மனத்தால் கூட விரும்பு வதில்லை என்று தன் குடிகளிடம் அருண்மொழி கூறியதாகத் திருவாலங்காட்டுச் செப்பேடுகளால் தெரிய வருகிறது.[27] இக் கொலையை மதுராந்தகன் செய்திருந்தால், இராசராசன் அவனுக்கு உதவியாகவும் இருந்திருக்க இயலாது; கல்வெட்டு களில் காணப்படுவதைப் போன்று உத்தம சோழனிடத்துப்

26. Nilakanta Sastri, K. A. : op. cit. pp. 157-158
27. S. I. I., Vol. 3. No. 205, V. 60.

பேரன்பும் பெருமதிப்பும் கொண்டு அவன் வாழ்ந்திருக்கவும் மாட்டான்.

மற்றும் நாட்டு மக்கள் ஒரு கொலைகாரனைத் தங்கள் அரசனாக ஏற்றுப் போற்றியிருப்பர் என்று கருதுவதற்கும் இடமில்லை. உத்தம சோழன் ஆட்சிக்காலத்தில் சோழப்பேரரசு முழுவதிலும் அமைதி நிலவியதையும், வளம் கொழித்ததையும் கல்வெட்டுகள் எடுத்துரைக்கின்றன.[28] எனவே, நாட்டில் 'பல்குழுவும் பாழ் செய்யும் உட்பகையும், வேந்தலைக்கும் கொல்குறும்பும்' இல்லாமல் இருந்ததை நாம் அறிய முடிகிறது. இப்படிப்பட்ட அமைதியான சூழ்நிலை கொலைகாரன் ஆட்சி புரிந்த நாட்டிலோ, கொடுங் கோலன் ஆட்சி புரிந்த நாட்டிலோ நிலவியிருக்க முடியாது. உலக வரலாற்று ஏட்டைப் புரட்டிப் பார்த்தால் இந்த உண்மை எளிதிற் புலனாகும்.

கண்டராதித்த சோழரின் மகனுக்கு மதுராந்தகன் என்பதுதான் இயற்பெயராகும். அவன் சோழ சிம்மா சனத்தில் ஏறிய பிறகு உத்தம சோழன் என்னும் சிறப்புப் பெயராலேயே போற்றப்பட்டிருக்கிறான். நமக்குக் கிடைத்துள்ள பெரும்பாலான கல்வெட்டுகளிலும், காசுகளிலும் உத்தம சோழன் என்னும் பெயரே பொறிக்கப் பட்டுள்ளமை இங்குக் கருதத் தக்கது. அரசியல் படுகொலையைச் செய்த ஒருவனை, நாட்டு நலனைக் கருதி அல்லும் பகலும் அயராது பாடுபட்ட தம் இளவரசனைக் கொன்றவனை நாட்டு மக்கள் உத்தமன் என்று வாயார வாழ்த்திப் போற்ற முன்வந்திருப்பார்களா?' என்பது ஆழ்ந்து சிந்திக்கத்தக்கதாகும்.

'உத்தமன்' என்னும் வட சொல்லிற்கு உயர்ந்த மனிதன், நல்ல மனிதன் என்னும் பல பொருள்கள் உள்ளன.[29] எனவே, 'உத்தம சோழன்' என்னும் பெயர் நல்ல பண்புகளையுடையவன் என்பதையே குறிக்கும். குறையுடையவனை, கொடிய தீச் செயலைச் செய்தவனை 'உத்தம சோழன்' என்று யாராகிலும் கூறுவார்களா? மதுராந்தகனே, தன்னை 'உத்தமன்' என்று கூறிக்கொள்ளும் வகையில், 'உத்தம சோழன்' என்னும் சிறப்புப் பெயரைப் பூண்டிருந்தால் நாட்டு மக்கள் அதை ஒப்புக் கொண்டிருப்பார் களா? உத்தம சோழனுடைய வரலாற்றை வரைவதற்குரிய பல வகையான ஆதாரங்களையும் கூர்ந்து ஆராய்கின்றபொழுது, ஓர் உண்மை புலனாகின்றது. இக்காலத்து ஆராய்ச்சியாளர் சிலரைப்

28. *Ibid* Nos. 128, 142, 143, 145. 151.
29. Tamil Lexicon. Vol, p. 407

போன்று, ஆதித்த கரிகாலனைக் கொலை செய்தவன் மதுராந்தகன் என்று தவறுதலாகச் சிலர் அக்காலத்திலேயே கருதி இருக்கலாம் என்று தெரிகிறது. ஆனால் அக்கொலையைப்பற்றி ஆராய்ந்த பொழுது, மதுராந்தகனுக்கும் ஆதித்தன் இறந்தமைக்கும் எத்தகைய தொடர்பும் இல்லை என்னும் உண்மை வெளிப்பட்டிருக்கலாம். அதனால், அவனைக் 'குற்றமற்றவன்' (நிரபராதி) எனப்போற்றும் வகையில் 'உத்தமன்' என்று நாட்டுமக்கள் பாராட்டி இருக்கக் கூடும். இப்பெயரையே, அரசனானவுடன் அபிடேகப் பெயராக அவன் சூட்டிக் கொண்டிருக்கலாம் என்று தோன்றுகிறது.

இதற்கும் ஒரு தடையினை அறிஞர் பெருமக்கள் எழுப்பியுள்ளனர். ஆதித்த கரிகாலனைக் கொன்றவர் யார் என்பதைக் கண்டுபிடித்து, அவர்களுக்குத் தண்டனை கொடுக்கப்பட்டது இராசராசனின் இரண்டாம் ஆட்சியாண்டிலாகும். இதற்கு முன்னர் பதினாறு ஆண்டுகள் உத்தம சோழன் ஆட்சி புரிந்துள்ளான. 'அவன் ஏன் குற்றவாளிகளைக் கண்டுபிடித்து, உடனடியாகத் தண்டனையை விதிக்கவில்லை? அவனுக்கு இக் கொலையில் கூட்டு இருந்தமையால்தான் தெரிந்தும் தெரியாதவன் போல், கண்டும் காணாதவனைப் போல் இருந்துவிட்டான்' என்பது சிலருடைய கருத்தாகும். இத்தகைய எண்ணம் நமக்கும் தோன்றுவது இயற்கை.

ஒரு பேரரசின் ஆற்றல் மிக்க இளவரசனை—வருங்காலப் பேரரசனைக்—கொலை செய்தவர் எளிதில் அகப்பட்டுக் கொள்ளுவாரா? எத்துணைக் கூர்த்த மதியுடன் மறைவில் சூழ்ச்சி செய்து, திட்டமிட்டு அக்கொலையைத் துணிந்து செய்திருப்பர்? அவர்களைக் கண்டறிவதற்கு எத்தனை ஒற்றர்கள் இரவும் பகலுமாக ஓயாது முயன்று இருக்க வேண்டும்? ஆதித்தன் எந்தச் சூழ்நிலையில், எவ்வாறு கொலை செய்யப்பட்டான்? என்பது ஒரு மறைபொருளாகவே இருந்திருக்கிறது. மாவீரனான ஆதித்த கரிகாலனை, யாரும் வெளிப்படையாக எதிர்த்து நின்று கொன்று இருக்க முடியாது என்பது உறுதி. நயவஞ்சனையாலேயே, நாடாளும் அரசகுமாரனை அக்கொலைகாரர் கொன்றிருக்க முடியும். அவர்கள் தலைமறைவாக ஒளிந்து கொண்டிருக்கலாம். எனவே, முள்ளை முள்ளால் எடுப்பதைப் போன்று, வஞ்சகரை வஞ்சனையாலேயே கண்டறிய அரச குடும்பத்தினர் முயன்றிருப்பர். அதனால், பதினைந்து ஆண்டுகள் உளவறிவதிலும், ஒற்றுப் பார்ப்பதிலுமே கழிந்திருக்கலாம். உத்தம சோழனுடைய ஆட்சியின் இறுதிப் பகுதியில், ஓரளவிற்கு உண்மை புலனாகியிருக்கக் கூடும். உடனடியாக ஒரு முடிவிற்கு வந்துவிடாமல், அதைப் பலவகையில்

ஆராய்ந்து பார்த்து, உறுதியான ஒரு முடிவிற்கு வர ஆண்டுகள் பல ஆகியிருக்கலாம். இந்நிலையில் அரசு கட்டில் ஏறிய இராசராசன், ஓராண்டிற்கு மேல் கடுமையாக இவ்வாராய்ச்சியில் ஈடுபட்டு, ஒரு முடிவுக்கு வந்திருக்கலாம். இதனால், அவன் ஆட்சியின் இரண்டாம் ஆண்டில் ஆதித்தனுடைய கொலையில் கலந்து கொண்டவருக்குத் தண்டனை கொடுத்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

அடுத்து, ஆதித்தன் கொலைக்கு இராசராசனே காரணம் என்று கூறுவாரின் கருத்தை நாம் சீர்தூக்கிப் பார்ப்போம். "இராசராச சோழன், அவனுடைய இனத்தின் பெருமைக்கும் சிறப்பிற்கும் உரிய பேரரசனாகவும் தென்னிந்தியாவின் புகழ்மிக்கப் பெருவேந்தனாகவும் போற்றப்படுகிறான். ஆனால், அவனிடம் இருந்த எதிர்மறைப் (தீய) பண்புகளைச் சுட்டிக் காட்டுவதே என்னுடைய நோக்கமாகும்[30] என்று ஓர் ஆசிரியர் தம்முடைய கட்டுரையைத் தொடங்குகிறார். மேற்கண்ட தொடர்களே, உளளத்தில் முன்பாகவே முடிவு செய்து கொண்ட சில கருத்துகளை ஆசிரியர் ஆழப் பதித்துக் கொண்டுள்ளார் என்பதை நமக்குத் தெரிவிக்கின்றன. அருண்மொழி குற்றமற்றவன் என்பதை ஒப்புக் கொள்ளுவதற்கு முன்னர், பின்வரும் வினாக்களுக்கு விடை கூறுங்கள் என்று அவ்வாசிரியர் அறைகூவல் விடுத்துள்ளார். அவர் எழுப்பியுள்ள ஐயங்களாவன;

(1) சோழப் பேரரசின் மணிமுடி, பிறப்பினால் உத்தம சோழனுக்குரியதாயிற்றே! அதை ஏன் அவனுக்குக் கொடுக்கவில்லை? ஒரு முறை மூடி சூட்டப்படும் வழக்கத்தில் (அரச மரபில்) மாற்றத்தை ஏற்றுக் கொண்ட பிறகு, அருண்மொழி ஏன் அதைக் கடைப்பிடிக்கவில்லை? மக்களுடைய ஆதரவு தன் பக்கம் இருந்த பொழுது, அவன் ஏன் ஒரு சமரச உடன்பாட்டிற்கு வந்து, தான் அரசனாவதற்குரிய வாய்ப்பை எதிர்நோக்கிக் காத்திருந்தான்?

(2) தன்னுடைய பேரரசை உத்தம சோழன் திருப்பிப் பெற நினைத்தது உண்மையானால், தனக்குப் பிறகு தன் கால்வழியினரே அரசராவதற்குரிய செயல்களை அவன் செய்யத் தவறியது ஏன்? கலகம் செய்து, வஞ்சனையால் ஆதித்தனை அவன் கொன்றிருந்தால், அருண்மொழியை ஒழித்துக் கட்டுவது அவனுக்குக் கடினமான செயலா?[31]

30 Srinivasan, R. V.: A Note on the Accession of Rajaraja Chola, in 'Viveka' p 16.

31 *Ibid*. p. 16

இத்தகைய வினக்களை எழுப்பிய ஆசிரியர், மேற் கொண்டு வருடைய விழைவார்வ மிக்க கருத்துகளை வெளிப்படுத்தி ள்ளார்:

''இதற்கு நேர்மாருக, அந்த மறைமுகச் சான்றுகளே இரண்டாம் ஆதித்தனை அருண்மொழியே கொலை செய்யுமாறு சிலரைத் தூண்டினுன் என்பதற்குத் தக்க சான்றுகளாக அமைகின்றன. தமையனைக் கொன்றதனுல் தன் கைகளில் படிந்த இரத்தம் உலரும் வரையில் பொது மக்களின் சீற்றத்திற்கு அஞ்சி அவன் உத்தம சோழனை அரசனுக இருக்குமாறு வேண்டினுன்; அல்லது தானே சிம்மாசனத்தில் அவனை வீற்றிருக்கச் செய்தான் என்று கருதுவதற்குத் தடைகள் ஒன்றுமில்லை. அதே சமயத்தில், தன்னை இளவரசன் என்று அறிவிக்குமாறு, உத்தம சோழனை வற்புறுத்திச் சிறிது காலத்திற்குள் தன்னுடைய நிலையை அவன் உறுதியும் பாதுகாப்பும் உடையதாக்கிக் கொண்டது ஏன்? திருவாலங்காட்டுச் செப்பேட்டின் வாசகத்தைச் சிறிது திருத்தியமைப் போமானுல், உத்தம சோழன் நாடாளும் பொறுப்பைச் சுமையாக ஏற்கவில்லை; அருண்மொழியின் வஞ்சகச் செயலையே அவன் பொறுத்தற்கரிய சுமையாகச் சுமந்து கொண்டிருந்தான் என்று பொருள் தரும்.

.........................................................................................

உத்தம சோழனுக்கு மகனிருந்தும், அவனை அரசு கட்டில் ஏறவிடவில்லை. உயர்ந்ததோர் அரசியல் அதிகாரியாக அவனை இராசராசன் பதவியில் அமர்த்தியுள்ளான். இவையெல்லாம், அரசியலில் உயர்ந்த பதவியில் இருந்த ஒரு சாரார் அருண்மொழிக்கு உடந்தையாக இருந்ததை எடுத்தியம்புகின்றன. அருண்மொழியின் தமக்கையான குந்தவையும், அவள் கணவறை வல்லவரையன் வந்தியத் தேவனும் அருண்மொழிக்கு ஆதரவாக இருந்தனர் என்று கருதுவதற்குத் தடையொன்றும் இல்லை. இதற்குப் பின்னரே வந்தியத் தேவன் மிக உயர்ந்த பதவியை அடைந்துள்ளான் என்பதை நாம் மறத்தலாகாது. இவை யாவற்றையும் விட இராசராசனின் பட்டத்து அரசியாக இருந்த இளங்கோபிச்சி, குந்தவையின் மகள் என்பதை நாம் கருத்திலிருத்த வேண்டும்.[32]......

[32] Ibid p. 16

இக்கருத்துகளை நாம் ஒவ்வொன்றாக ஆராய்ந்து பார்ப்போமானால், இவற்றில் எவையெவை மெய்ம்மையாக இருக்கக்கூடும், எவையெவை ஆசிரியருக்கு யார் மீதோ உண்டான காழ்ப்பினால் தன் மனம் போன போக்கில் உண்மையைத் திரித்து விளக்கம் கொடுத்திருக்கக்கூடும் என்பன நமக்கு எளிதில் புலனாகும்.

மணிமுடி உத்தம சோழனுக்குப் பிறப்பால் உரியது தான். இதை யாரும் மறுக்க இயலாது. ஆனால், கண்டராதித்த சோழர் மேற்கெழுந்தருளிய பொழுது, மதுராந்தகன் குழந்தையாக இருந்தான் என்பதை ஆராய்ச்சியாளர்களும் கல்வெட்டியல் கலைஞர்களும் ஒப்புக்கொண்டுள்ளனர்.[33] எனவே, கண்டராதித்தனுக்குப் பிறகு மதுராந்தகன் அரசனாகாமைக்குரிய காரணம் பொருத்தமானதாகவே தோன்றுகிறது. 'அரச மரபில் உண்டான மாற்றத்தை அப்படியே, அருண்மொழி போற்றிப் பின்பற்றாதது ஏன்?' என்று வினவலாம். தன்னை விட வயதில் மூத்த சிறிய தந்தை உயிருடன் இருந்தமையாலும், தந்தை இறந்த காலத்தில் சிறு குழந்தையாக இருந்தமையால் அரசனாகப் பதவியேற்கும் வாய்ப்பை முன்னரே ஒரு முறை மதுராந்தகன் இழந்து விட்டமையாலும் அருண்மொழிக்கு அவனிடத்துப் பரிவும், ஈடுபாடும் உண்டாகியிருக்கலாம். மற்றும் தன்னுடைய பெரிய பாட்டியான செம்பியன் மாதேவியிடத்து பெருமதிப்பும் பேரீடுபாடும் அருண்மொழி கொண்டிருந்தான். அதை "ஸ்ரீ உத்தம சோழ தேவரைத் திரு வயிறு வாய்த்த ஸ்ரீ செம்பியன் மாதேவிப் பிராட்டியார்" எனவும், "ஸ்ரீ உத்தம சோழ தேவர் தங்களாச்சியார் ஸ்ரீ பராந்தகன் மாதேவடிகளாரான ஸ்ரீ செம்பியன் மாதேவியார்"[34] எனவும் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இக்காரணங்களால், தன்னுடைய சிறிய தந்தையின் ஆவலை நிறைவேற்ற அருண்மொழி தன்னுரிமையை விட்டுக்கொடுத்திருக்கலாம்.

ஆதித்த கரிகாலன் கொலை செய்யப்பட்டதனால், நாட்டு மக்களில் பலருக்கு, மதுராந்தகன் மீது ஐயுறவு உண்டாகியிருக்க வேண்டும். அவ்வையுறவைப் போக்கும் பொறுப்பு, அருண்மொழியின் கடமையாயிற்று. இதனால், இராசராசன் தான் அரசனாகாமல், தன் சிறிய தந்தையை அரசு கட்டிலேறச் செய்து, அவனுக்கு உற்ற துணைவனாக ஒல்லும் வகையெல்லாம் ஓயாது பணி புரிந்தான். இச்செய்தியைத்தான், திருவாலங்காட்டுச் செப்பேடு "உத்தம சோழனை அரசுக்கு உரியவனாக ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்றும், அவன் ஆட்சிக்காலத்திற்குப்

[33] Nilakanta Sastri, K. A.: op cit. p. 152. Subramanya Aiyar, K. V. op cit, p. 243

[34] S. I. I. Vol. 13; Nos. 14,72, 144, 170,332.

பிறகு, அரசு உத்தம சோழனுடைய வழித்தோன்றல்களுக்குச் செல்லாமல் திரும்பவும், அருண்மொழிக் குரியதாக வேண்டும் என்றும், அதற்கேற்ப உத்தம சோழனுக்கு முடி சூட்டப் பெறும் பொழுது அருண்மொழி இளவரசனாகப் பட்டம் கட்டப் பெற வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டதாகத்[35] தெரிவிக்கின்றது.

இந்த உடன்பாடு எதைக் காட்டுகிறது? அருண்மொழியின் தன்னலப் பற்றற்ற போக்கையும், விட்டுக் கொடுக்கும் மனப் பான்மையையும், தனிமனிதனுடைய நலத்தைவிட நாட்டு மக்களின் நலனையே சிறப்புடையதாகக் கருதும் மூதறிவையும், சிறந்த அரசியல் விரகினையும் இச்செயல் உணர்த்துகின்றது. நேர்மையான சிந்தனையும், மனத்தில் காழ்ப்பும் அற்றவர்கள் இத்தகைய முடிவிற்குத் தான் வருவார்கள்.

"தனக்குப் பின்னர், தன்னுடைய வழித்தோன்றல்களுக்கு அரசுரிமையை அளிக்க உத்தம சோழன் முன் வராதது ஏன்? ஆதித்த கரிகாலனை வஞ்சனையால் கொன்ற மதுராந்தகனுக்கு அருண்மொழியைத் தீர்த்துக் கட்டுவது இயலாத செயலா?" என்னும் கேள்விகளுக்கு உரிய விடை மேலே தரப்பட்ட விளக்கத்திலேயே இடம் பெற்றிருக்கிறது. முறைப்படி அரசு கட்டில் ஏற வேண்டிய நேரத்தில், சிறு குழந்தையாக இருந்தான் மதுராந்தகன். அதனால், அரியதொரு வாய்ப்பை அவன் இழந்தான். வாய்ப்பு இழந்த அவனுக்கு, அருண்மொழி மீண்டும் ஒருமுறை வாய்ப்பு அளித்துச் சிறப்பித்தான். ஆனால், நாட்டுமக்கள் அருண்மொழியே அரசனாக வேண்டும் என்று ஆரவாரம் செய்தனர். எனவே, மக்கள் கருத்தை மதிக்கும் வகையிலும், மரபினைப் போற்றும் முறையிலும் உத்தம சோழன் நன்றியுணர்வோடு இராசராசனுக்கு இளவரசு பட்டம் சூட்டினான் என்று கருதுவதுதான் பொருத்தமாகும்.

மற்றும், மதுராந்தகன் கண்டராதித்தன் எனப்படும் உத்தம சோழனுடைய மகன், அருண்மொழி தேவன் சோழ சிம்மாசனத்தை அணி செய்யத் தொடங்கிய பொழுது, வயதில் இளையவனாகவே இருந்திருக்க வேண்டும் என்று ஆராய்ச்சியாளர் கருதுவதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.[36]

இராசராசனுக்கு மாசு கற்பிக்கும் கட்டுரையாளர், காட்டும் காரணங்கள் எல்லாம் அவருடைய உள்ளத்தில் ஆழப் பதிந்து

[35] S.I.I. Vol. 3; No. 205; V. 69
[36] Nilakanta Sastri, K. A.: op. cit, p. 166; F.N, 74. Subramanya Aiyar, K.V.: op. cit, pp. 243-5.

கிடக்கும் இனமறியமுடியாத காழ்ப்புணர்ச்சியில் தோன்றிய கற்பனையாகும். திருவாலங்காட்டுச் செப்பேட்டின் வாசகத்தைச் சிறிது திருத்திக் கொண்டால், இராசராசன் 'கொலைகாரன்' என்பதை உறுதிப்படுத்தலாம் என்பது அவ்வாசிரியரின் விழைவார்வமாகும். ஆராய்ச்சி என்பது உள்ளதை உள்ளவாறு கொண்டு, அதைத் துருவித் துருவி ஆய்ந்து உண்மை காண்பதாகும். நம்முடைய கருத்தையோ, கொள்கையையோ நிலைநாட்டுவதற்கு ஏற்றவகையில், கிடைத்துள்ள சான்றுகளில் உள்ள சொற்களை மாற்றுவதோ, திருத்துவதோ நெறிமுறைக்குக் கட்டுப்பட்டுச் செய்யப்படும் ஆராய்ச்சியாகாது. அதைவிட 'இதுதான் என்னுடைய கருத்து' என்று காரண காரியங்களைக் காட்டாமலேயே உணர்ச்சிக்கனிவுடன் (Sentimental) உரைத்து விடலாம்.

இராசராசனுக்கு, அவனுடைய தமக்கை உடந்தையாக இருந்தாள் என்று கூறுவதற்குத் தக்க சான்றுகளை அவர் காட்ட வேண்டும். அவளுடன் பிறந்த அருண்மொழி இளைஞனாக இருந்த பொழுதே, அவர்களுடைய தாய், தந்தையோடு உடன்கட்டை ஏறி விட்டாள். அதற்கு முன்பே மற்றோர் உடன் பிறப்பையும் அவள் பறி கொடுத்துவிட்டாள். இதனால் தன் தம்பியிடத்துப் பேரன்பும் ஈடுபாடும் குந்தவை கொண்டிருந்ததில் வியப்பிற்கு இடமில்லை. ஆனால், இந்த உடன்பிறந்தார் அன்பை, ஏதோ உள் நோக்கத்தால் உண்டான தொடர்பு என்று ஐயுறுவதும், குற்றங் கூறுவதும் உடன்பிறப்பில்லாதாரின் இயல்பாகும்.

உடையார் குடியில் காணப்படும் கல்வெட்டு ஆதித்தனுடைய கொலைக்குக் காரணமாக இருந்தவர்கள் பிராமண குடும்பத்தைச் சேர்ந்த உடன்பிறப்பாளர் நால்வர் என்று அறிவிக்கிறது. அவர்கள் சோமன், ரவிதாசனான பஞ்சவன் பிரமாதிராசன், பரமேசுவரனான இருமுடிச்சோழ பிரமாதிராசன், மலையனூரானான ரேவதாசக் கிரமவித்தன் என்பவரே அக்கொடுஞ் செயலைச் செய்தவர்களாவர். 'இவர்களுக்குக் கொடுக்கப்பட்ட தண்டனை கடுமையானதாக இல்லையே' என்று கட்டுரை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இராசராசன் விதித்த தண்டனை அக்கொலையாளிகளின் சொத்தைப் பறிமுதல் செய்தமையேயாகும். இதனால், இராசராசன் அவர்களோடு கூட்டுச் சேர்ந்து கொண்டு ஆதித்தனைக் கொலை செய்து இருப்பான் என்று கூறுவது பொருந்தாது.

கடுமையான தண்டனை கொடுக்கப்படாததற்குரிய காரணங்கள் இரண்டாகலாம். ஒருவன் மட்டும் கொலை செய்திருந்தால், அவனைத் தூக்குமேடைக்கு எளிதில் அனுப்பிவிடலாம். இந்த

வழக்கில், ஒரு கொலைக்கு—நாட்டின் இளவரசனைக் கொன்றமைக்கு—நால்வர் காரணமாக உள்ளனர். மற்றும், இந்த நால்வரும் தாங்களே கொலை முயற்சியில் ஈடுபட்டதைக் கண்ணால் கண்டவர்கள் இருந்திருந்தால், அவர்களுக்குக் கொலைத் தண்டனையை இராசராசன் உறுதியாகக் கொடுத்திருப்பான். ஆனால், இந்நால்வரும் ஆதித்தனுடைய கொலைக்குத் தூண்டுதலாக இருந்தனர் என்று கூறப்படுகிறது.

மற்றும், இடைக் காலத் தமிழர் சமுதாயத்தில் பார்ப்பனர்கள் 'பூதேவர்களாக'ப் போற்றப்பட்டார்கள். மனு நெறி தழைக்கச் செங்கோலோச்சுவதையே தங்கள் நோக்கமாகக் கொண்டு சோழ மன்னர்கள் ஆட்சி புரிந்தனர். அந்நிலையில் அவர்கள் பிராமணருக்குக் கொலைத் தண்டனை கொடுக்க முன் வருவார்களா? மனு நெறி தழைக்க ஆட்சி புரிந்தவர்களுக்கு, மனு தரும சாத்திரத்தில் சொல்லப்பட்ட தண்டனை முறை தெரியாமல் இருக்குமா? பிராமணன் கொலை செய்தாலும் அவனை அரசன் கொலை செய்யக் கூடாது என்னும் மனு தரும சாத்திரத்தின்[37] அறிவுரைப்படி இராசராசன் தண்டனை வழங்கினான் என்று நாம் கருத இடமுண்டு.

''இராசராசனின் பட்டத்தரசி இளங்கோப்பிச்சி; அவள் இராசராசனின் தமக்கை மகள். இக்காரணத்தால் குந்தவையும் ஆதித்தனைக் கொலை செய்ய உடந்தையாக இருந்தாள்''[38] என்று கட்டுரையாசிரியர் குறிப்பிட்டுள்ளார். இராசராசனின் தமக்கையான குந்தவைக்கு, மகளிருந்தமைக்குச் சான்றே இல்லை. அவனுக்கு இளங்கோப்பிச்சி' என்னும் மனைவியும் இருந்ததில்லை. சோழ மன்னன் முதலாம் ஆதித்தனுடைய மனைவியே இளங்கோப்பிச்சி என்பவளாவள். எனவே, இராசராசன் மீது பழி சுமத்த, கட்டுரையாசிரியர் கற்பித்துக் கொண்ட கதை இது என்பது உறுதிப்படுகிறது.

இவ்வாய்வுரையில் நாம் கண்ட குற்றச்சாட்டுகளும், அதற்குரிய விளக்கங்களும், வழக்குகளும் எதிர்வழக்குகளும், இராசராசன் குற்றமற்றவன் என்பதைத் தெளிவுறுத்துகின்றன.

அவ்வாறாயின், ஆதித்தனைக் கொன்றவர் யார்? அதற்குரிய காரணம் யாது? என்ற ஐயம் நமக்கு எழலாம். ஆதித்தனைக் கொன்றவர்கள் வீரநாராயணச் சதுர்வேதி மங்கலத்தைச்

37 Buhles, G. (Tr.): The Laws of Manu, IV: 167—169; IX: 313.
38 Viveka, p. 16.

சேர்ந்த சோமன், ரவிதாசனென பஞ்சவன் பிரமாதிராசன், பரமேசுவரனை இருமுடிச்சோழ பிரமாதிராசன், மலையனூரானை ரேவதாசக்கிரமவித்தன் என்னும் பார்ப்பன உடன்பிறபாளராவர். அவர்களுள் பஞ்சவன் பிரமாதி ராசன், இருமுடிச் சோழ பிரமாதிராசன் என்ற இருவரும் உயர்ந்த அரசியல் அதிகாரிகளாகப் பணிபுரிந்தோர் என்பதை, அவர்களுடைய பட்டங்களே பறைசாற்றுகின்றன. அவ்விருவருள், பஞ்சவன் பிரமாதிராசன் என்பவன் பாண்டிய நாட்டு அரசியல் அதிகாரியாக இருந்தவனாவான்.

ஆதித்த கரிகாலன் பாண்டியரோடு கடும்போர் புரிந்து வீரபாண்டியனைக் கொன்று வாகை சூடியதை நாம் முன்னரே கண்டோம். அதனால், அவன் 'வீரபாண்டியனைத் தலைகொண்ட கோப்பரகேசரி வர்மன்' என்று பாராட்டப் பெற்றான். பழிக்குப் பழிவாங்கத் துடித்த பாண்டிய அரச மரபினர், போர்க்களத்தில் எதிர்த்து நின்று, ஆதித்தனை ஒழிக்க முடியாது என்பதை நன் குணர்ந்திருக்க வேண்டும். எனவே, வஞ்சனையால் அவனைக் கொலைபுரிவதற்கு அவர்கள் திட்டமிட்டிருக்கலாம். அத்திட்டத் திற்குச் சோழ மண்டலத்தைச் சேர்ந்தவனும், தங்கள் நாட்டின் அரசியல் அதிகாரியுமாக விளங்கிய ரவிதாசனென பஞ்சவன் பிரமாதிராசனைப் பாண்டியர் குடியினர் ஒரு கருவியாகப் பயன் படுத்திக் கொண்டிருக்கலாம். அந்த ரவிதாசன், சிதம்பரத்திற்கு அருகிலுள்ள வீரநாராயணச் சதுர்வேதி மங்கலத்தில் வாழ்ந்த, தன்னுடைய உடன் பிறப்பினரோடு சேர்ந்து சூழ்ச்சி செய்து, ஆதித்தனைக் கொன்றிருக்கலாம் என்று கருதுவதே பொருத்த முடையதாகத் தோன்றுகிறது. இக்கருத்தினை முதன்முதல் தெரிவித்தவர் தி. வை. சதாசிவ பண்டாரத்தார் என்பதை இங்கு நன்றியுணர்வோடு குறிப்பிட நான் விரும்புகின்றேன்.[39]

## ஆட்சிக் கலையில் அரிய பயிற்சி

சுந்தர சோழனின் மறைவிற்குப் பின்னர் அருண்மொழி தேவனே அரசனாகி இருக்க வேண்டும். ஆனால், தன் பெரிய பாட்டனுடைய திருமகனும் தன் சிறிய தந்தையுமாகிய மதுராந்தகனை மணிமுடி தரித்து நாடாளுமாறு அருண்மொழி செய்தான். கண்டராதித்த சோழனுடைய மகனான மதுராந்த கன், கி.பி. 969 அளவில் சோழ நாட்டிற்கு அரசனானான். அவனைக் 'கோப்பரகேசரி வர்மரான ஸ்ரீ உத்தம சோழ தேவர்' என்று கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.[40]

[39] காண்க: பிற்காலச் சோழர் சரித்திரம், பகுதி 1; பக். 80.
[40] S. I. I., Vol. 3: No. 128, 150.

உத்தம சோழன் பதினாறு ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். அவனுடைய கல்வெட்டுகள் சோழ நாட்டிலும் தொண்டை மண்டலத்திலும் காணப்படுகின்றன. சோழ நாட்டில் காணப் படும் கல்வெட்டுகளுள் பல உத்தம சோழனின் தாயும், மனைவியரும் செய்த கோயில் திருப்பணிகளையும், வழங்கிய அறக்கட்டளைகளை யும் அறிவுறுத்துகின்றன. அவனுடைய பதினாறும் ஆட்சியாண் டில் வழங்கப்பட்ட செப்பேடு ஒன்று, சென்னை அரும் பொருள் காட்சியகத்தில் இருக்கிறது. அதிலிருந்தோ, அவன் காலத்திய கல்வெட்டுகளிலிருந்தோ சிறப்பு மிக்க செய்திகள் ஒன்றும் கிடைக்கவில்லை. தான் பெற்ற பேரரசை விரிவடையச் செய் வதில், அவனுக்கு ஆர்வம் இருந்ததாகத் தெரியவில்லை. அரச போகத்தில் மூழ்கித் திளைப்பதே போதும் என்று அவன் கருதினன் போலும்.

உத்தம சோழனுக்குக் குறைந்தது ஐந்து மனைவியர் இருந் திருக்க வேண்டும் என்பது கல்வெட்டுகளால் தெரியவருகிறது. அவனுக்கு மதுராந்தகன் கண்டராதித்தன் என்னும் மகன் ஒருவன் இருந்தான். அவன் இராசராசன் ஆட்சிக் காலத்தில் அறநிலையத் தணிக்கையாளர் குழுவின் தலைவனாக விளங்கினான்.

தமிழகத்தில் கிடைத்துள்ள பண்டைப் பொற்காசுகளுள் காலத்தால் பழமையானது உத்தம சோழன் வழங்கியதேயாகும். அக்காசின் இருபக்கங்களிலும் நடுவில் புலியின் வடிவமும், அதன் வலப்பக்கத்தில் மீன் உருவமும் பொறிக்கப் பெற்றிருக்கும்; ஓரத்தில் கிரந்த எழுத்தில் 'உத்தம சோழன்' என்னும் பெயர் காணப்படுகிறது.

உத்தம சோழனின் தாயார் செம்பியன் மாதேவியார் நெடுங் காலம் உயிர் வாழ்ந்தவர்; சிறந்த சிவ பக்தியுடையவர். சோழ நாட்டில் சிவன் கோயில்கள் பலவற்றை எடுப்பித்தவர். தஞ்சை மாவட்டம் நாகப்பட்டின வட்டத்தில் 'செம்பியன் மாதேவி' என்று ஓர் ஊர் அக்காலத்தில் பெயரிடப்பட்டது. அவ்வூரில், அவனுடைய தாயார் 'திருக்கயிலாயம்' என்னும் சிவன் கோயிலை எடுப்பித்தார்கள். அது அவ்வம்மையார் கட்டிய கோயில்களுள் முக்கியமானது. மற்றொன்று திருநல்லம் எனப்படும் கோனேரிராச புரத்தில் இருந்த சிவன் கோயிலைக் கற்றளியாகச் செய்து, அதற்குத் தன் கணவன் பெயரையே, 'ஸ்ரீ கண்டராதித்தன்' என்னும் பெயரையே செம்பியன் மாதேவி இட்டுள்ளமையும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். அக்கோயிலுள் கண்டராதித்த

சோழன் சிவலிங்கம் ஒன்றை வழிபடும் கோலத்தில் படிமம் ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது.

கி.பி, 1019இல் செம்பியன் மாதேவியிலுள்ள திருக்கயிலாயம் என்னும் சிவன் கோயிலில், செம்பியன் மாதேவியின் படிமத்தை முதலாம் இராசேந்திரன் எழுந்தருளச் செய்து அறக்கட்டளைகள் பல வழங்கியுள்ளான். இதனால். அவ்வம்மையிடத்து இராசேந்திரனுக்கு இருந்த மதிப்பும் அன்பும் புலனாகின்றன.

அயலாரின் தாக்குதலே ஒன்றுபட்ட நிலையில் கூட்டணி அமைத்து, முறியடிக்க இந்து அரசர்கள் முன்வருவதற்குத் தயங்கிய சமயம் அது. அதனால், இந்திய மண்ணில் எதிர்ப்பார் இல்லை என்பதை உணர்ந்து, முகம்மது கஜனி பலமுறை படையெடுத்து இந்தியா வைச் சூறையிட்டுக் கொண்டிருந்த காலம் அது!

இத்தகைய இன்னல்கள் சூழ்ந்திருந்த இந்தியாவின் தென் பகுதியில், ஒரு பேரரசை நிறுவும் முயற்சியில் இராசராசன் ஈடு பட்டமை வியப்பிற்குரிய செய்தியாகும். அம்முயற்சியில் அவன் பெருவெற்றியும் பெற்றான். இத்தகைய விழுப்புகழை அடை வதற்குக் காரணமாக இருந்தது அவனுடைய ஆளுமைப் பண்பேயாகும்.

## பெற்றோரின் பெருஞ் சிறப்பு

இத்தகைய சிறப்புகளையுடைய மாவேந்தனின் வாழ்க்கை வரலாற்றை நாம் முற்றிலும் அறிய முடியவில்லை. அறிவிலும் ஆற்றலிலும் அழகிலும் ஒருங்கே சிறந்து விளங்கியவன் சுந்தர சோழன். அவனுக்கும் வானவன் மாதேவிக்கும் பிறந்த இரண்டாவது மகனே அருண்மொழித் தேவன். அவனுடைய தாயாரைப் 'புலியைப் பயந்த பொன்மான்' என்று அக்காலத்திய கல்வெட்டு ஒன்று போற்றுகிறது.

தந்தை வழி வீரவரலாறு படைத்த சோழ மரபு இராசராச னுடையதாகும். தாய்வழியில் சங்க காலத்தில் வீரத்திற்கும் கொடைச் சிறப்பிற்கும் நிலைக்களனாக விளங்கிய மலையமான் திருமுடிக்காரியின் வழிவந்தோன் இராசராசனுக்குப் பாட்டனாக விளங்கினான். இதனால், இராசராசனுக்கு வீரமும், அருள் உணர்வும், கொடை நலமும் இயல்பான பண்புகளாக அமைந்தன.

## பிறப்பும் சிறப்பும்

அருண்மொழி எந்த ஆண்டு பிறந்தான் என்பதை நாம் அறிந்துகொள்ள முடியவில்லை. ஆயினும், ஐப்பசித் திங்களின் சதய நாளில் நம் வரலாற்று நாயகன் தோன்றினான் என்பது மட்டும் தெளிவாகத் தெரிகிறது. அவன் தஞ்சையில் எடுப்பித்த பெரிய கோயிலிலும், அவன் பட்டத்தரசி திருவையாற்றில் நிறுவிய உலோகமாதேவீச்சுரத்தும் முறையே 'உடையார் இராசராச தேவர் திருச்சதயத் திருவிழா' எனவும், 'உடையார்

திங்கள் சதய விழா' எனவும் திங்கள் தோறும் சதயத் தன்று திருவிழா கொண்டாடப்பட்டதை அறிகிறோம். இதனால், அருண்மொழி பிறந்தது சதய நாளில் என்பது எளிதிற் புலனாகின்றது.

சேர மண்டலத்தில், வள்ளுவ நாட்டில் உள்ள முட்டம் என்னும் ஊருக்கு, 'மும்முடி சோழ நல்லூர்' என்று இராசராசன் பெயரிட்டான். பின்னர், அதனைத் திருநந்திக் கரையிலுள்ள கோயிலுக்கு அவன் இறையிலியாக அளித்தான். அதன் வருவாயைக் கொண்டு தான் பிறந்த 'ஐப்பசித்திங்கள் சதய நாளில் விழா நடத்துமாறு அறக்கட்டளை ஒன்றை அவன் வழங்கி யுள்ளான்.[2] இதனால், அருண்மொழி பிறந்தது ஐப்பசித் திங்களில் என்பது உறுதிப்படுகிறது. சோழ நாட்டில் திருவெண்காட்டில் உள்ள திருக்கோயிலில் ஐப்பசித் திங்களில் ஏழு நாள்கள் சதய விழா நடைபெறுமாறு இராசராசன் ஏற்பாடு செய்தான் என்னும் அவனுடைய மற்றோர் கல்வெட்டும் இதை உறுதிப்படுத்து கிறது.[3] கலிங்கத்துப் பரணியில் 'சதய நாள் விழா வுதியர் மண்டலந் தன்னில் வைத்தவன்'[4] என்று வரும் தொடர். இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. இவற்றால் ஐப்பசித் திங்கள் சதய நாளே சோழர் குடியின் குலவிளக்காகிய அருண்மொழி தோன்றிய திரு நாள் என்பதும் அவன் ஆவணித் திங்கள் சதய நாளில் பிறக்க வில்லை என்பதும்[5] ஐயத்திற்கு இடமின்றிப் புலனாகின்றன,

இராசராசனின் இயற்பெயர் அருண்மொழி வர்மன் என்பன் தாகும்.[6] சுந்தர சோழற்கு அருண்மொழி தோன்றினான். அழகே வடிவான ஆரணங்கு அவன் உடலுறுப்புக்களை அணைந் தாள். அத்திருமகளை, நீண்ட தன் இருகைகளாலும் அவன் தாங் கினான். அக்கைகளில் சங்கும் சக்கரமும் பொறிக்கப் பெற்றதைப் போன்ற சுவடுகள் காணப்பட்டன. திருமாலின் தோற்றமாகவே அவன் தோன்றினான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடு குறிப்பிடுகிறது.

அருண்மொழி பிறந்த பொழுது, 'தம் கணவற்கு இனி நிலச்சுமை குறைந்தது என்னும் மகிழ்ச்சியால் ஆதி சேடனுடைய மனைவியர் களிநடம் புரிந்தனராம்".[7] அவன் மண்ணுலகிற்கு வந்ததும், இருபக்கங்களிலும் பெரியதோர் ஒளி மண்டலம் தோன்றியது. அந்த ஒப்பற்ற நிலவைக் கண்டவுடன் மக்களுடைய

[2] T. A. S. Vol. I, p. 292.
[3] S I I., Vol. 5, No. 979 [4] கலிங்கத்துப் பரணி, 8:24.
[5] M.E R. 1911: P.70. [6] S.I.I., Vol. 5, No. 979, V. 6.
[7] திருவாலங்காட்டுச் செப்பேடு, செ, 63.

கண்கள் வியப்பால் மலர்ச்சியுற்றன. இது காண்பதற்குரிய புதிய தொரு திங்கள் என்று மக்கள் நினைத்தனர்.[8] என்று அச்செப்பேடு செப்புகிறது. இச் செய்யுளுக்கு வேறோர் பொருளும் கூறலாம். திங்களுக்கு இருபக்கங்கள் உண்டு, ஒன்று ஒளி மயமான வளர் பிறைக் காலம்; மற்றொன்று ஒளி குன்றிய தேய்பிறைக் காலம். ஆனால், அருண்மொழியாகிய வெண்ணிலவிற்கு இரு பக்கங்களும் (தாய் வழியும் தந்தை வழியும்) பேரொளியுண்டு. எனவே, வானத்தில் தோன்றும் நிலவைக் காட்டிலும், அது சிறப்பு மிக்கது: பொங்கிவரும் பேரொளிப் பிழம்பாய் விளங்குவது. அதனால், அவ் வெண்ணிலவு தோன்றியவுடன் அதனைச் சுற்றிலும் பெரிய ஒளி மண்டலம் சூழ்ந்து நின்றது. அருண்மொழித் தேவனால் சோழருடைய அரசு பெரிய மண்டலமாக பெரும் பேரரசாகப் புகழொளி பெற்றுச் சிறந்தது. ஆகவே, இவ்வெண்ணிலவிற்கு ஈடே இல்லை. இதற்கு முன்பு யாரும் இத்தகைய தொரு காட்சி யைக் கண்டிருக்க இயலாது என்று திருவாலங்காட்டுச் செப்பேடு வியந்து போற்றுகிறது[9].

முதலாம் இராசேந்திரன் திருவாலங்காட்டுச் செப்பேட்டினை வழங்கினான். இதை நாம் முன்னரே கண்டோம். தன் தந்தை யின் தோற்றத்தால் நாடு நலம் பல பெற்றதைப் பெருமிதத் தோடு இராசேந்திரன் இச்செப்பேட்டின் மூலம் உலகிற்கு உணர்த்துகிறான். எதையும், சுவை பயக்கத்தக்க வகையில் சொல்ல வேண்டுமானால், கவர்ச்சியுடையதாகக் கூற வேண்டுமானால், அதில் கற்பனைக்கு ஓரளவிற்கேனும் இடம் கொடுத்தாக வேண்டும். கற்பனை யுணர்வு, பெருக்கெடுக்கின்ற பொழுது உயர்வு நவிற்சி அதனுடன் இணைந்து விடுகிறது. இவ்வகையில், மேற்கண்ட செய்யுட்களின் கருத்துகளில் ஓரளவிற்கு உயர்வு நவிற்சி உறவாடு வதை நாம் காணலாம். அதை விலக்கிவிட்டு, கூறப்பட்டுள்ள கருத்துகளைக் கூர்ந்து நோக்குவோமானால், அவற்றில் உண்மை உறைந்து கிடப்பதை நாம் எளிதில் கண்டுணரலாம்.

### பண்பட்டின் வளர்ப்புப் பண்ணை

சுந்தர சோழன் பிறந்த பொழுது அருண்மொழி அடைந்த மகிழ்ச்சியைவிட நாட்டு மக்கள் பெருமகிழ்ச்சியுற்றதைக் கல் வெட்டுகள் எடுத்தியம்புகின்றன. 'தம்மின் தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் இனிதல்லவா?

[8] மேற்படி, 59-60
[9] மேற்படி செ, 60-62

பாராளும் பெருவேந்தனுகச் சிறப்பு அடைவதற்கு நெடுங்காலத்திற்கு முன்பே, அவனிடத்து அரிய பல பண்புகள் இயல்பாக அமைந்து விட்டன. இளமையிலேயே தாயின் பாசத்தை அருண்மொழி இழந்து விட்டான். அவனுடைய பெரிய பாட்டியாரான செம்பியன் மாதேவியார் தாயினும் சாலப் பரிந்தூட்டும் வளர்ப்புத் தாயாக அவனைப் போற்றி வளர்த்தார். தன் மற்றோர் உடன் பிறப்பைக் காலனுக்குக் காணிக்கையாக்கி விட்ட குந்தவைப்பிராட்டியார், அருண்மொழியிடத்துக் காட்டிய அன்பையும், ஆர்வத்தையும், அக்கறையையும் அளவிட்டுரைக்க இயலாது.

அன்பில் அன்னையாகவும், பரிவில் தமக்கையாகவும், அறிவினை வளர்ப்பதில் ஆசானுகவும், சமயப் பண்பாட்டை ஊனிலும் உணர்விலும் இரண்டறக் கலக்குமாறு செய்வதில் குருவாகவும், எதிர்காலத்தின் போக்கினைக் கோடி காட்டுவதில் மதிநுட்பம் வாய்ந்த மந்திரியாகவும் அருண்மொழியைப் போற்றி வளர்த்த பெருமை குந்தவைப் பிராட்டிக்கே யுரியதாகும்,

தன் முன்னோரிடமிருந்து அவன் அஞ்சா நெஞ்சத்தையும் வீரவுணர்வையும் பெற்றான். பெரிய பாட்டியிடமிருந்து அருளுணர்ச்சியையும் சைவ சமயப் பற்றையும் அவன் அடைந்தான். தமக்கையிடமிருந்து பெருந்தன்மையையும், சமயப் பொறையுடைமையையும், அழகியல் சுவையுணர்வையும், நடுவுநிலையிலிருந்து பிறழாத உள்ளத் தெளிவையும் அவன் பெற்றான். அவ்வியல்புகளை அடிப்படையாகக் கொண்டு, எண்ணியதை எண்ணியவாறு செய்து முடிக்கும் செயல்திறனை அவன் பையப் பைய வளர்த்துக் கொண்டான். இதனுல், அவனுடைய ஆளுமை பண்பட்டது ; பிறருக்குப் பயன் தந்தது; காண்பவருடைய கருத்தைக் கவர்ந்தது; மாற்றாரின் மனத்தையும் மயங்கச் செய்தது.

## இளவரசான வரலாறு

அருண்மொழித் தேவன் முறையாகக் கல்வி கற்று, தன்னுடைய மதிநுட்பத்தை நன்கு வளர்த்துக் கொண்டவனுவான் அரச குமாரர்களுக்குரிய படைக்கலப் பயிற்சியையும் யானையேற்றம் குதிரையேற்றம் தேரேற்றம் போன்றவற்றையும் அவன் தக்க ஆசிரியன்மாரிடத்துப் பயின்றனன். அதனுல் அவனுடைய அறிவுத்திறனேடு செயல் திறனும் மலர்ச்சியுற்றது. இதனை அவனுடைய வீரதீரச் செயல்களும் செயற்கருஞ் சாதனைகளும் எடுத்தியம்புகின்றன.

இரண்டாம் பராந்தக சோழன் இறந்த பொழுது அருண்மொழி இளைஞனாக இருந்திருக்கக்கூடும். தமையன் கொலையுண்டமையும், அத்துன்பத்தைத் தாங்கொணாது தந்தை மாண்டமையும் அருண்மொழிக்கு அதிர்ச்சியைத் தந்திருக்கவேண்டும். "மக்கள் அனைவரும் சோழப் பேரரசை ஏற்று ஆளும்படி அருண்மொழியை வேண்டினர். அச்சமயம், மதுராந்தகனுக்கு, தானே அரசு கட்டிலேற வேண்டும் என்ற ஆவல் இருந்தது. அரசியல் அறிவில் முதிர்ச்சியுற்றிருந்த அருண்மொழி, தன் சிறிய தந்தையின் விழைவார்வத்தை நன்குணர்ந்து சோழ நாட்டை அவரே ஆள வேண்டுமென்று வற்புறுத்தினான். அவருள்ள வரை சோழரின் மணிமுடியைத் தான் மனத்தாலும் அடைய விரும்புவதில்லை"[10] என்று அவன் கூறியதாகத் திருவாலங்காட்டுச் செப்பேடு தெரிவிக்கிறது. நாட்டின் நலங் கருதியும், சோழர் குடியின் மாண்பினைப் போற்றிக் காக்க விரும்பியும் அருண்மொழி, சோழப் பேரரசின் மணிமுடியை உத்தம சோழனுக்குச் சூட்டினான். தான் இளவரசனாக இருந்து நாட்டின் ஆட்சியை நலமுற நடத்த, அவன் பாடு பட்டான்.

## அரியணையில் அருண்மொழி

உத்தம சோழன் பதினாறு ஆண்டுகள் அமைதியாக ஆட்சி புரிந்து, தான் பெற்ற அரசைப் பேணிக் காத்தான். அவன் இறந்த பிறகு கி.பி. 985ஆம் ஆண்டில் ஜூன் திங்கள் இருபத்தைந்தாம் நாளிற்குப் பிறகு ஏதோ ஓர் நாளில் அருண்மொழி வர்மன் சோழப் பேரரசின் மன்னனாக முடிசூட்டப் பெற்றான்.[11] அவன் முடியில் ஆட்டப்பெற்ற விழுநீர் கலியின் மாசுகளைத் துடைத்தது; தன் மகளாகிய திருமகள் இவன் மார்பில் வீற்றிருத்தலைக் காணத் தானே வந்த பாற்கடல்போல் அவனுடைய வெண் கொற்றக் குடை திகழ்ந்தது[12] என்று திருவாலங்காட்டுச் செப்பேடு சுவை பட எடுத்துரைக்கிறது. முடிசூட்டு விழாவில் 'இராசராசன்' என்னும் அபிடேகப் பெயர் அவனுக்குச் சூட்டப்பட்டிருக்க வேண்டும். அவனுடைய மூன்றாம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளே காலத்தால் முந்தியவை; பழைமையானவை. அவற்றில் 'இராசராசன்' என்னும் பெயரே குறிப்பிடப் பெற்றிருப்பது[13] இக்கருத்தை அரண் செய்கிறது.

[10] திருவாலங்காட்டுச் செப்பேடு, செ, 69.
[11] E. I., Vol. 9: p. 217.
[12] திருவாலங்காட்டுச் செப்பேடு, செ 75.
[13] 56 of 1913: 306 of 1906

அவனுக்குரிய பட்டப் பெயர் இராசகேசரிவர்மன் என்பு தாகும். இராசராசனின் நான்காவது ஆட்சியாண்டில் பொறிக்கப் பட்ட கல்வெட்டு ஒன்று மதுராந்தகம் என்னும் ஊரில் காணப் படுகிறது. அக்கல்வெட்டு "காந்தளூர்ச்சாலைக் கலமறுத்தருளிய கோ இராசகேசரி வர்மன்"[14] என்று அவனைக் குறிப்பிடுகிறது.

இவற்றால் அருண்மொழி அரியணை ஏறியதும், இராசராசன் என்னும் அபிடேகப் பெயரையும், இராசகேசரி என்னும் சிறப்புப் பெயரையும் பெற்றான் என்று நாம் துணியலாம். தில்லையில் அவன் திருப்பணி செய்ததற்காக மனமுவந்த தில்லைவாழ் அந்தணர்கள், அவனுக்கு இராசராசன் என்னும் பட்டத்தை அளித்துப் பெருமைப்படுத்தினர் என்பது உண்மைக்கு மாறான செய்தியாகும்.[15] இராசராசன் தில்லையம்பலத்தில் திருப்பணி செய்தது மிகவும் பிற்பட்ட காலத்தில் என்பதைக் கருதுவோமானால், இச்செய்தியின் பொருத்தமின்மை புலப்படும்.

சங்க காலச் சோழ மன்னருள் யாருக்கும் இராசகேசரி, பரகேசரி என்னும் பட்டப்பெயர்கள் வழங்கியதில்லை. ஆனால், விசயாலயன் மரபில் வந்த அனைவரும் இப்பட்டத்தை மாறி மாறிச் சூட்டிக் கொண்டனர். இத்தகைய பழக்கம் உண்டாகக் காரணம் என்ன? இடைக் காலத்தில் சோழர் குடியைப் பற்றித் தோன்றிய புராணக் கதைகளே இதற்குக் காரணமாகும். பண்டைக்காலத்தில் சோழரின் குடியில் இராசகேசரி எனவும், பரகேசரி எனவும் மன்னர் இருவர் இருந்தனர் என்று ஆனைமங்கலம், திருவாலங்காடு செப்பேடுகளும், கன்னியாகுமரிக் கல்வெட்டும் தெரிவிக்கின்றன. அந்தப் புகழ் மிக்க முன்னோரின் பெயரினைப் பிற்காலச் சோழர் தங்களுக்குரிய பட்டப் பெயராகத் தம் பெயர்க்கு முன்னர்ச் சேர்த்து வழங்கினர். அவ்வாறு வழங்கு வதில் தெளிவான ஒரு முறையை அவர்கள் கடைப்பிடித்தனர். தந்தை 'இராசகேசரி' என்னும் பட்டப் பெயரைப் பெற்றிருந் தால், மகன் 'பரகேசரி' என்று பாராட்டப் பெறுவான். இடை யில் அரசு கட்டில் ஏறியவர் யாராக இருந்தாலும் அந்தத பட்டப் பெயரையே பெறுவர். இரண்டாம் பராந்தகன் இராச கேசரியாவான். அவனுக்குப் பிறகு ஆட்சிக்கு வந்த உத்தம சோழன் பரகேசரி என்னும் பட்டத்தைப் பெற்றான். இம்முறை யின் படி அடுத்து அரசு கட்டில் ஏறிய இராசராசன், இராச கேசரி என்னும் பட்டப்பெயரைப் பூண்டு நாடாண்டான். இராச

14 395 of 1922
15 S.I.I. Vol. 2: Introd. pp. 13-14.

கேசரி என்னும் சொல்லிற்கு அரசர்களுள் சிங்கம் போன்றவன் என்பது பொருளாகும். பரகேசரி என்னும் சொல்லிற்கு பகைவர்களுக்குச் சிங்கம் போன்றவன் என்பது பொருளாகும். இவையாவும் பகைவர்க்குச் சிங்கம் போன்றவன் என்னும் கருத்தை உணர்த்துவனவாகும்.

# 7. மன்னர் மன்னனின் வெற்றிச் சிறப்புகள்

விசயாலயன் அரும்பாடுபட்டு சோழ அரசினை நிறுவினன். இராசராசனுடைய ஆட்சிக்காலத்தில் ஒரு பேரரசாக அது வளர்ச்சியுற்றது. அதனுடைய வளர்ச்சிக்கும் முன்னேற்றத் திற்கும் மூலகாரணமாக விளங்கியவன் இராசராசன் என்று கூறினால், அது மிகையாகாது. உத்தம சோழன் காலத்தில், சோழ மண்டலத்தோடு தெற்கே பாண்டிய நாட்டின் சில பகுதி களும் தொண்டை மண்டலத்தின் தென்பகுதியும் சோழருடைய ஆட்சிக்குட்பட்டிருந்தன. அக்காலத்தில் இராசராசன் இளவரச னாக இருந்தான். சோழர் அரசினை விரிவுபடுத்துவதற்குரிய திட்டத்தை வகுத்து, அதைச் செயல்படுத்துவதற்குரிய வாய்ப்பை யும் வசதியையும் அவன் எதிர்நோக்கிக் காத்திருந்தான்.

## சேரநாட்டுப் படையெடுப்பு

அரசு கட்டிலேறிய சில ஆண்டுகளுக்குள், அவன் சேர நாட்டின் மீது படையெடுத்துச் சென்றான். சேரனுடைய படையை அவன் புறமுதுகிட்டு ஓடச் செய்தான். காந்தளூரில் இருந்த சேரனுடைய மரக்கலங்களை அவன் கி.பி.988 இல் அழித்தொழித்தான். இதை 'காந்தளூர்ச் சாலைக் கல மறுத் தருளிய கோ இராசகேசரிவர்மன்' என்று அவனுடைய நான்காம் ஆண்டுக் கல்வெட்டு அறிவிக்கிறது. இம்மலை நாட்டுப் படை யெடுப்பிற்குப் பஞ்சவன் மாராயன் என்பவன் தலைமை தாங்கி னான்.

சேரநாடு கடலும் மலையும் சூழ்ந்தது; யாரும் எளிதில் சென்று அடையமுடியாத இடர்ப்பாடுடையது. அத்தகைய மலைநாட்டின் மீது இராசராசன் படையெடுக்கக் காரணம் யாது? அக்காலத்தில் பாண்டிய நாட்டினை அமரபுஜங்கன் ஆண்டு வந்தான். அவன் சோழ மன்னனை மதியாமல், தன்னுரிமையுடன்

ஆட்சி புரிய முயன்றான். அவனுக்கு உதவியாகச் சேர மன்னனும், ஈழத்து அரசனும் வந்தனர். அதனால், இராசராசன் பாண்டிய நாட்டின் மீது முதன்முதல் படையெடுக்க நேர்ந்தது. பாண்டியனை வீழ்த்தியதோடு அமையாது, சேரனுடைய கொட்டத்தை அடக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் இராசராசன் சேர நாட்டினைத் தாக்கினான். அப்பொழுது பாஸ்கர ரவிவர்மன் திருவடி என்பவன் சேரநாட்டின் அரசனாக இருந்திருக்க வேண்டும். அவனுடைய கல்வெட்டுகளே அக்காலத்தைச் சார்ந்தனவாக உள்ளன. எனவே, இராசராசனால் தோற்கடிக்கப்பட்டவன் பாஸ்கர ரவிவர்மனாக இருக்கலாம். அதுவரையில் மலைநாடு யாருக்கும் அடிமையாகாமல் தனியரசாக இருந்து வந்தது. சோழ மன்னன் மேலைக் கடற்கரை ஓரமாகவுள்ள விழிஞத்தைத் தாக்கி, அதைக் கைப்பற்றினான். பின்னர் காந்தளூர்ச்சாலை என்னும் இடத்தில், சேரனுடைய மரக்கலங்களை அவன் அழித்தான்.

காந்தளூர்ச்சாலை என்பது திருவனந்தபுரத்தின் ஒரு பகுதியாகும். இந்நாளில் அதனை 'வலியசாலை' என்று அழைக்கின்றனர். அது கடற்கரைப்பட்டினம் என்பது 'சேரலன் வேலைகெழு காந்தளூர்ச் சாலை' என்னும் கல்வெட்டுத் தொடரால் நாம் அறிகிறோம். 'காந்தளூர்ச் சாலைக் கலமறுத் தருளிய' என்னும் தொடருக்கு அறிஞர்கள் பலவகையான பொருள் கூறுகின்றனர். காந்தளூரில் இருந்த அறச்சாலையில் உணவு உண்ண வேண்டியவர்கள் எத்தனைபேர் என்பதை வரையறுத்த செய்தியைக் கூறுவதாகக் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை கருதுகின்றார்.[1] இக்கருத்தை அரண் செய்வதைப் போன்று ஆய்குல மன்னனான கருநந்தடக்கனின் பார்த்திவ சேகரபுரச் செப்பேடு அமைந்திருக்கிறது. அந்த அரசன் 'முன்சிறை' என்ற ஊர்ச் சபையோரிடமிருந்து சிறிது சிறிதாக உழக்குவிளை என்ற நிலத்தை விலைக்கு வாங்கி, அதன் எல்லையை வரையறுத்து, அந்த இடத்தில் கோயில் ஒன்று கட்டினான். அதில் திருமாலை அவன் எழுந்தருளச் செய்தான். அந்த ஊருக்குப் பார்த்திவ சேகரபுரம் எனப் பெயரிட்டான். அங்கு அவன் ஒரு சாலையை நிறுவினான். அச்சாலை காந்தளூர்ச் சாலையை முன்மாதிரியாகக் கொண்டு அமைக்கப்பட்டது என்று[2] அவனுடைய செப்பேடு செப்புகிறது. அச்சாலையில் 95 சட்டர்களுக்கு உணவளிக்க அவன் ஏற்பாடு செய்தான் என்பதும் அதனால் அறியப்படுகிறது. அச்சாலை ஒரு 'கலாசாலையாகவே' இருந்திருத்தல் கூடும் என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர்.[3]

1 Kerala Society Papers. Series 2: pp. 100 of
2 பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக் அ. 10
3 மேற்படி பக். அ. 5.

இச் செப்பேடு கி. பி. பதின்மூன்றும் நூற்றுண்டிற்குப் பிற்பட்டதாகும். எனவே, பிற்பட்ட காலத்திய வழக்கினை, அதற்கு முந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்திய நிகழ்ச்சியாகக் கொள்ளுவது முற்றிலும் பொருந்தாது. மற்றொரு சாரார், காந்தளூரிலிருந்த சேரனுடைய 'படைக்கல சாலையை' அழித்தான்[4] என்று பொருள் கூறுவர். இக்கருத்தும் ஓரளவிற்குப் பொருத்தமானதே. போரில் பகைவருடைய படைகளை அழிப்பதோடு, அவர்களுடைய ஆயுதக் கொட்டிலை அழிப்பதும் நடைபெறக் கூடிய ஒரு தொடர் நிகழ்ச்சியே எனலாம். அதனுல், அச்செயலுக்கு ஒரு தனிச்சிறப்பு இருப்பதாகக் கூறுவதற்கு இல்லை. ஆனுல், 'காந்தளூர்ச் சாலைக் கலமறுத்தருளி' என்னும் தொடர் வரலாற்றுச் சிறப்பு மிக்கதொரு போர் நிகழ்ச்சியைத் தெரிவிப்பதாகவே தோன்றுகிறது. அந்நிகழ்ச்சி யாதாக இருக்கலாம்? காந்தளூர்ச் சாலையில் இருந்த சேர மன்னனுடைய ஆற்றல்மிகு கப்பற்படையை இராசராசன் தோற்கடித்த செய்தியை —கடற்போரில் இராசராசன் அடைந்த வெற்றியை —அறிவிக்கும் நிகழ்ச்சியாக அதைக் கொள்ளுவதே சாலவும் பொருந்தும். சோழப் பெருமன்னனிடம் ஆற்றல்மிகு நிலப்படையோடு, வெல்லுவதற்குரிய கடற்படையும் இருந்திருக்கவேண்டும் என்பதில் ஐயமில்லை. இத்தகைய கப்பற்படையை இராசராசன் போற்றிக் காக்காமல் இருந்திருந்தால், அவனுடைய மகன் 'முதலாம் இராசேந்திரன் கடாரப் படையெடுப்பினை நடத்தியிருக்க இயலுமா?' என்பது சிந்தித்தற்குரியதாகும்.

இந்தப் போர், இராசராசனுடைய ஆட்சியின் மூன்றும் ஆண்டிற்குள் நடந்திருக்க வேண்டும் என்பது, அவனுடைய மூன்றும் ஆண்டுக் கல்வெட்டில் மும்முடிச் சோழன்[5] என்ற பட்டப் பெயர் காணப்படுவதாலும், நான்காம் ஆண்டின் தொடக்கத்துக் கல்வெட்டில் 'காந்தளூர்ச் சாலை கலமறுத்தருளிய' செய்தி கூறப்பட்டிருத்தலாலும் அறியப்படுகிறது. எனினும், சேர நாட்டில் அவனுடைய எட்டாம் ஆண்டுக்கு முற்பட்ட காலத்திய கல்வெட்டுகள் கிடைக்கவில்லை. வென்று கைக்கொண்ட நாட்டைச் சீர்திருத்துவதில் இவ்விடைக்காலம் கழிந்திருக்கலாம்.

## மலைநாட்டுப் போர்

மலைநாட்டின் மீது அவன் குறைந்தது இரண்டு முறையாகிலும் படையெடுத்துச் சென்றிருக்க வேண்டும். ஒட்டக்

[4] கணேசன், சா. இராஜராஜன், பக் 29
5 453 of 1908-

கூத்தர் இயற்றியுள்ள உலாக்களினால் இப்போரைப் பற்றிய சில செய்திகள் தெரியவருகின்றன. இராசராசன் அனுப்பிய தூதன் ஒருவனைச் சேரமன்னன் இழிவாக நடத்தி, உதகையில் அவனைச் சிறையிலிட்டான்[6]. அதனால், சீற்றமுற்ற இராசராசன் மீண்டும் சேரநாட்டின் மீது படையெடுத்தான். கடும் போருக்குப் பிறகு, 'பதினெண் அரசரைக் கொன்று, உதகையைக் கொளுத்தி'த் தன் தூதனை அவன் மீட்டான். கொல்லத்தைத் தாக்கி அவன் வெற்றி கொண்டான். அச்சமயத்தில் அவனுடைய பிறந்த நாள் விழா வந்தது. அதனை மிகச் சிறப்பாக அந்நாட்டில் அவன் நடத்தினான்; அத்திருநாளை நினைவு கூரும் வகையில் ஓர் அறக்கட்டளையையும் வழங்கினான். அங்கிருந்த முட்டம் என்னும் ஊருக்கு மும்முடி சோழநல்லூர் என்று பெயரிட்டு, அதனை அந்நாட்டிலுள்ள திருநந்திக்கரையிலுள்ள கோயிலுக்கு இறையிலியாகக் கொடுத்தான். அதன் வருவாயைக் கொண்டு, தான் பிறந்த ஐப்பசித் திங்கள் சதய நாளினை விழாவாகக் கொண்டாட அவன் ஏற்பாடு செய்தான்[7]. பின்னர், மன்னர் மன்னனாகச் சோழநாட்டிற்குத் திரும்பும் பொழுது, பொற்குவியலையும், களிற்று நிரைகளையும் அவன் மிகுதியாகக் கொண்டுவந்தான்[8]. இப்போரோடு இராசராசனுடைய சேரநாட்டுப் படையெடுப்பு முடிவுற்றது எனலாம்.

## செழியரைத் தேசு கொண்டது

திருவாலங்காட்டுச் செப்பேடு, இராசராசன் தென்திசையிலிருந்து தன் திக்குவிசயத்தைத் தொடங்கினான் என்று குறிப்பிடுகிறது. முதலில் பாண்டிய நாட்டை ஆண்டுகொண்டிருந்த அமரபுஜங்கனைத் தோற்கடித்து, அவனுடைய நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான். இச்செய்தியைச் 'செழியரைத் தேசு கொள் கோவிராச கேசரிவர்மன்' என்று அவனுடைய கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. மற்றும், தஞ்சை இராசராசேச்சுரத்தில் உள்ள அவன் கல்வெட்டுகள் 'மலைநாட்டுச் சேரமானையும் பாண்டியர்களையும் எறிந்து[9]' என்று குறிப்பிடுகின்றன. இக்கல்வெட்டு 'செழியர்', 'பாண்டியர்' என்று பாண்டிய மன்னரைச் சுட்டுவதால், இராசராசன் காலத்தில் பாண்டிய நாட்டை ஒருவனுக்கு மேற்பட்ட சிலர் ஆட்சிபுரிந்திருக்க வேண்டும் என்பது புலனாகின்றது. பாண்டிய குலாசனி என்னும்

6 தூதற்காப்
பண்டு பகலொன்றில் ஈரொன்பது சுரமுங்
கொண்டு மலைநாடு கொண்டோனும் —(விக்கிரம சோழன் உலா, 32-34)

7 T.A.S. Vol. I: P, 292, கலிங்கத்துப்பரணி, 201

8 443 of 1918

9 S.I.I. Vol. 2; No. 59.

சிறப்புப்பெயரை இப்போருக்குப் பிறகு இராசராசன் பூண்டான். பாண்டி மண்டலம் இராசராச மண்டலம் என்ற பெயரைப் பெற்றது. இராசராசனின் எட்டாம் ஆண்டுமுதல் அவனுடைய கல்வெட்டுகள் பாண்டிய நாட்டில் காணப்படுகின்றன. இவற்றால் கி. பி. 992 அளவில் அவனுடைய ஆட்சிக்குட்பட்ட ஒரு மாநிலமாகப் பாண்டிய நாடு மாறியமை தெரிகிறது.

## குடமலை நாட்டுப் போர்

பின்னர், இராசராச சோழனுடைய படை, குடமலை நாட்டை நோக்கிச் சென்றது. இராசேந்திரனே மாதண்ட நாயகனாக முன்னின்று இப்போரை நடத்தியிருக்க வேண்டும்.[10] அக்குடமலை நாடு இக்காலத்தில் கூர்க் (குடகு) என்று வழங்கப்படுகிறது. அப்பொழுது கொங்காள்வார் மரபில் வந்த ஒருவன் குடகினை ஆண்டு வந்தான். அப்போர், 'பணசோகே' என்ற இடத்தில் நடைபெற்றது. சோழ மன்னன் சார்பில் மனிஜன் என்பான் வியத்தகு வீரத்துடன் கடும்போர் புரிந்து, வாகை சூடினான். அவனுடைய வீரதீரச் செயல்களைப் பாராட்டி, இராசராசனுடைய ஆணையின்படி, பட்டமும் நன்கொடையும் அவனுக்கு அளிக்கப்பட்டன. சத்திரிய சிகாமணி கொங்காள்வான் என்னும் பட்டம் மனிஜனுக்கு வழங்கப் பட்டது; மாளவ்வி என்னும் ஊரும் அளிக்கப்பட்டது. அவனுடைய மரபினர் நூற்றாண்டுகளுக்கு மேலாகக் குடகு நாட்டைச் சிறப்பாக ஆண்டு வந்தனர். அவர்களனைவரும் ''கொங்காள்வார்'' என்னும் சிறப்புப் பெயருடையவர்களாக விளங்கினர்.

## ஈழப் படையெடுப்பு

இராசராசனுடைய எட்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகளில் 'முரட்டொழிற் சிங்களர் ஈழமண்டலம்' கொண்ட செய்தி காணப்படுகிறது. எனவே, கி.பி. 993 ஆம் ஆண்டிற்கு முன்பே, ஈழப்படையெடுப்பு நடைபெற்றிருக்க வேண்டும் என்பது புலனாகின்றது. பாண்டியனுக்கு அவ்வப்போது இலங்கை அரசன் உதவி புரிந்து வந்தான். இலங்கையின் காலவழிச் செய்திக் கோவையிலிருந்து, அக்காலத்தில் ஐந்தாம் மகிந்தன் என்பவன் அத்தீவில் அரசோச்சி வந்தான் என்பது தெரிகிறது. சோழப் படையெடுப்பிற்குத் தலைவனாக இராசேந்திரனே சென்றான். அந்நிலையில் ஈழ அரசனுடைய படைத்தலைவர் கலகம் செய்தனர்.

10 E C. Vol. 3; Sr. 125.

அதனால், மகிந்தன் நாட்டை விட்டு ஓடினான். இலங்கையின் தென்கிழக்குப் பகுதியில் உள்ள ரோகண நாட்டிற்குச் சென்று அவன் ஒளிந்துகொண்டான். சோழப் பெரும்படை எளிதில் ஈழத்தைக் கைப்பற்றியது. ஈழத்தின் வடபகுதி சோழருடைய பேரரசோடு இணைக்கப்பட்டது. அதற்கு மும்முடிச் சோழ மண்டலம் என்னும் பெயரிடப்பட்டது. இதனால் இராசராச னுக்கு எண்டிசையும் புகழுண்டாயிற்று. திருவாலங்காட்டுச் செப்பேடு இராசராசனின் இலங்கைப் படையெடுப்பைச் சிறப் பாகப் பேசுகிறது :

> ''வானரப் படையின் உதவியைக் கொண்டு கடலில் பாலம் அமைத்தான் இராமன். பிறகு அரும்பாடுபட்டு இலங்கை யர் கோனைக் கூரிய அம்பினால் அவன் கொன்றான். அந்த இராமனைவிட இராசராசன் பேராற்றலும், பெருந்திற னும் உடையவன். அவனுடைய ஆற்றல்மிகு படை அலைகடலை மரக்கலங்களைக் கொண்டு கடந்தது; இலங்கை மன்னனைத் தீயிட்டுக் கொன்றது[11].

நெடுங்காலமாக ஈழ மண்டலத்தின் தலைநகரமாக அநுராதபுரம் விளங்கிவந்தது. சோழப்படை அந்நகரை அழித்து மண்மேடாக்கியது. அதனால், அந்நாட்டின் நடுமையமான பகுதியில் உள்ள பொலனருவா என்னும் நகரைச் சனநாத மங்கலம் என்னும் பெயருடன் தலைநகராகச் சோழரால் அமைத்துக் கொள்ளப்பட்டது[12]. இராசராசன் இலங்கை முழு வதையும் தன் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவர நினைத்தான். அதனால், அந்நாட்டின் மையப் பகுதியைத் தேர்ந்தெடுத்து, அங்கு தன்னுடைய தலைநகரை அவன் அமைத்துக் கொண்டான். பிற்காலத்திய ஈழ மன்னரும் அந்நகரையே தலைநகராகக் கொண்டு ஆட்சி புரியலாயினர்.

இராசராசன் ஈழத்தைக் கைப்பற்றிய பின்னர், தன்னு டைய அரசியல் அதிகாரிகளைக் கொண்டு அதை ஆட்சி புரிந்து வந்தான். அவ்வதிகாரிகளுள் ஒருவன், ஈழ மண்டலத்தின் மாதோட்ட நகரத்தில் தன்னுடைய வேந்தன் பெயரால் இராசராசேச்சுரம் என்னும் சிவன் கோவிலைக் கட்டினான்; அதற்கு அர்த்தயாம வழிபாட்டிற்கும் வைகாசித் திருவிழா விற்கும் பயன்படும் வகையில் இறையிலியாக நிலத்தை அளித் துள்ளான். இச்செய்திகளைக் கொழும்பு நகரின் அரும்பொருள்

11 திருவாலங்காட்டுச் செப்பேடு, செ. 80
12 S.I. I, Vol. 4: No. 1388.

காட்சியகத்தில் உள்ள கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது[13]. மேலும், அக்கல்வெட்டால் ஈழ மண்டலம், இராசராச னுடைய ஆட்சிக்கு வந்த பின்னர் மும்முடிச் சோழ மண்டலம் என்று வழங்கப்பட்டமையும், மாதோட்டம் என்ற நகரம், இராசராசபுரம் என்னும் பெயர் பெற்றிருந்தமையும் புலனாகின் றன. சோழ மன்னன் புதியதாக அமைத்துக் கொண்ட தலைநகரம் பொலனருவா என்பதை நாம் மேலே கண்டோம். அவ்வூரில் சிவன் கோவில் ஒன்று உள்ளது. அதற்கு வானவன் மாதேவி ஈச்சுரம் என்பது பெயர். தன்னுடைய தாயின் பெயரால், சோழப் பேரரசனான இராசராசன் அக்கோயிலை அமைத்திருக்கலாம். அக்கோயிலின் கட்டமைப்பும் சிற்ப வமைதியும் கி. பி. பத்து, பதினொன்றாம் நூற்றாண்டுகளில் கட்டப்பட்ட சோழர் கோயில்களைப் பெரிதும் ஒத்துள்ளன. இராசராசனுடைய கல்வெட்டுகள் பல ஈழமண்டலத்துள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இச்சான்றுகள் யாவும், ஈழமண்ட லம் சோழப் பேரரசின் ஒரு பகுதியாக இருந்ததை எடுத்துரைக் கின்றன. அந்நாட்டிலிருந்து பேரளவிற்குச் சோழ மன்னன் பொன்னையும் பொருளையும் கொண்டுவந்தான். அவற்றைத் தஞ்சைப் பெருவுடையார் கோயிலுக்கு அன்புக் காணிக்கையாக அவன் செலுத்தினான். இச்செய்தியை அக்கோயிலில் உள்ள கல்வெட்டுகள் பல தெரிவிக்கின்றன.

## மைசூர் மாநிலப் படையெடுப்பு

இராசராசனுடைய ஆட்சியின் தொடக்கத்திலேயே, கொங்கு மண்டலம் சோழருடைய ஆட்சிக்குட்பட்டிருந்தது. அதையொட்டி அமைந்திருந்த நுளம்பப்பாடியைத் தாக்கி, அதனை இராசராசன் கைப்பற்றினான். நுளம்பப்பாடி என்பது சேலம், வடவார்க்காடு, பல்லாரி, கோலார், தும்கூர் ஆகிய மாவட்டங் களின் பகுதிகளைக் கொண்ட நாடாகும்[14]. பல்லவ அரச மரபின் வழிவந்த நுளம்பர்கள், அதனைக் கங்க அரசர்களின் கீழ்க் குறுநில மன்னர்களாக ஆண்டுவந்தனர். கங்கபாடியும், அதன் தலைநகரான தழைக்காடும் மைசூர் மாவட்டத்தின் பெரும்பகுதியைத் தன்னகத்தே கொண்டிருந்த தடிகைபாடி யும் இராசராசனுடைய படையெடுப்பின் இறுதியில் சோழப் பேரரசின் ஒரு பகுதியாயின.

இந்நாடுகளை இராசராசன் எளிதில் வெற்றி கொண்டான். அதற்குக் காரணம் கி. பி. 973 ஆம் ஆண்டு அளவில்,

[13] S.I.I., Vol. 4: No, 1388
[14] E.I. Vol. 10: P, 57

இராஷ்டிர கூடர்கள் ஆற்றல் குன்றி மறைந்தமையேயாகும். கி. பி. 992 ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில், இராஷ்டிர கூடரின் வழியில் வந்து, புத்துயிர் பெற்று விளங்கிய மேலைச் சாளுக்கிய மரபின் அரசனுன இரண்டாம் தைலபன் சோழ மன்னனை வென்றதாகக் காணப்படுகிறது. எனினும், அவனுடைய ஆதிக்கம் கங்கபாடி, தடிகைப்பாடி, நுளம்பப்பாடி முதலிய நாடுகளில் பரவவில்லை என்பதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. மைசூர் மாநிலத்தில் 913 ஆம் சக ஆண்டு (கி. பி. 991) சோழ நாராயணனால் பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்று கிடைத்திருக்கிறது. அச்சோழ நாராயணன் இராசராசனேயாவான். நாராயணன் என்பது அவனுடைய பட்டப் பெயர்களுள் ஒன்றாகும். இதனால், அப்படையெடுப்பு அவனுடைய ஆட்சியின் ஆறும் ஆண்டிற்குள் நடைபெற்றிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

இப்படையெடுப்பிற்கும் தலைமையேற்றவன் இராசராசனுடைய மைந்தன் இராசேந்திரனேயாவான். இராசராசனின் எட்டாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று, மைசூர் அரசில் காணப் படுகிறது. அதில் "மும்முடிச் சோழன் பெற்ற களிறு துளுவத்தையும், கொங்கணத்தையும் கைப்பற்றி மலேயாவை (மலையர்களை) அடிப்படுத்தி, தெலுங்கன், ரட்டிகன் ஆகியவர்களுடன் சேரனையும் புறங்கண்டது"[15] என்னும் செய்தி பதிவு செய்யப்பட்டுள்ளது. இதனால், மும்முடிச் சோழனை இராசராசன் பெற்றெடுத்த களிறு போன்ற இராசேந்திரனே, மாதண்ட நாயகனாக இருந்து, இப்போர்களை நடத்தி வாகை சூடினான் என்பது புலனாகின்றது.

## மேலைச் சாளுக்கியர்களுடன் போர்

கி. பி. 992-ஆம் ஆண்டு அளவில், இரட்டபாடியை ஆண்டு வந்த மேலைச் சாளுக்கிய அரசனான இரண்டாம் தைலபன் இறந்து விட்டான்; அவனுடைய மகனான சத்தியாசிரயன் அரசனானான். அவனுடைய ஆட்சிக் காலத்தில் சோழருக்கும் சாளுக்கியருக்கும் போர் மூண்டது. போருக்குரிய காரணம் தெளிவாக இப்பொழுது புலனாகவில்லை. இராசராசனுடைய பதினெட்டாம் ஆண்டுக் கல்வெட்டுகளில், அவன் இரட்டபாடி ஏழரையிலக்கம் கொண்ட செய்தி குறிப்பிடப்படுகிறது. திருவாலங்காட்டுச் செப்பேடு" (எண்ணெய் என்று பொருள்படும்) தைலனுக்குப் பிறந்த சத்தியாசிரயன், பிறப்புக் கேற்ப இராசராசனுடைய

15 5 of 1895; E.C. Vol. 3; Sr. 140

கடல் போன்ற படையைப் போர்க்களத்தில் எதிர்ப்பதால் உண்டாகும்கஷ்டங்களினின்றும் தப்புவதற்காக நழுவிவிட்டாலும், கஷ்டாசிரயன் (கஷ்டங்களுக்கு இருப்பிடம்) ஆனான்''[16] என்று சாளுக்கிய மன்னனை இழித்துரைக்கிறது.

இப்போரை, இராசராசனே முன்னின்று நடத்தினான். அவன் குதிரைமீதமர்ந்து, தனியொருவனாக சத்தியாசிரயனுடைய வெள்ளம் போன்ற படையைத் தடுத்து நிறுத்தினான். அவனுடைய போர்க்களிறுகள் துங்கபத்திரைக் கரையில் எதிரிகளின் அணி வகுப்பிற்குள் புகுந்து தாண்டவமாடின; சாளுக்கியப் படைத் தலைவன் கேசவன் கைப்பற்றப்பட்டான். இச்செய்திகளைக் கரந்தைச் செப்பேடு விரிவாக எடுத்தியம்புகிறது. அப் போர்க்களத்திலிருந்து மண்ணைக்கடக்கத்தைக் கைப்பற்ற இராசராசன் உறுதி பூண்டான் என்றும், அவ்வுறுதிமிக்க விழைவார்வத்தை இராசேந்திரன் நிறைவேற்றினான் என்றும் அச்செப்பேடு அறிவிக்கிறது.

அப்போர்க்களத்தில் இராசேந்திரனுடைய வீரன் ஒருவன், சத்தியாசிரயன் ஏறியிருந்த யானையைக் குத்திக் கொல்ல முயன்றான். அம்முயற்சியில் அவன் இறந்துவிட்டான். அவனை ஊற்றத்தூர்ச் சுருதிமான் நக்கன் சந்திரனான இராசமல்ல முத்திரையன் என்று ஒரு கல்வெட்டு சுட்டுகிறது.[17]

கி.பி. 1007 ஆம் ஆண்டில் பொறிக்கப்பட்ட சத்தியாசிரயனுடைய கல்வெட்டு ஒன்று ஹொட்டூரில் கிடைத்திருக்கிறது. அதில் ''சோழகுல திலகமாகிய இராசராச நித்யவிநோதன் மகனான நூர்மடி சோழ இராசேந்திர வித்தியாதரன் ஒன்பது இலட்சம் வீரர்கள் அடங்கிய படையுடன் வந்து, மிக்க வீரத்துடன் போர் புரிந்து நாட்டைச் சூறையாடினான்; நகரங்களைத் தீக்கிரையாக்கினான்; பார்ப்பனர், பெண்மக்கள், குழந்தைகள் முதலியோரைக் கொன்றான்; கன்னியரைப் பாழாக்கினான்''[18] என்னும் செய்தி இடம் பெற்றிருக்கிறது மேலும், அக்கல்வெட்டு, திகுள (திரமிள) மாரி' (தமிழர்களின் காலன்) ஆன சத்தியாசிரயன் சோழருடைய 'வஸ்து வாகனங்களைக்' கைப்பற்றி. அவர்களையும் புறமுதுகிட்டு ஓடச் செய்தான் என்பதையும் தெரிவிக்கிறது.

இதனால், இராசராசன் இரட்டப்பாடி ஏழரை இலக்கத்தைத் தாக்கிப் போர்புரிந்த போதிலும், அதைக் கைப்பற்றியதாகத் தெரியவில்லை. மற்றும் புதியதாகக் கைப்பற்றப்பட்ட நாடுகளில்

[16] திருவாலங்காட்டுச் செப்பேடு, செ. 81
[17] 515 of 1912
[18] E I, Vol. 16: P 74

காணப்படுவதைப் போன்று, இரட்டபாடியில் இராசராசனின் கல்வெட்டுக்கள் இதுவரை கிடைக்கவில்லை. எனவே, சோழப் பெருவேந்தன் துங்கபத்திரைக்குத்தெற்கேயுள்ள நாடுகளைக் கைப் பற்றித் தன் பேரரசோடு இணைத்துக் கொண்டான் என்று நாம் உறுதியாகக் கூறலாம். தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள கல் வெட்டு ஒன்றில் ''சத்தியாசிரயனை எறிந்து எழுந்தருளி வந்து ஸ்ரீபாத புஷ்பமாக அட்டித் திருவடி தொழுதன'' என்னும் தொடர் மேற்கண்ட செய்தியை உறுதிப்படுத்துகிறது. இராச ராசன் சத்தியாசிரயனை வெற்றிகொண்டான் என்று அவனுடைய ஆனைமங்கலச் செப்பேடும்,[20] இராசராசனுடைய கடல்போன்ற படையைக் கண்டு சத்தியாசிரயன் அஞ்சிப் போர்க்களத்தை விட்டு ஓடியதாகத் திருவாலங்காட்டுச்[21] செப்பேடும் தெரிவிக் கின்றன. இக் குறிப்புகளால் இராசராசன் மேலைச் சாளுக்கிய மன்னனை வெற்றி கொண்டான் என்பது மட்டும் உறுதியாகத் தெரிகிறது.

## வேங்கி மண்டலப் போர்

இராசராசன் வேங்கை நாட்டைக் கைப்பற்றிய வரலாறு, அரசியல் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். கிருஷ்ணை, கோதா வரி ஆகிய இரு பேராறுகளுக்கும் இடையில், அமைந்திருந்த நிலப்பகுதியே வேங்கை நாடாகும். அதனை ஆண்ட அரச மர பினரைக், கீழைச் சாளுக்கியர் என்பர். பத்தாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் கீழைச் சாளுக்கிய அரச மரபினரிடையில் பங்காளிப் பூசல் உண்டாயிற்று. கி. பி. 945 ஆம் ஆண்டில் இரண் டாம் அம்மராசன் அரசு கட்டில் ஏறினன். அவனுடைய ஆட்சிக் காலத்தில் (கி.பி. 945-970) இளைய குடியைச் சேர்ந்த பாதபன் என்பான், தனக்கே மணிமுடி யுரியது என்று உரிமைப் போர் தொடுத்தான், அதற்காக இராஷ்டிர கூட மன்னன் மூன்றாம் கிருஷ்ணனுடைய உதவியை அவன் பெற்றான்; கலகம் செய்தான்; வேங்கி நாட்டின் ஒரு பகுதியைக் கைப் பற்றியும் கொண்டான். அம்மராசனுடைய ஆட்சியின் இறுதிக் காலத்தில் இந்நிகழ்ச்சி நடைபெற்றிருக்கக்கூடும். அப்பொழுது அம்மராசன் கலிங்க நாட் டிற்கு ஓடிவிட்டான் என்று பாதபனுடைய ஆரும்பாகச் செப்பேடு தெரிவிக்கிறது.

அம்மராசனுக்குப் பிறகு, கீழைச்சாளுக்கிய அரசுக்கு உரிமை யுடைய, அவனுடைய மாற்றாந்தாய் வயிற்றுத் தம்பியான தானர்

[19] S I I., Vol. 2, p 7
[20] E I, Vol 22, No. 34, V 3I
[21] திருவாலங்காட்டுச் செப்பேடு, செ. 81

ணவன் வடகலிங்க மன்னனுடைய துணையைக் கொண்டு அரசு கட்டிலேறினன். அவன் அம்மராசனை வஞ்சனையாகக் கொன்று விட்டான் என்று கூறுவர். கி.பி. 970 முதல் மூன்றாண்டுகள் அவன் ஆட்சி புரிந்தான். ஜடாசோட வீமன் என்பவன் அம்மராச னுடைய மைத்துனனாவான். தன்னுடைய மைத்துனனைக் கொன்றவனைப் பழிவாங்கும் பொருட்டு, கி.பி. 973 இல் அவன் வேங்கி நாட்டின் மீது படையெடுத்துச் சென்றான். தானார்ண வனைக் கொன்று, அந்நாட்டைக் கைப் பற்றி வீமன் ஆட்சி புரியத் தொடங்கினன். அந்நிலையில் தானார்ணவனுடைய பிள்ளைகளான சக்திவர்மனும், விமலாதித்தனும் வடகலிங்க அரச னிடம் அடைக்கலம் அடைந்தனர். இதனால், வீமன் சீற்றமுற்றான்; வட கலிங்கத்தின்மீது போர் தொடுத்தான்; அந்நாட்டு அரசனான காமார்ணவனையும், அவன் தம்பி விநயாதித்தனையும் கி.பி. 978, 981 ஆம் ஆண்டுகளில் கொன்று குவித்தான். வடகலிங்கம் தெலுங்கச் சோழனின் ஆட்சிக்குட்பட்டது. அதனால், கீழைச் சாளுக்கிய அரச குமாரர் இருவரும் சோழப் பேரரசனிடம் அடைக்கலம் புகுந்தனர். இராசராசனுடைய உதவியைப் பெற்று தாங்கள் இழந்த நாட்டை மீண்டும் கைப்பற்ற அவர்கள் தக்க சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர்.

அவர்களுக்கு உதவி புரிவதற்காகவே இராசராசன் வேங்கி நாட்டின் மீது படையெடுத்துச் சென்றான். முதலில், தன் மூதா தையான பராந்தகன் கைப்பற்றிய சீட்புலி நாட்டை அவன் மறு படியும் வென்று, சோழராட்சியின் கீழ்க் கொண்டு வந்தான். அத் துடன் பாகி நாட்டையும் அவன் வெற்றி கொண்டான். அவ்விரு நாடுகளும் ஆந்திர மாநிலத்தில் உள்ள நெல்லூர் மாவட்டத்தின் வடபகுதியாகும். அவற்றைக் கைப்பற்ற இராசராசனுடைய படைத் தலைவருள் ஒருவனான தஞ்சாவூர்க் கூற்றத்துக் குருகாடி யுடையான் பரமன் மழபாடியானான மும்முடிச் சோழன், பெரும் படையை நடத்திச் சென்றான். இப்படையெடுப்பு இராசராசனு டைய ஆறும் ஆட்சியாண்டிலேயே நடைபெற்றிருக்க வேண்டும். அந்நாடுகளைத் தெலுங்கச் சோழன் வீமவர்மன் ஆண்டு வந்தான். அப்போரில் சக்திவர்மன் சோழர் பக்கத்தில் நின்று மாவீரத் தோடு போர்புரிந்து, பெரும்புகழ் பெற்றான். நெல்லூர் மாவட் டத்தில் உள்ள ரெட்டிபாளையத்தில் இராசராசனுடைய எட் டாம் ஆண்டுக் கல்வெட்டு[22] ஒன்று கிடைத்திருக்கிறது. இதனால் இராசராசனுடைய ஆதிக்கம் அக்காலத்தில் நெல்லூர் வரையில் பரவி இருந்தமை புலனாகின்றது.

22 Nellore Ins. p. 446

நாடிழந்திருந்த சக்திவர்மனுக்கு உதவியாகச் சோழ வேந்தன் படையெடுத்து வருவதை அறிந்த ஜடாசோட வீமன், பெரும் படையுடன் போருக்கு ஆயத்தமானுன். தமிழச் சோழனுடைய படைகளும் தெலுங்கச் சோழனின் படைகளும் ஒன்றையொன்று எதிர்த்துக் கடும்போர் புரிந்தன. இறுதியில் இராசராசன் வெற்றி பெற்ருன். வேங்கி நாட்டிற்குச் சக்திவர்மனை கி. பி. 999 ஆண்டில் அரசனுக அவன் முடி சூட்டினுன். ஆயினும், தோல்வி யுற்ற வீமன் கலிங்க மன்னனின் துணைகொண்டு கி. பி. 1001 இல் சக்தி வர்மனைத் தாக்கினுன். தோற்ருேடிய சக்திவர்மனைக் காஞ்சிபுரம் வரையிலும் அவன் விரட்டி வந்தான். அச்சமயத்தில் இராசராசன் வீமனை எதிர்த்துப் போரிட்டுக் கொன்ருன்: வேங்கி நாட்டை மீண்டும் சக்திவர்மனுக்கு வழங்கினுன். இதற்குப் பிறகு வேங்கி நாட்டில் நிலையான ஆட்சி அமைந்தது. சக்திவர்மனுக்குப் பிறகு, அவனுடைய தம்பியான விமலாதித்தனே அரசனுக வேண்டும் என்னும் ஏற்பாட்டினை இராசராசன் செய்தான், அதன்படி விமலாதித்தனுக்கு இளவரசு பட்டம் கட்டப்பட்டது. இதற்கு முன்பே, தன் அருமை மகளான குந்தவையை விமலாதித் தனுக்கு இராசராசன் திருமணம் செய்து கொடுத்திருந்தான்.

வேங்கி மண்டலத்தைச் சக்திவர்மன் சீரும் சிறப்புமாகப் பன்னிரண்டு ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். தனக்குப் பலவகை யில் உதவிபுரிந்த சோழப் பெருவேந்தனிடத்துப் பெரிதும் நன்றி யுணர்வு உடையவனுக அவன் இருந்தான். இராசராசனுக்குச் சோழ நாராயணன் என்னும் பெயர் இருந்ததைக் கருத்தில் கொண்டு, சக்திவர்மனும் 'சாளுக்கிய நாராயணன்' என்னும் சிறப்புப் பெயரைப் பூண்டு, தன் தலைவனுடைய திருப்பெயரைப் போற்றினுன். கி. பி. 1011 ஆம் ஆண்டில் அவன் இறந்தான்.

வேங்கி நாட்டை இராசராசன் கைப்பற்றினுன், ஆனுல், அதைச் சோழப் பேரரசுடன் அவன் சேர்த்துக் கொள்ளவில்லை. தன்னுடைய ஆதரவிலும் மேற்பார்வையிலும், சிறப்புற்று விளங் கும் ஒரு தனியரசாகவே அவன் அதை மதித்துப் போற்றி வந் தான். திருமணத் தொடர்பால் இவ்விரு அரசுகளும் பிணைப் புண்டிருந்தன. இதனுல் ஒரு நூற்ருண்டிற்கு மேல் நெருக்க மான உறவும், தொடர்பும் இவ்விரு அரச குடும்பங்களுக்கு இடையே நின்று நிலவின.

### கலிங்க வெற்றி

இராசராசனுடைய மெய்க் கீர்த்தி, அவன் கலிங்கத்தை வெற்றி கொண்டதாகத் தெரிவிக்கின்றது. கோதாவரி ஆற்றிற்

கும் மகாநதிக்கும் இடையில், வங்காளக் கடலைச் சார்ந்துள்ள நிலப்பரப்பே கலிங்க நாடாகும். இராசராசனுடைய கலிங்கப் படையெடுப்பைப்பற்றித் தெளிவாக நமக்கு ஒன்றும் தெரிய வில்லை. அந்நாட்டில் உள்ள மகேந்திரகிரியில், தமிழிலும் வட மொழியிலும் பொறிக்கப்பட்ட இரண்டு கல்வெட்டுகள் கிடைத் துள்ளன. இராசேந்திர சோழன், விமலாதித்தன் என்னும் குலூத மன்னன் ஒருவனைப் போரில் வென்று, அம்மலையில் வெற் றித்தூண் ஒன்றை நிறுவியதாக அவை அறிவிக்கின்றன.

இச்செய்தி, இராசேந்திரனுடைய மெய்க் கீர்த்தியில் இடம் பெறவில்லை. ஒருகால், இராசராசன் வேங்கி நாட்டின் மீது படை யெடுத்துச் சென்று, அதனைக் கைப்பற்றுவதற்குப் புரிந்த பல போர்களின், ஒன்றாக அது இருக்கலாம். அல்லது கலிங்க நாட்டு அரசர்கள் கீழைச் சாளுக்கியரின் மூத்த அரச மரபிற்கு எதிராகப் போர்முரசு கொட்டியுள்ளனர். எனவே, சக்திவர்மனுக்கு அர சைக் கொடுத்து, சோழப் படை நாடு திரும்பிய பின்னர், கலிங்க மன்னன் வேங்கியைத் தாக்கி இருக்கலாம். அச் சமயத்தில் சோழ நாட்டின் தண்ட நாயகன் வடக்கு நோக்கிக் கலிங்கத்தின் மீது படையெடுத்துச் சென்றிருக்கக் கூடும்.

இவை யாவற்றையும்விட, வரலாற்றுப் பேரறிஞர் தி. வை. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் ''ஒருகால் அக்கலிங்க வேந்தன் கீழைச்சளுக்கிய மன்னனாகிய விமலாதித்தனுக்கு அடிக்கடி இடையூறு இழைத்துக் கொண்டு இருந்திருத்தல் கூடும். அதுபற்றி அவனை வென்றடக்கக் கருதி இராசேந்திரன் கலிங்கத்தின் மேல் படையெடுத்துச் சென்று அங்ஙனஞ் செய்திருக் கலாம் என்று தோன்றுகிறது.[23] என்று கூறும் விளக்கம் மிகவும் பொருத்தமாகத் தோன்றுகிறது.

## முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரத்தை வென்றது

தான் அரசு கட்டில் ஏறிய நாள் முதற்கொண்டு இருபத் தெட்டு ஆண்டுகள், தன்னுடைய நாட்டினை விரிவுபடுத்துவதிலும் பகைவரை அடக்கியொடுக்குவதிலும் இராசராசன் தன் வாழ் நாள்களைக் கழிக்க நேர்ந்தது. அவனுடைய வீரவரலாற்றின் இறுதி நிகழ்ச்சி 'முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரத்தில்' நடைபெற் றது. குமரியம் பெருந்துறைக்கு வடமேற்கே, அரபிக் கடல் பகுதியில் உள்ள பன்னீராயிரம் தீவுகளைச் சென்ற சில நூற் றாண்டுகளாக 'மால் தீவ்' என்றும், 'மால தீபம்' என்றும் கூறுவர். இப்பொழுது 'இலட்சத் தீவுகள்' என்பது வழக்கமாக உள்ளது.

[23] சதாசிவ பண்டாரத்தார், தி வை: பிற்காலச் சோழர் சரித்திரம், பகுதி 1: பக் 119-20

சேர நாட்டிற்கும், அதனையடுத்துள்ள இத்தீவுகளுக்கும் இடையே பகைமை உண்டாயிற்று. மேலைக் கடலில் சேர நாட்டு மக்கள் மரக்கலத்தைச் செலுத்த வொட்டாமல், அத்தீவுகளில் வாழ்ந்தோர் தொல்லை கொடுத்தனர். அவ்விடர்ப்பாட்டைப் போக்குவதற்கு, இராசராசன் அத்தீவுகளின்மீது கி. பி. 1013 இல் படையெடுத்துச் செல்ல நேர்ந்தது. இப்படையெடுப்பைப் பற்றிய விரிவான செய்திகள் ஒன்றும் கிடைக்கவில்லை. அத் தீவுகளைச் சோழ மன்னன் கைப்பற்றினன் என்பது மட்டும் தெரிகிறது. அலைகடல் நடுவேயுள்ள அத்தீவுகளைத் தாக்கிக் கைப்பற்றுவதற்கு, நன்கு பயிற்றுவிக்கப்பட்டதும் ஆற்றல் மிக்கதுமான சிறந்ததொரு கடற்படை பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும். இராசராசன் நிறுவிய திறன்மிகு இக்கப்பற் படையினைக் கொண்டே வங்காள விரிகுடாக் கடலை இராசேந்திரன், 'சோழரின் ஏரியாக' மாற்றி மாட்சியுற்றான்.

இந்திய வரலாற்றில், எந்தப் பேரரசும் காணாத கனவினைச் சோழ வேந்தர்கள் கண்டனர். மௌரியப் பேரரசின் காலம் முதற் கொண்டு விசயநகரப் பேரரசின் காலம் வரையில், சோழரைத் தவிர வேறு யாரும் கடற் பேரரசை நிறுவுவதற்கு முயலவில்லை என்று சர்தார் கே. எம். பணிக்கர்[24] மொழிந்துள்ளமை இங்குக் கருதத்தக்கது. அத்தகைய கடற்பேரரசிற்குக் கால்கோள் விழா நடத்தியவன் நம்முடைய இராசராசனேயாவான். அவனுடைய அரசியல் வாழ்க்கையில் நடைபெற்ற முதற் போரும், முடிவாக நிகழ்ந்த போரும் கடற்போர்களேயாகும். அவனுடைய மூன்றும் ஆட்சியாண்டில் காந்தளூர்ச் சாலையில் ஒரு கடற்போர் நடைபெற்றது. அவனுடைய இருபத்தெட்டாவது ஆட்சியாண்டிலும் மற்றொரு கடற் போர் நிகழ்ந்தது. முதல் கடற்போர் நடந்த மேலைக் கடலில் உள்ள முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரத்தைக் கைப்பற்ற மீண்டும் அவனுடைய மரக்கலங்கள் மேலைக் கடலை நோக்கிச் சென்றன. இவ்விரு போர்களுக்கும் இடையில்—பதினாறும் ஆட்சியாண்டில், இராசராசனுடைய 'கடல் மறவர்' ஈழத்தைத் தாக்கிக் கைப்பற்றியுள்ளனர். இம்மூன்று கடற்போர்களும் இராசராசனிடத்துத் திறமையும் பயிற்சியும் வாய்ந்த, நிலையான கடற்படை இருந்தமைக்குச் சான்றாக அமைகின்றன.

முப்பத்தோராண்டுகள் (கி. பி. 985—1016) அரசுபுரிந்தவன் இராசராசன். அதில், இருபத்தெட்டு ஆண்டுகள் வரையில் அவன் பெரிதும் போர் புரிய நேர்ந்தது. அவன் புரிந்த போர்களைக் கால வரன்முறைப் படுத்தி அவனுடைய மெய்க்கீர்த்தி

[24] K. M. Panikkar: Geographical Factors in Indian History. pp. 63-64

எடுத்தியம்புகின்றது. அவனுடைய இருபத்தொன்பதாம் ஆட்சி யாண்டில் தஞ்சைப் பெருவுடையார் கோயிலின்கண் பொறிக்கப் பட்ட கல்வெட்டில் காணப்படும் மெய்க்கீர்த்தி,

"திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்
தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச் சாலைக் கலமறுத் தருளி
வேங்கை நாடுங் கங்க பாடியுந்
தடிகை பாடியும் நுளம்ப பாடியும்
குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமும்
முரட்டொழிற் சிங்கள ரீழமண்டலமும்
இரட்டபாடி யேழரை இலக்கமும்
முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரமுந்
திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டதன்
னெழில்வள ரூழியு ளெல்லா யாண்டும்
தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்
தேசு கொள் கோராச கேசரி வர்மரான
உடையார் ஸ்ரீராஜராஜ தேவர்க்கு யாண்டு"[25]

என்று போற்றிப் புகழ்கிறது.

இராசராசன் மேற்கண்ட பன்னிரண்டு நாடுகளை வென் றான். அவற்றுள் இரட்டபாடி நீங்கலாகப் பிறவற்றைத் தன் னுடைய வெண்கொற்றக் குடையின் கீழ்க் கொணர்ந்தான் என்னும் செய்தியை இம்மெய்க்கீர்த்தி அறிவிக்கிறது. அப்பன்னி ரண்டு நாடுகளைச் சற்றேறக்குறைய பதின்மூன்று அரசர்கள் ஆட்சி புரிந்தமை இராசராசனுடைய கல்வெட்டுகளால் தெரிய வருகிறது. அவர்கள் செழியன், சேரன், மகிந்தன், உதகையின் (பதினெண்) அரசன், குடமலைநாட்டு மன்னன், நுளம்பப்பாடி அரசன், கங்கபாடி மன்னன், தடிகைப்பாடி அரசன், சத்தியா சிரியன், தெலுங்க வீமன், சக்திவர்மன், கலிங்க மன்னன், முந்நீர்ப் பழந்தீவுகளின் அரசன் ஆகியோராவர். அம்மன்னர் களுக்கு முன்பே, இராசராசனுடைய தலைமையை ஏற்றுக் கொண்டு திறை செலுத்தி நட்புறவு கொண்டாடிய சிற்றரசர் பதின்மராவர். அவர்கள் பழுவேட்டரையர், கொல்லி மழவன் ஒற்றியூரன் பிருதிகண்டவர்பன், திருவையன் சங்கர தேவன், கொடும்பாளூர் வேளான் சுந்தரசோழன், நன்னமரையன், வீர சோழன் இலாடப் பேரரையன், இராசராச வாணகேரவரையன், மலையமான்,

[25] S I I, Vol 2: pt 3: No. 65, p 252

வல்லவரையன் வந்தியத்தேவன், விமலாதித்தன் என்பவராவர். இப்பதின்மருள் இறுதியாகக் கூறப்பட்ட மூவரும் சோழவேந்தனுக்கு நெருங்கிய உறவினராவர், மலையமான் இராசராசனுக்குத் தாய்வழிப் பாட்டனாகவோ, அம்மானாகவோ இருந்திருக்க வேண்டும்; வல்லவரையன் வந்தியத்தேவன் நம் பேரரசனின் திருத்தமக்கையாரான குந்தவைப் பிராட்டியின் கொழுநனாவான். விமலாதித்தன், மன்னர் மன்னனின் அருமைத் திருமகளான (இளைய) குந்தவையை மணம் புரிந்து கொண்ட மருகனாவான். இக்குறுநில மன்னர் பதின்மரும், இராசராசன் நிறுவிய சோழப்பேரரசு என்னும் பொன்றுப் புகழ் மிக்க மாளிகையைத் தாங்கிய தனிப்பெருந் தூண்களாவர்.

மேற்கண்ட இருபத்து மூன்று குறுநில மன்னர்களுக்குத் தலைவனாக இராசராசன் விளங்கினான். இத்தகைய வேந்தனை 'மன்னர் மன்னன்' என்று போற்றுவது பொருந்தும் அன்றோ? இப்பட்டப்பெயரை —'இராசராசன்' என்னும் திருப்பெயரை— இருபத்தியொன்பதாம் ஆட்சியாண்டில் அவன் பெற்றிருந்தால், நாம் வியப்படைய மாட்டோம். ஆனால், அருண்மொழித் தேவன், அரசு கட்டிலேறிய மூன்றாவது ஆண்டிலேயே, இராசராசன் என்னும் சிறப்புப் பெயரால் உலகிற்குத் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டமை நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. அப்பெயருக்குப் பல்லாற்றானும் பொருத்தமுடைய வரலாற்று நாயகனாக அவன் வாழ்ந்து காட்டினான். சோழர் குடியின் ஒளிவிளக்காகவும் தமிழினத்தின் செஞ்ஞாயிறாகவும் வாழ்ந்த இராசராசனின் வெற்றிச் சிறப்புகளையும் வீறார்ந்த வீரவாழ்வையும் அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டதே இடைக்காலச் சோழப் பேரரசு.

அம்மன்னர் மன்னனின் ஆட்சிக்காலத்தில் சோழப் பேரரசு வடக்கே துங்கபத்திரையையும் கலிங்கத்தையும் எல்லையாகக் கொண்டிருந்தது; அதில் பாண்டியநாடும் சேர நாடும் அடங்கிய பகுதிக்கு 'இராசராசத் தென்னாடு' என்பது பெயர். இதனோடு தொண்டை மண்டலமாகிய சயங்கொண்ட சோழமண்டலமும், கங்க மண்டலமும், நுளம்பபாடி நாடும், கலிங்க நாடும், வேங்கி மண்டலமும் சேர்ந்திருந்தன. தெற்கே ஈழமாகிய மும்முடிச் சோழ மண்டலமும் முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும் சோழப் பேரரசில் அடங்கியிருந்தன. இதனால், இந்திரனைப் போல மூவுலகைச் சேர்ந்தோரும் வணங்குமாறு, தன் தஞ்சைமா நகரின் அரியணையில், அரிமாவினைப் போன்று அமர்ந்து,

இராசராசன் செங்கோல் ஓச்சினன் என்று திருவாலங்காட்டுச் செப்பேடு பாமாலை புனைந்து ஏத்துகிறது.

## தந்தைக்குப் புகழ் தேடிய தனயன்

இராசராசனுடைய வென்றிச் சிறப்பிற்கு உறுதுணையாக இருந்தவன், அவனுடைய அருமை மகன் இராசேந்திரனவான். இராசராசன் முப்பத்தோராண்டுகள் ஆட்சி புரிந்தான். அவன் அரசு கட்டில் ஏறிய காலத்திலேயே, இராசேந்திரன் ஆற்றலும் திறனுமிக்க அடலேறாக விளங்கினன். முதல் எட்டு ஆண்டு களுக்குள் இராசராசன் நடத்திய படையெடுப்புகளில் இராசேந்திரன் சோழப் படைகளுக்குத் தலைமையேற்று, அஞ்சா நெஞ்சத்துடன் கடும்போர் புரிந்தான். மலைநாட்டுப் போருக்கு இராசேந்திரனே தண்டத் தலைவனாகப் படை நடத்தி இருக்க வேண்டும். அத்தலைவனைப் 'பஞ்சவன் மாராயன்' என்று கல்வெட்டு ஒன்று குறிப்பிடுவதை நாம் முன்னரே கண்டோம். அப்பெயர் இராசேந்திரனுடைய பட்டப் பெயராக இருந் திருக்கலாம் என்பது ஆராய்ச்சியாளர் கருத்தாகும். இராசராச னுடைய நான்காம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில் (கி. பி. 989) இராசேந்திர சோழ தேவன் குறிப்பிடப் பெற்றுள்ளான்.[26] இராசராசனுடைய பதினெட்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று திருப்புறம்பயம் என்னும் ஊர் இராசேந்திரசிங்க வள நாட்டைச் சார்ந்திருந்தது[27] என்று தெரிவிக்கிறது. இராசேந்தி ரன் வேங்கி மண்டலப் போரில் மாதண்ட நாயகனாக விளங்கி னன். இவ்வாறு தன் தந்தையின் ஆட்சிக்காலம் முழுவதி லும், நாட்டின் ஆட்சியில் தந்தையோடு இராசேந்திரன் நெருக்கமான தொடர்பு கொண்டிருந்தான். இராசராசன் அடைந்த வெற்றிகள் பலவற்றிற்கு, இராசேந்திரனுடைய படைத்தலைமையைச் சிறப்புமிக்க காரணமாகக் கூறலாம்.

இராசராசனுடைய ஆட்சியின் இறுதிக் காலத்தில், நாட்டு ஆட்சி முறையினைப் பெரிதும் கண்காணிக்கும் பொறுப்பினை இராசேந்திரன் ஏற்றான். அவனுடைய அரும்பணியைப் பாராட் டும் வகையில், பேரரசன், தன்னுடைய ஆட்சிக்காலத்தி லேயே அவனுக்கு இளவரசு பட்டம் கட்டினன். இந் நிகழ்ச்சி கி. பி. 1012 ஆம் ஆண்டு, மார்ச்சு 27 க்கும் ஜூலைத் திங்கள் 7 க்கும் இடைப்பட்ட காலத்தில் நடைபெற்றதாக

26 S. I. I., Vol. 5: No. 982.
27 M. E. R., 1927, P. 78; 333 of 1927.

இராசேந்திரன் நாற்பது வயதிற்கு மேற்பட்டவனாக இருந்திருக்க வேண்டும்.

புதியதாகக் கைப்பற்றிய நாடுகளை இராசராசன் சிறந்த முறையில் ஆட்சி புரியலானான். தோல்வியுற்ற அரசர்களை அவ்வவ்வரசில் உயர் அதிகாரிகளாக அவன் அமர்த்தினான். தன்னுடைய நம்பிக்கைக்குரிய சோழ நாட்டு அதிகாரிகளை அந்த அரசர்களுக்கு மேலதிகாரிகளாகவும் மாவட்ட தண்ட நாயகராகவும் அவன் நியமித்தான்.

28 Nilakanta Sastri, K. A : op cit Vol. I. P. 221.

# 8. இராசராசனின் மெய்க்கீர்த்தியும் சிறப்புப் பெயர்களும்

பேரரசன் இராசராசன் ஆழ்ந்த சிந்தனையும் தெளிந்த அறிவும் உடையவன்; எதையும் திட்டமிட்டுச் செய்வதிலும், எண்ணித் துணிவதிலும் ஈடிணையற்ற தலைவன். தான் அரசனான சில ஆண்டுகளுக்குள் நடைபெற்ற போர்களையும், அவற்றில் அடைந்த வெற்றிகளையும் யாவரும் அறியத்தக்க வகையில் கல்வெட்டுகளில் அவன் பொறிக்கத் தொடங்கினான்.

கலிங்கத்தை கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் ஆண்ட காரவேலன் இத்தகைய பழக்கத்தை உடையவனாக இருந்தான். அவனுடைய 'ஆதீகும்பா' (Hathigumpha) கல்வெட்டில், அரியணை ஏறிய நாள் முதல், பதின்மூன்றாம் ஆட்சியாண்டு வரை அவன் நடத்திய போர்களையும் பெற்ற வெற்றிகளையும் முறைப்படுத்திக் கூறியுள்ளான். இதைப் போன்றே சமுத்திர குப்தனது அலகாபாத் கல் தூண் கல்வெட்டும் காணப்படுகின்றது. அதில் அவனுடைய திக்குவிசயத்தைப் பற்றிய செய்திகள் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

தமிழகத்தில் இத்தகைய பழக்கம் இராசராசனுக்கு முன்னர் வழக்கில் இல்லை. செப்பேடுகள் பலவற்றைப் பல்லவர்களும் பாண்டியர்களும் வழங்கியுள்ளனர். அவற்றில், தாங்கள் தெரிவிக்க விரும்பிய செய்திகளுக்கு முன்னால்—செப்பேட்டின் தொடக்கத்தில்—தங்கள் மூதாதையரின் வரலாற்றைச் சுருக்கமாக அவர்கள் அறிவித்துள்ளனர்.

## மெய்க்கீர்த்தியின் அமைப்பு

ஆனால், இராசராசனே, முதன்முதலாகத் தன் ஆட்சியில் நடைபெற்ற வரலாற்று உண்மைகளைத் தெளிவாகவும் கால

வரன்முறைப்படியும் எடுத்துரைக்கும் பழக்கத்தை மேற்கொண்டான். அச்செய்திகளை எளிய, இனிய தமிழில் நயமிகு சில தொடர்மொழிகளைக் கொண்டு அவன் அறிவுறுத்தத் தொடங்கினான். அதற்கு மெய்க்கீர்த்தி என்பது பெயர். மெய்க் கீர்த்தி அவனுடைய கல்வெட்டுகளின் முன்னுரைப் பகுதியாகும். அதைத் தொடர்ந்து அக்கல்வெட்டுப் பொறிப்பதற்குக் காரணமாக அமைந்த அறக்கட்டளை வழங்குவதைப் பற்றியோ, திருப்பணி செய்வதைப் பற்றியோ விரிவாக விளக்குவது வழக்கம்.

இராசராசனுக்குப் பிறகு வந்த சோழ மன்னர்களும், பாண்டியர்களும், பிற அரச மரபினரும் இம்முறையைப் பொன்னேபோல் போற்றிப் பின்பற்றியுள்ளனர். மெய்க் கீர்த்தியின் இலக்கணத்தைப் பன்னிரு பாட்டியல்[1] போன்றஇலக் கண நூல்கள் வரையறுத்துள்ளன. வேந்தனுடைய மெய்ப்புகழையும், அவன் வரலாற்றையும் முதலில் கூறுவது மெய்க்கீர்த்தி. பின்னர், பெருந்தேவியோடு நீடு வாழ்கவென அரசனை வாழ்த்தும் பகுதி அதில் இடம் பெறும். அதையடுத்து அவனுடைய இயற்பெயரோடு பொருந்திய சிறப்புப் பெயர்களையும், ஆட்சியாண்டையும் மெய்க்கீர்த்தி அறிவுறுத்தும். அவற்றை நான்கு சீர்களைக் கொண்ட அளவடியுடைய ஆசிரியப்பாவால் சிறுபான்மை கலியோசையும் உடையதாய்ப் பாடுவது மரபு. மெய்க்கீர்த்தி என்பதற்கு உண்மையான புகழ் என்பது பொருள். எனவே, அதில் பொய்யுரைக்கோ கற்பனைக்கோ இடமில்லை. அரசனுடைய அரும்பெருஞ் சாதனைகளையும் சிறப்பு மிக்க வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் பாமாலை புனைந்து ஏத்திப் புகழ் மாலை சூட்டும் முறையில் அமைவதே மெய்க்கீர்த்தி எனலாம். ஆண்டுகள் செல்லச் செல்ல, பல புதிய செய்திகளை மெய்க்கீர்த்தியில் சேர்ப்பது வழக்கம். அதனால் ஓர் அரசனின் ஆட்சிக் காலத்தின் நீட்சிக்கேற்ப, மெய்க்கீர்த்திகளின் செய்திகளும் அளவும் பெருகும்.

ஒவ்வோர் அரசனுடைய மெய்க்கீர்த்தியும் வெவ்வேறு மங்கல மொழியோடு தொடங்கப்பெறும். இதனால், மெய்க் கீர்த்தியின் தொடக்கத்திலுள்ள மரபுத் தொடர்களைக் கண்டவுடனேயே, அக்கல்வெட்டு எந்த அரசனுடையது என்பதை நாம் எளிதில் கூறலாம். ஒரு சில மன்னர்கள், ஒன்றுக்கு மேற்பட்ட மெய்க்கீர்த்திகளைத் தங்களுக்கு உரியனவாகக் கொண்டதும் உண்டு.

இம்மெய்க் கீர்த்திகள், ஓர் அரசனுடைய வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை —சிறப்பாகப் போர்களைத் தெரிவிக்

[1] காண்க: பன்னிரு பாட்டியல், 197

கும் அதிகாரவமைப்பின் பதிவேடுகளாகும். இதனுல், அவை 'வரலாற்று முன்னுரைகளாகப்' பயன்பட்டு வருகின்றன. பிற்காலச் சோழ மன்னரின் வரலாற்றை ஓரளவிற்குச் செம்மையாக வரைவதற்கு மெய்க்கீர்த்திகள் பேருதவியாக உள்ளன. அவற்றில் ஒரேவொரு குறையுண்டு. குறிப்பிட்ட ஓர் அரசனுடைய ஆட்சியாண்டை மட்டும் அவை சுட்டுகின்றன. நாடு முழுவதற்கும் பொதுவான ஒரு நூற்றுண்டையோ, சகாப்தத்தையோ சுட்டி, அதன் பின்னர், அவ்வரசனின் ஆட்சியாண்டைக் குறிப்பிடுமானுல், அவை பெரிதும் வரலாற்று ஆராய்ச்சிக்குப் பயனுடையனவாக அமைந்திருக்கும். இக்குறை பிற்காலப் பாண்டியருடைய கல்வெட்டுகளில் அருகிய வழக்காகியுள்ளது.

சோழப் பேரரசன் இராசராசன் ஒரேவொரு மெய்க்கீர்த்தியைத் தனக்குரியதாகக் கொண்டிருந்தான். திருமகள் போலப் பெருநிலச் செல்வியும் என்று தொடங்குவது இராசராசனுடைய மெய்க்கீர்த்தியாகும். அவனுடைய எட்டாவது ஆட்சியாண்டு முதற்கொண்டு கல்வெட்டுகளில் அம்மெய்க்கீர்த்தி இடம் பெற்றிருக்கிறது. அவன் காந்தளூர்ச்சாலைக் கலமறுத்தருளிய செய்தியே அதில் முதலிடம் பெற்றிருக்கிறது.

## இராசராசனின் சிறப்புப் பெயர்கள்

இராசராசன் மாபெரும் வெற்றிவீரன்; சிறப்புமிக்க ஆட்சியாளன்; கல்வியறிவுமிக்க பல்கலைச் செல்வன். அதனுல், அவனுக்குப் பல சிறப்புப் பெயர்கள் வழங்கலாயின. அவற்றைத் தனக்குச் சூட்டிக் கொள்வதில் அவன் பேரார்வம் காட்டினுன். இதை, ''பெயர்கள் எல்லாம் வரலாற்றின் இன்னிசைக் கீதங்களாகுமானுல், பெருந்தகையாளனுகிய இவ்வரசன் அவ்விசையில் பெரிதும் மூழ்கித் திளைத்திருந்தான்''[2] என்பதால் அறியலாம். அவன் புதியதாகச் சூட்டிக் கொண்ட பெயர்களை, நாட்டிலே நன்கு வழங்குமாறு செய்வதற்கு, அவன் புதியதொரு முறையைக் கையாண்டான். புதியதாக அமைக்கப்படும் நிறுவனங்களுக்கும் நாட்டுப் பிரிவுகளுக்கும் அப்பெயர்களையிட்டு அவன் வழங்கினுன். சில சமயங்களில், அவற்றின் பழைய பெயரை மாற்றிவிட்டு, புதிய பெயரை அவற்றிற்குக் கொடுத்து வழங்கவும் செய்துள்ளான்.

2 Nilakanta Sastri, K, A. : op. cit. P. 186.

இராசராசனுக்கு வழங்கிய பெயர்கள் பல. அவற்றுள் அருண்மொழித் தேவன்[3] என்னும் இயற்பெயரை நீக்கிவிட்டால், மற்றவையெல்லாம் அவனுடைய சிறப்புப் (விருதுகள்) பெயர்களாகும். அவனுடைய மூன்றும் ஆட்சியாண்டு முதல் இராசராசன் என்னும் பெயர் வழங்கி வருவதை நாம் முன்னரே கண்டோம். இவை இரண்டு பெயர்கள் அல்லாமல், அவனுக்கு முப்பத்தைந்து சிறப்புப் பெயர்கள் வழங்கியதை நாம் கல்வெட்டுகளால் அறிகிறோம். இவற்றோடு திருமுறை கண்ட சோழன் என்னும் பெயரையும் சேர்த்தால், அவனுடைய சிறப்புப் பெயர்கள் முப்பத்தேழாகும்.

அவை அபய குலசேகரன், அரிதுர்க்கலங்கன், அழகிய சோழன், இரணமுக பீமன், இரவிகுல மாணிக்கம், இரவி வம்ச சிகாமணி, இராசசர்வஞ்ஞன், இராசாசிரயன், இராச கண்டியன், இராச மார்த்தாண்டன், இராசவித்தியா தரன், இராசேந்திர சிம்மன், இராசவினோதன், உத்தம சோழன், கேரளாந்தகன், சத்துரு புஜங்கன், சண்டபராக்கிர மன், சிங்களாந்தகன், சிவபாத சேகரன், சோழமார்த்தாண் டன், சோழகுல சுந்தரன், சோழேந்திர சிம்மன், தெலிங்ககுல காலன், நிகரிலி சோழன், நித்ய விநோதன், பண்டிதசோழன் பாண்டியகுலாசனி, பெரிய பெருமாள், மும்முடிச்சோழன், மூர்த்த விக்கிரமாபரணன், உய்யக் கொண்டான், கீர்த்திப் பராக்கிரமன், சனநாதன், செயங்கொண்ட சோழன், சத்திரிய சிகாமணி என்பனவாகும்.

இவற்றுள், இரவிகுல மாணிக்கம், இரவிவம்ச சிகாமணி என்னும் பெயர்கள் சூரிய (இரவி) னுடைய வழி வந்தது சோழ அரச மரபு என்பதையும், அவ்வரச மரபின் மாணிக்கமாகவும், முடிமணியாகவும் இராசராசன் விளங்குகிறான் என்பதையும் தெரிவிக்கின்றன. சோழ மார்த்தாண்டன் என்பது சோழர் குலத் துதித்த சூரியன் என்று அவனைப் போற்றுகிறது. சோழேந்திர சிம்மன், நிகரிலி சோழன் என்பன சோழர் குலத்தில் தோன்றிய இந்திரனாகிய சிம்மன் என்றும், ஒப்பாரும்மிக்காருமில்லாச் சோழப் பேரரசன் என்றும் தெரிவிக்கின்றன.

[3] தேவன் என்னும் பெயரை, இயற்பெயரோடு சேர்த்து வழங்குவது முதற் பராந்தக சோழன் காலம் முதல் வழக்கில் இருந்து வருகிறது. இராசராச னுக்கு முன்பு ஆண்ட சோழ மன்னர் எல்லாம் ''பெருமானடிகள்'' என்னும் மதிப்புணர்த்தும் பெயரோடு குறிக்கப்பட்டனர். இராசராசன் காலம் முதல், 'உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர், என்று சுட்டுவது வழக்கிற்கு வந்ததைக் காணுகிறோம்.

அழகிய சோழன், சோழகுல சுந்தரன் என்பன இராசராசனுடைய தோற்றப் பொலிவைச் சுட்டுவனவாகும். பண்டித சோழன் என்பது அவனுடைய கல்விநலன் கருதியும், கலையுணர்வு கருதியும் வழங்கப்பட்ட பெயராகும். இராச விநோதன், நித்ய விநோதன் என்னும் பெயர்கள் அவனுக்குக் கலைகளில் இருந்த ஈடுபாட்டை உணர்த்துகின்றன. இராசவித்தியாதரன் என்பது இசைக் கலையில் அவன் வல்லவன் என்பதைத் தெரிவிக்கிறது. சிவபாத சேகரன் என்பது அவனுடைய கனிந்த சிவபக்தியை உணர்த்தும் பெயராகும். உத்தம சோழன் என்னும் பெயர் 'அவன் நல்லவன்; குறைகளற்றவன்; சான்றோன்' என்பதைத் தெரிவிக்கிறது. அவன் பெருமைக் குரிய பெருவேந்தனாக விளங்கியமையால், பெரிய பெருமாள் என்னும் பெயர் அவனுக்கு வழங்கியது. தன்னிடம் அடைக்கலம் புகுந்தவர்களைப் போற்றி ஆதரிக்கும் பண்பாளன் என்பதை அபய குலசேகரன் என்னும் பெயர் அறிவிக்கிறது.

அரச மரபிற்கு (சத்திரிய) முடிமணி போன்றவன் என்னும் பொருளில் சத்திரிய சிகாமணி என்னும் பெயரும், அரசர்களுள் கதிரவனைப் போன்றவன் என்னும் பொருளில் இராச மார்த்தாண்டன் என்னும் பெயரும், பகையரசர்க்குச் சிம்மத்தைப் போன்றவன் என்னும் பொருளில் இராசேந்திர சிம்மன் என்னும் பெயரும், அரசர்களுள் முற்றும் அறிந்த மூதறிவாளன் என்னும் பொருளில் இராச சர்வஞ்ஞன்[4] என்னும் சிறப்புப் பெயரும் வழங்கிவந்தன. அரசர்களுள் இசைவாணன் என்னும் கருத்தில் இராச கண்டியன் என்னும் சிறப்புப் பெயரை அவன் பூண்டிருந்தான்.

போர் முகத்தில் வீமனைப் போன்று, வெல்லுவதற்கரிய ஆற்றலுடையவன் என்னும் பொருளில் இரணமுக வீமன் என்னும் பெயருடையவனாக அவன் வாழ்ந்தான். பகைவருடைய அரண்களை அழிப்பதில் வல்லவன் என்னும் பொருளில் அரிதுர்க்கலங்கன் என்று அவன் புகழப் பெற்றான். பகைவரை வென்ற தோள்களையுடையவன் என்னும் பொருளில், சத்ருபுஜங்கன் என்னும் பெயரும், இயமனைப் போல வலிந்து கவருவதில் பேராற்றலும் பெருஞ்சீற்றமும் உடையவன் என்னும் பொருளில் சண்ட பராக்கிரமன் என்னும் பெயரும் இராசராசனுக்கு வழங்கின. சேர மன்னனை வென்றமையால், 'கேரள மன்னனுக்கு இயமன்' என்னும் கருத்தில் கேரளாந்தகன் என்னும் பெயரும், சிங்கள அரசனை வென்றமையால் சிங்களாந்தகன் என்னும் பெயரும், தெலுங்கு நாட்டை ஆண்ட அரசரை வென்றமையால் தெலிங்ககுலகாலன் என்னும்

4 முற்றுமறியும் இயல்பு இறைவனுக்கே யுரியது. இதனால், இராசராசனை 'அரசருள் இறைவன்' என்று கூறவும் இப்பெயர் இடம் தருகிறது.

பெயரும் அவனுக்கு வழங்கின. பாண்டியரைத் தோற்கடித்து, அவருடைய நாட்டைக் கைப்பற்றிக் கொண்டமையால் பாண்டியர் குலத்திற்கு இடியினைப் போன்றவன் என்னும் கருத்தில் பாண்டிய குலாசனி என்னும் சிறப்புப் பெயரை அவன் சூட்டிக் கொண்டான். தமிழகத்தின் மூவேந்தருடைய முடி மூன்றையும் தானே தரித்துக் கொண்டமையால், அவன் மும்முடிச் சோழன் என்று போற்றப் பெற்றான். வெற்றியையே ஆபரணமாக அணிந்த திருக்கோலத்தான் என்னும் பொருளில், மூர்த்த விக்கிரமாபரணன் என்னும் சிறப்புப் பெயர் இராசராசனுக்கு வழங்கியது. மேலைச்சாளுக்கிய மன்னனை சத்தியாசிரயனை வென்றமையால், இராசாசிரியன் என்னும் பெயரையும் இவன் பெற்றான் போலும். மக்கள் தலைவன் என்னும் பொருளில் சனநாதன் என்று அவனை அன்றைய மக்கள் பாராட்டினர். எங்கும் தோல்வியே காணாத வெற்றிவீரன் என்னும் கருத்தை அறிவுறுத்தும் வகையில் செயங்கொண்ட சோழன் என்னும் திருப்பெயரும் அவனுக்கு வழங்கலாயிற்று. சோழ அரச மரபினரால் போற்றப் பெற்ற பிற்காலப் புலவர்கள் அவனைத் திருமுறை கண்ட சோழன் என்று போற்றுகின்றனர். சைவசமயத்தின் மறைகளான தேவாரத்தைக் கண்டெடுத்தும், முறைப்படுத்தியும் திருமுறைகளாகத் தொகுக்கக் காரணமாக இருந்தவன் என்பது இதற்குப் பொருள். இப்பெயர்கள் அனைத்தும் இராசராசனின் பன்முகப் பெருமையையும் சீர்த்தியையும் உலகிற்கு உணர்த்துகின்றன. அவை ஒவ்வொன்றும் இராசராசனின் ஒவ்வொரு வகையான அருமை பெருமைகளை அறிவுறுத்துகின்றன. அவை உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை என்பதற்கு அவனுடைய காலத்தின் கல்வெட்டுகளும் செப்பேடுகளும் சான்று பகருகின்றன.

இராசராசனுடைய சிறப்புப் பெயர்களை வகைப்படுத்தி நோக்குகின்ற பொழுது சில உண்மைகள் எளிதில் புலனாகின்றன. சோழர் குலத்தினைச் சிறப்புறச் செய்தவன் என்னும் பொருளில் அழகிய சோழன், இரவிகுலமாணிக்கம், ரவிவம்சசிகாமணி, சோழகுல சுந்தரன், சோழமார்த்தாண்டன், சோழேந்திரசிம்மன், நிகரிலி சோழன் என்னும் ஏழு சிறப்புப் பெயர்கள் வழங்கி வருகின்றன. அவனுடைய சிறந்த பண்பாட்டையும் தன்னிகரற்ற ஆளுமையையும் உத்தம சோழன், அபய குலசேகரன், பெரிய பெருமாள் என்னும் மூன்று பெயர்கள் உணர்த்துகின்றன. அவனுடைய ஆன்மிகப் பண்பாட்டையும் சமயப் பணியையும் சிவபாத சேகரன், திருமுறைகண்ட சோழன் என்னும் இரு சிறப்புப் பெயர்கள் தெரிவிக்கின்றன.

அவனுடைய கல்விச் சிறப்பையும், கலையுணர்வையும் ஐந்து பெயர்கள் தெரிவிக்கின்றன. அவை பண்டித சோழன், இராச

விநோதன், நித்திய விநோதன், இராச கண்டியன் (பாணன்) இராசவித்தியாதரன் என்னும் பெயர்களாகும். அரச மரபின் முடிமணியாக விளங்குபவன் என்னும் கருத்தில் நான்கு பெயர்கள் வழங்கி வருகின்றன. அவை சத்திரிய காமணி, இராச மார்த்தாண்டன், இராசேந்திரசிம்மன், இராசசர்வஞ்ஞன் என்பன.

இராசராசனின் வீரத்தையும் போர்த்திறனையும், வெற்றிச் சிறப்பையும் விளக்குகின்ற வகையில் இரணமுக வீமன், அரிதுர்க் கலங்கன், சத்ரு புஜங்கன், கேரளாந்தகன், சண்டபராக்கிரமன், உய்யக்கொண்டான், கீர்த்திபராக்கிரமன், பாண்டிய குலாசனி, சிங்களாந்தகன், தெலிங்க குலகாலன், இராசாசிரயன், மும்முடிச் சோழன், சனநாதன், மூர்த்தி விக்கரமாபரணன், செயங் கொண்ட சோழன் என்னும் பதினைந்து பட்டப் பெயர்களை அவன் பூண்டிருந்தான், இவை யாவும் இராசராசனின் சீர்த்தி மிக்க சிறப்பியல்புகளை இன்றும் எடுத்தியம்புகின்றன.

இச்சிறப்புப் பெயர்களுள் பல, சோழப்பேரரசின் உட்பிரிவுகளான மண்டலங்களுக்கும், வளநாடுகளுக்கும், பேரூர்களுக்கும் உரிய பெயர்களாக இராசராசன் காலத்தில் வழக்கிற்கு வந்தன. முதலில் மண்டலங்களோடு சேர்த்து வழங்கப் பெற்ற பெயர்களைக் காணலாம்.

## சிறப்புப்பெயர்களும் மண்டலங்களும்

இராசராசப் பாண்டி மண்டலம், செயங் கொண்ட சோழ மண்டலம், நிகரிலி சோழ மண்டலம், அதிராசராச சோழமண்டலம், மும்முடிச் சோழ மண்டலம், முடிகொண்ட சோழமண்டலம் என்பன இராசராசனுடைய சிறப்புப் பெயர்களைக் கொண்டு வழங்கியனவாகும்.

## சிறப்புப்பெயர்களும் வளநாடுகளும்

இச்சோழப் பேரரசன் காலத்தில் சோழ மண்டலம் ஒன்பது வளநாடுகளாகப் பிரிக்கப் பட்டிருந்தன. அவை இராசாசிரிய வளநாடு, கேரளாந்தக வளநாடு, பாண்டிய குலாசனி வளநாடு, நித்த விநோத வளநாடு, சத்திரிய சிகாமணி வளநாடு, அருமொழிதேவ வளநாடு, இராசராச வளநாடு, இராசேந்திர சிங்க வளநாடு, உய்யக் கொண்டார் வளநாடு என்பன. அவற்றிற்கு இராசராசனின் இயற்பெயர்களையும் சிறப்புப் பெயர்களையுமே சூட்டி இருந்தமை, அப்

பேரரசனின் மாட்சியையும், அவனுக்குப் புதிய புதிய பட்டப் பெயர்களில் இருந்துவந்த ஈடுபாட்டையும் காட்டுகிறது.

## சிறப்புப் பெயர்களும் ஊர்ப்பெயரும் தெருப்பெயரும்

ஈழத்தில் சோழப் பேரரசு வேரூன்றத் தொடங்கிய பொழுது, பொலனருவா அதன் தலைநகரமாக்கப் பட்டது. அதற்குச் சனநாத மங்கலம் என்னும் பெயரிடப் பெற்றது. ஒரு பேரூரின் உட்பிரிவுகளைச் 'சேரி' என்பர். 'குடும்பு' (Wards) என்றும் அவற்றைக் கல்வெட்டுகள் சுட்டுகின்றன. தஞ்சாவூரில் உள்ள திருக்களித் திட்டை என்னும் ஊர், இராசேந்திர சோழன் காலத்தில் பின்வரும் சேரிகளைக் கொண் டிருந்தது. அருண்மொழி தேவச்சேரி, சனநாதச் சேரி, நித்த விநோதச் சேரி, இராசகேசரிச் சேரி, நிகரிலி சோழச்சேரி, அழகிய சோழச் சேரி, சிங்களாந்தகச் சேரி, குந்தவைச் சேரி, சோழகுல சுந்தரச்சேரி, இராசமார்த்தாண்டச் சேரி, இராசராசச் சேரி,[5] என்னும் தெருக்களைப் போன்ற அமைப்பினை (சேரியை) அவ்வூர் கொண்டிருந்தது. அப்பதினொரு பெயர்களுள், குந்தவைச் சேரி என்பதை நீக்கிவிட்டால், எஞ்சியுள்ள பத்துச் சேரிகளின் பெயர்களும் இராசராசனுடைய இயற்பெயரையும் பட்டப் பெயரையும் தத்தமக்குரிய பெயர்களாகக் கொண்டு விளங் கியமை புலனாகும்.

இத்தகைய சிறப்புப் பெயர்கள் முப்பத்தைந்திற்கு மேல் இராசராசன் பூண்டிருந்தான். அவனைப் போன்று விருதுகள் பலவற்றைப் பெற்றிருந்த தென்னிந்திய மன்னர்கள் வேறு யாரும் இலர். அப்பெயர்கள் வெற்றுரைகளாக அமையாமல், அவ்வரசனுடைய அரும்பெரும் பண்புகளையும் சிறப்புகளையும் அறிவிப்பனவாக உள்ளன.

பொதுவாக, இராசராசன் 'உடையார் ஸ்ரீராசராச தேவர்' என்று அழைக்கப்பட்டான். பதினாறு வகைப் பேறுகளையும் தன்னுடைய உடைமையாகக் கொண்டு விளங்கும் பேரரசன் என்பது இதற்குப் பொருள். 'திரிபுவனச் சக்கரவர்த்தி' என்னும் பட்டப் பெயர் இராசராசன் காலத்தில் வழக்கில் இல்லை. இராசேந்திரனுக்குப் பின் வந்த சோழ மன்னர், அப்பெயரைத் தம் சிறப்புமிகு பட்டப் பெயராகப் போற்றியுள்ளனர்.

[5] 292 of 1908

# 9. இராசராசனின் வாழ்க்கை

இராசராசனின் இயற்பெயர் அருண்மொழி வர்மன் என்பதாகும். அரியணை ஏறிய நான்காம் ஆண்டு முதல் 'இராசராசன்' என்னும் சிறப்புப் பெயரே அவனுக்குப் பெரிதும் வழங்கத் தலைப்பட்டது. அதனால், நாளடைவில் அருண்மொழி என்னும் அவனுடைய இயற்பெயர் வழக்கற்றுப் போய்விட்டது.

## இராசராசனின் மனைவியர்

உத்தம சோழனுடைய ஆட்சிக் காலத்தில் அருண்மொழித் தேவனுக்குத் திருமணம் நடைபெற்றதாகத் தெரிகிறது. அவனுக்குப் பதினேரு மனைவியர் இருந்தனர். தன் கணவன் எடுப்பித்த தஞ்சை இராசராசேச்சுரத்திற்கு, அவர்கள் அனைவரும் பல அறக்கட்டளைகளை வழங்கியுள்ளனர். அதனால், கல்வெட்டுகளில் ''உடையார் ஸ்ரீ இராசராச தேவர் நம்பிராட்டியார்......'' என்னும் அடைமொழி அவர்களுடைய பெயர்களுக்கு முன்னர்க் காணப்படுகிறது. இராசராசனின் மனைவியர் ஒலோக(உலக)மாதேவி, சோழமாதேவி, திரைலோக்கிய மாதேவி பஞ்சவன் மாதேவி, அபிமான வல்லி, பிருத்வி தேவி, மீனவன் மாதேவி, இலாட மாதேவி, வில்லவன் மாதேவி, வானவன் மாதேவி, வீரநாராயணி என்பவராவர். மனைவியர் பலரிருந்தும் அவனுக்கு மூன்று குழந்தைகளே இருந்தனர்.

இராசராசன் மனைவியர் பதினெருவருள் இருவர் முக்கியமானவராவர். இராசராசனின் முதற்பெருந்தேவி ஒலோக மாதேவியாவர். அவரே பட்டத்தரசியாகவும் விளங்கினர். அவருக்குத் தந்திசக்தி விடங்கியார் என்னும் மற்றொரு பெயரும் வழங்கியது. பேரரசன், தன்னுடைய இருபத்தொன்பதாம் ஆட்சியாண்டில் திருவிசலூரில் உள்ள கோயிலில் துலாபாரம்

புக்க பொழுது, தந்தி சக்தி விடங்கியார் இரணிய கருப்பம் புகுந்தனர் என்று ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது;

> ஸ்ரீ கோவிராச கேசரி வன்மரான ஸ்ரீ ராசராச தேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவது இராசேந்திர சிங்க வளநாட்டு மண்ணி நாட்டு பிரம்மதேயம் வேம்பற்றூராகிய சோழ மார்த்தாண்ட சதுர்வேதி மங்கலத்து மகாசபையோம் கையெழுத்து. நம்முடைய சக்கிரவர்த்தி உடையார் ஸ்ரீராசராச தேவர் இவ்வூர் திருவிசலூர் மகாதேவர் ஸ்ரீ கோயிலிலே துலாபாரம் புக்கருளின அன்று நம்பிராட்டியார் தந்திசக்தி விடங்கியார் இரணியகருப்பம் புக்கருளி, இத்திருவிசலூர் மகாதேவர்க்கு அக்காரவடிசில் அமுதுக்கு வேண்டும் நிவந்தங்களுக்காக வைச்ச காசு......[1]

இதனால், இராசராசனுடைய ஆட்சியின் இறுதி வரையில் இவ்வம்மையார் பட்டத்தரசியாக வாழ்ந்திருக்க வேண்டும் என்பது புலனாகின்றது. தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் வெட்டப் பட்டுள்ள இராசராசனுடைய தேவியரின் கல்வெட்டுகளுள் ஒலோக மாதேவியாரின் கல்வெட்டே முதலில் பொறிக்கப் பட்டுள்ளமையும் அவ்வம்மையாருக்குக் கொடுக்கப்பட்ட முக்கியத்துவத்தைத் தெரிவிக்கிறது.

தஞ்சைப் பெரியகோயிலில், ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளான் என்னும் அரசியல் அதிகாரி இராசராசன் காலத்திலும் இராசேந்திர சோழன் காலத்திலும் பல தெய்வத் திருமேனிகளை எழுந்தருளச் செய்தான். அவற்றோடு சோழப் பெரு வேந்தன் இராசராச சோழ தேவரையும் ஒலோக மாதேவியாரையும் செப்புப் படிமங்களாக அவன் எழுந்தருளச் செய்துள்ளான்.[2]

மற்றும், திருவிசலூரில் இராசராசனும் அவனுடைய தேவியும் துலாபாரமும் இரணிய கருப்பமும் புகுந்ததைத் தெரிவிக்கும் கல்வெட்டிற்குக் கீழே இரண்டு சிற்பங்கள் காணப்படுகின்றன. ஒன்று அரசனாகவும், மற்றொன்று அரசியாகவும் தோன்றுகின்றன. அவை முறையே இராசராசனையும் ஒலோகமாதேவியையும் குறிப்பனவாகலாம் என்று அறிஞர் கருதுகின்றனர்.[3]

இராசராசனின் பட்டத்து அரசியான ஒலோக மாதேவியார் திருவையாற்றில் உள்ள ஐயாறப்பன் கோயிலின் வடக்குத் திருச்

[1] 42 of 1907
[2] S.I.I: Vol. 2; pt. 2; P. 155
[3] Nilakanta Sastri, K. A. : op. Cit. P.186.

சுற்றுலையில் ஒலோக மாதேவீச்சுரம் என்னும் கோயில் ஒன்றைக் கட்டியுள்ளார். அதன் வழிபாட்டிற்கு நிவந்தங்கள்பல அவர் அளித்துள்ளார். இக்காலத்தில் அக்கோயிலுக்கு உத்தர கைலாயம் என்னும் பெயர் வழங்குகிறது. திருவலஞ்சுழியில் அவ்வரசியார் ஒரு கோயில் கட்டியுள்ளார். அக்கோயிலின் சேத்திர பாலருச்குப் பொற்பூவினை ஒலோக மாதேவியார் அளித்த செய்தியைக் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது.[4]

அடுத்த நிலையில் சிறப்புற்று விளங்கியவர் வானவன் மாதேவியாவார். அவ்வம்மைக்குத் திரிபுவன மாதேவி என்னும் மற்றொரு பெயரும் வழங்கியது. இராசேந்திரனைத் திருவயிறு வாய்த்த பெருமை வானவன் மாதேவிக்கே யுரியதாகும். அவருக்குப் பட்டத்தரசியாகும் வாய்ப்பு கிடைக்கவில்லை. எனினும், பாராளும் வேந்தனுக்கும் தன் குடிக்கும் பொன்றாப் புகழைத் தேடித் தந்த மதுராந்தகனைப் பெற்றெடுத்தமையால், அவரை இன்றும் உலகம் போற்றுகிறது. இராசராசனின் மனைவியருள் பஞ்சவன் மாதேவி என்பார் பழுவேட்டரையர் குடியில் தோன்றியவராவர். மீனவன் மாதேவி, வில்லவன் மாதேவி, இலாட மாதேவி முதலியோர் பாண்டிய, சேர, இலாடதேச அரச குடும்பத்தைச் சேர்ந்தவராவர். அரசியலில் அமைதியும் ஆதரவும் பெறக் கருதித் தான் வெற்றி கொண்ட குறுநில மன்னரின் குடும்பத்தோடு இராசராசன் மணவுறவு கொண்டான். தன் தொடர்பினை இறுகிய உறவாக அதன்மூலம் அவன் மாற்றிக் கொண்டான்.

## மக்கள்

மன்னர் மன்னனுக்கு ஆண்பிள்ளை ஒருவனே இருந்தான். அவனுக்கு மதுராந்தகன் என்பது இயற்பெயர்; இராசேந்திரன் என்பது சிறப்புப் பெயர், இராசேந்திரனே, பல போர்களில் தானைத் தலைவனாகப் போரிட்டுத் தன் தந்தைக்கு வெற்றியைத் தேடித் தந்திருக்கிறான். இராசராசனுக்கு அரசியல் அலுவல்களில் அவன் பேருதவியாக இருந்திருக்கின்றான். ஆட்சியின் இறுதிக் காலத்தில், பேரரசன் தன் மகனுக்கு இளவரசு பட்டம் கட்டியதை நாம் முன்னரே கண்டோம். இராசராசனுடைய ஆட்சிக் காலத்தில் சோழப் பேரரசு சீரும் சிறப்பும் பெற்று விளங்கியமைக்கு அவனுடைய வாள்வலியும் தோள்வலியும், மதிநுட்பமும் மட்டும் காரணமாகா. தந்தையின் உள்ளக் கருத்தைக் குறிப்பால் உணர்ந்து செயல்படுத்தும் பேராண்மையும் பெருந்திறனும் வாய்ந்த மைந்தன் கிடைத்தது இராசராசன் பெற்ற பெரும்பேறு

[4] 633-C of 1902

கும். இதைப் போன்றே, அறிவிலும் ஆண்மையிலும், பண்பிலும் படைத் திறனிலும் ஒப்புயர்வற்ற தந்தைக்கு மகனாகப் பிறந்தது இராசேந்திரன் செய்த தவப்பயனே யாகும். அரும்பாடுபட்டு ஒரு பேரரசை நிறுவியதோடு அமையாது, சிறந்ததோர் ஆட்சியமைப் பினை இராசராசன் நிலை நிறுத்திவிட்டுச் சென்றான். இராசேந் திரன் சோழப் பேரரசனாக அரசு கட்டில் ஏறிய காலத்தில், அன் றைய இந்தியாவின் வேறெந்தப் பகுதியிலும் காண இயலாத கட்டுப்பாட்டோடு, திறமையும் வாய்க்கப் பெற்ற ஆட்சி அமைப் பும், நன்றியுணர்வுமிக்க குறுநில மன்னர்களும், அரசியல் அதிகாரி களும் சோழப் பேரரசனுக்கு ஏவல் புரியக் காத்திருந்தனர். இத் தகைய அரசியல் நிலையைப் பேரரசில் உருவாக்கியவன் இராச ராசன் என்று சொல்லத் தேவை இல்லை.

நல்லதோர் ஆட்சி அடிப்படையையும், பயிற்சிமிகு படைத் தலைவரையும், கடமையைக் கண்ணெனப் போற்றிய உயர் அதி காரிகளையும் இராசேந்திரன் தன் தந்தையிடமிருந்து பெற்றான். அதனால்தான் ஒரு கடற் பேரரசை நிறுவ அவனால் முடிந்தது; கங்கை கொண்டான், கடாரம் கொண்டான் என்னும் பொன்றாப் புகழைப் பெற அவனால் எளிதில் இயன்றது. ''பலவகையில் மாசி டோனியாவி (கிரேக்கத்தி)ன் பேரரசன் பிலிப்பு எவ்வாறு தன் மகன் மாண்புமிகு அலெக்சாண்டருக்கு நல்லதோர் அரசினை அமைத்துத் தந்து முன்னோடியாகவும், வழிகாட்டியாகவும் சிறப் புற்றானோ, அதே வகையில் பேரரசன் இராசராசன் தன் மகன் இராசேந்திரனுக்குப் பேரரசை நிறுவி, அதை விட்டுச் சென்றான். பெருமை மிகு இராசராசன் ஆற்றிய அரும்பணிகளுக்கு இராசேந் திரன் சாதித்த சாதனைகளே நம்பிக்கைக்குரிய பாராட்டு இதழ் களாகும்''[5] என்று பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் மொழிந் துள்ளமை முற்றிலும் உண்மையாகும்.

தஞ்சைப் பெரிய கோயிலில் இராசராசனுடைய கல்வெட்டு கள் பல உள்ளன. அவற்றுள் சில சோழப் பேரரசனின் இருபத் தொன்பதாம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்டனவாகும்.[6] இவற் றிற்குப்பிறகு இராசராசனின் ஆட்சியாண்டைக் குறிப்பிடும் கல் வெட்டுகள் கிடைக்காமையால், அவனுடைய ஆட்சி இருபத் தொன்பதாம் ஆட்சி ஆண்டோடு (கி.பி. 1014) முடிவுற்றதாகப் பலர் கருதுகின்றனர். ஆனால், இராசகேசரி, இராசராச தேவரின் முப்பத்தோராம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்று கிடைத்திருக்கிறது.[7] மேலும், இராசராசன் தன்னுடைய

5 Nilakanta Sastri, K. A. : op. cit. P. 183
6 S.I.I., Vol. 2; pt. 3, No. 65
7 252 of 1915

மகன் இராசேந்திரனுடைய மூன்றாவது ஆட்சியாண்டில் தேவ தானம் ஒன்று வழங்கினன் என்று திருமுக்கூடல் கல்வெட்டு அறிவிக்கிறது.[8] இவற்றைக் கூர்ந்து நோக்கினல் ஓர் உண்மை புலனாகும். இராசேந்திரனுக்கு இளவரசு பட்டம் கட்டிய பின்னர், பேரரசன் அரசியல் பொறுப்புகளிலிருந்து விலகி, ஓய்வெடுத்துக் கொண்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. தன் தந்தை உயிருடனிருந்த காலம் வரையில், அவருடைய பெயராலும், தன்னுடைய பெயராலும் இராசேந்திரன் கூட்டாட்சி நடத்தி இருக்கக் கூடும். எனவே, புகழ்மிக்க இராசராசன் முப்பதாம் ஆட்சியாண்டிற்கு முன்னர், ஆட்சிப் பொறுப்பிலிருந்து விலகி, ஓய்வெடுத்துக் கொண்டான் என்று கூறுவது பொருந்தும்.

இராசராசனுக்கு இரு பெண் மக்கள் இருந்தனர். அவர்கள் இருவரும் இராசேந்திரனுக்குத் தங்கையராவர். மூத்த மகளை 'நடுவிற் பெண்' எனவும், 'நடுவிற் பிள்ளை' எனவும் கல்வெட்டுகள் சுட்டுகின்றன. இராசேந்திரனுக்கும் குந்தவைக்கும் இடையில் பிறந்த பிள்ளை என்பதே அதற்குப் பொருள். 'நடுவிற் பிள்ளை' என்பதைக் கொண்டு, இராசராசனுக்கு மூன்று பெண்கள் இருந்தனர் என்றும், அவர்களுள் நடுவில் பிறந்தவள் இவள் என்றும் சில ஆராய்ச்சியாளர் பொருள் கொண்டுள்ளனர்.[9] அது பொருத்த மற்றதாகும். இந்த 'நடுவிற் பிள்ளை'க்குச் சந்திரமல்லி என்பது இயற்பெயர். இப்பெயரின் (சந்திரமௌலி) தமிழ் வடிவமாக மாதேவடிகள் என்னும் பெயர் பெருவழக்காக வழங்கியதைக் காணுகின்றோம். அந்த இளவரசியின் வரலாறு ஒன்றும் நமக்குத் தெரியவில்லை. அவ்வம்மையார் திருவையாற்று ஓலோக மாதேவீச்சுரமுடையார்க்குப் பொற்பட்டம் ஒன்றை வழங்கியுள்ளார்.

ஆனல், இராசராசனின் இளைய மகளான குந்தவையைப் பற்றிய வரலாறு நமக்கு ஓரளவிற்குக் கிடைத்திருக்கிறது. கீழைச் சாளுக்கிய மன்னன் விமலாதித்தனுக்கு, இராசராசன் தன் இளைய மகளைத் திருமணம் செய்து கொடுத்து இருந்தான். அத்திருமணத்தினல், சோழப் பேரரசின் வடவெல்லையில் இருந்த வேங்கி நாட்டிற்கும் சோழ அரசுக்கும் நெருங்கிய உறவும், நிலையான தொடர்பும் உண்டாயிற்று. குந்தவைக்கும் விமலாதித்தனுக்கும் பிறந்தவன் இராசராச நரேந்திரன் என்பவனவான். அவனுடைய அருமை மகனே முதற் குலோத்துங்க சோழன் என்பது இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

8 196 of 1917
9 Nilakanta Sastri, K. A. : op. cit. Vol. I 226

இராசராசனுடைய பெண்மக்கள் இருவரும் எந்த அரசிக்குப் பிறந்தவர் என்பது உறுதியாகத் தெரியவில்லை. ஒரு தாய் வயிற்றில் பிறந்தவரையே 'முதல், இடை (நடு) கடை' என முறைப்படுத்தி உரைப்பது உலக வழக்கு. இவ்வகையில் நோக்குவோமானால், 'நடுவிற் பிள்ளை' மாதேவடிகள் என்பது ஒரு தாய் வயிற்றில் பிறந்தவரையே குறிக்கும் என்பது புலனாகும். இவ்வுய்த்துணர்வு உண்மையாக இருக்குமானால், இராசேந்திரனை ஈன்ற வானவன் மாதேவியே சந்திர மல்லிக்கும், குந்தவைக்கும் தாயாராக இருந்திருக்கக் கூடும்.

## தமக்கையும் பெரிய பாட்டியும்

இராசராசன் மிகவும் மதிப்புடன் போற்றிய பெண்மணி கள் இருவர். அவர்கள் அவனுடைய அருமைத் தமக்கையார் குந்தவைப் பிராட்டியாரும், பெரிய பாட்டியான செம்பியன் மாதேவியாருமாவார். இரண்டாம் பராந்தக சோழன், தன்னுடைய தந்தை அரிஞ்சய சோழரின் மூத்த மனைவியும், தனக்குப் பெரிய தாயுமாகிய 'வீமன் குந்தவை' என்னும் அம்மையாரின் திருப்பெயரைத் தன் மகளுக்கு இட்டு வழங்கி யுள்ளான். வீமன் குந்தவை, சோழர் வரலாற்றில் காணப் படும் முதல் குந்தவையாவர். அவர் கீழைச் சாளுக்கிய மன்னனான இரண்டாம் வீமனின் மகளாவார்.[10] குந்தவை என்பது தெலுங்கு மொழிச் சொல். அதற்கு (குந்த+அவ்வை) 'வணக்கத்திற்குரிய (மதிப்பிற்குரிய) அம்மை' என்பது பொருள்.[11]

இராசராசனின் தமக்கையான குந்தவை அம்மையாரை, அவனுடைய இளையமகளான குந்தவையிலிருந்து வேறுபடுத்திக் காட்ட ஆழ்வார் பராந்தகன் குந்தவையார் என்றும், குந்தவைப் பிராட்டியார் என்றும் அடை கொடுத்து வழங்கியுள்ளனர். அவ்வம்மையார் வல்லவரையன் வந்தியத் தேவனுக்கு மணம் செய்து கொடுக்கப்பட்டார். வந்தியத் தேவன் கீழைச் சாளுக்கிய அரச மரபைச் சேர்ந்தவனாகக் கருதப் படுகிறான். திருமணத் திற்குப் பிறகு, அவன் சோழப் பேரரசில் உயர் அதிகாரியாகப் பணி புரிந்தான். அதனால், அவன் சோழநாட்டிலேயே தங்கி விட்டான். இராசேந்திரன் ஆட்சிக் காலத்தில் தலைமை

10 இவள் திருப்பழனம் பகுதியில் இருந்த அரையன் ஆதித்தவீமன் மகளாய் இருத்தல் கூடும் என்பது பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியாரின் கருத்து (சோழர், பக். 152)

11 திருமாலுக்கு, முகுந்தன் என்னும் பெயருமுண்டு. அச்சொல் முதற்குறை யாகக் 'குந்தன்' என வழங்கும். குந்தனுடைய மனைவியான 'திருமகளை'க் குந்தவை என்று ஆந்திர நாட்டில் வழங்குவர்.

சாமந்தனுக (சேனுதிபதியாக) அவன் சிறப்புற்று விளங்கினுன். அக்காலத்தில் குந்தவைப் பிராட்டியார்பழையாறையில் வாழ்ந்து வந்ததாகத் தெரிகிறது.[12] சேலம் மாவட்டத்தின் வடமேற்குப் பகுதியும் மைசூர் மாநிலத்தின் தென் கிழக்குப் பகுதியும் சேர்ந்த ஒரு மாவட்டத்தை அமைத்து, 'அதற்கு 'வல்லவரையர் நாடு' என்னும் பெயரும் வழங்கப் பட்டது.[13] வடவார்க்காடு மாவட்டத்தில் பிரமதேசம் என்னும் பகுதியைச் சார்ந்த நாடு வல்லவரையர் பொறுப்பில் இருந்து வந்தது. வல்லவரையன் மனைவியான ஆழ்வார் பராந்தகன் குந்தவைப் பிராட்டியார் பல அறக் கட்டளைகள் வழங்கியுள்ளார். தம்முடைய தம்பி எடுப்பித்த தஞ்சை இராசராசேசுரத்தில், தம் தந்தை சுந்தர சோழரின் படிமத்தையும், தாய் வானவன் மாதேவியின் படிமத்தையும் குந்தவைப் பிராட்டியார் எழுந்தருளச் செய்தார், அவற்றிற்கு நிவந்தமாகப் பெரும் பொருளை அவர் வழங்கியுள்ளார்.[14] மற்றும், சோழப் பேரரசின் தலைநகராகிய தஞ்சை மாநகரில், 'சுந்தர சோழ விண்ணகர் ஆதுரசாலை' என்னும் மருத்துவ மனையைத் தம் தந்தையாரின் நினைவாக அவர் நிறுவியுள்ளார். அம்மருத்துவ மனையை நடத்துவதற்கு மருத்துவக் காணியாக நிலத்தையும் அவ்வம்மையார் அளித்துள்ளார்.[15]

சோழப் பேரரசனுக்குத் தன் தமக்கையிடம் பெருமதிப்பும் ஈடுபாடும் இருந்துவந்ததை அவனுடைய கல்வெட்டுகளின் வாசகமே நன்கு தெரிவிக்கின்றன:

> ஸ்ரீ ராஜராஜ தேவர் திருத்தமக்கையார் வல்லவரையர் வந்தியத் தேவர் மகாதேவியார் ஆழ்வார் பராந்தகன் குந்தவையார்[16]

என்னும் கல்வெட்டு வாசகம் இங்குக் கருதத்தக்கது.

இராசராசன் எடுப்பித்த தஞ்சைப் பெருவுடையார் கோயிலுக்கு அறக்கட்டளை வழங்குவோரைப் பற்றிக் கல்வெட்டில் பொறிக்க அவன் ஆணை பிறப்பித்துள்ளான். அவ்வாணை "நாம் கொடுத்தனவும், நம் அக்கன் கொடுத்தனவும், நம் பெண்டுகள் கொடுத்தனவும் மற்றும் கொடுத்தார் கொடுத்தனவும் கல்லில் வெட்டுக"[17] என்று அறிவுறுத்துகிறது. 'நம் அக்கன்' என்றும், 'திருத்தமக்கையார்' என்றும் சிறப்பித்துத் தன் அக்காளைப் பேரரசன் போற்றியதோடு அமையவில்லை; அவ்வம்மையார் நிறுவிய அறக்கட்டளைகளை மட்டும் தன்னுடைய அறக்கட்டளைகளை யடுத்து நடுவிமானத்தில் அவன்

12 350 of 1907: 639 of 1909
13 157 of 1915
14 S.I.I , Vol. 2: No. 6.
15 Ins 248 and 249 of 1923.
16 S. I. I. Vol. 2; No. 6
17 Ibid. P. 2

பொறித்திடச் செய்தான். ஆனால், தன் பெண்டிரும் பிறரும் வழங்கியவற்றைத் திருச்சுற்று மாளிகையில் அவன் பரவலாக வெட்டுவிக்கச் செய்துள்ளான். இவை யாவற்றையும் விட, தன் தமக்கையிடத்து அவன் கொண்டிருந்த பேரன்பினைப் புலப்படுத்துவது ஒன்று உண்டு. அதுதான், தன் இளைய மகளுக்குக் 'குந்தவை' என்னும் பெயரிட்டுப் பேரரசன் போற்றியமையாகும்.

இதே நிலையில், அவன் உத்தம சோழனின் தாயாகிய செம்பியன் மாதேவியிடத்துப் பேரீடுபாடு கொண்டிருந்தான். அவ்வம்மையார் இராசராசனின் ஆட்சிக் காலத்தில் (கி பி. 1001) இறைவன் திருவடியை அடைந்தார்.[18] அவருடைய நினைவாகத் திருமுக்கூடலில் இராசராசன் ஒரு பெருமண்டபத்தைக் கட்டினான். அதற்குச் செம்பியன் மாதேவிப் பெருமண்டபம் என்று அவன் பெயரிட்டான். அப்பெருமண்டபத்தில், திருமுக்கூடலின் ஊராட்சி மன்றத்தினர் கூடித் தம் அலுவல்களை நடத்திவந்தனர்[19].

## இராசராசனின் இல்வாழ்க்கை

இல்லறத்தார்க்கு உரிய இனிய கடமைகள் "தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்று ஐம்புலத்தாறினை" ஓம்புவதாகும். விருந்தினரையும், உற்றார் உறவினரையும் இராசராசன் நன்கு போற்றியாதரித்து இருக்க வேண்டும். அதைப் பற்றிய செய்திகள் விரிவாக நமக்குக் கிடைக்கவில்லை. உற்றார் உறவினரைச் சிறப்புமிக்க பதவிகளில் அமர்த்தி, அவர்களைப் போற்றியுள்ளான். இதற்குச் செம்பியன் மாதேவியாரின் பேரப்பிள்ளையான மதுராந்தகன் கண்டராதித்தனே சிறப்புமிக்க சான்றாவான்.

தான் வழிப்பட்ட சிவபெருமானுக்கு, உலகம் கண்டு வியக்கத்தக்க பெரிய கோயிலைத் தஞ்சையில் எழுப்பியமையும், பல கோயில்களுக்கு அறக்கட்டளை வழங்கியுள்ளமையும் இராசராசன் தெய்வத்தைப் போற்றியமையாகும். தன்னுடைய பெரிய பாட்டியின் — செம்பியன் மாதேவியின் — நினைவாக மண்டபம் ஒன்று கட்டியமையும், தன் பாட்டனாரின் நினைவாகப் பள்ளிப் படை அமைத்தமையும் அவன் 'தென்புலத்தாரை'ப் போற்றிய செயலாகும்.

இராசராசனுடைய பாட்டனார் அரிஞ்சய சோழராவார். அவர் ஆற்றூரில் இறந்து விட்டார். அவ்வூர் வட ஆர்க்காடு

[18] Ins. 200 of 1904
[19] Ins. 178 of 1915

மாவட்டத்தில் உள்ளதாகும். தன்னுடைய பாட்டனாரின் நினைவை நிலைநிறுத்த அவன் விரும்பினான். அதற்காக வட ஆர்க்காடு மாவட்டத்தில் திருவல்லத்திற்கு வடக்கே, எட்டு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள மேற்பாடி என்ற ஊரில் ஒரு கோயிலை அவன் கட்டினான்; அதற்கு, அரிஞ்சயேச்சுரம்' என்னும் பெயரிட்டான்.[20] இச்செய்தியை ''ஆற்றூர்த் துஞ்சின தேவர்க்குப் பள்ளிப்படையாக உடையார் ஸ்ரீ இராசராச தேவர் எங்கள் ஊரில் எடுப்பித்தருளின திரு அரிஞ்சிகை ஈசுவரத்து மகாதேவர்''[21] என்று ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது.

சோழ அரசர் குடியைச் சேர்ந்தவர்களுடைய வாழ்க்கையைப் பற்றியோ, அவர்களுடைய குடும்பத்தைப் பற்றியோ நாம் விரிவாக அறிந்துகொள்ள முடியவில்லை. அரசனுடைய உரிமை மகளிர் வாழ்ந்த பகுதி 'வேளம்' எனப்பட்டது. அங்குப் பலவகையான பணிமக்கள் வேலை செய்து வந்தனர். அவர்கள் பணிபுரிந்த வேளத்தையொட்டிப் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். அவர்களுக்குத் தஞ்சாவூரில் தனிக்குடி இருப்புகள் இருந்தன. போரில் சிறை பிடிக்கப்பட்ட ஆடவர், மகளிர் ஆகியோரே பெரிதும் வேளத்து வேலைக்காரராக அமர்த்தப்பட்டனர். அவர்கள் வாழ்ந்த பகுதிகள் உத்தம சீலியார் வேளம், அபிமான பூஷணத் தெரிந்த வேளம், உய்யக் கொண்டார் தெரிந்த திருமஞ்சனத்து வேளம், அருமொழித் தேவர் தெரிந்த திரிபரிகளத்தார் வேளம், இராசராசத் தெரிந்த பாண்டித் திருமஞ்சனத்து வேளம் என்னும் பெயருடையன.

பேரரசனின் தேவியர், தம் கணவரோடு வேட்டைக்கும், நாடு காண்பதற்கும் செல்லுவது அக்காலத்திய வழக்கம். ''பிடியின் மேல் வரு பிடிகுல் மநேக மெனவே பெய்வளைக்கை மடமாதர் பிடிமீதின் வரவே''[22] என்று கலிங்கத்துப் பரணி, அரசனின் தேவியர் பெண் யானையின் மீது அமர்ந்து அரசனுடன் போர்க்களம் நோக்கிச் சென்றதைக் குறிப்பிடுகிறது. அன்றைய அரச குடும்பப் பெண்கள் ஆடல், பாடல், ஓவியம் வரைதல், கவிதை இயற்றல் போன்ற கலைகளில் தேர்ச்சியுற்றிருந்தனர்.

சோழ மன்னன் அரியணையில் அரசியோடு வீற்றிருந்தான் என்பதைப் பிற்கால அரசரின் மெய்க்கீர்த்திகள், ''விசய சிம்மாசனத்து உலக முழுதுடையாளோடும் வீற்றிருந்தருளிய கோராச கேசரி வர்மரான உடையார் ஸ்ரீ வீரராசேந்திர சோழ தேவர்க்கு யாண்டு'' என்னும் முறையில் எடுத்தியம்பும். ஆனால், இராசராச

20. S.I.I., Vol 3: Nos 15, 16&17.
21. Ibid, No. 15.
22. கலிங்கத்துப் பரணி, 10:287.

னுடைய மெய்க்கீர்த்தி அவன் ஒலோகமாதேவியோடு, அத்தாணி மண்டபத்தில் அரசு வீற்றிருந்ததைக் குறிப்பிட வில்லை. ஒரு கால், இப்பழக்கம் அக்காலத்தில் பெருவழக்காக இல்லாமல் இருந்திருக்கலாம்.

சோழப் பேரரசன் எவ்வாறு அன்றாடப் பணிகளைச் செய்தான் என்பதைப் பற்றி உறுதியாகச் சொல்லுவதற்கு இல்லை. பிற் காலச் சோழ அரசர்கள்,

கலையினொடுங் கவிவாணர் கவியினொடு
  மிசையினொடுங் காதன் மாதர்
முலையினொடு மனுநீதி முறையினொடு
  மறையினொடும்'' [22a]

பொழுது போக்கியதாக செயங்கொண்டார் குறிப்பிட்டுள் ளார். நம் இராசராசனும், இவ்வாறு போரற்ற காலத்தில் பொழுது போக்கி இருக்கலாம்.

சோழப் பேரரசனுக்கு மெய்காப்பாளர் பலர் இருந்தனர். அவர்களைக் கல்வெட்டுகள், 'திருமெய்காப்பாளர்' என்று குறிப் பிடுகிறது அத்திருமெய்காப்பாளர் பலர் சேர்ந்த படைக்கு "வேளைக் காரப் படை'' என்பது பெயர். அவர்கள் கண்ணினைக் காக்கின்ற இமை போல அரசனுக்குத் தீங்கு நேராமல் காத்தனர். எதிர் பாரா வகையில் சிறுதீங்கு அரசனுக்கு ஏற்படுமானல், அவனு டைய மெய்காப்பாளர் தங்கள் உயிரை மாய்த்துக் கொள்ளுவர்.

## அரசாங்க விருந்து

சோழப் பேரரசன் விருந்துகள் பலவற்றை நடத்தி இருக்கலாம். அக்காலத்தில் நடத்தப் பெற்ற அரசாங்க விருந்து (Banquet) ஒன்றைப் பற்றி சௌ-ஜு-குவா (Chau-Ju-kua) என்னும் சீனநாட்டு வரலாற்றுக் குறிப்பேடு பின்வருமாறு விளக்குகிறது. "பேரரசன் வீற்றிருக்கும் அரியணையை நோக்கி, இளவரசனும், நான்கு அமைச்சர்களும் வணங்குவார்கள். உடனே அம்மன்றத்தில் உள்ளவர்கள் அனைவரும் ஆடிப்பாடி மகிழ்வர். அரசன் மதுவை அருந்தமாட்டான். ஆனல், இறைச்சி உண்ப துண்டு. அந்த நாட்டு வழக்கப்படி அவன் பருத்தியிலிருந்து நெய்யப்பட்ட மென் துகிலையே அணிந்திருப்பான். அவன் மாவினல் செய்யப்பட்ட பணியாரங்களையே சுவைத்து உண்பான். விருத்து மண்டபத்தில் பணிபுரிவோர் பெரிதும் நடன மாதராகவே

22a. கலிங்கத்துப் பரணி, 10: 46.

இருப்பர். அத்தகைய பணிமக்கள் மூவாயிரம் பேர் அரசனிடம் பணி புரிந்துவந்தனர். ஒவ்வொரு நாளும், அவர்கள் மாறி மாறிப் பணி புரிவர்''[23] என்பது சீன நாட்டுத்தூதர் கலந்து கொண்ட சோழ நாட்டு விருந்தைப் பற்றிய விளக்கமாகும். இத் தகைய முறையில் பேரரசன் இராசராசனும் விருந்துகள் பல நடத்தி இருக்கலாம்.

[23] Nilakanta Sastri, K.A. op. cit. P. 450.

# 10. சமயப் பற்றும் சான்றாண்மையும்

விசயாலயன் மரபில் வந்த சோழ மன்னர்கள் அனை வருமே சைவ சமயத்தைச் சார்ந்தவர்களாவர். பேரரசன் இராசராசனும் சிவ நெறியில் பேரீடுபாடு கொண்டிருந்தான். சிவபெருமானின் திருவடிகளைத் தன்னுடைய திருமுடியில் அணிந்தவன் என்னும் பொருள்படும், சிவபாத சேகரன் என்னும் சிறப்புப் பெயரைப் பூண்டிருந்தான். இச்சிறப்புப் பெயரே அவனுடைய சமயப்பற்றையும், ஆன்மீகப் பண்பாட்டையும் அறிவுறுத்த போதிய சான்றாகும்.

சோழர் குடிக்குரிய வழிபடு தெய்வமாக—குலதெய்வ மாக விளங்கியவர் தில்லை நடராசப் பெருமானாவார். இராச ராசன் அம்பலவாணரின் திருக்கோலத்தில் பேரீடுபாடு கொண்ட வனாவான். தஞ்சையில், தான் எடுப்பித்த பெருவுடையார் கோயிலில், நடராசப் பெருமானுக்குத் தனிச்சிறப்பு வாய்ந்த இடத்தைக் கொடுத்துள்ளான். அங்கு எழுந்தருளச் செய்திருக் கும் எம்பெருமானுக்கு ஆடவல்லான் என்னும் திருப்பெயரையும் அவன் சூட்டியுள்ளான். நடனம் ஆடுவதில் வல்லவர் என்பது அதற்குப் பொருளாகும். தில்லையில் திருநடனம் புரியும் கூத்தனைத் தன் வழிபடு தெய்வமாகக் கொண்டதோடு அமையாது, அப்பெரு மானின் 'ஆடவல்லான்' என்னும் திருப்பெயரைத் தன் ஆட்சி யில் வழங்கிய அளவை முறைகளுக்கும் அவன் சூட்டியுள்ளான். இதனை, "தட்சணமேரு விடங்கன் என்னும் கல்லால் நிறை எடுத்தும், 'பொன் ஆட வல்லான்' என்னும் கல்லால் நிறை எடுத்தும்"[1] என்னும் கல்வெட்டுப் பகுதியாலும், "இராசகேசரி யோடு ஒக்கும் ஆட்வல்லான் என்னும் மரக்காலால் உடை யார் உள்ளூர்ப் பண்டாரத்தே பெறவும்"[2] என்னும் கல்வெட்டு

[1] S. I I., Vol. 2; pt. 2; No. 38; p. 152
[2] Ibid., No. 65; pp. 252-253

வாசகத்தாலும் நாம் நன்கு அறியலாம். நிறுத்தல் அளவைக்குப் பயன்படுத்தப் பட்ட நிறை கல்லிற்கும், கோயிலில் முகத்தல் அளவைக்குப் பயன்படுத்தப்பட்ட மரக்காலுக்கும் ஆடவல்லான் என்னும் பெயரிடப் பெற்றுள்ளமை இங்குக் கருதத்தக்கது. இத்தகைய ஈடுபாடு இராசராசனுக்கு இருந்திருக்குமாஞல், அவன் எத்தகைய ஆழ்ந்த சிவ பக்தனுக இருந்திருக்க வேண்டும் என்பதை, நாமே கற்பனை செய்து பார்த்துக் கொள்ளலாம்.

## திருமுறை கண்ட சோழன்

இயல்பாகவே சைவ சமயத்தில் பற்றும், சிவ பெருமானிடம் அளவிட்டுரைக்க இயலாத பக்தியும் கொண்டிருந்த இராசராசன் உள்ளத்தைத் தேவாரத் திருப்பதிகங்கள் கவர்ந்ததில் வியப்பு இல்லை. அக்காலத்தில் அப்பரும், திருஞான சம்பந்தரும், சுந்தரரும் பாடியருளிய தேவாரப் பாடல்களுள் சில, நாட்டில் பரவலாகச் சில கோயில்களில் ஓதப்பட்டும், சிவனடியார்கள் சிலரால் மக்களிடையே பரப்பப்பட்டும் வந்தன. அவற்றைப் பிறர் பாடக் கேட்டும், தானே ஓதியும் காதலாகிக் கசிந்துருகி இறையின்பத்தில் இராசராசன் திளைத்துள்ளான். அதஞல், அத்தேவாரத் திருப்பதிகங்களை எல்லாம் ஒருங்கு திரட்டி, நூல் வடிவில் நாட்டு மக்களிடையே நன்கு பரவச் செய்ய வேண்டும் என்னும் தீராக்காதல் அவனுக்கு உண்டாயிற்று.

போரின்றி ஓய்வாக இருந்த சமயங்களில் எல்லாம் அவன் இத்திருப்பணியைச் செய்வதில் தன் கருத்தைச் செலுத்தி வந்தான். 'இதனை, இதஞல், இவன்முடிக்கும் என்று ஆராய்ந்து', திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி என்னும் சைவப் பெரியாரின் உதவியை, இத்திருப்பணிக்காக அவன் நாடிஞன். தில்லை அம்பலவாணரின் திருக்கோயிலில் அடைபட்டுக் கிடந்த மூவர் பாடல்களின் ஓலைச் சுவடிகளை அவன் வெளிக் கொணர்ந்தான். நம்பியாண்டார் நம்பிகளைக் கொண்டு கரையானுக்கு இரை யாகாது தப்பிய பாடல்களை முறைப்படுத்தி இராசராசன் திருமுறைகளைத் தொகுப்பித்தான்.

நம்பியாண்டார் நம்பிகள் இறைவனுடைய திருவருளால் கிடைத்த மூவர் பாடல்களைத் தொகுத்தும் வகுத்தும் பண் முறைப் படுத்தியும் சைவத்திருமுறைகள் முதல் ஏழினை உலகிற்கு வழங்கியுள்ளார். திருஞான சம்பந்தரின் பாடல்களை முதல் மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசரின் பாடல்களை 4, 5, 6 ஆம் திருமுறைகளாகவும், சுந்தரரின் பாடல்களை ஏழாம்

திருமுறையாகவும் அவர் வகுத்து அளித்துள்ளார். இவ்வாறு தமிழ் வேதமாகிய தேவாரத்தைத் தொகுத்துக் கொடுத்த பெருமை அவருக்குரியதாகும். அப்பணியில் அவரை ஈடுபடுத்திய இராசராசனுக்குத் தமிழுலகும், சிவநெறியாளரும் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளனர்.

இத்திருமுறைகளை அக்காலத்தில் 'திருப்பதியம்' என்றும், 'திருப்பாட்டு' என்றும் சுட்டியுள்ளனர். பத்துப்பத்துப் பாடல்களைக் கொண்டது பொதுவாகப் பதிகம் எனப்படும். இத்தகைய பதிகங்கள் பல அடங்கியது ஒவ்வொரு திருமுறையுமாகும். இதற்கு விதிவிலக்காக திருஞான சம்பந்தரின் பதிகத்தைக் கூறலாம். எனினும், பெரும்பான்மை வழக்குக் கருதி 'பதியம்' என்னும் பெயர் வழங்கி இருக்கலாம்.

திருமுறைகளைத் தொகுப்பதற்குக் காரணமாக இராசராசன் இருந்தமையால், அவனைத் திருமுறைகண்ட சோழன் என்று தமிழுலகம் பாராட்டுகிறது. உமாபதி சிவாச்சாரியார் இயற்றிய திருமுறை கண்ட புராணத்தில்,

> ''உலகம் மகிழ்தரு 'சையம்' மீது தோன்றி ஓவாது வருபொன்னி சூழ் சோணாட்டின் திலகமென விளங்கும் மணிமாட ஆரூர்த் தியாகேசர் பதம் பணிந்து செங்கோல் ஓச்சி அலகில் புகழ்பெறு ராசராச மன்னன் ........... அபய குலசேகரன்[3]

என்று இராசராசன் போற்றப்படுகிறான்.

இப்பாட்டில் அபய குலசேகரன் என்று குறிப்பிடப் பெறும் மன்னவன் இராசராசனல்லன் என்பது ஒரு சில ஆராய்ச்சியாளரின் கருத்தாகும். அபயன் என்னும் பெயர் முதலாம் குலோத்துங்க சோழனுக்கேயுரிய பெயராகும்; மற்றவர்க்கு அப்பெயர் உரியதாகாது. மேலும், திருமுறைகளுள் திருவிசைப்பாவும் ஒன்று. அதில் இராசராசன் காலத்திற்குப் பிறகு தோன்றியவர்கள் பாடிய பாடல்களும் உள்ளன. எனவே, இராசராசன் காலத்தில் திருமுறைகள் வகுத்திருக்க இயலாது என்பர்.

இக்கருத்தினைக் கூர்ந்து நோக்குவோமானால் ஒருண்மை புலனாகும். அபயன் என்பது யாருக்கும் இயற்பெயர் அன்று; சிறப்புப் பெயரேயாகும். அகளங்கன், மானாபரணன், அபயன் என்னும் பெயர்கள் பலருக்கும் வழங்கியுள்ளன.[4]

[3] திருமுறைகண்ட புராணம், செ. 1, திருத்தொண்டர் புராணம்
[4] செந்தமிழ், தொகுதி 2; பக். 394

மற்றும், மேற்கண்ட பாடற்பகுதியில் 'அலகில் புகழ்பெறு ராச மன்னன்' என்னும் தொடர் இடம் பெற்றிருக்கிறது. தொடரில் சுட்டப் பெறும் அரசன் யார்? இராசராசன். த இராசராசன்? அலகில் புகழ் பெற்ற இராசராசன்! ஏவே, அவன் முதலாம் இராசராசன் என்று போற்றப்படும் சான்ருப் புகழ் பெற்ற நம் இராசராசனுகவே இருக்கமுடியும். வனுக்கு 'அபய குலசேகரன்' என்று பிற்கால ஆசிரியர், தம் ால வழக்கிற்கேற்பப் பட்டம் சூட்டிப் பாராட்டியுள்ளார் ான்று கொள்ளுவதே பொருத்தமாகும்.

திருமுறை கண்ட புராணத்தில் 'இராசராசன்' என்னும் அரசனுடைய பெயர் இரண்டு இடங்களில் சுட்டப்பட்டுள்ளது.[5] இந்நூலினை இயற்றிய ஆசிரியரே, சேக்கிழார் புராணத்தையும் பாடியவராவர். அந்நூலில், 'சேயதிரு முறைகண்ட இராசராசன்''. என்று அவர் குறிப்பிட்டுள்ளமையும் இங்குக் கருதத்தக்கது[6]. எனவே, திருமுறை கண்ட சோழ வேந்தன் இராசராசனே என்று நாம் துணியலாம். மற்றும், இராசராசன் காலத்தில் இன்று, 'தேவாரம்' எனப்படும் முதல் ஏழு திருமுறைகளே தொகுக்கப் பட்டன. இராசராசன் காலத்திய கல்வெட்டுகளில் திருவாசகத்தைப் பற்றிய குறிப்பு ஒன்றும் இல்லை. தஞ்சைப் பெரிய கோயிலில் மூவர் முதலிகளுக்கு மட்டும் சிலை வைக்கப்பட்டுள்ளமையும் இக்கருத்தை அரண் செய்கிறது. பின்னர் வந்தவர்கள் மற்றவற்றையும் சேர்த்துப் பன்னிரண்டாக்கியுள்ளனர். ஆகவே, திருமுறை கண்ட சோழன் இராசராசன் என்று கருதுவதே பொருத்தம் உடைத்தாகும்.

இனி. நம்பியாண்டார் நம்பி ஆதித்த சோழன் காலத்தில் வாழ்ந்தவர் என்றும், ''முதல் இராசராச சோழனைத் திருத்தொண்டர் திருவந்தாதியில் குறிப்பிடாமை யொன்றே இவர் அவ்வேந்தன் காலத்தவரல்லர் என்பதை நன்கு புலப்படுத்தும்''[7] என்றும், இதனுல், முதலாம் ஆதித்தனே திருமுறை தொகுப்பதற்குக் காரணமாக இருந்திருக்கலாம்[8] என்றும் வரலாற்றாசிரியர் ஒருவர் கருதுகிருர். அக்கருத்தைப் பன்னிரு திருமுறை ஆராய்ச்சி அறிஞர் ஒருவரும் உடன்பட்டுள்ளார்.[9]

[5] அலகில் பகழ்பெறு ராசராச மன்னன் (திருமுறை கண்ட புராணம், 2)
மல்லன்மிகு சேனையுடன் இராசராச மன்னவனும் ( ஷை 6 )
[6] சேக்கிழார் புராணம், 24
[7] சதாசிவ பண்டாரத்தார், தி வை.: இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுக் பக். 32
[8] ஷை : பிற்காலச் சோழர் சரித்திரம், பகுதி I. பக். 33
[9] வெள்ளைவாரணனுர், க.: பன்னிரு திருமுறை வரலாறு, முதற் பகுதி, ı

இவர்கள் காட்டும் காரணங்கள் இரண்டு. இராசராச சோழன் காலத்திற்கு முன்பே—பல்லவர் காலம் முதற்கொண்டே சில கோயில்களில் (திருவல்லம், திருவாவடுதுறை, அல்லூர், திருத்தவத்துறை, திருநல்லம்) திருப்பதிகம் பாடுவதற்கு நிவந் தங்கள் அளிக்கப் பட்டுள்ளன என்பர். இவ்வுண்மையை மறுப் பார் இல்லை. திருப்பதியம் ஓதப்பட்டது உண்மை. குறிப்பிட்ட கோயிலில், குறிப்பிட்ட நாயனுர் போற்றிப் பாடிய தேவாரப் பதிகங்களே பெரிதும் அக்கோயில்களில் ஓதப்பட்டன. அல்லது மூவர் தேவாரத்தில் சில பாடல்களே பாடப்பட்டு வந்தன. இராசராசன் காலத்தின் தொடக்கத்திலும் இந்நிலை நீடித்தது என்பதைத் திருமுறை கண்ட புராணம் தெரிவிக்கிறது. ஆனல், இராசராசன் மூவர் பாடிய பாடல்கள் அனைத்தை(செல்லரித் தவை போக)யும் திரட்டி, தொகை வகைப்படுத்தித் தமிழ் உலகிற்கு நம்பியாண்டார் நம்பியை வழங்கச் செய்தான் என்பது தான் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய வர லாற்றுச் செய்தியாகும். தேவாரப் பதிகங்களை ஒன்ருகத் திரட்டி நூல் வடிவில் தருமாறு செய்தவன் இராசராசன் என்பதை வருங்காலத் தமிழர் மறக்கவோ, மறுக்கவோ, மறைக்கவோ முடியாது.

அடுத்து, நம்பியாண்டார் நம்பி, தான் பாடிய திருத் தொண்டர் திருவந்தாதியில் ஆதித்தனையே குறிப்பிட்டுள்ளார்; இராசராசனைச் சுட்டவில்லை என்பது அவர்கள் காட்டும் இரண் டாவது காரணமாகும். இராசராசனின் மூதாதையருள் பெரும் புகழும் சிறந்த சிவபக்தியும் உடையவனுக விளங்கியவன் முதலாம் ஆதித்த சோழன். அவன் தில்லைச் சிற்றம்பலத்திற்குப் பொன் வேய்ந்த செய்தி, சைவப் பெரியாரான நம்பிகள் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்திருக்கிறது. அச்சிறப்பு மிக்க திருப்பணியைக் குறிப்பிடும் இடங்களில் அவர் ஆதித்தனைச் சுட்டிச் சென்றுள் ளார்.

இந்நிலையில் தஞ்சைப் பெரிய கோயிலை எடுப்பித்த இராச ராசனை, நம்பியாண்டார் நம்பிகள் தன்னுடைய நூலில் குறிப் பிடாதது ஏன் என்ற ஐயம் உண்டாகலாம். "நம்பி, தாம் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியில், புகழ்ச் சோழர்,

"..................... சிங்கள நாடு பொடிபடுத்த[10]
குலமன்னிய புகழ்க் கோகன நாதன் குலமுதலோன்"

என்று கூறுதல் நோக்கத் தக்கது. இதில் குறிப்பிடப்படும்

[10]. திருத்தொண்டர் திருவந்தாதி, 50

'சிங்கள நாடு பொடிபடுத்தவன்' எவனோ அவனே நம்பி காலத்தவன் ஆவன்........... சிங்கள நாடு பொடிபடுத்தவன் இராசராசனே என்பது வரலாற்று முடிவு. வழி வழியாக ஈழ நாட்டின் தலைநகரமாக இருந்த அநுராதபுரத்தை இராசராசன் படைகள் அழித்துவிட்டன. அதற்குப் பதிலாகப் பொலனருவா தலைநகரமாக்கப்[11] பட்டதை நாம் முன்னரே கண்டோம்.

திருமுறை கண்ட புராணத்தில், திருமுறை கண்ட சோழன் சென்னியருள் [12] என்று குறிப்பிடப் பெற்றிருக்கிறது. இப்பெயரின் முதற்பகுதி இராசராசனுடைய அருண்மொழி வர்மன் என்னும் பெயரைக் குறிப்பாகச் சுட்டுகிறது என்று கருத இடமுண்டு. இச்சான்றுகளும் இராசராசனே திருமுறை கண்ட சோழன் என்னும் கருத்தை அரண் செய்கின்றன.

இராசராசனுக்குத் தேவாரத்தினை ஓதி இறைவனை வழிபடுவதில் பேரார்வமும் பக்தியும் இருந்ததை நாம் அறிய முடிகிறது. தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் தேவாரம் பாடிய மூவரின் சிலைகளையும், சுந்தரமூர்த்தி நாயனாரின் மனைவியான நங்கை பரவையாரின் சிலையையும் இராசராசனின் உயர் அதிகாரிகளுள் ஒருவனும், தஞ்சைப் பெரிய கோயிலில் ஸ்ரீகாரியம் பார்த்து வந்தவனுமான பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியனாகிய தென்னவன் மூவேந்த வேளான் இராசராசனின் இருபத்தொன்பதாம் ஆட்சியாண்டில் எழுந்தருளச் செய்துள்ளான். திருமுறை வகுக்கப்பட்டதன் விளைவாகத் திருக்கோயிலில் தேவாரம் பாடிய மூவரையும் தெய்வத்தோடு ஒப்பவைத்து வழிபடும் நிலை உண்டானதைக் காணுகின்றோம். இதற்குமுன் சைவசமய குரவர்கள் தெய்வங்களாகக் கோயிலில் வைத்து வழிபாடு செய்யப்பட்டதாக வரலாறு இல்லை. இது எதைக் காட்டுகிறது? புதியதோர் எழுச்சி நாட்டு மக்களிடையே உண்டானதையே இது காட்டுகிறது. இப்புதிய அலை, பையப் பைய நாடு முழுவதிலும் பரவலாக வீசிய பொழுது, பல கோயில்களில் சைவ சமய குரவரின் வழிபாடு பரவியது; தேவாரத் திருப்பதிகங்களைச் செப்பேட்டில் எழுதிக் கோயில்களில் போற்றிக் காக்கும் வழக்கமும் உண்டாயிற்று.

தேவாரத் திருப்பதிகங்களைக் கோயில்களில் ஓதுமாறு செய்வதில் அரசனுக்குப் பேரார்வம் இருந்ததை அவன் வழங்கிய அறக்கட்டளை தெரிவிக்கின்றது. தஞ்சைப் பெரிய கோயிலை நிறுவிய இராசராசன், அக்கோயிலில் நாள்தோறும் தேவாரத் திருப்பதியம் பாடுவதற்குப் பிடாரர் (ஓதுவார்) நாற்பத்தெட்டுப்பேரையும்

11. இராச மாணிக்கனார், மா: பெரிய புராண ஆராய்ச்சி, பக். 63
12. திருமுறைகண்ட புராணம், 31

அவர்களுக்குத் துணையாக உடுக்கை வாசிப்போர், மத்தளம் முழக்குவோர் இருவரையும் நியமித்து அவன் நிவந்தம் அளித்துள்ளான். இச்செய்தியை அவனுடைய இருபத்தொன்பதாம் ஆட்சி யாண்டில் தஞ்சைப் பெரிய கோயிலில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு,

> ''ஸ்ரீராசராசீசுவரம் உடையார்க்குத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்ய உடையார் ஸ்ரீராசராச தேவர், கொடுத்த பிடாரர்கள் நாற்பத்தெண்மரும், இவர்களிலே நிலையாய் உடுக்கை வாசிப்பான் ஒருவனும், இவர்களிலே நிலையாய்க் கொட்டி மத்தளம் வாசிப்பான் ஒருவனும் ஆக ஐம்பதின்மர்க்குப் பேரால் நிசதம் நெல்லு முக்குறுணி நிவந்தமாய் ராசகேசரியோடொக்கும் ஆடவல்லானென்னும் மரக்காலால் உடையார் உள்ளூர்ப் பண்டாரத்தில் பெறவும்......[13]

என்று அறிவிக்கிறது.

இயலிசையில் வல்லார் பலரும் ஒன்றுகச் சேர்ந்து பண் பொருந்தத் திருப்பதிகத்தைப் பாடுவதற்கு, முதன் முதல் வசதி செய்து கொடுத்தவன் இராசராசன் என்பது இதனால் புலனாகின்றது. இது இராசராசனுடைய ஆட்சியின் இறுதிக் காலத்தில் வழங்கப்பட்ட அறக் கட்டளையாகும்.

கோயில்களில் தேவாரத் திருப்பதிகங்கள் ஓதுவதை மேற்பார்வையிடுவதற்கு ஓர் அதிகாரி பிற்காலத்தில் நியமிக்கப்பட்டான். அவனுக்குத் தேவார நாயகம் என்பது பெயராகும்.

இராசராசனுடைய அரசியல் அதிகாரியான பொய்கை நாடு கிழவன் இராசராசனின் ஒன்பதாம் ஆட்சியாண்டில் திருச்சோற்றுத் துறை மாதேவர் கோயிலில் நாள்தோறும் தேவாரப் பதிகம் பாடுவோருக்குப் பொன்னினை நிவந்தமாக அளித்துள்ளான்.[14] இதிலிருந்து இராசராசனுடைய ஆட்சியின் முற்பகுதியிலேயே திருமுறை வகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதும், அதை அவனுடைய அதிகாரிகள் நாட்டில் நன்கு பரப்புவதற்காகத் திருக்கோயில்களில் ஓதுவதை அறக்கட்டளைகள் நிறுவி ஊக்குவித்துள்ளனர் என்பதும் தெளிவாகின்றன. இராசராச சோழனே திருமுறை கண்ட சோழன் என்னும் கருத்தினை நிலைநாட்ட இவை போதிய சான்றுகளாகும்.

13. S.I.I., Vol 2: pt 3; No 65 PP. 252-53.
14. S.I.I. Vol 5; No. 161

## இராசராசனின் சிவபக்தி

தஞ்சைப்பெரிய கோயிலிலுள்ள கல்வெட்டு ஒன்றில் 'சத்தியாசிரயனை எறிந்து எழுந்தருளி வந்து ஸ்ரீ பாத புஷ்பமாக அட்டித் திருவடி தொழுதன' என்ற தொடர்கள் காணப்படுகின்றன. இதனுல், அவனுடைய ஆன்மிகப் பண்பாடு அறியப்படுகிறது. சங்க கால மன்னர்களுள் சிலர் வைதீக நெறியைப் பின்பற்றி வேள்விகள் செய்துள்ளனர். பக்திநெறியைப் போற்றிய இராசராசன் வேள்விகளைச் செய்யவில்லை; கோயில் வழிபாட்டில் கருத்தைச் செலுத்தினுன்.

இராசராசன் வெற்றிகள் பல பெற்ருன்; நாடுகள் பலவற்றைக் கைப்பற்றினுன்; ஒரு பேரரசை நிறுவினுன். ஆனுல், இன்றைக்கு அவனுடைய புகழை உலகிற்கு உணர்த்திக் கொண்டிருப்பது அவன் எடுப்பித்த தஞ்சை இராசராசேச்சுரமே. அவனுடைய உள்ளம் உயர்ந்தது; பரந்தது, அதில் ஆழ்ந்த சமய உணர்வு என்றும் நிலைத்திருந்தது. தன்னுடைய சீர்த்தியும் சோழர் குடியின் கீர்த்தியும் உலகில் என்றும் நின்று நிலவுவதற்குரிய வழிவகைகளில் அவன் கருத்தைச் செலுத்தினுன். அதன் விளைவாகத் தன் தலைநகரமாகிய தஞ்சையில் மாபெரும் கோயிலைச் சிவபெருமானுக்காகக் கட்டினுன். அதற்கு இராசராசேச்சுரம் என்று அவன் பெயரிட்டான்; நாள் வழிப்பாட்டிற்கும் விழாக்களுக்கும் எண்ணற்ற அறக்கட்டளைகளை வழங்கிச் சிறப்பித்தான். அக்கோயில் தென்னுட்டின்—தமிழகத்தின்—மாபெரும் கலைக்கூடமாக விளங்குகிறது. 'கல்லும் சொல்லாதோ கவி' என்பது ஒரு பழம்பாடலின் ஈற்றடி. தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் பொருத்தப்பட்டுள்ள கற்களும், செதுக்கப்பட்டுள்ள சிற்பங்களும் கனவுலகக் காப்பியங்களாகும், ஒவ்வொன்றும் சுவைமிகு கதைகளை, நானிலம் போற்ற நவிலுகின்றன. விண்ணைத் தீண்டித் தழுவும் நீலமலையைப் போன்ற விமானம் அக்கோயிலுக்கு வலிவையும் பொலிவையும் அளிக்கிறது. மரபு வழிப் பழுத்த சைவனுகிய இராசராசன், பண்புவழி சிறந்த சான்ருேனுகிய இராசராசன், அன்புவழி உயர்ந்த அரசனுகிய இராசராசன். தான்பெற்ற வெற்றிகளால் செருக்குறவில்லை; 'எல்லாம் அவனுடைய திருவருட் பேறே!' என்ற ஆன்மிக வுணர்வினுல், தான் பெற்ற பேறுகள் அனைத்தையும் சிவபெருமானுக்கு அன்புக்காணிக்கையாகச் செலுத்தினுன்; அவருடைய திருவடிகளைத் தன் திருமுடியாகச் சூடி, சிவபாத சேகரனுக இறைவழி நின்ருன்; இணையில்லாப் பெரும்புகழைப் பெற்ருன்.

## இராசராசனும் கருவூர்த் தேவரும்

இராசராசன் எடுப்பித்த தஞ்சைப் பெருவுடையார் கோயிலைப் போற்றிப் பாடியவர் கருவூர்த் தேவர் என்னும் அருளாளராவார், அவர் இப்பேரரசன் காலத்தில் வாழ்ந்தவர். அத்துறவியிடத்து அவன் பேரீடுபாடு கொண்டிருந்தான். அவ்விருவருக்கும் இடையே நிலவிய தொடர்பினைப் பற்றிச் சுவைமிகு கதைகள் காலப்போக்கில் தோன்றின. அவற்றைப், பிற்காலத்தில் இயற்றப்பட்ட கருவூர்ப் புராணம் அழிந்தொழியாதவாறு பதிவு செய்துள்ளது. கருவூர்த் தேவர் சிறப்புமிக்க சிவநெறிச் செல்வராவர். அவர் தஞ்சை இராசராசேச்சுரத்தின் மீது பாடிய பாடல்கள், சைவத் திருமுறைகளுள் ஒன்பதாவதான திருவிசைப்பா திருப்பல்லாண்டு என்னும் நூலில் சேர்க்கப்பட்டுள்ளன. சோழப் பேரரசனைச் சைவப் பேரரசனாக விளங்கச் செய்த சிறப்பு செம்பியன் மாதேவிக்கும், குந்தவைப் பிராட்டிக்கும் மட்டும் உரியதன்று; கருவூர்த் தேவருக்கும் அதில் பங்குண்டு.

## இராசராசன் கட்டிய பிற கோயில்கள்

இராசராசன் மற்றொரு சிவன் கோயிலையும் கட்டியுள்ளான். செயங்கொண்ட சோழ(தொண்டை) மண்டலத்தில் பெரும் பாணப் பாடித் தூநாட்டில் மேற்பாடியாகிய இராசராசிரய புரத்தில் திருவரிஞ்சியீச்வரம் என்னும் கோயிலை அவன் எடுப்பித்துள்ளான். அந்நகரத்தாரிடத்துத் தேவதான இறையிலியாக நிலத்தைப் பெற்று, அதில் அவன் அக்கோயிலைக் கட்டியுள்ளான். தன் பாட்டனை அரிஞ்சய சோழன் நினைவாக இராசராசனல் எடுக்கப்பட்ட கோயில் இது. இதனை,

> "ஸ்ரீகோவிராசராச கேசரி வன்மரான ஸ்ரீராசராச தேவர்க்கு யாண்டு 29 ஆவது, சயங்கொண்ட சோழ மண்டலத்துப் பெரும்பாணப்பாடி தூநாட்டு மேற்பாடியாகிய ராசாசிரய புரத்து நகரத்தோம் ஆற்றூர்த் துஞ்சின தேவர்க்குப் பள்ளிப்படையாக உடையார் ஸ்ரீராசராச தேவர் எங்கள் நகரத்தில் எடுப்பித்தருளின திரு அரிஞ்சிகை ஈச்வரத்து மகாதேவர் ஸ்ரீகோயிலுக்குந் திருச்சுற்றாலைக்குந் திருமுற்றத்துக்குந் திருநந்தன வனத்துக்கும் மடவளாகத்துக்குமாக நாங்களித் தேவர்க்குக் கொடுத்த நிலத்துக் கெல்லை"[15]

என்று அவ்வூர்க் கல்வெட்டு அறிவிக்கிறது.

[15] S. I. I., Vol. 3: pt. I., P. 23

திருவலஞ்சுழி ஆலயத்தில் சேத்திரபாலர்க்கு இவன் ஒரு கோயில் கட்டியதாகத் தெரிகிறது.[16] பழையாற்றில் உள்ள அருண்மொழி தேவேச்சுரமும், ஈழத்தின் மாதோட்டத்தில் உள்ள இராசாரசேச்சுரமும் இராசராசன் காலத்தில் கட்டப் பட்டனவாகும்.

இராசராசன் காலத்தில் வட இந்தியாவைச் சேர்ந்த சைவ சமய குருதேவர் தஞ்சையில் ஒரு மடத்திற்குத் தலைவராகத் திகழ்ந்தார். ஈசான சிவம் என்பது அவருடைய பெயராகும். அவர் இராசராசனின் அரச குருவாக இருந்ததாகக் கூறுவர்.[17]

## சமயப் பொறை

இராசராசன் சிறந்த சிவபக்தனாக வாழ்ந்தான். எனினும், பிற சமயங்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் அவன் அளித்துள்ளான். அவனிடம் சமயப்பற்று இருந்தது; சமய வெறி இல்லை! அதனால், 'எல்லாச் சமயங்களின் முடிந்த பொருளாக இருக்கும் இறைவன் ஒருவனே' என்னும் தெளிவுடையவனாக அவன் விளங்கினான். நாகப்பட்டினத்தில் கடாரத்தரசன் கட்ட முன்வந்த பௌத்த விகாரைக்கு இறையிலியாக அவன் ஆனைமங்கலம் என்னும் ஊரை அளித்ததை நாம் முன்னரே கண்டோம். இராசராசன் தஞ்சையில் எடுப்பித்த பெரிய கோயிலின் சுவர்களில் புத்தரின் சிலைகள் இடம் பெற்றிருப்பதை இன்றும் நாம் காணலாம்.

இப்பேரரசனின் திருத்தமக்கையாரான குந்தவைப் பிராட்டியார், இன்று தாதாபுரம் என்று வழங்கும் இராசராசபுரத்தில் மூன்று கோயில்கள் கட்டி, அவற்றிற்கு நிவந்தங்கள் அளித்துள்ளார். அவற்றுள் ஒன்று சிவன் கோயில்; மற்றொன்று திருமால் கோயில்; வேறொன்று சமணப் பள்ளி(ஜினாலயம்)[18] இராசராசனே பங்களூர் மாவட்டத்திலுள்ள மணலூரில் சயங்கொண்ட சோழ விண்ணகரம் என்னும் திருமால் கோயிலையும், தலைக்காட்டிற்கு அருகில் இரவிகுல மாணிக்க விண்ணகரம் என்னும் திருமால் கோயிலையும் கட்டியுள்ளான். இவற்றையெல்லாம் நோக்குமிடத்து அவன் சமயப் பொறையுடைய பேரரசனாக விளங்கியமை நன்கு புலனாகின்றது.

[16] 633 of 1932
[17] Nilakanta Sastri, K. A. : op. Cit. P. 452
[18] 8 of 1919

**சான்றோன்**

இராசராசன் மாபெரும் வீரன்; குடிநலங் கருதி நாடாண்ட நற்பெருந் தலைவன்; சமயப் பண்பாட்டில் ஊறித் திளைத்த பண்பாளன். சமயப் பொறையுடன் அனைத்துச் சமயங்களுக்கும் ஆதரவு தந்த பெருந்தகை. இவை யாவும் அவனைச் சிறப்பு மிக்க மன்னனாக மட்டும் அல்லாமல், பண்பாட்டின் உறைவிடமான சான்றோனாகவும் நானிலம் போற்றுமாறு வீறுடன் விளங்கச் செய்துள்ளன. இக்காரணங்களால் தமிழகத்தின் ஒப்புயர்வற்ற பெருவேந்தனாகப் போற்றப்படுகின்றான்.

# 11. தஞ்சைப் பெரிய கோயில்

போர்க்களத்தில் மாவீரனாக விளங்கியவன் இராசராசன். அதைப்போன்றே சைவ சமயப் பற்றிலும், இறை அன்பிலும் ஒப்பாரும் மிக்காருமின்றி அவன் விளங்கினான். சிவ பெருமானின் பொற்றாமரைத் திருவடிகளில் தேனுண்டு களிக்கும் வண்டாக அவன் வாழ்ந்தான். அப்பெருமானின் திருவடிகளைத் தன்னு டைய திருமுடியில் சூடிக்கொண்டான். அதனால் சிவபாத சேகரன் என்னும் சிறப்புப் பெயரையும் அவன் பெற்றான். தான் பெற்ற வெற்றிகளாலும், செல்வச் செழிப்பாலும் தருக்குற்றுக் 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என்று அவன் வாழ வில்லை. தான் பெற்ற சிறப்புகள் அனைத்திற்கும் இறை வனின் திருவருளே காரணம் என்பதை அவன் நற்குணர்ந் திருந்தான். உலகியலில் பெற்ற வெற்றிகளைவிட, ஆன்மீக வழியில் நிலையான புகழை ஈட்ட அவன் விரும்பினான். அதன் விளைவாக, அவன் உள்ளக் கற்பனையில் எழுந்தது ஒரு கோயில். அதைக் கல்லிலே வடித்து, கலைக்கோயிலாக உலகிற்கு அவன் அளித்தான்; பொன்றாப் புகழைப் பெற்றான்.

இராசராச சோழனுடைய ஆட்சிக் காலத்தில் தஞ்சை மாநகரம் பல்வகைச் சிறப்புகளையும் ஒருங்கே எய்தி, ஒப்புயர் வற்ற நிலையை அடைந்ததைப் பெரிய கோயில் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. தேரோடும் தஞ்சைத் திருநகரிலே, தன் அரண்மனையைவிடப் பல்வகைச் சிறப்புகள் பொருந்திய மாபெரும் சிவன் கோயிலை அவன் எடுப்பித்தான். அவனுடைய பத்தொன் பதாவது ஆட்சியாண்டில்(கி. பி. 1004 இல்) இக்கோயிலை அவன் கட்டத் தொடங்கி இருத்தல் வேண்டும் என்று ஆராய்ச்சியா ளர் கருதுகின்றனர். மேலைச் சாளுக்கிய மன்னன் சத்தியா சிரயனை வென்று திரும்பிய பொழுது, இராசராசன் இக்கோயி லில் உள்ள பரம சுவாமியின் திருவடிகளில் பொற்பூவினைத் தூவித்

ரழுதான்[1] என்பதை நாம் முன்னரே கண்டோம். இச் ய்தியைத் தெரிவிக்கும் கல்வெட்டு அவனுடைய இருபத்தி ண்டாம் ஆண்டில் பொறிக்கப் பட்டிருக்கிறது. இதனால், வனுடைய இருபத்திரண்டாம் ஆண்டு அளவிலேயே இக் காயிலில் வழிபாடு தொடங்கப் பெற்றிருக்க வேண்டும் என்று தான்றுகிறது. ஆனால், போர் முதலிய தவிர்க்க முடியாத ாரணங்களினால், இக்கோயிலின் குடமுழுக்கு விழா, அவ னுடைய இருபத்தைந்தாவது ஆண்டிலேயே நடைபெற்றதாகத் தெரிகிறது. இதனை,

> யாண்டு இருபத்தைஞ்சாவது நாள் இருநூற் றெழுபத் தைஞ்சினால் உடையார் ஸ்ரீராஜராஜதேவர் ஸ்ரீராஜ ராஜீச்சுர முடையார் ஸ்ரீவிமானத்துச் செம்பின் ஸ்தூபித் தறியில் வைக்கக் கொடுத்த செப்புக்குடம் ஒன்று[2]

என்னும் கல்வெட்டுப் பகுதி குறிப்பாகப் புலப்படுத்துகிறது. இதையொட்டிக் குட முழுக்கு விழா நடைபெற்றிருத்தல் வேண் டும். அவ்வாறாயின், கி. பி. 1010 ஆம் ஆண்டில் திருக்கோயில் முழுநிறை வடிவை எய்தியிருத்தல் கூடும். தன் ஆட்சியின் இருபத்தாறும் ஆண்டு, இருபதாம் நாளில் அக்கோயில் விமா னத்தில் கல்வெட்டுகளைப் பொறிப்பதற்கு அவன் ஆணையிட் டிருப்பதை[3] நோக்க, இவ்வாண்டிற்கு(1011)ச் சற்று முன்பே அக்கோயில் திருப்பணி முழுநிறைவு அடைந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. இம்மறைமுகச் சான்றுகளிலிருந்து தஞ்சைப் பெருவுடையார் கோயிலைக் கட்டி முடிக்க ஏறக்குறைய ஏழாண் டுகள் பிடித்திருக்கும் என்பது புலனாகின்றது. இக்கோயிலைக் கட்டிய கல்தச்சன் வீரசோழன் குஞ்சர மல்லனான இராசராசப் பெருந்தச்சனாவான். அவனுக்கு உதவியாக நித்தவிநோதப் பெருந்தச்சன், கண்டராதித்த பெருந்தச்சன் என்பவர் இத்திருட் பணியில் ஈடுபட்டிருந்தனர்.

அக்கோயிலுக்குத் தன்னுடைய பெயரையே அவன் சூட் டினான். அதை, அவனுடைய கல்வெட்டு ஒன்று,

> பாண்டிய குலாசனி வளநாட்டுத் தஞ்சாவூர்க் க றத்துத் தஞ்சாவூர் நாம் எடுப்பித்த திருக்கற்றளி ஸ்ரீர ராஜீச்வரம்[4]

1 ஸத்யாச்ரயனை எறிந்து எழுந்தருளி வந்து ஸ்ரீபாத புஷ்பமாக ஒ திருவடி தொழுதன திருப்பொற்பூ (S. I. I., Vol. 2; P. 7)
2 S. I. I., Vol. 2; No. 1
3 Ibid. P. 2

என்று தெரிவிக்கிறது. இதனால், தஞ்சை மாநகர் பாண்டிய குலாசனி(பாண்டியர்குலத்திற்கு இடிபோன்றவனை இராசராசன் பெயரால் வழங்கிய) வளநாட்டில், தஞ்சாவூர் கூற்றத்தில் (வட்டத்தில்) உள்ளது என்பதும், அங்கு எடுக்கப்பட்டது கற்கோயில் என்பதும், அக்கோயில் இராசராசீச்சுரம் என்னும் பெயருடையது என்பதும் தெரிய வருகின்றன. இக்கோயிலைத்தஞ்சைப் பெருவுடையார் கோயில் என்றும், பெரிய கோயில் என்னும் மக்கள் வழங்கலாயினர். பெருவுடையார் கோயில் என்பதைப் 'பிரகதீசுவரர் ஆலயம்' என வடமொழியாளர் மொழிபெயர்த்துக் கொண்டனர்.

## கோயிலின் அமைப்பு

தஞ்சைப் பெரிய கோயிலை மாடக் கோயில் அமைப்பு உடையது என்பர். மாடக் கோயில்கள் எல்லாம் செய்குன்று கள் போன்று உயர்ந்த மேடை அல்லது நிலப்பரப்பின் மீது எழுப்பப்படுவனவாகும். இதைப்பெருங்கோயில் என்றும் கூறுவர். பல நிலை மாடங்களைக் கொண்ட கோயில்களை மாடக் கோயில் கள் என்று கூறுவது சாலவும் பொருந்தும். தஞ்சைப் பெரிய கோயிலின் நீளம் 241.51மீ (793 அடி).[5] குறுக்களவு 125.218 மீ (397 அடி)[5] அதன் திருவுண்ணாழிகை (கருவறை)யின்மீது வீறுடன் விளங்கும் விமானம் சதுரவடிவமானது; பிரமிட் போன்ற அமைப் பையுடையது; பதின்மூன்று மாடிகளைக்கொண்டது. அவ்விமானத் தின் உயரம் 66 மீ (216 அடி.)[6] அதன் உச்சியில் போடப்பட்டிருப் பது ஒரேகருங்கல் என்று கூறப்படுகிறது.[7] அக்கல் 7.77 மீ(25 1/2 அடி சதுரமும், 8 .28 மெ.ட.(80 டன்) நிறையும் கொண்டது. அக்கல்லின்மேல் கலசமும், அதன்மேல் அழகிய தூபியும் அமைக் கப் பெற்றுள்ளன. விமானத்தின் மேல் அமைக்கப் பெற்றுள்ள செப்புக் குடம் 339.55 கி. கிராம்(3083 பலம்.) நிறையுடையது; அக்குடத்தின் மேல் வேயப்பட்டுள்ள பொன் தகடு 2926 1/2 கழஞ்சு(1902 சவரன்) எடையுள்ளது என்றும் அவற்றை ஆராய்ந்து பார்த்த அறிஞர் கூறுகின்றனர்[8]

4 ஷை, எண். 1
5. Somasundaram Pillai, J.M. : The Great, Temple at Tanjore, P. 6.
6. ஷை, பக் 8
7. ஷை, பக். 9. அண்மையில் நடுவணரசின் தொல்பொருள் ஆய்வுத் துறையினர் அக்கல்லினை ஆராய்ந்தனர். பல சிறிய கற்பாளங்களின் இணைப்பினால் அமைக்கப் பட்டது அப்பெரிய கல் என்று அவர்கள் முடிவிற்கு வந்துள்ளனர். இக்கருத்தினை நிலைநாட்ட முற்படுவோர், இன்னொருமுறை விரிந்த அளவில் அக்கல்லை ஆராய்ந்து பார்த்தல் நல்லது.
8. S.I.I. Vol. 2; P. 3.

அம்மாடக் கோயில், தமிழருடைய சிற்பக் கலைத்திறத்திற்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகவும், இராசராச சோழனுடைய பெருமைக்கும் புகழுக்கும் சிவபக்திக்கும் ஒரு கலங்கரை விளக்கமாகவும் திகழ்கிறது. காண்போர் கண்களையும் கருத்தையும் கவர்ந்து. வியப்பில் ஆழ்த்தும் வகையில் அக்கோயில் விண்ணைத் தீண்டித் தழுவும் நீலமலையைப் போன்று காட்சியளிக்கிறது.

இத்திருக்கோயிலுக்கு மூன்று திருவாயில்கள் உள்ளன. முதற் கோபுர வாயிலுக்குக் கேரளாந்தகன் (சேரர்களுக்கு யமன்) என்பது பெயர், இரண்டாவது கோபுர வாயிலை இராசராசன் திருவாசல் என்பர். மூன்றாவதாக உள்ளது கோயிலின் உள்வாயிலாகும். இதனைத் திருவணுக்கன் திருவாயில் என்று கூறுவர். இவற்றைக் கடந்து உள்ளே சென்றால், 243,76மீ. (800 அடி) நீளமும், 121.88 மீ (400 அடி) அகலமும் உடைய ஒரு திறந்த வெளி இருக்கும். அதில் கருங்கற்களும் செங்கற்களும் பரப்பப்பட்டிருக்கும். இப்பகுதியில் ஒரு மேடை இருக்கிறது. அம்மேடையில் பெரியதொரு நந்தி அமர்ந்திருக்கும். அதற்குக் காப்பாக நாயக்க மன்னர் ஒரு மண்டபத்தைக் கட்டியுள்ளனர். இம்மண்டபத்தில் உள்ள நந்தி மிகப்பெரியது; ஒரே கல்லில் ஆனது. 3.66மீ (பன்னிரண்டடி) உயரமும், 5.94மீ (பத்தொன்பதரை அடி) நீளமும் 2.51 மீ (எட்டேகால் அடி) அகலமும் உடையது. இந்தியாவிலுள்ள பெரிய நந்திகளுள் இரண்டாவதாக வைத்து எண்ணப் படுவது இந்நந்தியாகும்.

இதற்கு எதிரில் இறைவனுடைய திருவுண்ணாழிகையும். அதன்மீது மாபெரும் விமானமும் அதற்கு அடுத்து அம்மையின் திருக்கோயிலையும் நாம் காணலாம், கோயிலின் உள்ளே ஆறு பகுதிகள் உள்ளன. அவை திருவுண்ணாழிகை, அதைச்சுற்றியுள்ள இடைகழியோடு கூடிய அர்த்த மண்டபம், இருபக்கம் தூண்களும் வெளிவாயிலுமுள்ள பெருமண்டபம், தியாகேசர் திருவறைக்கு முன்னுள்ள தாபன மண்டபம், அதையடுத்துள்ள நர்த்தன மண்டபம், வாச்சிய மண்டபம் என்பன. இக்கோயிலில் ஏழு வாயில்கள் உள்ளன. அவை ஒவ்வொன்றின் இருபுறத்திலும், 5.48மீ. (18அடி) உயரமும், 2.5மீ (8அடி) அகலமும் உள்ள பதினன்கு துவாரபாலகர் காவல் செய்கின்றனர்.

இவ்விறைவன் கருவறையை அடைய விமானத்தின் தெற்கிலும் வடக்கிலும் வாயில்கள் உள்ளன. ஒவ்வொன்றிற்கும் படிகள் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வாயில்களின் இருமருங்கும் துவார பாலகர் பெருமிதத் தோற்றத்தோடு நிற்கின்றனர். விமானத்தின்

தெற்கு வாயிலுக்குப் பிற்காலத்தில் 'விக்கிரமன் திருவாசல்'[8]a' என்னும் பெயர் வழங்கியுள்ளது. இவ்வாயிலின் கீழ்ப்பகுதியில் கலைமகளின் சிற்பமும் வடக்குவாயிலின் கீழ்ப்பகுதியில் திருமகளின் சிற்பமும் அழகுற அமைக்கப்பட்டுள்ளன. திருவணுக்கன் திருவாயிலின் இருபக்கமும் அமைந்த படிகளே பழமையானவை. இத்திருவாயிலுக்கு எதிரே இப்போது காணப்படும் படிகள் அண்மைக் காலத்தில் கட்டப்பட்டனவாகும்.

இரண்டடுக்கு வெளிச்சுவருடன் கூடிய விமானம் இக்கோயிலின் முடிமணியாக விளங்குகிறது. ஆவுடையாரோடு கூடிய மாபெரும் லிங்கம் அமைந்த கருவறையை உள்ளடக்கியதாக அது இருக்கிறது. இத்தகைய பெரியதொரு லிங்கம், தென்னிந்தியாவில் வேறெங்கும் இல்லை என்று கூறுவர். இத்திருவுண்ணாழிகையின் நான்கு புறமும் வாயில்கள் உள்ளன. உள்சுவரின் மூன்று புறமும் மாடங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் அமைக்கப்பட்டுள்ள சிற்பங்களையும், கருவறையிலுள்ள சிவலிங்கத்தையும் பக்தர்கள் கண்டு வணங்குவதற்கு இவ்வழிகள் உதவுகின்றன. லிங்கத்திருமேனியைத் திருநீராட்ட மேனிலை ஆளோடிகள் அமைய, மேனிலையின் தென்பால் சுவரிலே, நீர்த்தொட்டி அமைக்கப்பட்டிருக்கும் அருமை நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது.

அவன் (இராசராசன்) காலத்திற்கும் முன்வரை இருந்த கட்டடக் கலையின் அற்புத மாற்ற மொன்றை ஆக்கிய முதல்வன் இராசராசன். ஆகம வழிபாட்டின் ஒரு கூறுகிற, வலம் வரும் பொழுது கோயில் ஸ்தூபி, விழுநீர்ப்போக்கு ஆகியவற்றைத் தாண்டியோ, மிதித்தோ செல்ல வேண்டாத ஒரு அமைப்பை இவன் ஆக்கியிருக்கிறன். விமானகலசத்தின் நிழல், திருச்சுற்றில் விழாதவாறு அமைத்ததும், விழுநீர்ப் போக்கு ஒரு ஆள் உயரத்தின்மேல் ஓடிவந்து விழுமாறு அமைத்ததும், இவன் செய்த மாற்றங்களாகும்.''[9]

## விமானத்தின் சிறப்பு

இக்கோயிலின் விமானத்தைத் தட்சணமேரு என்பர். அதாவது தெற்கில் தென்னாட்டில் உள்ள மேருமலையைப் போன்ற அமைப்பினை உடைய மாபெரும் விமானம் என்பது இதற்குப் பொருள். திருக்கோயில் விமானங்கள் இருபது வகைப்படும். அவை

8. a 414 of 1924
9. கணேசன், சா: இராஜராஜன், பக்.43.

மேரு, மந்தரம், கயிலாசம், நந்தனம், பத்மம், கருடம், குஞ்சரம், இடபம், அமிசம், கடம், சிம்மம் முதலியனவாகும். அவற்றுள் முதலில் குறிப்பிடப்பட்ட 'மேரு' என்னும் விமானம் தஞ்சைப் பெரிய கோயிலை அணி செய்கிறது. இதனால், தட்சண மேரு என்னும் பெயர் பெற்றதாகக் கூறுவர்.[10] தட்சண மேருவினையுடைய கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனை தட்சண மேரு விடங்கன் என்று போற்றி வருகின்றனர்.

பிரமிட் (pyramid) போன்ற வடிவ அமைப்பை உடையது இவ்விமானம். இதில் பதினாறு அடுக்குகள் உள்ளன. ஒவ்வோர் அடுக்கிலும் சாலா, கூரா, பஞ்சரவகை சிறிய அளவு விமானங்கள் உள்ளன. உச்சியில் மிகப் பெரிய ஒரே கல்லாலான எண்கோண சிகரம் உள்ளது. விமானம், மண்டபம் ஆகியவற்றின் அடித்தளத்தில் பல சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அவை எளிமையாகவும் எழில் மிக்கனவாகவும் உள்ளன. உள்சுற்றாலையின் சுவரில் இருபுறமும் இரண்டு வரிசையாக அமைந்த பகுதியில் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. உள்புறம் இருப்பன கோயில் கட்டப்பட்ட காலத்தைச் சேர்ந்தனவாகும். வெளிப்புறம் உள்ளவை நாயக்க மன்னர் காலத்தில் வரையப் பெற்றவையாகும்.

சுற்றாலையின் மேல் அடுக்கிலுள்ள சுவர்ப்பகுதியில் எண்பத்தாறுக்கு மேற்பட்ட சிற்பங்கள் உள்ளன. பரதமுனிவரின் நாட்டிய சாத்திரத்தில் கூறப்பட்டுள்ள கரணங்கள் நூற்றெட்டனுள் எண்பதுக்கு மேற்பட்டதை, சிவ பெருமானே அவிநயித்துக் காட்டுவதைப் போன்ற சிற்பங்கள் அதில் இடம் பெற்றுள்ளன. இறைவன் நான்கு கைகளோடு திருநடனம் புரிகின்றான். அவனோடு சேர்ந்து மானும் மழுவும் ஆடுகின்றன. இவ்வழகிய காட்சியைக் கண்டு நாம் மகிழலாம். இராசராசன் தில்லையம்பலப் பெருமானிடத்துக் கொண்டிருந்த ஈடுபாட்டிற்கு இத்தாண்டவச் சிற்பங்கள் சிறந்த சான்றாகும்.

இக்கோயிலின் விமானத்தில் பல அரிய சிற்பங்கள் உள்ளன. தென்பக்கத்தில் திருமால், விநாயகர், பிச்சாடனர், குலதேவர், தட்சணாமூர்த்தி, மார்க்கண்டேயர், நடராசர் சிலைகளும், சோழ வீரர்களுடைய வடிவங்களும் காணப்படுகின்றன; மேற்குப் பக்கத்தை லிங்கோத்பவர், அர்த்த நாரீசுவரர் முதலிய சிற்பங்களும் அணிசெய்கின்றன; வடக்குப் பக்கத்தில் கங்காதரர், கலியாண சுந்தரர், மகிஷாசூரமர்த்தனி முதலிய திருவுருவங்

10. வராகமிகிரரின் பிரகத் சம்மிதையில் விமானங்களைப்பற்றிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. காண்க: தமிழ்ப் பொழில் துணர், 7: மலர்10; பக் 368

களும் அமைக்கப் பெற்றுள்ளன. விமானத்தின் வடபகுதியின் கீழ்ப்பக்கத்தில் மற்றைய மூன்று உருவச் சிலைகளுடன் தலையளவில் ஒரு ஐரோப்பியனுடைய வடிவம் ஒன்று காணப்படுகின்றது. இதைக் குறித்துப் பலவகையான கதைகள் வழங்கி வருகின்றன.

''விமானத்தை அமைத்த சிற்பி, இச்சோழ தேசத்தை முன்னும் பின்னுமாக அரசாளும் வர்க்கத்தாரை மேற்காட்டிய உருவங்களாற் குறிப்பிட்டிருக்கிறான் என்பர். அன்றியும் பல கோயில்களை நிருபணஞ் செய்த நாயக்கர் பரம்பரையில், பதினேழாவது நூற்றாண்டின் முற்பகுதியிலிருந்த இரகுநாத நாயக்கர் அவையில் செல்வாக்கு மிக்குயர்ந்த டேனிஷ் ஈஸ்ட் இந்தியா கம்பெனியாரின் தலைவனான ரோலண்ட் கிரேப்(Roeland Crape) என்பானது உருவம் என்பது மற்றொன்று; இனியும், இச்சிலையானது பதின்மூன்றாம் நூற்றாண்டில் தென்னிந்தியாவுக்கு வந்துபோன சிறப்பு வாய்ந்த மார்க்கோ போலோ என்ற வெனீஸ் பிரயாணியின் உருவமென்பர் மற்றொரு சாரார். கோயில் கட்டிய காலத்தே மேனாட்டு மக்கள் சோழ தேசத்தில் தோன்றியிருந்தனராக, அவர்களின் நினைவாகக் குறிக்கப் பட்டிருக்கினும் இருக்கலாம்.''[11]

இக்கோயில் விமானம், மன்னர் மன்னன் காலத்திலேயே எழுப்பப்பட்டது. அப்பொழுது இந்தச் சிற்பத்தினை அமைத்தனர் என்று கொள்ளுவதுதான் பொருத்தம். இக்கோயிலில் காணப்படும் சிற்பங்களில் ஒருவகைப் புதுமைப் பண்பினைக் காணுகின்றோம். விமானத்தில் உள்ள சிற்பங்களுள் பல வைணவ சமயச் சார்புடையன; முற்றத்தில் உள்ளவற்றுள் பெரும்பாலான சிற்பங்கள் சைவ சமயப் பழங்கதைகளைச் சுட்டுகின்றன. மற்றும், புத்தர் பெருமான் வாழ்க்கையைச் சித்தரிக்கும் சிற்பங்கள் சிலவும் இதில் இடம் பெற்றுள்ளன.

### பரிவார தெய்வங்களின் கோயில்கள்

இக்கோயில் உள்ளடக்கி இரண்டு தட்டு சுற்றாலைச் சுவர் உள்ளது. அதன் உட்புறம் இரண்டு அடுக்குகள் கொண்ட மூடு மண்டலமும், முன் புறம் அளவில் பெரிதும் ஆனால் உயரங் குறைவானதுமான கோபுரமும் உள்ளன. மூடு மண்டபத்தில் இரண்டு அடுக்குகளைக் கொண்ட வரிசையாக அமைந்த 36 சிறு கோயில்கள் இக்காலத்தில் உள்ளன. சுற்றாலையின் மூன்று புறமும் மூன்று தோரண வாயில்கள் உள்ளன. இக்கோயிலின் முற்றத்தில் வேறு சில கோயில்களும் உள்ளன. இவற்றுள் முதல் சுற்றாலையில் உள்ள சண்டிகேசுவர

[11] சோமசுந்தரம் பிள்ளை, ஜே. எம்.: இராசராசேச்சுரமும் பிற சோழர் கோயில்களும், பக். 23

ரின் கோயில், இராசராசன் காலத்தில் கட்டப்பட்டதாகும். இப்பெரிய கோயிலைச் சார்ந்த கணக்கு வழக்குகள், நிகழ்ச்சிகள் அனைத்தையும் சண்டிகேசுவரர் பெயரால் நடைபெற அவன் ஏற்பாடு செய்திருந்தான். இச்சிறு கோயிலையும், கோயிலின் கீழ்ப் பகுதியிலுள்ள இராசராசன் திருவாயில் கோபுரத்தையும் இராசராசன் தனது இருபத்தொன்பதாம் ஆண்டில், முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரத்தை வென்றதற்கு முன்பே கட்டியிருத்தல் வேண்டும் என்பது, அங்குள்ள கல்வெட்டுகளால் தெரிகிறது.

## சக்திக்குத் தனிக்கோயில்

அக்காலத்தில் சிவபெருமானுடைய தேவிக்கு உமாபரமேசுவரி என்னும் பெயரே வழங்கியது. அத்தேவியின் கோயில், பெருவுடையார் கோயிலுக்கு வட புறத்தில் உள்ள சிவகங்கைத் தோட்டத்தில் முன்னர் இருந்தது என்றும், பின்பு பாண்டிய மன்னர் காலத்தில் (கி. பி. பதின்மூன்றும் நூற்றாண்டில் இப்போதிருக்கும் இடத்தில் உலக முழுதுடையாள் பெரியநாயகி என்னும் பெயரோடு அமைக்கப்பட்டது என்றும் தெரிகிறது.[12]

கோயிலின் வடமேற்குச் சுற்றாலையில் உள்ள ஆறுமுகப் பெருமானின் கோயில், திராவிட கலைப்பாணியில் சிறப்புமிக்க சிற்ப வேலைப்பாடு உடையதாகும். இக்கோயில் பதினைந்தாம் நூற்றாண்டில் கட்டப்பட்டதாகத் தெரிகிறது. இக்கோயில் யானை குதிரைகள் பூட்டிய தேரைப்போன்ற தோற்றம் உடையது. இங்குள்ள முருகப் பெருமானை, அருணகிரி நாதர் போற்றிப் பாடியுள்ளார்.

விமானத்திற்குப் பின்புறம் உள்ள விநாயகர் கோயில் இராசராசன் காலத்தில் கட்டப்பட்டிருக்க வேண்டும். கல்வெட்டுகளில், இக்கோயில் பரிவாராலயத்துப் பிள்ளையார் கோயில் என்று குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம்.

## திருச்சுற்றாலை

கோயிலின் உள் சுற்றாலையின் வடகிழக்கில் காணப்படும் நடராசப் பெருமானின் திருவிடமும், பிற பரிவார தெய்வங்களும் பிற்காலத்தில் கட்டப்பட்டனவாகும். ஆனால், நடராசர்

12 "திரிபுவன சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் தஞ்சாவூர் உடையார் ஸ்ரீராஜராஜேஸ்வரமுடையார் தானத்தார்க்கு இக்கோயில் எழுந்தருளிவித்த உலக முழுதுடைய நாச்சியார் தஞ்சாவூர் பெரிய உடையநாயனர் கோயிலில்" என்பது கல்வெட்டு வாசகம். (S. I. I., 2: pp. 247-8)

கோயிலில் உள்ள ஆடவல்லான் திருமேனி இராசராசன் காலத்தைச் சேர்ந்தது எனலாம். இப்பெருவுடையார் கோயிலின் திருச்சுற்று மாளிகையிற் பெரும்பகுதியை இராசராசனின் ஆணை யின் பேரில், படைத்தலைவனுன கிருஷ்ணன்ராமனுன மும்முடிச் சோழ பிரமராயனுல் எடுக்கப்பட்டதாகும். இதனை, 'ஸ்ரீராஜ ராஜ தேவர் திருவாய் மொழிந்தருள இத்திருச்சுற்று மாளிகை எடுப்பித்தான் சேனுதிபதி கிருஷ்ணன் ராமனுன மும்முடிச் சோழ பிரம மாராயன்''[13] எனத் தென்புறத்தில் இரண்டிடத்திலும், மேற்புறத்து ஓரிடத்திலும் திருச்சுற்றுலையில் பொறிக்கப்பட்டுள் ளன.

இச்சுற்றுலையின் எட்டுப் பக்கத்திலும், திசை காப்பாளர் எண்மருக்குக் கோட்டங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் கல்லில் வடிக்கப்பட்ட அழகிய திசைகாப்பாளரின் திருமேனிகளை நாம் காணலாம். அக்கோட்டங்களின் மீது கற்கலசங்களே இக் காலத்தில் காணப்படுகின்றன. ஆனுல், இராசராசன் காலத்தில் பொற்றகடு சுருக்கின செப்புக் குடங்கள், இராசராசனுடைய குருவான ஈசானசிவ பண்டிதரால் கொடுக்கப்பட்டன என்று ஒரு கல்வெட்டு கூறுகிறது.[14]

## கருவூர்த் தேவர் கண்ட பெரிய கோயில்

இராசராசன் காலத்தில் சிறப்புற்று விளங்கிய சிவயோகியான கருவூர்த் தேவர், தஞ்சை பெருவுடையார் கோயில் இறைவனைப் போற்றிப் பாடியுள்ளார். அவர் 'இஞ்சி சூழ் தஞ்சை யிராச ராசேச்சரத் திவர்க்கே'[15] என்று ஒவ்வொரு பாடலின் இறுதியி லும் குறிப்பிடுகிருர். இதனுல், தஞ்சைப் பெருவுடையார் கோயில், கோட்டை கொத்தளங்களைக் கொண்ட தஞ்சை மாநகரின் உள்ளே அமைந்திருந்தது என்பது புலனுகின்றது.

## தெய்வத் திருமேனிகள்

தஞ்சைப் பெருவுடையார் கோயிலினைக் கட்டி முடித்த வுடன், நம் பேரரசனும், அவனுடைய தமக்கையாரும், மனைவி யரும், அரசியல் அதிகாரிகளும் பேரளவில் வழிபாட்டிற்கும் திருவிழாவிற்கும் உரிய தெய்வத் திருமேனிகள் பலவற்றை அறக் கொடையாக அளித்துள்ளனர். இக்கோயிலுக்கு, ''இவன் வாரி வழங்கிய பொன்னும் பொருளும் போன இடம் காண

13 S. I. I., Vol. 2; pt. 2; No. 31, 33, 45
14 S. I. I. Vol. 2; pt. 4; No. 90
15 திருவிசைப்பா, 9: 1-10

முடியாவிட்டாலும், ஆடலுக்கும் பாடலுக்கும் அருங்கலைக்கும், வழிபாட்டிற்கும் வைத்த நிலம், வழிமாறிப் போனாலும், இவன் எழுந்தருளுவித்த படிமங்களும் செப்புத் திருமேனிகளும், இன்றும் நின்று இவன் புகழ் பரப்பிக் கொண்டிருக்கின்றன."[16]

இராசராசன் எழுந்தருளச் செய்த தெய்வத் திருமேனிகள் இருபதாகும். அவை, ஆடவல்லார், தட்சண மேருவிடங்கர், தஞ்சை விடங்கர், சண்டேசுவர பிரசாத தேவர், சுப்பிரமணிய தேவர், தட்சணமூர்த்தி, பிள்ளையார் கணபதியார் முதலியன வாகும்.[17] அவனுடைய தமக்கை குந்தவையார், ஆடவல்லார் நம்பிராட்டியார் உமாபரமேசுவரி, தட்சணமேரு விடங்கர் உமா பரமேசுவரி, தஞ்சை விடங்கர் பிராட்டியார் உமாபரமேசுவரி முதலியவற்றைக் கோயிலில் எழுந்தருளச் செய்தார்.

அவனுடைய அரசமாதேவியருள் உலகமாதேவி பிச்ச தேவரையும், சோழமாதேவி ஆடவல்லாரையும், அவர்தம் பிராட்டியார் உமாபரமேசுவரியையும், ரிஷபத்தையும் எழுந் தருளுவித்தனர். அபிமானவல்லி இலிங்க புராண தேவரையும், திரைலோக்கியமாதேவி கல்யாணசுந்தரரையும், பஞ்சவன் மாதேவியார் தஞ்சை அழகரையும், அவர் தம் பிராட்டியாரையும், கணபதியாரையும் இக்கோயிலுக்கு அறக்கொடையாக அளித்தனர்.

இராசராசனுடைய அரசியல் அதிகாரிகளுள், தஞ்சைப் பெருவுடையாருக்கு ஸ்ரீகாரியஞ் செய்த பொய்கை நாடுகிழவன் ஆதித்தன் சூரியன் ஆன தென்னவன் மூவேந்த வேளான், பன்னி ரண்டுக்கு மேற்பட்ட திருமேனிகளை அக்கோயிலில் எழுந்தருளு வித்தான். அவற்றுள் சேத்திரபாலர், ஆடுகின்றாராகக் கனமாக எழுந்தருளுவித்த ஸ்ரீபைரவ மூர்த்திகள், பெரிய பெருமாளு (இராசராசனு) க்குத் தேவார தேவராக எழுந்தருளுவித்த தேவர் சந்திரசேகர தேவர் என்னும் மூன்றும் தெய்வத் திருமேனிகள். மற்றவையெல்லாம் சைவ நாயன்மார்களுடைய படிமங்களாகும். நம்பி ஆரூரர், நங்கை பரவையார், திருநாவுக்கரையர், திருஞான சம்பந்தர், 'தத்தா நமரே காண் என்னும் மிலாடுடை யார்' (மெய்ப் பொருள் நாயனார்), சிறுத்தொண்டநம்பி, திரு வெண்காட்டு நங்கை, சீராளதேவர்[18] என்னும் சைவப்பெரியார் களுடைய படிமங்களைத் தென்னவன் மூவேந்த வேளான் பெரிய கோயிலில் எழுந்தருளச் செய்துள்ளான். சைவ சமய குரவர்

[16] கணேசன், சா : இராசராசன், பக். 44
[17] S. I. I., Vol. 2: No: 29, 30, 49. 50, 52
[18] S. I. I., Vol. 2; pt. 2: No 38, 39, 40, 41, 42, 43

நால்வருள், தேவாரம் பாடிய மூவருக்கு (அப்பர், சம்பந்தர், சுந்தரர்) மட்டுமே அவன் சிலை வைத்துள்ளான். திருவாசகத்தைப் பாடிய சிவஞானச் செம்மலான மாணிக்க வாசகப் பெருமானுக்கு, அவன் சிலை எடுக்கவில்லை. இதனால், இராசராசன் காலத்தில் வாதவூரடிகளை மூவர் முதலிகளோடு உடன் வைத்துப் போற்றும் வழக்கம் தோன்றவில்லை என்பது புலனாகின்றது.

இத்திருக்கோயிலில் எழுந்தருளுவிக்கப்பட்ட திருமேனிகள் எவ்வாறு செய்யப்பட்டன என்பதையும் அக்கல் வெட்டுகள் தெரிவிக்கின்றன.

> பாதாதி கேசாந்தம் இருபதிற்று விரலே நாலு தோரை உசரத்து நாலு ஸ்ரீஹஸ்தம் உடையவராகக் கனமாக எழுந் தருளுவித்த சண்டேச்வர பிரசாத தேவர்[19]

என்னும் கல்வெட்டுப் பகுதி இதற்கு ஒரு சான்றாகும்.

### அரசனுடைய திருவுருவம்

திருக்கோயில்களைக் கட்டும் அரசனின் திருவுருவத்தை, அவ் வக் கோயிலில் ஒரு பகுதியில் கற்சிலையாக வடிப்பது பிற்காலத் தில் தோன்றிய வழக்கம். இவ்வழக்கத்திற்கு முன்னோடியாகப் பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியன், தன்னுடைய பேரரசனும், தஞ்சைப் பெரிய கோயிலை எடுப்பித்தவனுமான இராசராசனுடைய திருவுருவையும், அவனுடைய பட்டத்தரசி யான உலகமாதேவியாரின் திருவுருவையும் அக்கோயிலில் எழுந் தருளச் செய்துள்ளான். அவற்றுடன், நாள் தோறும் தேவாரத் திருப்பதிகங்களை ஓதி வழிபட்ட சந்திரசேகர தேவரையும் உடன் எழுந்தருளுவித்தான். இதனை,

> இரண்டு திருக்கையுடையராகக் கனமாக எழுந்தருளிவித்த பெரிய பெருமாள் பிரதிமம் ஒன்று......இரண்டு திருக்கை யுடையராகக் கனமாக எழுந்தருளிவித்த இவர் தம் பிராட்டி யார் ஒலோக (உலக) மாதேவியார் பிரதிமம் ஒன்று...பெரிய பெருமாளுக்குத் தேவார தேவராக எழுந்தருளிவித்த தேவர்...[20]

என்னும் கல்வெட்டுப் பகுதி அறிவிக்கின்றது.

இந்தச் சிலைகள், இப்பொழுது தஞ்சைப் பெரிய கோயிலில் இருப்பதாகத் தெரியவில்லை. அங்கு ஓர் அரசனுடைய வெண்கலச்

19 S. I. I. 2: No 29
20 S. I. I. Vol. 2; pt 2; No 38

சிலை ஒன்று இருக்கிறது. அதன் பீடத்தில் 'இராஜராஜன்' என்று பொறிக்கப்பட்டிருக்கிறது. இதனால், அது நம் பேரரசனுடைய சிலையாக இருத்தல்கூடும் என்று பலர் கருதுகின்றனர். ஆனால், தென்னிந்தியத் திருவுருவப்படச் சிற்பங்களைப் பற்றி ஆராய்ந்த டி.ஜி. ஆராவமுதன், இச்சிலை முதலாம் இராசராசனுடையதாக இருக்க இயலாது என்பதைப் பல காரணங்கள் காட்டி நிறுவியுள்ளார்.[21]

ஆனால், திருவியலூர் கோயிலில் செதுக்கப்பட்டுள்ள அரசன், அரசியர் சிலைகள், நம் இராசராசனையும், பட்டத்து அரசி உலக மாதேவியாரையும் குறிப்பன என்பதில் அறிஞரிடையே கருத்து வேற்றுமை இல்லை.

எனினும், இக்காலத்தில் அச்சிலையை இராசராசனுடையதாகவே சிலர் கருதுகின்றனர். பேரரசன், பேரரசி சிலைகளை மூவேந்த வேளான் பெரிய கோயிலில் எழுந்தருளுவித்தான். அதைப் போன்றே குந்தவைப் பிராட்டியார், தம் தந்தை சுந்தர சோழனின் படிமத்தையும் தாய் வானவன் மாதேவியின் படிமத்தையும் பெரிய கோயிலில் எழுந்தருளுவித்தார். அவற்றிற்கு நாள் வழிபாட்டிற்கு நிவந்தமாகப் பெரும் பொருளையும் அவ்வம்மை வழங்கியுள்ளார்.[22]

### அணிகலன்கள்

தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் தாம் எழுந்தருளச் செய்த தெய்வத் திருமேனிகளுக்கு, இராசராசன் பல திருவாபரணங்களை வழங்கியுள்ளான். அவனைப் போன்றே அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் அரசியல் அதிகாரிகளும் எண்ணற்ற அணிகலன்களை அக்கோயிலுக்குக் கொடுத்துள்ளனர். இராசராசன் வழங்கியவை திரள்மணி வடம், காறை, திருவடிக்காறை, திருப்பட்டிகை, திருமாலை, முத்து வளையல், திருச்சந்தம், திருமுடி, திருப்புறக் குடை, கண்ட நாண், புல்லிகைக் கண்டநாண், பாசமாலை, வாகுவலயம், பதக்கம், இரத்தின வளையல், இரத்தின கடகம், பவழ கடகம், வடத் திருவடி நிலை, சோகைச் சிடுக்கு, இரத்தின மோதிரம், நவரத்தின மோதிரம், திருப்பொற்பூ, திருநயநம் மாணிக்கத்தின் தாலி, முத்தின் உழுத்து, பிருஷ்ட கண்டிகை[23] முதலியனவாகும்.

இவ்வணிகலன்களில் வைரம், வைடூரியம், கோமேதகம், இரத்தினம், முத்து, பவழம் முதலிய விலைமதிப்பு மிக்க மணிகள்

[21] Aravamuthan, T. G: Portrait Sculpture in South India, p 36
[22] S I I., Vol 2; No 6

இழைக்கப் பெற்றிருந்தன. இவையல்லாமல், திருமுடி, வீரப்பட்டம், திருவுதரபந்தனம், சப்தசரி, பஞ்சசரி, திருக்குதம்பை தோடு, திருப்பட்டிகை, திருவடிக்காறை, ராதாவர்த்தம், திரள் மணி வடம், தாலிமணி வடம் போன்ற பொன் அணிகலன்களும், வடுகாவளி, ஏகாவலி, முத்தின் சூடகம், திருக்கால் வடம் முதலிய முத்தணிகலன்களும், இரத்தினம் இழைக்கப்பட்ட கண்டநாண், பதக்கம், வளையல், மோதிரம் போன்றவற்றையும் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அக்கோயிலுக்கு அளித்தனர்.

அணிகலன்களைக் கூறுமிடத்து அரக்கு, செப்பாணி, சரடுகளை நீக்கிப் பொன்னை நிறையெடுத்து, அவற்றில் மணிகள் பதிக்கப் பெற்றிருப்பின், அவை இவ்வளவு நிறையுடையன என்றும், இத் தகைய இயல்புடையன என்றும், அவற்றின் விலைமதிப்பு இத்தனை காசு என்றும் மதிப்பிட்டுக் குறிப்பிடும்[24] வழக்கத்தை நாம் காணுகின்றோம். இதனால், கோயிலுக்கு அளிக்கப்படும் கொடை பொருளைக் கருத்தாகப் போற்றிக் காக்கவேண்டும் என்ற ஆர்வமும் அக்கறையும் அரசன் முதற்கொண்டு கோயில் பணியாளர் வரையில் உள்ள அனைவரிடமும் இருந்து வந்தமை புலனாகின்றது.

## திருவிளக்கு

இக்கோயிலில் எப்பொழுதும் எரிந்து கொண்டிருக்கும் நந்தா விளக்குகளையும், பூசை காலத்தில் எரிப்பதற்குரிய திருவிளக்கு களையும் வழங்கியுள்ளான். அவ்விளக்குகளை எரிப்பதற்குத் தேவை யான நெய்க்காகப் பொற்காசுகள் பலவற்றைத் தனித்தனியே அளித்து நிவந்தங்கள் பலவற்றை அவன் ஏற்படுத்தியுள்ளான். இதனை,

> சுவஸ்தி ஸ்ரீ உடையார் ஸ்ரீராஜராஜ தேவர் குடுத்த கால்மாட்டிலுங், குடுத்தார் குடுத்த கால்மாட்டிலுங், காசும் அக்கமுங் கொடுத்து முதலான கால்மாட்டிலுந், திருவிளக்குக்கு அடித்தபடி கல்லில் வெட்டின[25]

என்று அவை தெரிவிக்கின்றன. இப்பொற்காசுகளில் ஒரு பகுதியைக் கொண்டோ, இவற்றை வட்டிக்கு விடுவதால் வரும் தொகையைக் கொண்டோ 'சாவா மூவாப் பேராடுகளை' வாங்கி, ஆடு மேய்க்கும் ஆயரிடம் ஒப்படைத்து, நாள்தோறும் அவ்வாயர் கோயிலுக்கு அளந்து கொடுக்க வேண்டிய நெய் இவ்வளவு' என்பதை நிர்ணயித்துள்ளமையும் இங்குக் கருதத்தக்கது. இதைப் போன்றே, பசுக்களையும் எருமைகளையும் வாங்கி ஆயரிடத்து

[23] ஷெ, No I; 8: 59; 86, 93
[24] SII, Vol 2: pt. I. PP77-84: pt 2 pp 152-161

ஒப்படைத்ததையும் சில கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.[26] இவ்வாறு கால்நடைகளை அறக்கட்டளையாக வழங்குகின்ற பொழுது ஆடெனில் தொண்ணூற்றாறும், பசுவாயின் நாற்பத்தெட்டும், எருமை என்றால் பதினாறும் வழங்குவது வழக்கம். அரசனைப் போன்றே மக்கள் பலரும் அவ்வப்போது திருவிளக்கு ஏற்றுவதற்கு நிவந்தங்கள் பலவற்றை இக்கோயிலுக்கு அளித்துள்ளனர். இவற்றால் திருக்கோயிலின் அன்றாட செயல்முறைக்கு இன்றியமையாத திரு விளக்கு எரிப்பதற்கு அரசனும் மக்களும் கொண்டிருந்த ஆர்வம் புலனாகின்றது.

## திருப்பரிகலங்கள்

இராசராசன் தஞ்சைப் பெரிய கோயிலின் அன்றாடத் தேவைக்குப் பயன்பட்ட திருப்பரிகலங்கள்(பாத்திரங்கள்) பலவற்றைக் கொடுத்துள்ளான். அவை வெள்ளியாலும் பொன்னாலும் செய்யப்பட்டவையாகும்.

வெள்ளிப் பாத்திரங்கள் காளம், தளிகை (திருவமுது படைக்கும் பாத்திரங்கள்), குடம் கலசப்பானை, மூக்கு வட்டிகை, வட்டில், பிங்காளம்(தாம்பாள வகையில் ஒன்று), சட்டுவம்(சட்டி) நெடுமடல், குறுமடல், இலைத்தட்டு, மண்டை(கொட்டாங்கச்சி வடிவில் அமைந்த கிண்ணம்), தட்டம்(தாம்பாளம்) போன்றவையாகும்.[27]

தளிகை, மண்டை, கெண்டி, தட்டம், சிடாரம், ஒட்டு வட்டில், கலசம், படிக்கம், குறுமடல், மாநவட்டில், இலைத்தட்டு. குடம், கறண்டிகைச் செப்பு, இலைச்செப்பு, கலசப்பானை, தாமரைத்தாள், திருப்பள்ளித் தொங்கல் மகுடம், திருக்கொற்றக் குடை ஆகியனவை பொன்னால் செய்யப்பட்ட பொருள்களாகும்.[28]

இவ்வாறு இராசராசன், அணிகலன்களாகவும், வெள்ளிப் பாத்திரங்களாகவும், பொன் பாத்திரங்களாகும் அளித்த பொருள்களை ஆராய்ந்து மதிப்பிட்ட பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் பொன அணிகலன்கள் 10,200 காசு(5,100 கழஞ்சு = 22.375 கிலோ அல்லது 2797 சவரன்) மதிப்புள்ளவை என்றும், வெள்ளிப் பாத்திரங்கள் 50650 கழஞ்சு(222 கிலோ) எடையுள்ளவை என்றும், பொன்பாத்திரங்கள் 41559 கழஞ்சு 1823.22 கிலோ அல்லது 22790 சவரன்) எடையுள்ளவை என்றும் கணக்கிட்டுள்ளார்.[29] அவற்றின் இக்காலத்திய மதிப்பு:

[25] S. I. I., Vol. 2; No. 63
[26] Ibid.; No 64
[27] S. I. I. Vol. 2; No. 91

| | | | |
|---|---|---|---|
| பொன் அணிகள் | ரூ | 8,39,100 | (சவரன் ரூ 300 வீதம்) |
| பொன் பாத்திரங்கள் | ரூ | 68,37,000 | ( " ) |
| வெள்ளிப் பாத்திரங்கள் | ரூ | 1,99,800 | (10 கிராம் ரூ 9 வீதம்) |
| மொத்தம் | ரூ | 78,75,900 | |

பகையரசர்களை வென்ற பொழுது, அந்நாடுகளில் இருந்து கொண்டு வந்த பொன், வெள்ளி ஆகியவற்றுள் பெரும்பகுதியை அவன் இக்கோயிலுக்குக் கொடுத்துள்ளான்.

இராசராசனைப் போன்றே அவனுடைய தமக்கையும் 10,000 கழஞ்சு(446.806 கிலோ அல்லது 5,586 சவரன்) பொன்னும், அணிகலன்கள், பாத்திரங்கள் 18,000 காசுக்கும் இக்கோயிலுக்கு வழங்கியதாகத் தெரிகிறது.[30] இன்று. இவற்றுள் பத்தாயிரத்தில் ஒரு பகுதி கூட அக்கோயிலில் இல்லை என்பது வருத்தத்திற்குரிய செய்தியாகும்.

இந்தக் கோயிலில், வழிபாடு யாதொரு தட்டுப்பாடுமின்றி நாள்தோறும் இனிது நடைபெறப் பேரரசன் பல ஊர்களை இதற்குத் தேவதானமாக வழங்கியுள்ளான். ஈழத்திலிருந்து 58,000 காசு மதிப்புள்ள 1,16,000 கலம் நெல்லையும், 1,100 காசு பணத்தையும் ஆண்டுதோறும் இக்கோயிலுக்கு அனுப்பு மாறு அவன் செய்துள்ளான். தமிழகத்தில் விடப்பட்டிருந்த ஆயிரக் கணக்கான வேலிநிலங்களில் இருந்து நூறாயிரத்திற்கும் மேற்பட்ட கலம் நெல்லினை இக்கோயிலின் பண்டாரத்தில் கொண்டு சேர்க்க வும் அவன் ஏற்பாடுகள் செய்துள்ளான். மற்றும், அவ்வூர்கள் அரசனுக்குச் செலுத்தவேண்டிய வரியினைத் தண்டி, அதைப் பொற்காசுகளாகப் பெருவுடையார் கோயில் பண்டாரத்தில் சேர்க்குமாறு அவன் செய்துள்ளான்.

> உடையார் ஸ்ரீராஜராஜ தேவர், தஞ்சாவூர் எடுப்பித்த திருக்கற்றளி ஸ்ரீராஜராஜீச்வரம் உடைய பரம்ஸ்வாமிக்கு வேண்டு(ம்) நிவந்தங்களுக்கு(த்) தேவதானமாகச் சோழ மண்டலத்தும் புறமண்டலங்களிலும் உடையார் ஸ்ரீராஜ ராஜ தேவர் குடுத்த ஊர்களில்[31]

என்னும் கல்வெட்டின் வாசகம் இங்கு கருதத்தக்கது.

இத்தகைய வளமிக்க பொருள் வருவாயினால், செல்வச் செழிப்பு மிக்க திருக்கோயிலாக அன்று இக்கோயில் விளங்கியதில் வியப்பில்லை.

28 Ibid. No 92-94
29 Nilakanta Sastri. K A.: Aspects of Indian History and Culture, P. 141
30 Ibid. P. 142.( 1 கழஞ்சு -- 68 grains; 2 காசு)
31 S.I. I. Vol. 2; No. 4, 5

**வழிபாட்டு முறை**

இக்கோயிலில் நாள் வழிபாடு நல்லமுறையில் நடைபெறுவதற்குச் சோழப் பேரரசன் பல நிவந்தங்களை ஏற்படுத்தி இருந்தான் முதலாவதாகக் கோயிலில் மூன்று வேளைகளிலும் இறைவனுக்கு அபிடேகம் தட்டின்றி நடைபெறுவதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. அக்காலத்தில் திருமஞ்சனம் என்னும் சொல், இறைவனுக்குச்செய்யப்படும் அபிடேகத்தைக் குறித்தது. இக்காலத்தில் வைணவ சமயத்தினரே, திருமஞ்சனம் என்னும் சொல்லைப் பயன்படுத்துகின்றனர், சைவர் அபிடேகம், திருமுழுக்கு என்னும் சொற்களைப் பயன்படுத்தி வருகின்றனர்.

> ஸ்ரீ ராஜராஜீச்வர முடையார் ஆடியருளத் திருமஞ்சன நீரும் தண்ணீர் மீதிலுமிட பெருஞ்சண்பக மொட்டுக்கும் ஏலவரிசிக்கும் இலாமச்சத்துக்கும் [32]

என்னும் கல்வெட்டுப் பகுதியில் பெருஞ்சண்பக மொட்டு, ஏலவரிசி, இலாமச்சம் ஆகிய நறுமணப் பொருள்களை ஊறவைத்த நீரால் திருமஞ்சனம் ஆட்டினதை நாம் அறியலாம்.

இறைவனுக்கு நாள் தோறும் படைக்கப்பட்ட திருவமுதைப் பற்றியும், திருவிழா சமயத்தில் சிறப்பாகப் படைக்கப்பட்ட திருவமுது வகை பற்றியும் சில கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. பழைய அரிசியால் சமைத்த போனகம் (அப்ப வகை), கறியமுது, பருப்பமுது, நெய்யமுது, தயிரமுது, அடைக்காயமுது (பாக்கு), வெள்ளிலை (வெற்றிலை) யமுது ஆகியவற்றை நாள்தோறும் மூன்று வேளையும் படைத்து வந்தனர். திருவிழாக் காலத்தில் எழுந்தருளுந் திருமேனிகளுக்கு (உற்சவ மூர்த்திகளுக்கு)ப் பழைய அரிசியால் சமைத்த போனகமும்; பருப்பு, பழைவரிசி மிளகு, சீரகம், சர்க்கரை, கடுகு, நெய் முதலியவற்றைக் கொண்டு செய்த அப்பக்காய்க்கறியமுதும்; மிளகு, சீரகம், சர்க்கரை, கொள்ளு, வாழைப்பழம், புளி, தயிர், நெய், கடுகு முதலியவற்றைக் கொண்டு சமைத்த புளியங்கறியமுதும், புளியிட்டடுங் கறியமுதும், காய்க்கறியமுதும், பொரிக்கறியமுதும் பிறவும்[33] அமுது செய்வித்தனர்.

இராசராசன், தஞ்சைப் பெரிய கோயிலில் எழுந்தருளுவித்த 'பிள்ளையார் கணபதியார்க்கு' வாழைப்பழம் அமுது செய்தருள, நாளும் வாழைப்பழம் நூற்றைம்பதும் வீதம் ஓராண்டிற்குத் தேவைப்பட்ட வாழைப்பழம் ஐம்பத்து நாலாயிரத்திற்குப் பின்

32 9 of 1917

33 தென்னார்க்காடு மாவட்டம் திருவாமாத்தூர் கோயில் கல்வெட்டில், இறைவனுக்கு நாள்தோறும் 'அக்கார அடிசில்' படைக்க இராசராசன் நிலமளித்ததாகக் கூறப்பட்டுள்ள செய்தியால், அக்கார அடிசில் (சர்க்கரைப் பொங்கல்) படைக்கும் பழக்கமும அக்காலத்திருந்தமை புலனாகின்றது

வருமாறு ஏற்பாடு செய்துள்ளான். அக்காலத்தில் ஒரு (பொன்) காசிற்கு வாழைப்பழம் ஆயிரத்து இருநூறு விலைக்குக் கொடுக்கப் பட்டது. அக்கணக்குப்படி, ஓர் ஆண்டிற்குத் தேவையான 54000 வாழைப்பழத்திற்கு நாற்பத்தைந்து காசுகள் முதலீடு செய்யப்பட்டது. இக்காசு ஒன்றிற்கு ஆண்டிற்கு அரைக்காற் காசு பொலிசையூட்டாக (வட்டியாக) சந்திராதித்தர் உள்ள வரையில் செல்லுமாறு அரசன் வைத்த காசு முன்னூற்று அறுபது என்று பெருவுடையார் கோயிலில் உள்ள அவனுடைய இருபத்தொன்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகளில் ஒன்று தெரிவிக்கிறது.[34]

அக்காலத்தில் திருவமுது சமைப்பதில் தேங்காய் பயன்படுத்தப்படவில்லை. இதைப் போன்றே இறைவனுக்குத் தேங்காய் படைக்கும் வழக்கமும் இருந்ததாகத் தெரியவில்லை; திருவமுது படைக்கும் பொழுது சாம்பிராணிப் புகை போடப்படுவதில்லை; சீதாரி புகைக்கப்பட்டது; சுற்பூரம் எரிக்கப்பட்டது.

## திருவிழாக்கள்

பெருவுடையார் கோயிலில் பலவகையான திருவிழாக்கள் கொண்டாடப்பட்டன. திங்கள்தோறும் கொண்டாடப்பட்ட திருவிழா, இராசராசன் பிறந்த திருச்சதயத்திருவிழாவும் கார்த்திகைத் திங்களில் கார்த்திகை விளக்கீட்டுத் திருவிழா ஒன்றும் ஆகப் பதின்மூன்று திங்கள் திருவிழாக்கள் எடுக்கப்பட்டன. சங்கராந்தித் (பொங்கல்) திருவிழா பன்னிரண்டு நாள்கள் கொண்டாடப் பட்டன. இவையல்லாமல் ஆட்டை (ஆண்டு)த் திருவிழா வைகாசித் திங்களில் ஒன்பது நாள்கள் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. ஆட்டைப் பெரிய திருவிழாவிற்குக் கொடியேற்றும் நாளையும், ஆடவல்லார் எழுந்தருளும் திருநாளையும் பறையறைந்து ஊர்மக்களுக்கு அறிவிப்பர். ஒவ்வொரு திங்கள் திருவிழாவிலும் இறைவனோடு வலம் வந்து வழிபாடியற்றும் சிவயோகியர் பதின்மர்க்கு உடையார் சாலையில் உணவளிப்பது வழக்கம். வைகாசிப் பெரிய திருவிழாவில் இராசராசேச்சுவர நாடகம் இத்திருக் கோயிலில் நடத்தப் பட்டது. அந் நாடகம் ஆடுவோனுக்கு ஆண்டாண்டுதோறும் நூற்றிருபதின் கல நெல்லை மானியமாக வழங்க இரண்டாம் இராசேந்திரன் நிவந்தம் அளித்துள்ளான்.[36] நாரணன் பட்டாதித்தன் என்ற சவர்ணன் ஒருவன் 'ஸ்ரீராசராச விசயம்' என்ற நூலைப் படித்து வருவதற்கு முதலாம்

[34] S I I Vol 2: No 37
[35] S I I Vol. 2: No. 2, pp 26-27
[36] 55 of 1893: S I I Vol 2; No 67

இராசேந்திரன் காலத்தில் நிலம் தானமாக அளிக்கப்பட்டது.[37] மேலே கண்ட இராசராசேச்சுர நாடகம் நடிக்கப்பட்டதாகும். இந்நூல் படிக்கப் பட்டதாகும். இரண்டும் தஞ்சைப் பெரிய கோயிலின் சிறப்பையும், இராசராசனின் அருமை பெருமைகளையும் எடுத்துரைத்தனவாகலாம்.

## திருக்கோயில் அலுவலர்

திருக்கோயில் அலுவல்களைச் செய்தவரை, அக்காலத்தில் ஸ்ரீகாரியம் பார்ப்பவர் என்று போற்றினர். தஞ்சைப் பெரிய கோயிலில் இராசராசன் காலத்திலும் இராசேந்திரன் காலத்திலும் ஸ்ரீகாரியம் செய்தவன் பொய்கை நாடு கிழவன் ஆதித்தன். சூரியனை தென்னவன் மூவேந்த வேளான் என்பதை நாம் முன்னரே கண்டோம். ஸ்ரீ காரியக் கண்காணி நாயகம் செய்தவன் பாண்டி நாடான இராசராச மண்டலத்துத் திருக்கானப் பேர்க் கூற்றத்துப் பாளூர் கிழவன் அரவணையான் மாலரிகேசன் என்பவனாவான். இக்கோயிலில் அருச்சகராக சைவாச்சாரியன் பவனபிடாரன் திருப்பணி செய்து வந்தார்.

## திருப்பதிகம் விண்ணப்பம்செய்வோர்

பிற்காலத்திய ஓதுவார் மூர்த்திகளுக்கு முன்னோடியாகப் பேரரசன் காலத்தில் தஞ்சைப் பெரிய கோயிலில் தேவாரம் ஓதுவதற்கு அமர்த்தப் பெற்றவர்களைத் திருப்பதியம் விண்ணப்பம் செய்வோர் என்று குறிப்பிடப்பட்டனர். இறைவன் திருமுன்னர் திருப்பதிகம் விண்ணப்பம் செய்வதற்காக இசைத்தமிழில் வல்லவர் நாற்பத்தெண்மரும், உடுக்கை வாசிப்பான் ஒருவனையும் கொட்டிமத்தளம் வாசிப்பான் ஒருவனையும் சேர்த்து ஐம்பதின்மர் இராசராசனால், அக்கோயிலில் அமர்த்தப் பெற்றனர்.[38] இவர்கள் அல்லாமல் கானபாடி. ஆரியம் பாடுவார், தமிழிசை பாடுநரும் அங்குப் பணிபுரிந்தனர். திருப்பதிகம் ஓதிய ஐம்பதின்மருக்கு ஒரு நாளைக்கு முக்குறுணி (மூன்று மரக்கால்) நெல் நிவந்தமாக அளிக்கப்பட்டது. திருப்பதியம் ஓதுவதற்கு அமர்த்தப்பட்டவர்கள் பார்ப்பன சமூகத்தைச் சேர்ந்தவர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

## ஆடல் மகளிர்

இக் கோயிலில் திருப்பணி செய்வதற்காகச், சோழ நாட்டின் பல பகுதிகளில் இருந்த கோயில்களில் இருந்து பல தேவரடியார்கள் தஞ்சையில் குடியேற்றப் பெற்றனர். இவ்வாறு குடியேற்றப்

[67] 20 of 1940-41

பட்ட பதியிலார் நானூறு பேர்களாவர். இராசராசேச் சுரத்தை அடுத்த வடபுறத்திலும் தென்புறத்திலும் அவர் களுக்காக வரிசை வரிசையாகத் தனி வீடுகள் கட்டிக் கொடுக் கப் பட்டன. ஒவ்வொரு தனிச்சேரிப் பெண்ணுக்கும் நம் பேரரசனால், ஒவ்வொரு வேலி நிலம் மாணியமாகக் கொடுக்கப் பட்டது.[39]

கோயில்களில் தொண்டாற்றிய பெண்களுள் பலவகையினர் இருந்தனர். அவர்களுக்குத் தேவரடியார் என்னும் பெயர் பொதுப் பெயராகப் பிற்காலத்தில் வழங்கலாயிற்று. சோழப் பேரரசர் காலத்தில் கோயிலில் திருவலகிடல், திருமெழுகிடல், திருவமுதுக்குரிய அரிசியைத் தூய்மை செய்தல் முதலியவற்றைச் செய்தவர் தேவரடியார் எனப்பட்டனர். இவர்களுள் ஒரு சிலரே இசை வல்லாராக இருந்தனர். கோயிலாகிய கற்றளியைச் சார்ந்து வாழ்ந்த பெண்டிரைத் தளிச் சேரிப் பெண்டிர் என்று சுட்டுவது இராசராசன் காலத்திய வழக்கம். அவர்கள் ஆடலிலும் பாடலிலும் வல்லவராக விளங்கினர். சிவனுக்கு, நக்கன் என்னும் பெயருண்டு, அப்பெயர் இப்பெண்டிரின் பெயர்களுக்கு முன்னால் அடையாக வழங் கப்பட்டது. நக்கன் தில்லை அழகி, நக்கன் தரணி, நக்கன் வீரசோழி என்னும் பெயர்கள் இதற்குப் போதிய சான்றாகும். சிவன் கோயிலில் பணிபுரிந்த தளிச்சேரிப் பெண்டிர் என்பதைத் தெரிவிக் கவே நக்கன் என்னும் அடைமொழி அவர்களுடைய பெயரோடு சேர்த்து வழங்கப்பட்டது எனலாம். இவர்களுடைய ஆடலுக்கு நட்டுவம் பிடிக்கும் நட்டுவனாரும் உடன் அமர்த்தப்பட்டனர். இப்பெண்டிரோடு நிருத்தம், சாக்கைக் கூத்து, நாடகம் ஆகிய வற்றை நடத்தும் நட்டுவனார்களுக்கு நிவந்தம் அளிக்கப்பட்டது. இவர்களை மேற்பார்வையிட ஓர் அதிகாரி நியமிக்கப்பட்டிருந் தான்.[40] இக்கோயிலில் நாட்டிய மாடிய பெண் ஒருத்திக்கு இராஜ ராஜி என்னும் பெயர் வழங்கியமை இங்குக் கருதத்தக்கது.

### திருக்கோயில் பணி மக்கள்

தஞ்சைப் பெரிய கோயிலில் நாள்தோறும் நாற்பத்து நான்கு வகையான பணிகளைச் செய்துவந்த பணி மக்கள் சற்றேறக்குறைய 915 பேராவர். அவர்கள் பண்டாரம் செய்வார், திருப்பரிசாரகம் செய்வான். நிலையாய் தீட்சித்தார். கணக்கெழுதுவான், கீழ்க் கணக்கு, தளிச்சேரிப் பெண்டுகள், நட்டவம் செய்வான் 'கொட் டாட்டுப் பாட்டு தாளத்தோடு பாடுபவன், கானபாடி, வங்கியம். பாடவியம், உடுக்கை வாசிப்பான், வீணை வாசிப்பவன், தமிழ்ப்

[39] S.I.I., Vol 2; No. 66.
[40] Ibid. No. 66.

பாடுவான், ஆரியம் பாடுவான். கொட்டி மத்தளம், முத்திரைச் சங்கு, பக்க வாத்தியம், காந்தர்வன், திருவாய்க் கேழ்வி, தளிச் சேரிப்பெண்டுகளுக்கும் காந்தர்விகளுக்கும் நாயகம் செய்வான், கணக்கு, கீழ்க்கணக்கு, உவைச்சர், சகடை கொட்டிகள், திருப்பள் ளிக்குத்தொங்கல் (மகரதோரணம், குடை,) பிடிக்கும் ஆள்கள், அவ்வாட்களுக்கு உள்படுவான், விளக்குடையார்கள், விளக்குடை யார்களுக்கு உள்படுவான் ஆள், நீர்த்தெளியான், சன்னுளியன் (கோலப் பொடி, திருநீறு தயாரிப்பவன்) திருமடைப்பள்ளி குயவருக்கு உள்படுவான், அவனுடைய ஆள், வண்ணத்தார், காவிதிமை செய்வான், நாவிதம் செய்வான், திரு (கணியன்), அவனுடைய கீழ் ஆள், கோலினிமை செய்வார், அம்பட்டான், தய்யான், இரத்தினத் தய்யான், கன்னுன், தச்சு ஆசாரியம், தச்சு, அவர்களுக்கு ஆள், பாணன், கண்காணித் தட்டான், திருமெய்காப்பு (காவல்காரன்) போன்ற பல தொழில்துறையைச் சேர்ந்த தொழில் வினைஞர் பணி புரிந்து வந்தனர். இத்தொழில் கள் ஒவ்வொன்றிலும் பலர் வேலை பார்த்தனர். சான்ருக, திருப் பரிசாரகம் செய்வான் (மடைப்பள்ளித் தொழில்) தொழிலில் 166 பேர் வேலை செய்தனர். ஆள் ஒன்றுக்கு ஒரு நாளைக்கு பதக்கு (2 மரக்கால்) நெல் கூலியாக அவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. இம்மடைப்பள்ளித் தொழிலுக்கு அமர்த்தப்பட்டோர் மாணி களாக (திருமணமாகாதவராக) இருந்தனர்.

இதைப்போன்று கணக்கு வேலை செய்தோர் நான்கு பேர் இருந்தனர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஆண்டிற்கு 200 கலம் நெல் ஊதியமாகும்; சங்கு ஊதும் பணியில் இருந்த 3 பேருக்கு, ஆண்டிற்கு 100 கலம் வீதம் நெல்லும், நீர்த்தெளித்த 4 பேருக்கு ஆண்டுக்கு 50 கலம் வீதம் கூலியளிக்கப்பட்டது. விளக்குப் பிடிப்போர் 7 பேர் இருந்தனர். அவர்களுக்கு ஆண்டிற்கு 50 கலம் நெல் கொடுக்கப்பட்டது. இவர்களை மேற்பார்வையிடும் ஆள் ஒருவன் இருந்தான். அவனுக்கு ஆண்டிற்கு 100 கலம் நெல் கூலியாகும்.[41] இவற்றைக் கூர்ந்து நோக்குகின்ற பொழுது ஓர் உண்மை புலனுகின்றது. ஊர் மக்களுக்குப் பலவகையான வேலை வாய்ப்புகளை அளிக்கும் ஒரு தொழில் நிலையமாகத் தஞ்சைத் திருக்கோயில் விளங்கியமை தெரிகிறது. அங்கு பணி புரிந்த தொழிலாளர் உவகையோடு பணி புரிவதற்கேற்ற வகையில் கணிசமான அளவிற்குக் கூலி நிர்ணயம் செய்யப் பட்டிருந்ததை நாம் உணர முடிகிறது.

41. S.I.I; Vol. 2: No 69, 70, 74, 79, 82, 86, 5.

## கோயிலில் காணப்படும் கல்வெட்டுகள்

இராசராசன் கால முதற்கொண்டு பல்வேறு அரசர்கள் பொறித்த கல்வெட்டுகள் இக்கோயிலில் இடம் பெற்றுள்ளன. இராசராசன் காலத்திய கல்வெட்டுகள் அறுபத்திநான்கும், இராசேந்திர சோழன் காலத்தியவை இருபத்தொன்பதும், முதலாம் குலோத்துங்கனுடைய ஒன்றும், விக்கிரம சோழனுடையது ஒன்றும், கோனேரின்மை கொண்டானுடையவை மூன்றும், மற்றும் சில அரசர்களின் கல்வெட்டுகளும் இக்கோயிலில் காணப்படுகின்றன. பிற்காலத்திய நாயக்க, மராட்டிய மன்னருடைய கல்வெட்டுகளும் இடம் பெற்றுள்ளன.

இவற்றுள் இராசராசன், இராசேந்திரன் ஆகியோருடைய கல்வெட்டுகளிலிருந்து அக்காலத்து மக்கள் பலராலும் எழுந்தருளுவிக்கப்பட்ட திருமேனிகள், அவற்றிற்காக அவர்கள் கொடுத்த விளைநிலங்கள், திருப்பரிகலங்கள், திருச்சின்னங்கள், திருவாபரணங்கள் ஆகியவற்றின் விரிவான செய்திகள் தெரிய வருகின்றன. மற்றும், இத்திருக்கோயில் வழிபாடு எக்காலத்தும், யாரும் குறை கூறுவதற்கு இடமில்லாமல் நடைபெறுவதற்கு 'உப்பு முதல் கற்பூரம்' ஈறுகத் தேவைப்படக்கூடிய எல்லாவகையான பொருள்களும் கிடைப்பதற்குரிய வகையில் பலதிறப்பட்ட ஏற்பாடுகள் சோழ மன்னரால் செய்யப்பட்டிருந்தமை இக் கல்வெட்டுகளால் புலனுகின்றன.

## கருவூர்த் தேவர் கண்ட கலைக்கோயில்

இராசராசன் காலத்தில் வாழ்ந்த சிவயோகி கருவூர்த் தேவர். தஞ்சைப் பெரிய கோயில் கட்டப்பட்டதையொட்டி நாட்டு மக்களிடையே வழங்கி வரும் கதைகளுள், கருவூர்த் தேவரின் சித்து விளையாட்டுகளும் ஆன்மிகப் பண்பாடும் முக்கிய இடம் பெற்றுள்ளன. இராசராசன் எடுப்பித்த இராசேச்சுரத்து இறைவனைக், கருவூர்த் தேவர் போற்றிப் பாடியுள்ளார். அப்பாடல்கள், சைவத்திருமுறைகளுள் ஒன்பதாம் திருமுறையான திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னும் நூலுள், திருவிசைப்பாப் பகுதியில் ஆன்றேர்களால் சேர்க்கப் பட்டுள்ளன.

அப்பாடல்கள் இறை பக்தி மணங் கமழுவன; இசையோடு ஓதுவோர், கேட்போர் உள்ளங்களை உருக்குவன; இறை அன்பினைப் பெருக்கி இன்பம் பயப்பன. இவற்றோடு அக்காலத்திய தஞ்சை மாநகரின் அமைப்பையும் சிறப்பையும் அறிவுறுத்துவன; மன்னர் மன்னனின் மாட்சியைப் பாரறியப் பறை சாற்றுவன.

குடைகெழு மன்னர் முடியொடு முடி தேய்த்து உதிர்ந்த மணிகள் ஒளிரும் தெருக்களும் கடலெனக் கம்பலை மிக்க தெருவும், நெடு நிலை மாடமும், அகில் கமழ் மாளிகையும், எழில்மிகு மங்கையர் யாழ் பயிலிடமும், மின்னெடும் புருவத்து இளமயிலனைய ஆடல் மகளிர் களிநடம் பயிலும் நாடக சாலையும், கழுநீர்ப் பொய்கை யும், திருப்பூஞ் சோலையும், கோட்டை மதிலும், முதலைகள் வாழும் ஆழ்ந்த அகழியும், பிறவும் ஏரும் எழிலும் பெற்று வீறு டன் விளங்கிய காட்சியை அவர் சொல்லோவியமாகத் தீட்டிக் காட்டியுள்ளார். கருவூர்த் தேவர் பாடியருளிய திருவிசைப்பா

உலகெலாந் தொழவந்தெழு கதிர்ப்பரிதி
ஒன்று நூருயிரங் கோடி
அலகெலாம் பொதிந்த திருவுடம்பச்சோ
அங்ஙனே அழகிதோ வரணம்
பலகுலாம் படைசெய் நெடுநிலை மாடம்
பருவரை ஞாங்கர் வெண்திங்கள்
இலகுலாம் பதணத்து இஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே

என்னும் பாடலொடு தொடங்குகிறது.

இராசராசன் போர்க்களத்தில் பெற்ற வெற்றிகளையும், நாட்டாட்சியில் சாதித்த அரும்பெருஞ் சாதனைகளையும், மக்கள் நலன் கருதி ஆற்றிய அரும்பெரும் பணிகளையும் விஞ்சும் வகையில், நாளும் அவனுடைய நற்புகழை நானிலமெல்லாம் போற்றுமாறு பறைசாற்றிக் கொண்டிருப்பது, அவன் எடுப்பித்த இத்திருக் கோயிலேயாகும்.

# 12. குறுநில மன்னர்

## பேரரசன் பெற்ற பேறு

விசயாலயன் சோழ அரச மரபிற்குப் புத்துயிர் அளித்தான். அவன் வழிவந்த மன்னர் பலரும் சோழ அரசினை வலிவும் பொலிவும் உடையதாக்க ஒல்லும் வகையெல்லாம், ஓயாது உழைத்தனர். இராசராசன் காலத்தில் சோழ அரசு, ஒரு பேரரசாக விரிவடைந்தது; சோழரின் தொல்குடி புதுவாழ்வைப் பெற்றது; தமிழகம் இரண்டாவது பொற்காலத்தைக் கண்டது. இத்தகைய சிறப்பினையும் பொன்றாப் புகழினையும் சோழப் பேரரசு அடைந்ததற்குரிய காரணங்கள் பல. அவற்றுள் முதன்மையானது சோழப் பெருமன்னனின் அறிவுத் திறனும், செயல் ஆற்றும் திறனுமேயாகும். நாட்டாட்சியில் நல்ல பல செயல்களைச் செய்யும் பொழுது, இராசராசனுக்கு நம்பிக்கைக்குரிய படைத் தலைவர்களும் வினைத்திட்பம் வாய்ந்த ஆட்சியாளர்களும், கடமையைக் கண்ணாகக் கருதும் அரசியல் அதிகாரிகளும் தேவைப் பட்டனர். இராசராசனுடைய நற்பேறாகப் பேராற்றலும் பெருந் திறனும் வாய்ந்த மகனாக இராசேந்திரன் வாய்த்தான். சோழப் பேரரசின் மாதண்ட நாயகனாக, பேரரசனின் திருமகனே பல போர்களை நடத்தினான்; தந்தைக்கு வெற்றி மாலைகள் பலவற்றை சூட்டினான்.

இதைப் போன்று மற்றும் பலர் நம் சரித்திர நாயகனுக்கு உற்ற துணையாக இருந்தனர். அவர்களைக் குறுநில மன்னர் என்றும், உயர்நிலை அரசியல் அதிகாரிகள் என்றும் நாம் பாகு படுத்திக் கூறலாம். சோழப் பேரரசைத் தாங்கிய தனிப்பெருந் தூண்களாக அவர்கள் விளங்கினர். அவர்களுடைய பற்றுறுதியும், தன்னலமற்ற கடமையுணர்வும், இராசராசன்பால் அவர்கள் கொண்டிருந்த அன்புமிகு ஈடுபாடும் பேரரசனின் போர்முரசு,

எங்கும், எப்பொழுதும் வெற்றி முரசாக ஒலிக்கச் செய்தன. அவர்களுடைய அருந்தொண்டால் சோழப் பேரரசில், 'பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும் கொல்குறும்பும் இல்லாமற் போயின; உறுபசியும் ஓவாப்பிணியும், செறுபகையும் சேராது ஒழிந்தன; தள்ளா விளையுள் உண்டாயிற்று; தக்காரும் தாழ்விலாச் செல்வரும் சேர்ந்து வாழ்ந்தனர்.

இவ்வாறு நாட்டைச் சிறப்புற்று விளங்கச் செய்வதற்கு, அரசன் கையாண்ட —பின்பற்றிய முறைகள் —பெரும்பயன் தந்தன. தான் செல்வத்தைப் பெற்றதன் பயன், சுற்றத்தால் சுற்றப்பட வொழுகல் என்பதை அவன் நன்குணர்ந்து இருந்தான்; பற்றற்ற கண்ணும் பழைமை பாராட்டி, அனைவரையும் அவன் அணைத்துச் சென்றான்.

## மன்னர் மன்னனின் மூதறிவு

புதிய நாடுகளைக் கைப்பற்றிய காலத்தில் இராசராசன் பின்பற்றிய நெறிமுறைகள், அவனுடைய மூதறிவையும் அரசியல் விரகினையும் அடிப்படையாகக் கொண்டு விளங்கின. கைப்பற்றிய நாடுகளைப் பெயரளவில் வென்றதாக அவன் விட்டுவிடவில்லை. அவற்றில், தன்னுடைய அரசப் பிரதிநிதிகளை அமர்த்தி, நாட்டு மக்களின் நலன் கருதி, குழவியைப் போற்றிக் காப்பதைப் போன்று —குழவி கொள்வாரின் குடி புரந்தந்து —காக்குமாறு அவன் செய்தான்.

வென்ற நாடுகளின் அரசனோ, இளவரசனோ உண்மையும் பற்றுறுதியும் உடையவர்கள் என்பதை உணர்ந்தால், அவர்களை அந்நாடுகளின் மாநிலத் தலைவர்களாக்கி, அவர்களிடம் ஆட்சிப் பொறுப்பை அவன் ஒப்படைத்துள்ளான்; அந்நாடுகளில், தன்னுடைய நிலைப்படை ஒன்றை நிறுவி, அவற்றின் தலைவர்களைக் கண்காணித்து வருமாறு செய்துள்ளான்.

வேங்கி நாட்டைக் கலிங்க மன்னனிடம் இருந்து கைப்பற்றிய இராசராசன், அதைத் தன் பேரரசோடு இணைத்துக் கொள்ளவில்லை. தன்னுடைய மருமகனின் அண்ணனான சக்திவர்மனிடம் ஒப்படைத்தான்; தன்னுடைய பேரரசின் வடகிழக்கு எல்லையில், வேங்கி நாட்டைத் தன்னுரிமை மிக்க தனியரசாகவே விளங்கச் செய்தான்.

## குறுநில மன்னரின் வரலாறு

இவ்வாறு பல குறுநில மன்னர் சோழப் பேரரசின் வெண்கொற்றக் குடைக் கீழ், அதனுடைய எழுச்சிக்கும் மலர்ச்சிக்கும்

அரிய தொண்டுகள் பல புரிந்துள்ளனர். டாக்டர் பிளீட் (Fleet) என்னும் தொல்பொருள் ஆய்வாளர் வேமூேர் இடத்தில் குறுநில மன்னரைப் பற்றித் தெரிவித்துள்ள கருத்து இங்கு குறிப்பிடத்தக்கதாகும்;

> முக்கியமான குறுநில மன்னர்களின் குடும்பங்கள் பல, மாண்புமிகு அரச மரபுகள் சிறப்புற்று விளங்க அரும்பணி ஆற்றியுள்ளன. அக்குறு நில மன்னரின் குடும்பங்களைச் சிறந்த கருவியாகப் பயன்படுத்திக் கொண்டதன் மூலமே, தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்த பேரரசர் அனைவரும், தங்களுடைய நாட்டினைப் பலரும் போற்றத் தக்கவாறு ஆட்சி புரிந்துள்ளனர். எனவே, முக்கியத்துவம் வாய்ந்த குறுநில மன்னரின் குடும்பங்களைப் பற்றிய விரிவான வரலாறு இடம் பெறாத (பெருஞ் சிறப்பும் புகழும் வாய்ந்த) எந்த அரச மரபின் வரலாற்றையும் முழு நிறைவுடையது என்று நாம் கூற இயலாது"[1]

இவ்வகையில் நோக்குகின்ற பொழுது, நம் இராசராசனின் வரலாற்றை முழு நிறைவுடையதாக்க, நாமும் அக்காலத்தில் ஒளியுடன் விளங்கிய குறுநில மன்னரின் வரலாற்றை இங்கு காண்போம்.

## பழுவேட்டரையர்

இராசராசன் ஆட்சிக் காலத்தில், அவனுடைய மேலாண்மையை ஏற்றுக் கொண்டு திறை செலுத்தி வந்த அரச குடும்பங்கள்—குறுநில மன்னரின் அரச மரபுகள்—பல இருந்தன. அவற்றுள் முதன்மையானது பழுவேட்டரையர் மரபு. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில், உடையார் பாளையம் வட்டத்தில் பழுவூரில் அந்த அரச குடும்பம் வாழ்ந்து வந்தது. 'வேள்' என்பதும், 'அரையர்' என்பதும் குறுநில மன்னரைக் குறிக்கும் பெயர்களாகும். பழுவூரில் 'வேளிர்' எனவும், 'அரையர்' எனவும் சிறப்புற்று விளங்கிய அரச குடும்பத்தினர், விசயாலய சோழ அரச மரபினரின் ஆட்சிக் காலம் நெடுகச் சிறப்புமிக்க குறுநில மன்னராக விளங்கினர். கீழைப் பழுவூர், மேலைப் பழுவூர் என்று பழுவூர் இரு பகுதிகளாக இராசராசன் காலத்தில் பிரிந்து இருந்தது. பழுவேட்டரையர் சேர மன்னரின் ஒரு கிளையினராகக் கருதப்படுகின்றனர். சேரருக்கு உரியது பனம்பூ மாலை. பழுவேட்டரையரின் பனைமரச் சின்னமுடைய கொடி அவர்களைச் சேரரோடு தொடர்புடையவராகக் கருத இடம் தருகிறது.

முதலாம் பராந்தக சோழன் கால முதல், அவர்கள் சோழர் குடியோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். முதலாம் பராந்தகன் காலத்தில் நடைபெற்ற போர்களில் பழுவேட்டரையர் குடியைச் சேர்ந்த கண்டன் அமுதன் சோழனுக்குப் பேருதவி புரிந்துள்ளான். அன்பிற் செப்பேட்டிலிருந்து முதலாம் பராந்தகன் பழுவேட்டரையர் மகளை மணம் புரிந்து கொண்டான் என்பதை நாம் அறிகிறோம். அவ்விருவருக்கும் பிறந்தவனே இராசராச சோழனின் பாட்டனை அரிஞ்சயச் சோழனாவான். இராசராசனுடைய மனைவியருள், பஞ்சவன் மாதேவி என்பாள் பழுவேட்டரையர் குடியைச் சேர்ந்த அரசிளங் குமரியாவாள்.[2]

இராசராசன் காலத்தில் சிறப்புற்று விளங்கிய பழுவூர்க் குறுநில மன்னன், அடிகள் பழுவேட்டரையன் கண்டன் மறவன் என்பவனாவான். அவன், சோழப் பேரரசனின் மேலாண்மையை ஏற்றுக் கொண்டு, திறை செலுத்திவந்தான். இச்செய்தியை மேலைப் பழுவூரிலும் கீழைப் பழுவூரிலும் காணப்படும் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இராசராசனின் மூன்றாம் ஆட்சியாண்டு முதலே, அவன் சோழ மன்னனுக்குத் திறை செலுத்திவந்தான். பேரரசனுக்குரிய உரிமைகள் பல அவனுக்கு வழங்கப்பட்டிருந்தன. ஏறக்குறைய அனைத்துரிமையும் வாய்ந்த ஒரு தனியரசனாக அவன் விளங்கினான். அவனுடைய அதிகாரிகளிலும் பெருந்தரம், சிறுதரம் என்ற பிரிவினர் இருந்தனர்.[3]

இப்பழுவேட்டரையன், மேலைப் பழுவூரில் ஒரு கோயிலைக் கட்டியுள்ளான். அதற்குத் 'திருத்தோற்றம் உடையார் திருக்கோயில்' என்பது பெயர். பழுவூரில் நிலவரித் தீர்வையை அவன் ஒழுங்குபடுத்தியுள்ளான். நந்திபுரத்தில் தொன்று தொட்டு வழக்கிலிருந்து வந்த மரபினை முன்மாதிரியாகக் கொண்டு அவன் இங்கு தீர்வை விதிக்கப் பயன்படுத்தியதாகத் தெரிகிறது.[4] இராசராசனின் பதினைந்தாம் ஆட்சியாண்டு வரையில் அவன் உயிருடன் இருந்தான்.

## கொல்லி மழவன்

கொங்கு நாட்டை, மேலைக் கங்கரிடம் இருந்து இராசராசன் கைப்பற்றியதை நாம் முன்னரே கண்டோம். அந்நாட்டின், தென்கிழக்குப் பகுதியில் மழநாடு இருந்தது. அதனை மழ கொங்கம் என்று சுட்டுவது மரபு. சோழருக்கும் மழ நாட்டுக் குறுநில

[2] 385 of 1924
[3] S. I. I., Vol. 5. Nos. 667, 670, 671, 672, 676
[4] 365, 367 of 1924

மன்னருக்கும் நெருங்கிய தொடர்பு இருந்து வந்தது. கண்டராதித்த சோழனின் மனைவியான செம்பியன் மாதேவியார், 'மழபெருமாள் மகளா'வர்.[5] உத்தம சோழனின் மனைவியருள், மழபாடித் தென்னவன் மாதேவி என்பாள் மழவர் குடியைச் சேர்ந்தவளாவள்.

இராசராசன் காலத்தில் கொல்லி மழவன் ஒற்றியூரன் பிரதி கண்ட வர்மன் என்பவன் சிறப்புற்று விளங்கினான். சுந்தரசோழன் காலத்தில் ஈழத்துப் போரில் இறந்து பட்ட, தன் தந்தையின் நினைவாகத் தூசியூரில், அவன் கிணறு ஒன்றை வெட்டுவித்தான். இராசராசனுக்கு அவன் திறை செலுத்திவந்த செய்தியைத், திருச்செங்கோட்டுச் செப்பேடு தெரிவிக்கிறது.[6] ஈழத்துப் போரில் இறந்துவிட்ட அவன் தந்தை, சோழ மன்னனிடம் படைத் தலைவனாகப் பணி புரிந்திருக்கலாம்.

## கொடும்பாளூரின் குறுநில மன்னர்

தென்னிந்திய வரலாற்றில் இருள் செறிந்திருந்த காலம் ஒன்று உண்டு. அக்காலத்தில், கொடும்பாளூர்க் கோமான்கள் தமிழக அரசியல் வானில், ஒளிவிடும் விண்மீன்களாகப் பிரகாசித்தனர். கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் கொடும்பாளூரின் வேளிர் குடியினர் ஆட்சி புரிந்து வந்தனர். அவர்கள், பண்டைய இருக்கு வேளிர் மரபைச் சேர்ந்தவராவர்.[7] மூவர் கோவில் கல்வெட்டுகளிலிருந்து, களப்பிரர் இடையீட்டினால், கொடும்பாளூர் குறுநில மன்னரின் ஆட்சிக்கு எத்தகைய இன்னலும் உண்டாகவில்லை என்பது தெரிகிறது.

கி. பி. 615 ஆம் ஆண்டு அளவில், கொடும்பாளூரைத் தலைநகராகக் கொண்டு பரதுர்க்க மர்த்தனன் என்னும் வேளிர் குல அரசன் ஆண்டுவந்தான். அவனுடைய வழியில் வந்த பூதி விக்கிரம கேசரி என்னும் வேளிர் தலைவன் சிறப்புமிக்கவனாவான். முதல் பராந்தக சோழனின் தம்பி கன்னர தேவன், அவனுடைய மனைவி பூதிமாதேவ அடிகள் என்பவளாவள். அவள் கொடும்பாளூர் குறுநில மன்னனின் மகளாவாள். பராந்தகனின் இரண்டாவது மகளான அநுபாமா, கொடும்பாளூர் சிற்றரசன் ஒருவனுடைய மனைவியாவாள். சுந்தர சோழன் காலத்தில், ஆதித்த கரிகாலன் தலைமையில், பாண்டிய நாட்டின் மீது சோழ அரசன் படையெடுத்தான். அப்போரில் சோழ இளவரசனுக்கு உற்ற துணையாக இருந்து கடும்போர் புரிந்தவன் பூதி விக்கிரம கேசரி

[5] S. I. I. Vol. 2 : 75
[6] S. I. I.; Vol. 3, No. 213
[7] Arokiaswami, M. : The Early History of The Vellar Basin, P. 65

யாவான். பல்லவனைக் காவிரிக் கரையில் அவன் வென்றதாகவும், வீரபாண்டியனைத் தோற்கடித்ததாகவும்,[8] வஞ்சிவேளைக் கொன்றதாகவும் அவனுடைய மூவர் கோயில் கல்வெட்டு கூறுகிறது. அவன் கற்றளி என்னும் சோழ இளவரசியை மணம் புரிந்து கொண்டிருந்தான். அவர்களுக்கு இரு ஆண்மக்கள் பிறந்தனர். அவர்களுக்குப் பராந்தகன், ஆதித்திய வர்மன் என்னும் பெயர்கள் இடப்பட்டன. அவர்களுடைய பெயர்கள் சோழர் குடிக்கும் இருக்குவேளிர் குடும்பத்திற்கும் இருந்து வந்த நெருக்கமான தொடர்பினைத் தெரிவிக்கின்றன. பூதி விக்கிரம கேசரிக்குப் பராந்தக இளங்கோவேளார் என்னும் பட்டப் பெயர் வழங்கியது. இதனால், சோழப் பேரரசன் இரண்டாம் பராந்தகனின் மேலாண்மையை ஏற்றுக் கொண்ட குறுநில மன்னர், இந்த இருங்கோவேள் என்பது புலனாகின்றது. அவனுக்குத் தென்னவன் இளங்கோவேளார், மறவன் பூதியார் என்னும் சிறப்புப் பெயர்களும் வழங்கின.

அவனுடைய மகனான பராந்தகன் சிறியவேளான், சிங்களத்தின் மீது படையெடுத்தான். சோழ மன்னனின் படைத்தலைவனாக அவன் பணி புரிந்தான். சிங்களப் போரில் அவன் மாண்டான். இதனை 'ஈழத்துப்பட்ட கொடும்பாளூர் வேளான் சிறிய வேளான்' என்று ஒரு கல்வெட்டு குறிப்பிடுவதனால் நாம் அறிய முடிகிறது.[9]

இராசராசன் காலத்தில் கொடும்பாளூரில் சிறப்புற்று விளங்கிய குறுநில மன்னன் வேளான் சுந்தர சோழனாகும். அவனுடைய தந்தை பராந்தகன் சிறிய வேளான் என்பவனாவான். அவனுக்குத் திருக்கற்றளிப் பிச்சன் என்னும் சிறப்புப் பெயர் வழங்கியது. இதனால், கற்கோயில்(கற்றளி) கட்டுவதில் அவனுக்குப் பேரீடுபாடு (பித்து-பிச்சு) இருந்திருக்க வேண்டுமென்று தெரிகிறது. அவனே ஈழத்துப் போரில் உயிர் நீத்தவன் என்று திருவெண்காட்டுக் கல்வெட்டு தெரிவிக்கிறது.[10] வேளான் சுந்தர சோழன் இராசராசனின் ஆட்சிக்குட்பட்டு, திறை செலுத்தி வந்தான் என்பதைக் கல்வெட்டு ஒன்று அறிவிக்கிறது.

பூதி விக்கிரம கேசரியின் மகளான பூதி ஆதித்த பிடாரி என்பவளை இராசராச சோழனின் பாட்டனான அரிஞ்சயன் மணம் செய்து கொண்டிருந்தான். அவ்வரசி திருச்சிராப்பள்ளிக்கு அருகிலுள்ள திருச்செந்துறைக் கோயிலைக் கற்றளியாக்கினான்;

[8] A. R. E., 1907-8; PP. 81-82
[9] S. I. I., Vol. 5; No. 980
[10] Ibid.

அக்கோயிலின் நாள் வழிபாட்டிற்கு, அவள் அறக்கட்டளை ஏற்படுத்தியுள்ளாள். இருங்கோவேளார் மகள் வானவன் மாதேவியை உத்தம சோழன் மணம்புரிந்திருந்தான். இவ்வாறு சோழர் குடிக்கும் கொடும்பாளூர் வேளிர் குடிக்கும் நெருங்கிய மண வுறவு இருந்து வந்தது.

**மலையமான்**

இன்றைய திருக்கோவலூரைச் சுற்றியுள்ள பகுதியை 'மலை நாடு' என்பர். அந்நாட்டை ஆண்ட மன்னரை மலையமான்கள் என்று சுட்டுவர். சங்க காலத்தில் மலையமான் திருமுடிக் காரி என்பான் மாவீரனாகவும் சிறந்த கொடையாளியாகவும் விளங்கினான். அவன் வழிவந்தோர் அந்நாட்டை ஆண்டுவந்தனர். மலையமானாடு, மலாடு, மிலாடு என்று காலப் போக்கில் திரிபுற்றது. முதலாம் பராந்தக சோழன் காலத்தில் வீர சோழ மிலாடுடையான் மலைநாட்டை ஆட்சி புரிந்தான்.[11] முதலாம் பராந்தகனுடைய ஆட்சியின் இறுதிக் காலத்தில் தொண்டை நாட்டைக் கன்னர தேவன் என்னும் இராஷ்டிரகூட மன்னன் கைப்பற்றினன். அப்போரில் நரசிம்மன் சத்திநாதன் என்ற மிலாடுடையான் சோழரின் சார்பில் போரிட்டான்.[12]

கண்டராதித்தன் காலத்தில்(கி. பி. 949-957) சித்த வடவன் என்றொரு மலையமான் மாவீரனாய் விளங்கினன்.[13] சுந்தர சோழனின் மனைவியான வானவன் மாதேவி என்னும் அம்மையார் மலையமான் நாட்டுச் சிற்றரசனின் மகளாவார்.[14] அவ்வம்மை தன் கணவருடன் உடன்கட்டை ஏறியதைப் பாராட்டும் கல்வெட்டொன்று திருக்கோவலூரில் இராசராசன் காலத்தில் பொறிக்கப்பட்டிருக்கிறது. அதில்,

> ... ... ... தொங்கல் மணிமுடி வளவன்
> சுந்தர சோழன் மந்தரதாரன்
> திருப்புய முயங்குந் தேவி விருப்புடன்
> வந்துதித் தருளிய மலையர் திருக்குலத்தோர்[15]

என்னும் வாசகம் இச்செய்தியைத் தெரிவிக்கிறது.

உத்தம சோழன் காலத்தில், மலையமான் சித்த வடத்தடிகள் என்பவன் குறுநில மன்னனாய் இருந்தான். அவனுடைய மகளான

[11] 241 of 1943-44
[12] E.I., Vol. 7; P. 135; A R.E. 1936-37, P. 68
[13] 252 of 1937
[14] S.I.I., Vol. 7; No. 863.
[15] Ibid-

சித்த வடவன் சூட்டியாரை உத்தம சோழன் திருமணம் செய்து கொண்டிருந்தான்.[16]

முதலாம் இராசராசன் காலத்தில் மலை நாட்டை இராமன் சித்த வடவன் என்ற விக்கிரம சோழ மிலாடுடையான் ஆண்டு வந்தான்.[17] அவன் இராசராசனின் அம்மானாக இருந்திருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். மற்றொருவன் உத்தம சோழ மிலாடுடையான் என்பவனாவான். அவன் சோழரின் படைத் தலைவருள் ஒருவன்; சோழருக்கும் சாளுக்கியருக்கும் நடந்த போரில் அவன் இறந்து பட்டான்.[18] இராசராசனின் மனைவியருள் வானவன் மாதேவி என்பவள் மலையமான் மன்னர் குடியைச் சேர்ந்தவளாவாள்.[19]

### கங்கர் குல மன்னர்

திருவையன் சங்கரதேவன் என்பவன் இராசராசன் ஆட்சிக் காலத்தில் திறை செலுத்திவந்த ஒரு குறுநில மன்னன், அவன் குவலாளபுரத்துக் கங்கரின் வழிவந்தவன். சோழப் பேரரசனின் பதினாறும் ஆட்சியாண்டில் வல்லம் என்னும் ஊரிலுள்ள கோயிலுக்கு அவன் திருப்பணி செய்துள்ளதை அங்குள்ள கல்வெட்டு ஒன்றால் நாம் அறிகிறோம். தன்னுடைய தகப்பனாரின் நினைவாகத், திருவையேச்சுரம் என்னும் கோயிலை அவன் வல்லத்தில் கட்டியுள்ளான். அதற்கு அர்ச்சனாபோகம் போன்ற அறக் கட்டளைகளை அவன் ஏற்படுத்தியுள்ளான். அவன் நீண்ட நெடும் பட்டங்களைப் பூண்டிருந்தான். இவற்றைத் தவிர, அவனைப் பற்றிய பிற செய்திகள் ஒன்றும் கிடைக்கவில்லை.[20]

### வைதும்ப அரசன்

ஆந்திர நாட்டில் கடப்பை மாவட்டத்தில் உள்ள இங்கல்லூர் நாட்டை அவன் ஆண்டு வந்தான். வைதும்பர் என்பார் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் ரேநாண்டு ஏழாயிரம் என்னும் நாட்டை, ஆட்சிபுரிந்த அரச மரபினராவர். அவர்கள், தெலுங்கு மொழி பேசியவர்கள் என்பது அவர்களுடைய கல்வெட்டுகளால் தெரிய வருகிறது. வாணர் குலத்திற்கு நண்பராகவும், கங்கர் மரபிற்குக் கொடிய எதிரிகளாகவும் வைதும்பர் இருந்து வந்தனர்.

16 193 of 1930-31; 325 of 1907.
17 292 of 1922.
18 5 of 1937-38.
19 S.I.I. : Vol. 5: No. 982; P. 368.
20 S.I.I. Vol. 3; No 51

முதலாம் பராந்தக சோழனிடம், வைதும்ப மன்னன் ஒருவன் தோல்வியுற்றான். வைதும்ப மகாராசன் என்னும் பட்டமுடைய இரண்டு சிற்றரசர் பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தொண்டை மண்டலப் பகுதியில் செல்வாக்குற்றிருந்தனர்.[21] பராந்தகனிடம் நாட்டினை இழந்த வைதும்ப மன்னன், இராஷ்டிரகூட மன்னனிடம் அடைக்கலம் புகுந்தான். இராசராசனின் பாட்டனான அரிஞ்சய சோழன், வைதும்ப அரசனின் மகளான கல்யாணியை மணம் புரிந்து கொண்டிருந்தான் என்று அன்பில் செப்பேடு தெரிவிக்கிறது.[22] இவ்வம்மையாருக்குப் பிறந்தவனே இரண்டாம் பராந்தகன் எனப்படும் சுந்தர சோழன். இதனால், இராசராசனின் பாட்டி வைதும்பர் மரபைச் சேர்ந்த அரசிளங் குமரி என்பது புலனாகின்றது.

இராசராசனின் இருபதாம் ஆட்சியாண்டில், நன்னமரையன் என்னும் வைதும்பக் குறுநில மன்னன் வட ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள திருவல்லம் கோயிலுக்கு, அறக்கட்டளை வழங்கியுள்ளான். மகாராசப் பாடியில், இங்கல்லூர் நாட்டை ஆண்ட துக்கரை என்பவனுடைய மகனே நன்னமரையன். நெல்லூர் மாவட்டத்தில் உள்ள ரெட்டிப்பாளையம் கல்வெட்டினால், விஷ்ணு தேவனாகிய மும்முடி வைதும்ப மகாராசன் என்னும் மற்றோர் சிற்றரசன் அக்காலத்தில் வாழ்ந்ததாகத் தெரிகிறது. இவ்விரு வைதும்ப மன்னரும் சோழப் பேரரசனுக்குத் திறை செலுத்தியவராவர்.

**வாணர் குல மன்னன்**

தமிழகத்தின் இடைக்காலக் குறுநில மன்னர்களுள் சீர்த்தி மிக்கவர் வாணர் குலத்தவராவர். பாலாற்றுக்கு வடக்கே, சித்தூர் மாவட்டம் வரையில் அமைந்திருந்த நிலப்பரப்பினை வாணகப் பாடி நாடு என்று இடைக்காலத்தில் வழங்கினர். வாணர் அரச மரபினர் அப்பகுதியை ஆண்டுவந்தனர். அவர்கள் வல்லம், வாணபுரம் என்னும் நகரங்களைத் தம் தலைநகரங்களாகக் கொண்டு, ஆட்சி புரிந்தனர். வாணர்கள், மாபலிச் சக்கரவர்த்தியின் வழித் தோன்றல்கள் தாங்கள் என்று கூறிக்கொண்டனர்.[23] அவர்களுடைய நாட்டைப் பெரும்பாணப்பாடி என்றும் வடுக வழிக்கு மேற்கு என்றும் அக்காலத்தில் அழைத்தனர்.

முதலாம் ஆதித்த வர்மன் அபராசிதப் பல்லவனை வென்று, தொண்டை நாட்டைக் கைப்பற்றிய பொழுது, வாணர் உரிமை

21 Epi. Ind. Vol. 7: PP. 142-44.
22 Ibid. Vol. 15: No. 5; V. 24
23 S.I.I., Vol. 3; No. 45

அடைந்து, தனியரசு ஒன்றினை நிறுவினர்.[24] சோழ அரசினை விரிவுபடுத்தும் பணியில் முதலாம் பராந்தகன் ஈடுபட்டிருந்தான். அப்பொழுது வாணர்களோடு அவன் போரிட நேர்ந்தது. அப் போரில், கங்க அரசன் இரண்டாம் பிருதிவிபதி சோழப் பேரரச னுக்கு உதவிபுரிந்தான். வல்லத்தில் நடந்த போரில் பிருதிவிபதி வாணர்குல மன்னனைப் படுதோல்வி அடையச் செய்தான். அவ் வாறு தோல்வியுற்று, நாட்டை இழந்தவர் இரண்டாம் விசயா தித்தனும், அவனுடைய மகனை இரண்டாம் விக்கிரமாதித்தனு மாவர். பராந்தகன் தனக்குறுதுணையாகப் போர் புரிந்த கங்க மன்னனுக்கு வாணகப்பாடி நாட்டினையும், செம்பியன் மாவலி வாணராயன் என்னும் பட்டத்தினையும் அளித்ததாகத் தெரி கிறது. இராஷ்டிரகூட மன்னனிடம் வாணர்குல அரசன் அடைக் கலமடைந்தான்.

பின்னர், வாணர் குடும்பத்தினர் சோழமன்னரின் ஆட்சிக் குட்பட்ட சிற்றரசராக வாழ்ந்து வந்தனர். அரிஞ்சய சோழன் தன்மகளாகிய அரிஞ்சிகைப் பிராட்டியை வாணர்குல மன்னன்ஒரு வனுக்குத் திருமணம் செய்து கொடுத்தான். அதனால் இராஷ்டிர கூடருடைய தொடர்பினை வாணர்கள் இழந்தனர். கி.பி. பத்தாம் நூற்றூண்டின் இறுதியிலும், பதினோராம் நூற்றூண்டின் தொடக் கத்திலும் வாணகப்பாடி நாட்டை மறவன் நரசிம்ம வர்மனுகிய இராசராசவாணகோவரையன் என்பவன் ஆண்டுவந்தான், அவன், தென்னார்க்காடு மாட்டவத்தில் உள்ள சண்பை (ஜம்பை) என் னும் ஊரைச் சுற்றியுள்ள பகுதிக்குத் தலைவனுக விளங்கினுன். அவ்வூரில் அவனுடைய கல்வெட்டுகள் இரண்டு கிடைத்துள் ளன.[25] அவற்றில் சோழப் பேரரசனுடைய மெய்கீர்த்தி முதலி டம் பெற்றுள்ளது. அடுத்து வாணுதி ராயருடைய பகட்டு ஆர வாரப் பட்டப் பெயர்கள் தரப்பட்டுள்ளன. இராசராசனுடைய ஆட்சியின் இறுதிக் காலத்தில், சண்பைப் பகுதியில், நீர்ப்பாசனத் திற்காகப் புதியதொரு கால்வாயை அவன் வெட்டியுள்ளான்,

## இலாடப் பேரரையன்

தொண்டை மண்டலத்தில், படுவூர்க் கோட்டத்தில் உள்ள பெருந்திமிரி (இன்றைய ஆர்க்காட்டுப் பகுதி) நாட்டை ஆண்ட அரச மரபினரை இலாடர் குடியினர் என்று கல்வெட்டுகள் தெரி விக்கின்றன. அவர்கள் பராந்தகன் சோழன் காலம் முதலே, சோழ அரசோடு நெருக்கமான தொடர்பு கொண்டிருந்தனர். வட ஆர்க்காடு மாவட்டம் பஞ்சபாண்டவர் மலையில் காணப்படும்

[24] Mahalingam, T. V.: Banas of South India, PP. 62-63
[25] 84, 86 of 1906

கல்வெட்டு ஒன்றினால், வீர சோழன் இலாடப் பேரரையன் என்ப வன் அவ்வட்டத்தை ஆண்டு வந்ததாகத் தெரிகிறது. அவனே, இராசராசன் காலத்திய இலாடக் குறுநில மன்னனாவான். அவ னுடைய தந்தையின் பெயர் இலாடராசன் புகழ்விப்பவர் கண் டன் என்பதாகும். இராசராசனுடைய மனைவியருள் இலாட மாதேவி என்பவள் இக்குடியைச் சேர்ந்தவள். வீரசோழன் இலாடப் பேரரையனுடைய உடன்பிறப்பாக இவ்வரசி இருந் திருக்கலாம். இராசராசனுடைய எட்டாம் ஆட்சியாண்டில், தன் மனைவியின் வேண்டுகோளுக்கிணங்க, இலாடப் பேரரையன் சில வரிகளின் மூலம் கிடைக்கும் வருவாயைச் சமணப்பள்ளி ஒன்ற னுக்குச் செலுத்தினான் என்று ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது. இலாட அரச மரபினர் இராசராசன் காலத்தில் மிகுந்த செல் வாக்குப் பெற்றிருந்தனர்.

## பேரரசனும் குறுநில மன்னரும்

ஒரு பேரரசனின்கீழ், சிற்றரசர் பலர் வாழ்வது இயற்கை. அவ் விரு சாரார் இடையே நிலவும் தொடர்பினைப் பொருத்தே பேரர சின் எழுச்சியும் வீழ்ச்சியும் அமைகின்றன. மன்னர் பலருக்கு மன் னனாக விளங்கியவன் இராசராசன். அம்மன்னர் மன்னனுடைய பேரரசில் வாழ்ந்த குறுநில மன்னருக்கும், அப்பேரரசனுக்கும் இடையே இருந்து வந்த தொடர்பு எத்தகையது என்பதை நாம் அறிதல் வேண்டும்.

மேற்கண்ட குறுநில மன்னரின் வரலாற்றுக் குறிப்பு களால், சோழ வேந்தர்கள் படையுதவி வேண்டிய பொழுது படைகளையும், பெண் வேண்டிய வழி பெண்களைத் திருமணம் செய்து கொடுத்தும் அச்சிற்றரசர் வாழ்ந்து வந்தமை புலனாகின்றன, பேரரசனின் அரசியல் மேலாதிக்கம், திரு மண உறவு என்னும் பிணைப்பால் நெருக்கமும் இறுக்கமும் அடைந்தது. அதனால், அவ்விருவரிடையே அன்பான உறவு நீடிப் பது எளிதாயிற்று. இராசராசன் காலத்தில் சிறப்புற்று விளங்கிய குறுநில மன்னரின் குடிகளுள் பழுவேட்டரையர் குடியும், கொடும் பாளூர் இருக்கு வேளிர் குடியும், மலையமான் மரபும் பல தலை முறைகளாகத் தொடர்ந்து சோழப் பெருவேந்தர் குடியோடு மணவுறவு கொண்டிருந்தன. மழவரும், வைதும்பரும் அருகிய நிலையில் ஓரிருமுறை சோழ மன்னர்க்குப் பெண் கொடுத் துள்ளனர். இதனால், பெரிதும் சோழருக்குச் சார்பாகவே அவர் கள் பணி புரிந்துள்ளனர் என்று நாம் கூறலாம். அக்குடிகளைச் சேர்ந்தவர்களே பெரும்பாலும் படைத்தலைவர்களாகப் பணி

யாற்றியுள்ளனர். குறுநிலமன்னர் அவ்வப்போது படையுதவிய மையால், 'நிலமானியப் படைமுறை அமைப்பு (Feudal system) அக்காலத்திய தமிழகத்தில் இருந்தது என்று நாம் கூற முடியுமா? என்ற எண்ணம் எழலாம்.

## நில மானியப் படை முறை

நில மானியப் படைமுறை என்பது என்ன? அது எம்முறையில் சோழர் காலத்தில் செயல் பட்டது? சோழர் காலத்தில் குறுநில மன்னருக்கும் பேரரசனுக்கும் இடையே இருந்துவந்த தொடர்பினை ஐரோப்பாவில் நிலவிய நில மானியப் படைமுறைக்கு ஒப்பாகச் சொல்லலாமா? என்பன போன்ற ஐயங்கள் நமக்கு எழலாம். நில மானியப் படை முறை கோட்பாட்டில் வல்லுநராகக் கருதப்படுபவர் கார்ல் ஸ்டீபன்ஸன் (Carl Stephenson). ''வேளாண்மைத் தொழிலாதிக்கத்துக்குட்பட்ட அரசிலும் சமுதாயத்திலுமே நில மானியப் படைமுறையின் வேர்கள் ஆழ வேரூன்றியுள்ளன. அச்சமுதாயத்தில் எப்பொழுதும் மக்கள் இரு பெரும் வகுப்பினராகவே பிரிந்து நிற்பர். பெருநிலக்கிழார்களாகிய செல்வக் குடியினர் ஒரு வகுப்பினராவர். பொருளாதார அடிப்படையில் அவர்களைச் சார்ந்து வாழும் குடியானவர்கள் மற்றொரு வகுப்பினராவர்''[26] என்று அவர் நில மானியப் படை முறைச் சமுதாய அமைப்பினைக் கோடி காட்டியுள்ளார்.

இராசராசன் காலத்திய தமிழ் நாட்டில் இத்தகைய சமுதாயமே விறுடன் விளங்கியது. முதலாவது வேளாண்மைப் பொருளியலே நாட்டின் முதுகெலும்பாக இருந்தது. அவ்வேளாண்மைப் பொருளியல் அமைப்பின் தலைவர்களாக நிலக்கிழார்கள் விளங்கினர். அவர்களிடையே இருபிரிவுகள் இருந்தன. உழுதுண்போர், உழுவித்துண்போர் என்னும் இருவகையினராக நிலக்கிழார்கள் இருந்தனர், உழுதுண்போர், தாங்களே தங்கள் நிலத்தை உழுது பயிரிட்டனர். உழுவித்துண்போர், நிலவுடைமையாளராவர். தங்கள் நிலத்தைப் பண்ணையாட்களிடம் ஒப்படைத்து, பயிரிடச் செய்து, விளைச்சலில் பெரும்பகுதியைத் தங்களுக்குரிய வாரமாகவோ குத்தகையாகவோ அவர்கள் பெற்றுவந்தனர். அவர்களுடைய நிலங்களைப் பல தலைமுறைகளாகப் பயிரிட்ட பண்ணையாட்கள் பொருளியல் பற்றுக் குறையோடு, அன்றாட வயிற்றுப் பிழைப்பிற்கு அல்லற்பட்ட ஏழையெளிய மக்களாவர். இவர்கள் சமுதாயத்தின் கடைநிலையில் உழன்று கொண்டிருந்தனர். இவர்களுள் பெரும்பாலோர் தாழ்த்தப்

[26] Stephenson, Carl : Mediaeval Fedualism, pp, 7-8,

பட்ட மக்களாக இருந்தனர். இப் பண்ணையாள்களை நிலம் படைத்த நிலக்கிழார்கள், ஏறக்குறைய அடிமைகளைப் போன்றே நடத்தி வந்தனர். இவர்களை ஐரோப்பிய நாட்டு நிலச் சார்பான அடிமை ஊழியர்களுக்கு(Serfs) ஒப்பாக நாம் கூறலாம். எனவே, சோழப் பெருவேந்தன் காலத்தில் நிலவிய சமூகப் பொருளாதாரம் பெரிதும் நிலமானியப் படைமுறை அமைப் பிற்குகந்த சூழ்நிலையைக் கொண்டிருந்தது எனலாம்.

'நிலமானியப் படைமுறை என்பதன் இயல்புகள் யாவை? அல்லது அதன் இலக்கணம் யாது?' என்னும் வினாக்களுக்கு விளக்கம் காண்போமானால், தமிழகத்தில் அதன் நிலை எவ்வாறிருந்தது என்பதை நாம் எளிதில் உணர முடியும். 'நிலமானியப் படைமுறையை வரையறுத்து இலக்கணம் கூறுவதில், அத் துறை வல்லுநர்கள் கருத்து வேற்றுமை யுடையவர்களாக உள்ளனர். இடைக் கால ஐரோப்பாவில், அரசன் முதல் உட்குடி (Villein) வரை யிருந்த சமுதாயம் முழுவதிலும் ஒப்பந்தத் தொடர்புமுறை நிலவியது. அதனால் அமைந்த சிக்கலான சமுதாயக் கட்டுக்கோப் பையே சிலர் நிலமானியப் படைமுறை என்று கூறுகின்றனர். மற் றவர்கள், அத்தொடரை மிகவும் நெகிழ்ச்சியான பொருளில் பயன்படுத்தி வருகின்றனர். நிலவுடைமையாளர்களிடத்துப் பெரிதும் அரசியலாதிக்கம் குவிந்திருக்கும் அமைப்புகள் யாதாக இருந்தாலும், அதனை நிலமானியப் படைமுறை அமைப்பு என்று அவர்கள் சுட்டுகின்றனர்.........இது எவ்வாறாயினும், பண்டை இந்தியாவில் ஆதிபத்திய முறை இருந்து வந்தது. அது நிலமானி யப் படைமுறை அமைப்பைப் போன்றதாகவே (Quasi-Feudal) இருந்தது'[27] என்று டாக்டர் ஏ.எல். பாஷம் மொழிந்துள்ளமை இங்குக் கருதத்தக்கது.

## இராசராசனின் மேலாண்மை

இராசராசனின் காலத்தில் தமிழ்ச் சமுதாயத்தின் பொருளா தார அமைப்பு ஏறக்குறைய மேற்கண்ட நிலையிலேயே இருந் தது. நிலம் படைத்த பெருநிலக்கிழார்களான குறுநில மன்ன ரிடை அரசியல் ஆதிக்கம் குவிந்திருந்தது. அவர்களுடைய ஆதரவைப் பெறாமல் பேரரசன் தனித்து நெடுங்காலம் ஆட்சி புரிந்திட இயலாத சூழ்நிலை நிலவியது. மற்றும், சோழப் பேரர சனே ஒரு பெருநிலக் கிழாராவான். அவனிடம் நாட்டின் பல பகுதிகளைச் சீவிதமாகவோ, இறையிலியாகவோ, திறை

[27] Basham, A. L.: The Wonder that was India, pp. 93-94

னுடைய அரசோடு இணைத்துக் கொண்டான். தன்னுடைய நேரடிப் பார்வையில் அவற்றை அமைத்துக் கொண்டான். தன் நம்பிக்கைக்குரிய அதிகாரிகளை அந்நாடுகளுக்குத் தலைவராக்கி, நல்ல முறையில் அவன் ஆட்சி புரிந்ததைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

இராசராசன் குடமலை நாட்டைக் கைப்பற்றியவுடன், அப் போரில் தனக்குப் பேருதவியாக வீரதீரத்துடன் போர் புரிந்த மனிஜா என்பவனைப் பாராட்டி, சத்திரிய சிகாமணி கொங்காள்வான் என்னும் பட்டத்தை அவனுக்கு அளித்தான். மாளவ்வி என்னும் ஊரை அவனுக்கு மானியமாகவும் அவன் வழங்கினான். அம் மனிஜாவும், அவன் கால்வழியினரும் சோழர்கட்கு அடங்கிய குறுநில மன்னராகக் கொங்காள்வார் என்னும் பட்டத்துடன் குடகு நாட்டை நூற்றாண்டுகளுக்கு மேல், ஆட்சி புரிந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

வெற்றி கொண்ட நாடுகளைப் பெயர்க்கு வென்றதாக விடாமல், அவற்றில் தம்முடைய (அரசப்) பிரதிநிதிகளை அமர்த்தும் பழக்கத்தை இராசராசன் மேற்கொண்டமைக்கு, அவனுடைய பதினான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று சான்று பகருகிறது. அவன் கைப்பற்றிய கங்கபாடியைச் சேர்ந்த தகடூரைப் பெருந்தரம் பிரமாதிராசனுக்குக் கொடுத்து, அதற்கு அவனைப் பிரதிநிதியாக்கிய செய்தியை அக்கல்வெட்டு தெரிவிக்கின்றது.[29]

மற்றும், சோழ மன்னனுக்குத் தேவைப்படும்போது, படைகளை அனுப்பி உதவி புரியும் பொருட்டு அப்படைகளின் தலைவனுக்கு மானியம் அளிக்கப்படுவது வழக்கம். அத்தகைய நிலங்களுக்குப் படைப்பற்று, வன்னியப்பற்று என்னும் பெயர்கள் வழங்கின. இப்பெயர்களும், அக்காலத்தில் ஒருவகையான நில மானியப் படை முறை வழக்கிலிருந்ததை அறிவிக்கின்றன.

பேரரசன் குறுநில மன்னர்களின் மீது ஆதிக்கம் செலுத்திய முறை, அம்மன்னருக்கும் பேரரசனுக்கும் இடையே நிலவிய தொடர்பினையொட்டி வேறுபட்டது. மணவுறவால் பல தலைமுறைகளாகப் பிணைப்புண்டிருந்த பழுவேட்டரையர், மலையமான்கள், கொடும்பாளூர் வேளிர்கள், இலாடப் பேரரையன் போன்றோருக்குத் தனியுரிமை அரசர்க்குரிய உரிமைகள் பல வழங்கப்பட்டிருந்தன; பேரரசில் பெருமதிப்புடைய உயர் அதிகாரிகளாக அவர்கள் போற்றப்பட்டனர். இவையனைத்தையும் கருத்தில் கொண்டு நோக்குகின்றபொழுது, இராசராசன்

[29] 665 of 1920

னுடைய அரசோடு இணைத்துக் கொண்டான். தன்னுடைய நேரடிப் பார்வையில் அவற்றை அமைத்துக் கொண்டான். தன் நம்பிக்கைக்குரிய அதிகாரிகளை அந்நாடுகளுக்குத் தலைவராக்கி, நல்ல முறையில் அவன் ஆட்சி புரிந்ததைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

இராசராசன் குடமலை நாட்டைக் கைப்பற்றியவுடன், அப்போரில் தனக்குப் பேருதவியாக வீரதீரத்துடன் போர் புரிந்த மனிஜா என்பவனைப் பாராட்டி, சத்திரிய சிகாமணி கொங்காள்வான் என்னும் பட்டத்தை அவனுக்கு அளித்தான். மாளவ்வி. என்னும் ஊரை அவனுக்கு மானியமாகவும் அவன் வழங்கினான். அம் மனிஜாவும், அவன் கால்வழியினரும் சோழர்கட்கு அடங்கிய குறுநில மன்னராகக் கொங்காள்வார் என்னும் பட்டத்துடன் குடகு நாட்டை நூற்றாண்டுகளுக்கு மேல், ஆட்சி புரிந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

வெற்றி கொண்ட நாடுகளைப் பெயர்க்கு வென்றதாக விடாமல், அவற்றில் தம்முடைய (அரசப்) பிரதிநிதிகளை அமர்த்தும் பழக்கத்தை இராசராசன் மேற்கொண்டமைக்கு, அவனுடைய பதினான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று சான்று பகருகிறது. அவன் கைப்பற்றிய கங்கபாடியைச் சேர்ந்த தகடூரைப் பெருந்தரம் பிரமாதிராசனுக்குக் கொடுத்து, அதற்கு அவனைப் பிரதிநிதியாக்கிய செய்தியை அக்கல்வெட்டு தெரிவிக்கின்றது.[29]

மற்றும், சோழ மன்னனுக்குத் தேவைப்படும்போது, படைகளை அனுப்பி உதவி புரியும் பொருட்டு அப்படைகளின் தலைவனுக்கு மானியம் அளிக்கப்படுவது வழக்கம். அத்தகைய நிலங்களுக்குப் படைப்பற்று, வன்னியப்பற்று என்னும் பெயர்கள் வழங்கின. இப்பெயர்களும், அக்காலத்தில் ஒருவகையான நில மானியப் படை முறை வழக்கிலிருந்ததை அறிவிக்கின்றன.

பேரரசன் குறுநில மன்னர்களின் மீது ஆதிக்கம் செலுத்திய முறை, அம்மன்னருக்கும் பேரரசனுக்கும் இடையே நிலவிய தொடர்பினையொட்டி வேறுபட்டது. மணவுறவால் பல தலைமுறைகளாகப் பிணைப்புண்டிருந்த பழுவேட்டரையர், மலையமான்கள், கொடும்பாளூர் வேளிர்கள், இலாடப் பேரரையன் போன்றோருக்குத் தனியுரிமை அரசர்க்குரிய உரிமைகள் பல வழங்கப்பட்டிருந்தன; பேரரசில் பெருமதிப்புடைய உயர் அதிகாரிகளாக அவர்கள் போற்றப்பட்டனர். இவையனைத்தையும் கருத்தில் கொண்டு நோக்குகின்றபொழுது, இராசராசன்

[29] 665 of 1920

காலத்தில் மேலை நாட்டு நிலமானியப் படை முறையைப் போன்ற தோர் சமுதாய அமைப்பு தமிழகத்தில் நிலவியமை புலனாகின் றது. ஓரளவிற்கு நெகிழ்ச்சி மிக்கதாக அம்முறை இருந்தது. அதனால், பிற்காலத்தில் பேரரசின் ஆற்றல் குலைந்தபொழுது, குறுநில மன்னர்கள் எளிதில் பேரரசினைச் சிதைக்க முடிந்தது.

# 13. அரசியல் அதிகாரிகள்

இராசராசன் நிறுவிய பேரரசின் ஆட்சி முறையை மையக் குவிமுக ஆட்சி என்று நாம் கூறலாம். பரந்துபட்ட அப்பேரரசி னைக் கட்டிக்காத்து, மக்களை நலமாகவும் வளமாகவும் வாழச் செய்வது எளிய செயலன்று. அத்தகைய சிறப்பு மிக்க ஆட்சியை நடத்துவதற்கு இராசராசன் அரும்பாடு பட்டுள்ளான்.

நாட்டாட்சியை நல்லமுறையில் நடத்துவதற்குப் பல படி நிலைகளைக் கொண்ட திறமைமிக்க செயலகம் ஒன்றை அவன் அமைத்துள்ளான். அப்பேரரசினைத் தாங்கிய தூண்களாக விளங் கிய உயர் அதிகாரிகள் பலர். அவர்களைப் 'பெருந்தரத்தினர்' என்று கல்வெட்டுகள் சுட்டுகின்றன. அவர்களுள் பெரும்பாலோர் இளம் வயதில் படைத்தலைவர்களாகப் போர்க்களங்கள் பலவற் றைக் கண்டு விழுப்புண் பெற்றவர்கள் என்பது இங்குக் குறிப் பிடத் தக்கது. நாற்பது வயதிற்கு மேற்பட்ட நிலையில், மிகுந்த பொறுப்புடைய உயர் அரசியல் அதிகாரிகளாக அவர்கள் பணி யாற்றியுள்ளனர்.

மன்னர் மன்னனிடம் அமைச்சராகவும் படைத்தலைவராகவும், ஆட்சித்துறை அதிகாரிகளாகவும் சிறந்து விளங்கிய சிலரைப் பற்றி இராசராசனுடைய கல்வெட்டுகளால் நாம் அறிய முடிகிறது.

### படைத் தலைவர்

#### கம்பன் மணியன்

கம்பன் மணியன் ஆகிய விக்கிரம சிங்க மூவேந்த வேளான் என்பது இவனுடைய முழுப் பெயராகும். இராசராசன் காலத் தில் நடைபெற்ற ஈழத்துப் போரில் கலந்துகொண்ட படைத் தலைவர்களுள் இவனும் ஒருவன். அங்கிருந்து அரசன் கொண்டு

வந்த தெய்வ வடிவங்கள் பலவற்றுள், மரகத தேவர் என்னும் படி மத்தை இவன் அரசனிடமிருந்து பெற்றான். அத்திருமேனியைத் திருப்பழனத்திலுள்ள சிவன் கோயிலில் இவன் எழுந்தருளச் செய்தான் என்று அவ்வூரில் உள்ள கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது. கம்பன் மணியன் எழுந்தருளச் செய்த தெய்வ வடிவம் மரகத மணியால் செய்யப்பட்டதாக இருக்க வேண்டும். அது எந்தத் தெய்வத்தின் சிலை என்பதை நாம் தெரிந்து கொள்ள இயலவில்லை. இப்பொழுது அத்தகைய தெய்வத் திருமேனி திருப்பழனம் கோயிலில் இருப்பதாகவும் தெரியவில்லை.

## சேனாபதி கிருஷ்ணன் இராமனான மும்முடிச் சோழ பிரம மாராயன்

இவன் பார்ப்பனர் சாதியைச் சேர்ந்தவன்; வெண்ணாட்டு அமண் குடியினன்; சோழப் பெருவேந்தனின் படைத்தலைவர்களுள் ஒருவன். அரசனின் ஆணைப்படி, தஞ்சை இராசராசேச்சுரத்துத் திருச்சுற்று மாளிகையை இவன் கட்டியுள்ளான்.[1]

இப்படைத் தலைவன் இராசராசனுடைய ஆட்சியின் பிற்பகுதியில் திருமந்திர ஓலைநாயகமாகப் பணி புரிந்தான் என்பது லீடன் செப்பேடுகளால் தெரிய வருகிறது. மும்முடிச் சோழ பிரம மாராயன் என்பது மன்னர் மன்னனால் இவனுக்கு வழங்கப்பட்ட பட்டப் பெயராகும்.

## பரமன் மழபாடியானான மும்முடிச் சோழன்

இவன் மழவர் குலத்தலைவன்; தஞ்சாவூர்க் கூற்றத்துக் குருகாடி என்னும் ஊரைச் சேர்ந்தவன். இவனும் இராசராசனின் படைத் தலைவர்களுள் ஒருவனாவான். பேரரசனின் விருப்பத்திற்கிணங்க நெல்லூர் மாவட்டத்தில் உள்ள சீட்புலி நாடு, பாகிநாடு என்பவற்றின் மேல், இவன் படையெடுத்துச் சென்றான்; அவற்றைக் கைப்பற்றினான். அங்கிருந்து ஏராளமாகத் திறைப் பொருளை இவன் கொண்டு வந்தான். அவற்றுள், தொளாயிரம் ஆடுகளைக் கச்சிப் பேட்டு ஐஞ்சந்தி துர்க்கைக்கு இராசராசனுடைய திருப்பெயரால், பத்து நந்தா விளக்குகளை எரிவிக்க, சாவா மூவாப் பேராடுகளாக அளித்துள்ளான்.[2]

## சேனாபதி குரவன் உலகளந்தானான இராசராச மாராயன்

இராசராச சோழனின் படைத்தலைவருள் இவனும் ஒருவன் என்பதை இவனுடைய பட்டப் பெயரே நமக்கு அறிவிக்கிறது.

1 'தஞ்சைப் பெருவுடையார் கோயில்' என்னும் தலைப்பில் அக் கல்வெட்டைக் காண்க.
2 79 of 1921; S. I. I., Vol. 13: No. 149, 150.

இவனுடைய இயற்பெயர் என்னவென்பது தெரியவில்லை. பேரரசனின் ஆணையின்படி கி.பி. 1001 ஆம் ஆண்டில், சோழ அரசு முழுவதையும் அளந்து மதிப்பீடு செய்த பெருமை இவனுக்குரியது. அரசு முழுவதிலும் எவ்வளவு நன்செய், புன்செய், காட்டு நிலங்கள் உள்ளன என்பதை நுட்பமாக அளந்து மதிப்பீடு செய்துள்ளான். அவற்றுள் விளைநிலங்களுக்கு மாத்திரம் வரி விதிக்குமாறு இவன் ஏற்பாடு செய்திருக்கிறான். பேரரசு முழுவதையும் இவன் அளந்தமை பற்றி, இவனுக்கு உலகளந்தான் இராசராச மாராயன் என்னும் பட்டம் இராசராசனால் வழங்கப்பட்டது.[3]

## ஆட்சித்துறை அதிகாரிகள்

### மதுராந்தகன் கண்டராதித்தன்

இராசராசனுடைய சிறிய தந்தையாகிய உத்தமசோழனுடைய மகனே மதுராந்தகன் கண்டராதித்தன். உத்தம சோழனுடைய தந்தையும் சோழ மன்னர்களுள் கி.பி. 950 முதல் கி.பி. 957 வரை ஆட்சி புரிந்தவனுமாகிய கண்டராதித்த சோழரின் பேரனே இந்த மதுராந்தகன் கண்டராதித்தன். உத்தம சோழனுக்குப் பிறகு இராசராசன் அரியணை ஏறியதால், தந்தைக்குப் பிறகு இத் தனயன் அரசனாகவில்லை.

பேரரசன் இராசராசன் ஆட்சிக் காலத்தில், மதுராந்தகன் கண்டராதித்தன் திருக்கோயில்களின் ஆட்சியையும் அறநிலையங்களின் ஆட்சியையும் கண்காணிக்கும் பேரதிகாரியாக விளங்கினான். இக்காலத்தில் அறநிலைய ஆணையர் என்னும் உயர்நிலை அதிகாரி உள்ளதைப் போன்று, அக்காலத்தில் அவன் விளங்கினான்.

இவன் கோயில்கள் பலவற்றைக் கண்காணித்து வந்தான். அவற்றில் தவறிழைத்தவர்களைத் தண்டித்து, அவை நல்ல முறையில் இயங்குமாறு இவன் ஊக்கியும் சீர்திருத்தியும் வந்தான். சில கோயில்களின் வரவு செலவு கணக்குகளைத் தணிக்கை செய்த பொழுது, அக்கோயில்களின் வருவாய்—அதாவது அக்கோயில்களுக்கு வழங்கப்பட்டிருந்த அறக்கட்டளைகள் அன்றாட நாள் வழிபாட்டிற்கே போதவில்லை என்பதை இவன் அறிந்தான். இன்றியமையாத் தேவைகளுக்காகப் பல புதிய அறக்கட்டளைகளை, அரசு வழங்குவதற்கு உடனடியாக இவன் ஏற்பாடு செய்துள்ளான்.

[3] S. I. I., Vol. 8; No. 223; Vol. 2; p.6: No. 95: 44 of 1907.

தொண்டை நாட்டிலுள்ள திருமாற்பேற்றில் சில கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. அவற்றுள் மதுராந்தகன் கண்டராதித்தன் சுட்டப்பட்டுள்ளான். பரகேசரி வர்ம (உத்தம சோழ) னது பதினன்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில், திருமாற்பேற்றுக் கடவுளுக்குத் திங்கள்தோறும் நூற்றெட்டுக் குடங்கள் தயிர், நெய், தேன் அபிடேகம் செய்ய மதுராந்தகன் கண்டராதித்தன் நிவந்தம் அளித்த செய்தியை நாம் காணுகின்றோம்.[4] இவனே அவ்வூர்க் கோயிலில் இராசகேசரிவர்மனது (இராசராசன்) மூன்றாவது ஆட்சியாண்டில் ஒரு நந்தா விளக்கு வைக்கப் பதினைந்து கழஞ்சு பொன் அளித்துள்ளான்.[5] அதே ஆண்டில் அவ்விளக்கினை எரிக்கப் பதினைந்து கழஞ்சு பொன்னையும் இவன் வழங்கியுள்ளான்.[6]

இராசராசனின் நான்காம் ஆட்சியாண்டில் இவன் திருமாற்பேறு அக்னீசுவரர் கோயில் நடைமுறைச் செய்திகளை ஆராய்ந்தான். கோயில் நிலங்கள் பிறரால் கைக்கொள்ளப்பட்டதையும் அதனால், நாள்தோறும் இறைவனுக்குரிய படையல் இரண்டு நாழி அரிசியாகக் குறைக்கப்பட்டதையும் இவன் கண்டுபிடித்தான். ஐவர் அடங்கிய குழுவுடன் இவன் இவற்றை ஆராய்ந்தான்; மடைப்பள்ளிப் பொறுப்புடையவர்களிடம் குற்றம் கண்டு, அவர்களுக்குத் தண்டம் விதித்தான்.[7] இந்நிகழ்ச்சி இராசராசனுடைய பன்னிரண்டாம் ஆட்சியாண்டில் நடைபெற்றது.[8]

திருத்தீக்காலி வல்லத்தில், இராசராசனுடைய ஏழாவது ஆட்சியாண்டில் ஒரு கல்வெட்டை இவன் பொறித்துள்ளான். அக்கல்வெட்டின் பிற்பகுதி கட்டடத்துள் மறைந்து போய்விட்டது. ஆனால், முற்பகுதியிலிருந்து சில முக்கிய செய்திகள் தெரிய வருகின்றன. ஐப்பசித் திங்கள் முழுமதி நாளான ரேவதி விண்மீன் கூடிய நாளில், சந்திரகிரகணம் உண்டாயிருக்கிறது. அன்று அக்கோயில் இறைவனுக்கு இவன் 'சகஸ்ர கடாபிஷேகம்' செய்வித்து வழிபாடாற்றினான். அவ்வழிபாட்டில் இறைவனுக்குப் படைக்கப்பட்ட படையல் இரண்டு நாழி அரிசியாக இருத்தலையும் கறியமுது, நெய்யமுது, தயிரமுது படைக்கப் பெறாமையையும் இவன் நேரில் கண்டான். அவற்றோடு திருநந்தா விளக்கு ஏற்றப்படாமையையும் கண்டு இவன் மனம் வருத்தமுற்றான். அத்திருக் கோயிலின் சிவப்பிராமணரையும், தீக்காலி வல்லத்துச் சபையோரையும் அழைத்து, 'இக்கோயில் இறைவனுடைய வரவும்

[4] 280 of 1906
[5] 285 of 1906
[6] 286 of 1906
[7] 283 of 1906
[8] 282 of 1906

செலவும் அரசன் ஆணைக்கும் திருவோலைக்கும் உரிய வண்ணம் சொல்லுக' என்று பணித்தான். அவர்கள் என்ன சொன்னார்கள் என்பதை அறிந்து கொள்ள முடியாத வகையில் கல்வெட்டு கட்டடத்தால் மறைப்புண்டு கிடக்கிறது.

அதேயாண்டில் திருவல்லம் கோயில் கணக்குகளை இவன் ஆராய்ந்தான். அக்கோயிலில் நாள் வழிபாட்டைச் செம்மையாகச் செய்வதற்குப் பொருள் பற்றாக்குறை இருந்துவந்ததை அவன் போக்கினான் அதற்காக ஏழு கழஞ்சு நான்கு மஞ்சாடி பொன் அளித்தான். அக்கோயில் நிலங்களைச் சிவப்பிராமணர்கள் தமக்குரியதாக்கிக் கொண்டிருந்ததை இவன் கண்டுபிடித்தான்; அவ்வாறு கோயில் நிலங்களைத் தமதாக்கிக் கொண்டவர்களுக்கு 74 கழஞ்சு பொன் தண்டம் விதித்தான். அவற்றை மீட்க ஒரு திட்டத்தை இவன் வகுத்தான். அத்திட்டத்தை யார் யார் கண்காணிக்க வேண்டும் என்பதையும் தெளிவாக வரையறுத்து, அதற்குரிய ஏற்பாடுகளை இவன் செய்தான்.[9]

இக்கண்டராதித்தன் இராசராசனுடைய நான்காம் ஆட்சியாண்டில் குடிமல்லத்தின் கோயிலுக்குத் திருப்பணி செய்துள்ளான். அக்கோயிலில் இறைவன் திருமேனி ஒன்றை எழுந்தருளுவித்து, நாள் வழிபாட்டிற்குத் தேவதானமாக நிலத்தை இவன் அளித்துள்ளான்.[10]

தன்னுடைய மூதாதையரின் திருக்கோயில் திருப்பணியைக் கண்காணித்ததோடு, பல புதிய அறக் கட்டளைகளை வழங்கியும் கண்டராதித்தன் சமயப் பணி புரிந்தான்.

## ஈராயிரவன் பல்லவரையன் ஆகிய மும்முடிச் சோழ போசன்

இராசராசனுடைய பெருந்தரத்து அதிகாரிகளுள் ஒருவன் ஈராயிரவன் பல்லவரையன். இவன் பாம்புணிக் கூற்றத்து அரசூரில் வாழ்ந்தவனாவான்; பல்லவ அரச மரபிலே தோன்றியவன்; மும்முடிச் சோழ போசன் என்னும் பட்டப் பெயர் பெற்றிருந்தான்.

தஞ்சைப் பெரிய கோயிலில் சண்டேசுவர நாயனாரின் படிமத்தை எழுந்தருளுவித்து, வழிபாட்டிற்கு இவன் அறக்கட்டளைகள் வழங்கியுள்ளான்;[11] வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள திரு

[9] S. I. I., Vol. 3: No. 49; 10 of 1890
[10] 218 of 1921.
[11] S. I. I., ; Vol. 2: No. 55

வல்லம், மேற்பாடி என்னும் ஊர்களின் கோயில்களிலும் இவன் பல அறக்கட்டளைகளை நிறுவியுள்ளான். இராசராசனிடத்துச் சில ஆண்டுகள் இவன் திருமந்திர ஓலை நாயகமாகவும் பணி புரிந்துள்ளான்; லீடன் செப்பேட்டில் கையெழுத்திட்டுள்ள அரசியல் அதிகாரிகளுள் ஈராயிரவன் பல்லவரையனும் ஒருவனுவான். இதனுல், இவன் இராசேந்திரன் காலத்திலும் உயர்நிலை அதிகாரியாகப் பணி புரிந்தமை தெரிகிறது.[12]

### பாளூர் கிழவன் அரவணையான் மாலரிகேசவன்

சோழப் பேரரசனுடைய அரசியல் அதிகாரிகளுள் இவன் ஒருவன்; பாண்டிய நாட்டுத் திருக்கானப் பேர்க் கூற்றத்துப் பாளூரின் தலைவன். தஞ்சைப் பெரிய கோயிலில் ஸ்ரீகாரியக் கண்காணி நாயகமாக இவன் பணி புரிந்துள்ளான்.[13]

### இராசகேசரி நல்லூர் கிழவன் காருயில் எடுத்த பாதம்

இவன் இராசகேசரி நல்லூரின் தலைவனுவான். இராசராசனிடத்துத் திருமந்திர ஓலை எழுதும் ஓர் அதிகாரியாக இருந்தவன். 'ஸ்ரீராசராச தேவர்க்குத் திருமந்திர ஓலையெழுதும் அருமொழி தேவ வளநாட்டு இங்கண் நாட்டு, இராசகேசரி நல்லூர் கிழவன் காருயில் எடுத்த பாதம்'[14] என்று கல்வெட்டு இவனைக் குறிப்பிடுகிறது.

### மதுராந்தக மூவேந்த வேளான்

இவனுடைய முழுப் பெயர் வேளான் உத்தம சோழனுகிய மதுராந்தக மூவேந்த வேளான் என்பதாகும். இவன் அருமொழி தேவ வளநாட்டு நென்மலி நாட்டுப் பருத்திக் குடியிலிருந்த ஒரு தலைவன்; சோழப் பேரரசனிடம் திருமந்திர ஓலை நாயகமாகப் பணி புரிந்தான். லீடன் செப்பேட்டில் இவனுடைய கையொப்பம் காணப்படுகிறது. மதுராந்தக மூவேந்த வேளான் என்பது இவனுக்கு அரசன் கொடுத்த பட்டப் பெயராகும்.

### அமுதன் தீர்த்தகரன்

இவன் விளத்தூரின் தலைவன். அவ்வூர் நித்தவிநோத வளநாட்டு ஆவூர்க் கூற்றத்தில் இருந்தது. அமுதனும் இராசராசனிடம் திருமந்திர ஓலையெழுதும் பணியில் அமர்ந்திருந்தான். நாகப்

[12] Ibid: Vol. 3; Nos. 19 54; Epi. Ind. Vol. 22: No. 34
[13] S. I. I., Vol. 2; No. 27.
[14] Epi. Ind. Vol. 22: No. 34.

பட்டினத்துப் புத்தவிகாரைக்கு இராசராசன் ஆனைமங்கலம் என்னும் ஊரைப் பள்ளிச் சந்தமாக அளித்தான். அந்த ஆணையைச் செப்பேட்டில் எழுதியவன் அமுதன் தீர்த்தகரனே யாவான். அச் செப்பேட்டிற்கு ஆனைமங்கலச் செப்பேடு என்பது ஒரு பெயர். இப்பொழுது லீடன் மாநகர் அரும்பொருள் காட்சியகத்தில் அச் செப்பேடு உள்ளமையால் அதற்கு லீடன் செப்பேடு என்ற மற்றோர் பெயரும் வழங்கி வருகிறது.

## ஆதித்தன் சூரியன்

இராசராசன் காலத்தில் சோழமண்டலம் ஒன்பது வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றுள் இராசேந்திர சிங்க வளநாடு ஒன்றாகும். அவ்வளநாட்டின் உட்பிரிவுகளுள் ஒன்று பொய்கை நாடு. பொய்கை நாட்டில் சிறப்புற்று விளங்கிய ஊர்கள் திருவையாறு, திருநெய்த்தானம், திருமழபாடி முதலியன. அப்பொய்கை நாட்டின் தலைவன் ஆதித்தன் சூரியன் என்பவனுவான். அவனுக்குத் 'தென்னவன் மூவேந்த வேளான்' என்னும் பட்டத்தை அளித்து இராசராசன் சிறப்புச் செய்துள்ளான்.

பேரரசனின் ஒன்பதாம் ஆட்சியாண்டில் திருச்சோற்றுத் துறையில் இவன் செய்த அறத்தைப்பற்றி ஒரு கல்வெட்டு எடுத்துரைக்கிறது. இராசராசனின் இருபத்தொன்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகளிலும், இராசேந்திரனுடைய மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டுகளிலும் 'ஸ்வஸ்தி ஸ்ரீ உடையார் ஸ்ரீராஜராஜேஸ்வரமுடையார்க்கு ஸ்ரீகாரியம் செய்கின்ற பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியனை தென்னவன் மூவேந்த வேளான்' என்று இவன் சுட்டப்படுகின்றான். இதனால், தஞ்சைப் பெருவுடையார் கோயிலை இராசராசன் எடுப்பித்த பிறகு, கோயில் நிர்வாகப் பொறுப்பினை இவ்வதிகாரியிடம் ஒப்படைத்து இருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது.

ஆதித்தன் சூரியன் சிறந்த சிவ பக்தனுவான். இவன் இராசராசன் காலத்தில் திருச்சோற்றுத்துறை மகாதேவர் கோயிலுக்குப் பல அறங்கள் செய்துள்ளான். அவற்றுள், அக்கோயிலில் தேவாரத்தை (திருப்பதியம்) ஓதுவதற்கு இவன் அறக்கட்டளை வழங்கியுள்ளமை சிறப்புமிக்க செய்தியாகும். இதனால், இவனுக்கு தேவாரத்தில் பேரீடுபாடு இருந்தமை புலனாகின்றது. இவன் இராசராசேச்சுரத்தின் நிர்வாகியாகப் பதவியேற்றவுடன் தேவாரம் பாடிய மூவர் முதலிகளின் படிமங்களை எழுந்தருளச் செய்வித்து அவற்றிற்குப் பல்வகை அணிகலன்களை ஆர்வத்தோடு அளித்துள்ளான்; நம்பியாரூரரின் படிமத்தோடு அவருடைய மனைவி நங்கை

பரவையாரின் படிமமும் எழுந்தருளச் செய்வித்தான். திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர் ஆகியோரின் படிமங்களும் முறையே அவனால் எழுந்தருளவிக்கப் பெற்றது.

மற்றும், சைவ சமய அடியார்களுள் மூவர் முதலிகளுக்கு அடுத்த நிலையில் இவன் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தவர்கள் சிறுத்தொண்டர், அவருடைய மனைவியான திருவெண்காட்டு நங்கை, அவர்கள் மகனான சீராளதேவர், 'தத்தா நமரே காண்' என்று கூறிய மெய்ப்பொருள் நாயனார்[15] ஆகியோராவர். இந் நாயன்மார்களுடைய சிலைகளைத் தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் ஆதித்தன் எழுந்தருளச் செய்துள்ளான். இச்செயல் இவனுடைய முறுகிய சைவசமயப் பற்றினைப் புலப்படுத்துகிறது. கல்வெட்டில் மெய்ப்பொருள் நாயனாரின் பெயரைக் குறிப்பிடாமல் 'தத்தா நமரே காண் என்ற மிலாடுடையார்' என்று சுட்டியுள்ளான். இதிலிருந்து, இவனுக்கு அவ்வடியாரிடத்து இருந்த அன்பும் ஈடுபாடும் வெளிப்படுகின்றன.

ஆதித்தனுக்குப் பேரரசனிடத்து இருந்த மதிப்பினையும் நன்றியுணர்வையும் புலப்படுத்தும் வகையில் இராசராசனின் சிலையையும், பட்டத்தரசியான ஓலோகமாதேவியாரின் சிலையையும், தஞ்சைப் பெரிய கோயிலில் இவன் எழுந்தருளச் செய்துள்ளான். இராசராசனைப் 'பெரிய பெருமாள்' என்னும் பெயரால் இவன் சுட்டியுள்ளமை இங்குக் கருதத்தக்கது. 'பெரிய பெருமாளுக்குத் தேவார தேவராக எழந்தருளுவித்த தேவர்' என்று ஒரு வாசகம் அக்கல்வெட்டில் காணப்படுகிறது. இராசராசன் நாள்தோறும் வழிபடும் தேவார தேவராகிய சந்திரசேகரப் பெருமானை இராசராசனோடு அக்கோயிலில் இவன் எழுந்தருளச் செய்தான். திருமுன்பே தேவாரத்தை ஓதுகின்ற வழக்கம் உடையவன் என்பதை இத்தொடர் தெரிவிக்கிறது. அவ்வாறு, அவன் வழிபட்ட தெய்வத் திருமேனி சந்திரசேகர மூர்த்தமாகும். இக்கல்வெட்டுக் குறிப்பிலிருந்தும் இராசராசனே திருமுறை கண்ட சோழனாவான் என்பதும் புலனாகின்றது. பேரரசனுக்கும் பேரரசிக்கும் சிலைகள் அமைத்ததோடு அமையாமல், அவற்றிற்குச் சிறப்பு மிக்க அணிகலன்கள் பலவற்றை இவன் பரிசாக வழங்கியுள்ளான். இவையல்லாமல், பைரவமூர்த்தி, காட்சி கொடுத்த இறைவர் ஆகியோரின் திருமேனிகளையும் திருவிளக்குகளையும் இவன், அக்கோயிலுக்கு அளித்துள்ளான்.

ஆதித்தன் சூரியனுடைய கல்வெட்டுகளிலிருந்து மூன்று உண்மைகள் புலனாகின்றன. முதலாவதாகக் கோயில் நிர்

15 S. I. I., Vol. 2; Pt. 2; No. 40.

வாகத்தைப் புரியும் —ஸ்ரீ காரியஞ் செய்யும்—அதிகாரிகள் அக் காலத்தில் ஆட்சிமுறையில் இடம் பெற்றிருந்ததை அறிகிறோம். இக்காலத்திய திருக்கோயில் நிர்வாக அதிகாரி (Executive Officer) தமக்குப் புதியவரன்று என்பதும் இதனால் தெரிய வருகிறது.

தென்னவன் மூவேந்த வேளான் என்று போற்றப்படும் ஆதித்தன் சூரியன் சிறந்த சிவபக்தன்; கடமையைக் கருத்தாகச் செய்யும் கருமவீரன்; நன்றி மறவா நற்பணியாளன் என்று நாம் கூறினால் அது மிகையாகாது.

# 14. படைகளும் அவற்றின் வகைகளும்

ஒரு பேரரசை நிறுவுவதற்கு ஓயாது போர்கள் பலவற்றைப் புரிந்தவன் இராசராசன். அப்போர்கள் அனைத்திலும் வெற்றியே அவன் பெற்றுள்ளான். அவ்வெற்றிகளுக்குக் காரணமாக அவனுடைய படைகள் இருந்தன. அவை நன்கு பயிற்றுவிக்கப்பட்டிருந்தன. அதனால் திறமையும் தேர்ச்சியும் பெற்றனவாக அவை விளங்கின. படைகளுக்குரிய போர் வீரர்களை, நன்கு ஆராய்ந்து அவன் தேர்ந்தெடுத்துள்ளான். போரெனில் புன்முறுவல் பூக்கும் புனைகழல் மறவர், ஆயிரமாயிரம் பேர் எப்பொழுதும் அரசனுடைய ஆணையை ஆவலோடு எதிர்பார்த்து நின்றனர். போர் மூளும்பொழுது அல்லது படையெடுப்பினை அரசன் மேற்கொள்ளுகின்றபொழுது, குறுநில மன்னர்களும் துணைப்படை அனுப்பி உதவி புரிந்தனர்.

**மூவகைப் படை**

இராசராசன் காலத்தில் மூவகைப் படைகள் சிறப்புற்று விளங்கின. அவை யானைப் படை, குதிரைப் படை, காலாட் படை என்பன. இவையல்லாமல் கப்பற்படையினையும் அவன் போற்றிக் காத்துள்ளான். 'குஞ்சரமல்லர், ஆனையாட்கள்' என்னும் பெயர்கள் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. இதனால் யானைப் படை இருந்தமை அறியப்படுகிறது. இதைப் போன்றே, அணைகுதிரைச் சேவகன் என்பதனால் குதிரைப் படையும் கைக்கோளப் பெரும்படை என்பதனால் காலாட்படையும் இருந்தமை புலனாகின்றன. அப்படைகள் ஒவ்வொன்றும் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. பண்டித சோழத் தெரிந்த வில்லிகள், வாள் பெற்ற கைக்கோளர், மூலப்பரிவார விட்டேறு என்னும் தொடர்களால் காலாட் படையிலேயே பல பிரிவுகள் இருந்தமை தெளிவாகின்றது. வில்லைப் பயன்படுத்திய வீரர்கள் வில்லிகள் என்றும்,

வாளைக் கொண்டு போரிடுவதில் வல்லவரை வாள்பெற்ற படைஞர் என்றும், வேலைப் பயன்படுத்திப் போரிட்ட படைக்கு விட்டேறு என்றும் பெயர்கள் வழங்கின. இராசராசன் காலத்தில் துப்பாக்கி, பீரங்கி முதலிய இயமிழும் படைக் கருவிகள் வழக்கில் இல்லை.

ஒவ்வொரு படைப்பகுதியும் வெவ்வேறு பெயர்களால் வழங்கப்பட்டது. பண்டித சோழத்தெரிந்த வில்லிகள், அழகிய சோழத் தெரிந்த, விக்கிரமாபரண தெரிந்த, சண்டபராக்கிரமத் தெரிந்த, அரிதுர்க்க லங்கணத் தெரிந்த என்பன போன்ற பெயர்கள், அப்படைகள் ஒவ்வொன்றும் எக்காலத்தில், எதற்காக அமைக்கப்பட்டன என்பதையோ, எந்தப் போரில் பெரு வெற்றி பெற்றது என்பதையோ, எந்தச் செயலைச் செய்து முடிப்பதற்கு அமைக்கப்பட்டது என்பதையோ தெரிவிக்கின்றன.

## மெய்யுறையாளர்

இராசராசனிடத்து உடலில் மெய்யுறை பூண்ட—கவசம் அணிந் திருந்த—படைவீரர்கள் அடங்கிய படைப்பிரிவு ஒன்று இருந்தது. அந்தளகம் என்னும் சொல் மெய்யுறையைக் (Coat of mail) குறிக்கும். அக் காலத்தில் சிறப்புற்று விளங்கிய மெய்யுறை பூண்ட படைக்கு 'உத்தம சோழத் தெரிந்த அந்தளகத்தாளர்' என்னும் பெயர் வழங்கியது.

## வேளைக்காரப் படை

சோழப் பேரரசன் தன்னுடைய தற்காப்பிற்காக, மெய்க்காப்பாளரையும் குதிரைப் படை ஒன்றினையும் தன்னுடன் வைத்திருந்தான். அவற்றிற்குட் 'பரிவார மெய்க்காப்பாளர்', 'உடனிலை குதிரைச் சேவகர்' என்பன பெயர்களாகும். இவையல்லாமல், உற்றிடத்து உயிர் வழங்கும் வலங்கை வேளைக்காரப் படைகள் பதினன்கு அவனிடம் இருந்தன. அவர்கள், கண்ணினை இமை காப்பது போல, அரசனை அல்லும் பகலும் அயராது காத்து வந்தனர்.

## நிலைப்படை

இராசராசனுடைய காலத்தில் நிலையாகப் படைகள் இருந்து வந்தன. அவற்றை 'நிலைப்படைகள்' என்பர். வென்று கைப்பற்றிய நாடுகளில், தகுதி மிக்க தலைவன் கீழ் நிலைப்படைகள் நிறுத்தப்பட்டிருந்தன. வேங்கி மண்டலத்திற்குக் காவலாக

இராசேந்திரன் தலைமையில் ஒரு நிலைப்படை நிறுத்தப்பட்டிருந்தது இங்குக் குறிப்பிடத்தக்கது.

இராசராசன் காலத்தில் முப்பது படைப் பிரிவுகள் இருந்தன. அவை ஒவ்வொன்றும் நன்கு தேர்ச்சியும் பயிற்சியும் பெற்றிருந்தன. திருவல்லீசுவரம் திருக்கோயிலில் காணப்படும் கல்வெட்டு ஒன்றினால் 'மூன்றுகை மகாசேனை' யைப் பற்றிய வரலாறு தெரியவருகிறது. அப்படையில் மூன்று வகையான படைக்கலன்களைப் பயன்படுத்தும் மூவகைப் போர்வீரர்கள் இருந்தனர். அப்படை இராசராசன் காலத்தில் நிகழ்த்திய போர்க்கள நிகழ்ச்சிகளைப்பற்றிய சுவைமிகு செய்திகளை அக்கல்வெட்டு தெரிவிக்கிறது.

படைகளை நாடு முழுவதிலும் பரவலாகப் பாடிவீடுகளில் தங்கி இருக்குமாறு அரசன் செய்துள்ளான். ஒவ்வொரு வளநாட்டிலும் ஒரு பாடிவீடு இருந்தது. அதற்குக் கடகம் என்பது பெயர். அக்கடகத்தில் தங்கியிருந்த படைகள், போரில்லாத அமைதிக் காலத்தில் ஆக்கப் பணி புரிவதற்குப் பயன்படுத்தப்பட்டன.

## படைத் தலைவர்

அப்படைகளுக்கு ஆற்றல்மிக்க வீரர்கள் படைத் தலைவர்களாகப் பணிபுரிந்தனர். யானைப்படை, குதிரைப் படை, காலாட்படை, கப்பற் படை ஆகிய நான்கினுக்கும் தலைமை பூண்டவன் மாதண்ட நாயகன் என்று அழைக்கப்பட்டான். இராசராசன் காலத்தில் அவனுடைய மைந்தன் இராசேந்திரனே, மாதண்ட நாயகனாகச் சிறப்புற்று விளங்கினான். அவனுக்குப் பஞ்சவன் மாராயன் என்னும் பட்டப்பெயரும் வழங்கியதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. தனித்தனியாக ஒவ்வொரு படைக்கும் தலைமையேற்றவன் தண்ட நாயகன் 'சேனாபதி' சாமந்தன் என்னும் பெயருடையவனாக விளங்கினான். அப்படைத்தலைவர்களுள் சேனாபதியான ஸ்ரீ கிருஷ்ணன் இராமனான மும்முடிச் சோழப் பிரம மாராயன், சேனாபதி குரவன் உலகளந்தான் என்போர் அக்காலத்தில் முக்கிய பொறுப்புடைய அதிகாரிகளாவர். அப்படைத் தலைவர்களுள் பிரமமாராயன் என்னும் பட்டமுடையவன், பார்ப்பனக் குலத்தைச் சேர்ந்தவன் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

படைத்தலைவருக்கு, அக்காலத்தில் ஊதியம் அளிக்கப்படவில்லை. வாழ்நாள் முழுவதும் அனுபவிக்கத் தக்கவகையில் நிலத்தினை, அரசன் மானியமாக அவர்களுக்குக் கொடுத்தான். அத்தகைய மானியம் சீவிதம் என்று சுட்டப் பெற்றது. படைத்

தலைவர்களும், படை வீரர்களும் இராசராசன் காலத்தில் பல திருப்பணிகளைச் செய்துள்ளனர்; பல அறக்கட்டளைகளையும் அவர்கள் வழங்கியுள்ளனர்.

சோழப் படை கட்டுப்பாடும் பயிற்சியும் உடையதாக இருந்தது. பேரரசனிடத்து அச்சமும் மதிப்பும் கொண்டிருந்தது. இதைப் பின்வரும் கல்வெட்டு வாசகம் அறிவிக்கிறது. ''வில்லவன் மூவேந்த வேளான் தன்னை உடையார் ஸ்ரீராசராச தேவர் கோழி(உறையூர்)ப் போரில் ஊத்தை அட்டாமல் ஏன்று கடவ திருவிளக்குக்குத் தந்த ஆடு'' என்றும், ''நித்த விநோத விழுப்பரையன் தன்னை உடையார் ஸ்ரீராசராச தேவர் கோழிப் போரில் ஊத்தை அட்டாமல் ஏன்று கடவ'' என்றும், ''சேனபதி குரவன் உலகளந்தான் ராஜ ராஜ மாராயன் தன்னை உடையார் ஸ்ரீராஜ ராஜ தேவர் கோழிப் போரில் ஊத்தை அட்டாமல் ஏன்று கடவ'' என்றும் காணப் பெறும் கல்வெட்டுப் பகுதிகள்[1], போரில் தம் செய்கை அரசனுக்கு வெறுப்பினை உண்டாக்காமல் வெற்றியைத் தரவேண்டும் என்று படைத் தலைவர்கள் தஞ்சைப் பெருவுடையாரை வேண்டிக் கொண்டு திருவிளக்கு ஏற்றியதைத் தெரிவிக்கின்றன.

## கடற்படை

சோழப் பேரரசின் நிலப்படையைப் போற்றிக் காத்ததைப் போலவே, கடற்படையையும் கட்டிக் காத்து வந்தான். திறமை மிகு கடற்படை, இராசராசன் காலத்தில் சோழரிடம் இருந்தது. அவன் மூன்று கடற்போர்களிலே வெற்றி கொண்டுள்ளான். அவன் காந்தளூர்ச் சாலையில் சேர மன்னனுடைய கப்பற் படையைத் தோற்கடித்தான். அவ்வெற்றிக்கு அவனுடைய ஆற்றல்மிகு கடற்படையே காரணமாகும். இலங்கைப் படையெடுப்பில், கடற்படை அவனுக்குப் பேருதவி புரிந்துள்ளது. முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரத்தை அவன் வெற்றி கொண்டது எளிய செயலன்று. அத்தீவுகளில் கட்டப்பட்ட மரக்கலங்கள் திண்மையும் சிறப்பும் உடையன என்று அராபிய பயணி ஒருவன் அக்காலத்தில் குறிப்பிட்டுள்ளான். அத்தகைய கப்பல்களையுடைய 'மால்தீவுகளை' தன்னுடைய கடற்படையின் பேராற்றலாலேயே இராசராசன் வெற்றி கொண்டான் என்பதை நாம் அறிகிறோம். எனவே, சோழப் பேரரசனிடம் இருந்த கடற்படை சிறப்பு மிக்கதாக இருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

[1] S.I.I., Vol. 2; pt. 4; No. 95

பேரரசன் இராசராசனே, நிலப்படைக்கும் கப்பற்படைக்கும் தலைவனாக விளங்கினான். அவனுடைய ஆணையைப் பெற்றே மாதண்ட நாயகன் படைகளை நடத்தியுள்ளான். சில போர்களில் இராசராசனே படைத் தலைமையேற்றுப் போர் புரிந்ததை நாம் முன்னரே கண்டோம்.

# 15. இராசராசனும் கிழக்காசிய நாடுகளும்

தென்னிந்தியாவில் பல அரசுகளை வென்று, ஒரு பேரரசினை நிறுவியவன் இராசராசன். கடற் போர் மூன்றினை நடத்தி, அதில் அவன் பெருவெற்றியும் பெற்றுள்ளான். இவ்வாறு மன்னர்களுக்கு மன்னனாக விளங்கிய காலத்தில், அலைகடல்களுக்கு அப்பால் உள்ள தொலைவு கிழக்கு நாடுகளோடு அவன் நட்புறவு கொண்டிருந்தான். அதனால், இரு நாடுகளுக்கு இடையிலும் வாணிகம் வளம் பெற்றது; பண்பாட்டுப் பரிமாற்றம் நடைபெற்றது.

## சீனவுடன் கொண்ட தொடர்பு

சீனவிற்கும் தமிழகத்திற்கும் பண்டைக் காலம் முதற்கொண்டே தொடர்பு இருந்துவந்திருக்கிறது. அவ்வுறவு பல்லவர் காலத்தில் வளர்ச்சியுற்றது; சோழப் பேரரசருடைய காலத்தில் அது மேலும் மலர்ச்சியுற்றது. இத்தொடர்பினைப் பற்றிய செய்திகளைத் தமிழகத்தின் கல்வெட்டுகளோ, இலக்கியங்களோ எடுத்துரைக்கவில்லை. சீன நாட்டு மன்னர்களின் ஆதரவில் எழுதப் பெற்ற காலவழிச் செய்திக் கோவைகளே நமக்குப் பல செய்திகளைத் தந்துதவுகின்றன.

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் சீனவில் உள்நாட்டுக் கலகங்களும் அரசுரிமைப் போரும் உண்டாயின. அதனால், அந்நாட்டோடு வெளிநாட்டவர்கள் செய்துவந்த வாணிகம் தடைப்பட்டது. கி. பி. பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் சீனவில் அமைதி நிலவியது; நிலையான அரசு நின்றோங்கியது. அந்நிலையில் சீன அரசன் வெளிநாட்டு வாணிகத்தைப் போற்றி வளர்க்க விரும்பினான். அதற்காகக் "கடல் கடந்து பிற நாடு சென்று வாணிகம் செய்பவர்களும், தென்கடலில் வாணிகம் செய்யும் அயல் நாட்டவரும் சீனவிற்கு வருமாறு

தூண்டுவதற்காகச் சீனப் பெருவேந்தன் ஒரு தூதர் குழுவினை அமர்த்தி, அரசின் இலச்சினை பொறித்த ஆணைப்பத்திரங்களுடன் பொன்னையும், பட்டாடைகளையும் மிகுதியாகக் கொடுத்து, அவர்களை வெளிநாடுகளுக்கு அனுப்பினன். அவனுடைய வேண்டுகோளை ஏற்றுச் சீனவோடு வாணிகத் தொடர்பு கொள்ள முன் வருவோருக்குச் சீனவில் இறக்குமதி செய்வதற்குத் தனியுரிமைகள் அளிப்பதாகவும் அவன் உறுதிமொழி யளித்திருந்தான்."[1]

இச்செய்தியைத் தமிழகத்திற்கும் சீனத் தூதர்கள் கொண்டு வந்திருக்கலாம். சீனவிற்குச் சோழ நாட்டிலிருந்து இராசராசன் காலத்தில் தூதர் குழு ஒன்று அனுப்பப்பட்டது. இராசராசனு (Lo-tsa-lo-tsa) டைய தூதர்கள் கி. பி. 1015 ஆம் ஆண்டில் சீனவை அடைந்தார்கள். சீனவின் காலவழிச் செய்திக் கோவைகளில் இந்நிகழ்ச்சி கீழ்க்காணுமாறு விளக்கப்பட்டுள்ளது:

> பண்டைக் காலத்தில் நம் அரசவைக்கு அவர்கள் திறைப் பொருளை அனுப்பியதில்லை. எனினும், டா கங் (ta-chung) ஸியாங் வூ(Siang-fu) ஆகிய அரசரின் எட்டாம் ஆண்டில் (கி. பி. 1015) அந்தச் சோழ(Chu-lien) அரசன் முத்துகளையும், நறுமணப் பொருள்களையும், வேறு பல பொருள்களையும் அன்புப் பரிசாகக் கொடுத்துத் தூதர்களை அனுப்பினன். அவர்களுடைய பேச்சை மொழி பெயர்த்தவர்கள், 'அவர்கள் நெடுந்தொலைவிற்கு அப்பாலுள்ள ஒரு நாட்டிலிருந்து வந்துள்ளார்கள்; சீனவின் நாகரிகப் பண்பாட்டைக் கண்டறிவதோடு, தங்கள் நாட்டவருடைய மதிப்பையும் விருப்பையும் தெரிவிக்க வந்துள்ளார்கள்' என்று கூறினர். அரண்மனைக்குப் பக்கத்தில் உள்ள விடுதியில் அவர்களைத் தங்குமாறு சீன அரசன் வசதிகள் செய்து கொடுத்தான். அவர்கள் அங்கு தங்கியிருந்தபொழுது சீன அரசனுடைய பிறந்த நாள் விழா கொண்டாடப்பட்டது. அதனல், அவர்களும் அவ்விழாவில் கலந்து கொண்டனர். சீனப் பேரரசன் அவர்களுக்குப் பல பரிசுகள் வழங்கினன். எனினும், சீன அரசனுக்குச் சோழப் பேரரசனின் ஆற்றலும் சீர்த்தியும் தெரியாமையால், அந்தத் தூதர் குழுவினைப் பேரரசனுடைய தூதர் குழுவாக மதித்துப் போற்றவில்லை.[2]

என்று அக்குறிப்பேடு தெரிவிக்கிறது.

இக்குறிப்பிலிருந்து இராசராசன் காலத்தில் தூதர் குழு ஒன்று சீனவிற்கு அனுப்பப்பட்டிருக்க வேண்டும் என்பது புலனு

[1] Nilakanta Sastri, K A.: Foreign Notices of S. India, PP. 145-146
[2] Nilakanta Sastri, K. A. : Foreign Notices of South India, PP. 144-145

கின்றது. கடற்படையைக் கட்டிக் காத்த பேரரசனுக்கு, கடல் வழியாக ஒரு தூதர் குழுவைச் சீனுவிற்கு அனுப்பிவைப்பது அரிய செயலன்று. அத்தூதர் குழுவினுல் 'எதிர்பார்த்த பயன் கிடைத்ததா? இல்லையா?' என்பதை அறிவதற்கு இன்று நமக்கு வாய்ப்பு இல்லை. இராசராசனுக்குப் பிறகு இராசேந்திரனும், முதலாம் குலோத்துங்கனும் தொடர்ந்து தூதர் குழுக்களை அனுப்பியுள்ளனர். இதனுல், ஏதோ வொருவகையான தொடர்பு இவ்விரு பேரரசுகளுக்கும் இடையில் நிலவியதை மட்டும் நாம் உணர முடிகிறது.

## சைலேந்திர அரசனும் இராசராசனும்

இராசராசன் ஆட்சிக் காலத்தில் நாகப்பட்டினத்தில் பௌத்த விகாரை ஒன்று கட்டப்பட்டது. கடாரத்து அரசனுகிய மார விசயத்துங்க வர்மனுடைய வேண்டுகோளுக்கு இணங்க, நாகப்பட்டினத்தில் பௌத்த விகாரை கட்ட இராசராசன் நிலத்தைக் கொடுத்து உதவினுன். தென் கிழக்கு ஆசிய நாடுகளில் அக்காலத்துச் சிறப்புற்று விளங்கியது ஸ்ரீவிசயப் பேரரசு. அப்பேரரசினை ஆண்ட மன்னர்கள் சைலேந்திர (மலையரையர்) அரச மரபைச் சேர்ந்தவர்களாவர். அவர்களுள் சிறப்புற்று விளங்கியவர் சூளாமணி வர்மனும், அவன் மகனுன மார விசயத்துங்க வர்மனுமாவர்.

அவனுடைய விருப்பத்திற்கு இணங்க நாகப்பட்டினத்தில் பௌத்த விகாரை கி.பி. 1006 ஆம் ஆண்டில் கட்டுவதற்குத் தொடங்கப்பட்டது. ஆனுல், இராசராசனுடைய வாழ் நாளின் இறுதிக்குள் அப்பணி முடிவுறவில்லை. இராசேந்திரன் காலத்தில் தான் முடிக்கப்பட்டது. இராசராசன் வாழ்ந்த காலத்தில் அதற்கு இராசராசப் பெரும்பள்ளி என்று பெயரிடுவதற்குப் பேரரசன் இசைவு அளித்திருந்தான். அதற்கு ஆனை மங்கலம் என்னும் ஊரைப் பள்ளிச் சந்தமாக அவன் அளித்திருந்தான். இராசேந்திரன் ஆட்சியில் அவ்விகாரை முடிவுற்றதும், விசயத்துங்க வர்மனுடைய தந்தையின் பெயரால், சூளாமணி விகாரம் என்னும் பெயரிடப்பட்டது. முன்னரே, இராசராசன் 8943 கலம் நெல் வருவாயுள்ள 97 வேலி நிலத்தைக் கொண்ட ஆனைமங்கலத்தைப் பள்ளிச் சந்தமாக விட்டிருந்தான். அந்த அறக்கட்டளையைச் செப்பேட்டில் பொறித்துக் கொடுத்தவன் முதலாம் இராசேந்திர சோழனுவான். அதை ஆனைமங்கலச் செப்பேடு என்றும், லீடன் செப்பேடு என்றும் நாம் குறிப்பிடுகிறேம்.

இராசராசன் காலத்தில் நாகப்பட்டினம் சிறந்த துறைமுகப் பட்டினமாக விளங்கியது. தென்கிழக்கு ஆசிய நாடுகளில் இருந்து வந்த வாணிகக் கப்பல்கள் அங்கு தங்குவது வழக்கம். தென் கிழக்கு ஆசியாவில் சீரும் சிறப்பு முற்று விளங்கிய ஸ்ரீவிசயப் பேர ரசன், வாணிகத் தலமாகிய நாகப்பட்டினத்தில், தன்னுடைய குடும்பத்தின் புகழைப் பொறிக்க நினைத்தனன் போலும். பல்ல வர் காலத்திலேயே நாகப்பட்டினத்தில் புத்த விகாரை ஒன்று இருந்தது. பௌத்த சமயத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்த சைலேந்திரப் பேரரசன், அவ்விகாரையைப் புதுப்பித்துச் சிறப் புற்று விளங்குமாறு செய்ய முயன்றான். அம்முயற்சிக்குப் பேரர சன் இராசராசன் ஆதரவு அளித்துப் போற்றினான். இதன் மூலம் கடல் கடந்த வெளிநாட்டில் உள்ள ஒரு பேரரசோடு சோழ வேந்தன் நட்புறவு கொள்ள வாய்ப்புக் கிடைத்தது. தன்னைப் பகைத்தவர்களை அழித்தொழிக்கும் அடலேறு போன்றவன் இராசராசன். ஆனால், தன்னை நாடி வந்து நட்புறவு கொள்ளு வோர்க்கு நச்சினார்க்கினியனாக அவன் விளங்கினான். ஞாயிறன்ன வெந்திறல் ஆண்மை வாய்ந்த இராசராசனிடத்துத், திங்களன்ன தண்பெருஞ்சாயல் நிறைந்திருந்ததை இத்தொடர்பு உலகிற்கு உணர்த்துகிறது.

ஆனால், இந்நட்புறவு நெடுங்காலம் நீடிக்கவில்லை. இராசேந் திரன் ஆட்சிக் காலத்தில், கடாரத்தின் மீது படையெடுக்க வேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. தந்தையின் காலத்தில் அரும்பிய நட்புறவு, மகனுடைய ஆட்சியின் பதின்மூன்றாம் ஆண்டிலேயே முறிந்துவிட்டதைப் பார்க்கின்றோம். இதற்குரிய காரணம் என்னவென்பது தெளிவாகத் தெரியவில்லை.

இவ்விரு நாடுகளோடும் இராசராசன் கொண்டிருந்த தொடர்பு அவனுடைய அரசியல் சூழ்ச்சித் திறனையும், தன்னு டைய பேரரசை உலகறியச் செய்வதில் அவனுக்கிருந்த ஆர்வத் தையும் புலப்படுத்துகின்றன.

# 16. ஆட்சி முறை

இராசராசனுடைய ஆட்சிக் காலம் தமிழக வரலாற்றின் இரண்டாவது பொற்காலமாகும். விரிவான ஒரு பேரரசு நிறுவப் பெற்ற காலம் அது; நிலவளத்தோடு நீர்வளமும் மக்கள் மன வளமும் செழித்தோங்கிய காலம் அது; அறிவு நலத்தோடு கலை நலமும் கனிந்து விளங்கிய காலம் அது; செல்வச் செழிப்போடு சிந்தனைத் திறனும் சிறப்புற்ற காலம் அது. இத்தகைய மாட்சிக் குரிய காரணங்கள் பல. அவற்றுள் இராசராசனின் ஆட்சிமுறை செம்மையானதாகவும் சீரானதாகவும் அமைந்திருந்தமை முதன்மையான காரணமாகும்.

## அரசமைப்பு முறை

பேரரசன் ஒரு பக்கம் போர்களில் ஈடுபட்டிருந்தான். அத் தகைய நெருக்கடி நேரத்திலும் நாட்டு மக்கள் நலமாகவும் வள மாகவும் வாழ்வதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுப் பதில், அரசு பேரீடுபாடு காட்டியது. நாட்டில் அமைதியும் ஒழுங் கும் நிலைநாட்டப்படுவதில் அரசு கருத்தாக இருந்தது.

பண்டைத் தமிழகம் கோனாட்சியைத் தவிர வேறோர் ஆட்சி முறையையும் அறியாதது. அக்கோனாட்சியைத் 'தனிமனிதனின் ஆட்சி முறை' என்று சுட்டுவர். அத்தகைய ஆட்சிமுறையே இராச ராசன் காலத்திய ஆட்சி முறையாகும். மரபுவழி வந்த கோனாட்சி முறைக்குப் புது மெருகு கொடுத்தவன் இராசராசன். தனிமனிதனின் ஆட்சி முறையின் தீய இயல்புகளைக் களைந்து, 'குடி நலங் கருதும் கோனாட்சி' முறையை அவன் போற்றி வளர்த் தான். பெரியதொரு பேரரசைக் கட்டிக் காக்கவேண்டிய பொறுப்பு மிகுந்தமையால், அவன் மையக் குவிமுக (Bureau-cracy) ஆட்சி முறையை நிறுவ முயன்றான். அதனால், நாட்டின் பல பகுதிகளும் நடுவணரசின் உறுப்புகளாக இயங்கின. ஆனால், அதிகாரம் அனைத்தும்— ஆட்சியுரிமைகள் அனைத்தும் நடுவணரசில் குவித்து வைக்கப்படவில்லை. அதற்கு மாறாக, நாட்டாட்சியின்

இரத்த நாளங்களாக இருந்த ஊராட்சி மன்றங்களுக்குப் பரவலாக அரசின் ஆட்சியுரிமைகளும் வருவாய்களும் பகிர்ந்து அளிக்கப்பட்டன.

## சோழப் பேரரசின் உட்பிரிவுகள்

### பேரரசின் பரப்பு

தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு விசயாலயனால் நிறுவப்பட்ட சோழ அரசு, இராசராசன் காலத்தில் வடமேற்கே துங்கபத்திரையையும், வடகிழக்கே வேங்கி நாட்டையும் எல்லையாகக் கொண்டு தெற்கே ஈழத்தின் மையப்பகுதி வரையிலும் பரவி இருந்தது. இன்றைய தஞ்சாவூர் மாவட்டத்தையும், திருச்சிராப்பள்ளி, தென்னாற்காடு மாவட்டங்களின் சில பகுதிகளையும் புதுக்கோட்டை அரசின் ஒரு பகுதியையும் தன்னகத்துக் கொண்ட நிலப்பரப்பே பண்டைச் சோழ மண்டலமாகும். இராசராசன் காலத்தில் பண்டைச் சோழ மண்டலம் சோழப் பேரரசின் மையப்பகுதியாக விளங்கியது. அதைச் சுற்றிலும் புதியதாகக் கைப்பற்றப்பட்ட நாடுகள் நீண்டும் பரந்தும் இருந்தன.

### உட்பிரிவுகள்

இப்பெரு நிலப்பரப்பை, ஆட்சிமுறை வசதியைக் கருதிப் பல மண்டலங்களாக இராசராசன் பிரித்தான். அவனுடைய பதினேழாம் ஆட்சியாண்டில் (கி.பி. 1002 இல்) இப்பணி நடைபெற்றது. மண்டலங்களை வளநாடு, கோட்டம், கூற்றம் என்னும் பெயருடையனவாக அவன் பிரித்தான். இதற்கு முன்பு மண்டலங்களும் நாடுகளுமே இருந்தன. வளநாடுகள் இல்லை. இராசராசன் இன்றைய மாவட்டங்கள் போன்ற அமைப்பில் வளநாடுகளை அமைத்தான். வள நாடுகள் நாடுகளாகவும், நாடுகள் ஊர்களாகவும் பிரிக்கப்பட்டன.

### மண்டலங்கள்

சோழப் பேரரசின் பல மண்டலங்களாக சோழ மண்டலம், இராசராசப் பாண்டி மண்டலம், சயங்கொண்ட சோழ மண்டலம், மும்முடிச் சோழ மண்டலம், முடிகொண்ட சோழ மண்டலம், நிகரிலி சோழ மண்டலம், அதிராசராச சோழ மண்டலம், மலை மண்டலம், வேங்கை மண்டலம் என்பன விளங்கின.

இலங்கையை மும்முடிச் சோழ மண்டலம் என்றும், பாண்டி நாட்டை இராசராசப் பாண்டி மண்டலம் என்றும், தொண்டை

நாட்டைச் சயங்கொண்ட சோழ மண்டலம் என்றும், கங்கநாடு முடிகொண்ட சோழ மண்டலம் என்றும், நுளம்பபாடி நிகரிலி சோழ மண்டலம் என்றும், கொங்குநாடு அதிராசராச மண்டலம என்றும் பெயர் பெற்றன. சோழ மண்டலம், மலைமண்டலம், வேங்கி மண்டலம் என்பன பழைய பெயர்களுடையனவாக வழங்கி வந்தன. இம்மண்டலங்களுக்கு இடப்பட்ட புதிய பெயர்கள் யாவும் இராசராசனுடைய சிறப்புப் பெயர்களாகும்.

**வளநாடுகள்**

சோழ மண்டலத்தை இராசராசன் ஒன்பது வளநாடுகளாகப் பிரித்திருந்தான். அவை இராசேந்திர சிங்க வளநாடு, இராசாசிரய வளநாடு, கேரளாந்தக வளநாடு, பாண்டிய குலாசனி வளநாடு, நித்த விநோத வளநாடு, உய்யக் கொண்டார் வளநாடு, சத்திரிய சிகாமணி வளநாடு, அருமொழிதேவ வளநாடு, இராசராச வளநாடு என்பனவாகும். பொதுவாக நோக்குமிடத்து, இப்பிரிவுகள் எல்லாம் ஆறு, கால்வாய் போன்ற இயற்கை எல்லைகளுக்குட்பட்ட நிலப்பரப்புகளாகஇருந்தமை தெரிகிறது. சான்றாக, உய்யக்கொண்டார் வளநாட்டை நாம் காட்டலாம். அது காவிரியாற்றுக்கும் அரிசிலாற்றுக்கும் இடையில் உள்ள நிலப்பரப்பைக் கொண்டிருந்தது. தொண்டை மண்டலம் மட்டும் பண்டைக் காலத்திய முறைப்படி இருபத்து நான்கு கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு கோட்டமும் ஒவ்வொரு வளநாட்டிற்குச் சமமானதாகக் கருதப்பட்டது.

**நாடுகள்**

வளநாட்டின் உட்பகுதிகள், நாடுகள் என்று வழங்கப்பட்டன. சில வளநாடுகள் கூற்றங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. நாடுகளும் கூற்றங்களும் ஒரு நகரத்தை மையமாகக் கொண்டு பெயரிடப்பட்டன. இதனை இன்னம்பர் நாடு, திருவழுந்தூர் நாடு என்பன போன்ற வழக்கினால் அறியலாம்.

**இளவரசன்**

தந்தைக்குப் பிறகு மகன் அரசனாவது முறையாகும். பெரிதும் மூத்த மகனுக்கே அரசுரிமை வழங்கப்பட்டது. மூத்தவன் தவறிவிட்டால், அடுத்த மகன் அரசு கட்டில் ஏறுவது மரபு. அம்மரபிற்கு இராசராசன் சிறந்ததொரு சான்றாவான். சோழ மன்னர், தம் ஆட்சிக் காலத்திலேயே அரசனாவதற்குரிமையுடைய முதல் மகனுக்குப் பட்டம் கட்டி, அவனை அரசியல் முறைகளில் நல்ல பயிற்சி பெறுமாறு செய்துள்ளனர். இம்முறையைப்

பின்பற்றியே, இராசேந்திரனுக்கு இளவரசு பட்டத்தைத் தம்முடைய இருபத்தேழாம் ஆட்சியாண்டில் (கி.பி. 1012 இல்) அவன் கட்டியுள்ளான். அச்சமயம் இராசராசன் சற்றேறக் குறைய அறுபது ஆண்டுகளைக் கடந்திருக்கலாம். அவன் மகன் இராசேந்திரனே முப்பது வயதிற்கு மேற்பட்டவனுக இருந் திருத்தல் கூடும்.

## முடிசூட்டு விழா

அரசனுக்கும் இளவரசனுக்கும் முடிசூட்டு விழா சிறப்பாக நடத்தப்பட்டது. முடிசூட்டு விழாவன்று அரசிளங் குமரனை நறுநீராட்டி, யானை மீதேற்றி, அமைச்சர்களும் குறுநில மன்ன ரும் புடை சூழ நகர்வலஞ் செய்வர்; பின்னர், மங்கல முரசு கள் முழங்க அவனை அரசவைக்கு அழைத்துச் செல்வர். அங் குள்ள அரியணையில் அவனை அமர்த்தி, முடிசூட்டுவதற்கு உரிமை யுடைய குறுநில மன்னர் திருமுடியை எடுத்துக் கொடுக்க அரச குரு அதனை வாங்கி, அரியணையில் உள்ள அரச குமாரனுக் குச் சூட்டுவார். அப்பொழுது கோஇராசகேசரி வர்மன், கோப் பரகேசரி வர்மன் என்னும் பட்டங்களுள் ஒன்றை முறைமை வழி அவனுக்குச் சூட்டுவர். ஈதல்லாமல் சில அபிடேகப் பெயர்களைச் சூட்டுவதும் உண்டு.

முடி சூட்டு விழாவில் அரசன் நாட்டு மக்களின் நலங் கருதி யும் அறநெறி பிறழாதும் ஆட்சி புரிவதாக உறுதிமொழி யளிப்பான்.

## அரசின் இயல்பு

சோழருடைய ஆட்சி தனியொருவருடைய ஆட்சி என்பதை நாம் முன்னரே கண்டோம். மதிநுட்பம் நூலொடுடைய அரசன், குடிகளைப் போற்றிக் காப்பதையே குறிக்கோளாகக் கொண்டிருந் தான். அன்றுட அரசியலில் உண்டாகும் சிக்கல்களைத் தீர்ப்பதற் காக அரசனோடு கலந்து செயல்படுவதற்கு உறுதுணையாக இருந் தவர்கள் உடன் கூட்டத்து அதிகாரிகள் என்பவராவர். அவர்கள் அரசனோடு எங்கும் உடன் செல்லும் உரிமை பெற்றவர்களாவர். ஒவ்வோர் அரசியல் துறைகளுக்கும் அவர்கள் தலைமை வகித் திருக்க வேண்டும். அமைச்சர் பெருமக்களே உடன் கூட்டத்து அதிகாரிகளாகவும் இருந்திருக்கலாம்.

அரசனைக் காக்குங் கடவுளாகிய திருமாலுக்கு ஒப்பாகக் கூறுவது மரபு. இராசராசனை அவ்வாறு கருதினர் என்று திருவா லங்காட்டுச் செப்பேடு குறிப்பிடுகிறது. மற்றும் அரசனை இறை

இயல்பு வாய்ந்தவன் என்று நம்பிய மக்களும் உண்டு. உலகத்து உயிர்கள் எல்லாம் மழையை நோக்கி வாழ்ந்தன. அதைப்போன்று சோழரின் குடிமக்களோ தங்களுடைய அரசனின் செங்கோலை நோக்கி வாழ்ந்தனர். எல்லாவகையான அதிகாரங்களையும் அரசனே பெற்றிருந்தான். எதையும் தான் விரும்பியவாறு செய்து முடிக்கும் உரிமையை உடையவன் அவன். ஆயினும், அவன் அற நெறியைப் போற்றிப் பின்பற்றி வந்தான். நாட்டின் பழக்க வழக்கங்களையும், வழக்காற்று ஒழுக்க நெறியையும் கருத்தில் கொண்டு ஆட்சி புரிவதையே, சோழ மன்னர் சிறப்பாகக் கருதினர்.

போரில்லாத பொழுது, அரசன் நாட்டைச் சுற்றிப் பார்வையிட்டு வருவான். அதற்காக அரசனும் பரிவாரங்களும் தங்குவதற்கு ஒவ்வொரு முக்கியமான நகரங்களிலும் மாளிகைகள் அமைக்கப்பட்டு இருந்தன. அத்தகைய மாளிகைகள் இல்லாத ஊர்களில் கொட்டகாரங்கள் கட்டப்பட்டிருந்தன. இவ்வாறு அரசன் நாட்டின் பல்வேறு பகுதிகளுக்குச் சென்று தங்குகின்ற பொழுது, குடிமக்கள் தங்கள் குறைகளை அரசனிடத்து முறையிடுவதற்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன.

தன்னுடைய இருபத்தேழாம் ஆட்சியாண்டில் அவ்வாறு இராசராசன் நாடுகளைச் சுற்றிக் கொண்டு திருவெறும்பூர்க்கு (திருச்சிக்கு அருகில்) எழுந்தருளினன். அப்பொழுது அவனுடன் வந்திருந்த சிறுகுடையான் காளி ஆதித்தன் என்னும் அதிகாரி திருவெறும்பூர் கோயிலின் வரவு செலவு கணக்குகளைத் தணிக்கை செய்தான்[1] என்று ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது.

## அமைச்சர்

சோழப் பேரரசனுக்கு உதவி புரிய அமைச்சர் குழு ஒன்றிருந்தது ஆட்சித்தேரை அறம் என்ற ஒற்றைச் சக்கரத்தைக் கொண்டு நாடெங்கும் விரைவாகவும் ஒழுங்காகவும் இழுத்துச் சென்ற குதிரைகளே அமைச்சர்கள். அக்குதிரைகளை நெறிப்படுத்தி ஓட்டும் வலவனாக அரசன் விளங்கினன். சுந்தர சோழருடைய அமைச்சர்களுள் அநிருத்த பிரமாதிராசர் முதன்மையானவர். அவரைப் போன்று இராசராசனுக்கு அமைச்சராக இருந்தவர் யார் என்பது தெரியவில்லை. எனினும், சோழ மன்னரிடம் அமைச்சர்கள் இருந்தனர் என்பதைப் 'பார்க்கும் மதிமந்த்ர பாலகர்' என்று ஒட்டக் கூத்தர் குறிப்பிடுவதால் அறியலாம். 'அவனிருந்துழி யறிக வென்றனன் அபயன் மந்திரி முதல்வனே' என்னும் சயங்கொண்டார் வாக்கால் முதல்

[1] 109 of 1914, App. B

அமைச்சன் இருந்தமையும் தெரிய வருகிறது.[2] இவற்றால் சோழப் பேரரசன் காலத்தில் ஓர் அமைச்சர் குழுவே இருந்திருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது. அவர்கள் தெரிதலும் தேர்ந்து செயலும், ஒருதலையாச் சொல்லுவதிலும் வல்லவராக விளங்கினர்; வன்கண், குடிகாத்தல், கற்றறிதல், ஆள்வினை ஆகிய ஐவகைப் பண்புகளில் சிறப்புற்று விளங்கினர்.

## அரசியல் அதிகாரிகள்

சோழப் பேரரசினைக் கட்டிக் காக்கும் பணியில் அரசியல் அதிகாரிகள் சிறப்பிடம் பெற்றுள்ளனர். அவர்களை இரு வகையினராகக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. பெருந்தரம், சிறுதரம் என்பன அவ்விரு பிரிவுகளாகும். இன்றைய பேச்சு வழக்கில் பெருதனம் என்னும் சொல் வழங்கி வருகிறது. அது 'பெருந்தரம்' என்னும் சொல்லின் திரிபேயாகும். உயர் நிலை அதிகாரிகள் பெருந்தர அதிகாரிகள் எனப்பட்டனர்[9]. அதற்கு அடுத்த நிலையில் இருந்த அதிகாரிகள் சிறுதர அதிகாரிகள் என்று சுட்டப்பட்டனர். இன்றைய அரசாங்க அலுவலகங்களில் அரசிதழ் பதிவு பெற்ற அதிகாரி(Gazetted officers)களும், அரசிதழ் பதிவு பெறாத அதிகாரி(Non-Gazetted officers)களும் இருக்கின்றனர். இதைப் போன்றதே சோழர் காலத்திய அதிகாரிகளின் பாகுபாடாகும்.

இவ்விருவகையுள்ளும் அதிகாரிகள் பலர் இருந்தனர். அவர்களுக்கு, அக்காலத்தில் ஊதியம் கொடுப்பதில்லை. அரசியல் அலுவலரின் தகுதிக்கேற்ப அரசன் அவர்களுக்கு நிலத்தினை மானியமாக அளிப்பான். அதன் விளைச்சலை அவர்கள் ஊதியமாகப் பெறுவர். குறிப்பிட்ட அலுவலன் இறந்த பிறகு, அவனுக்கு வழங்கப்பட்ட நிலம் மீண்டும் அரசுடைமையாகிவிடும். இப்படி அதிகாரிகளுக்கு வழங்கப்படும் நிலத்தைச் சீவிதம் என்பர். அதிகாரிகளின் அரும்பெருஞ் செயல்களைப் பாராட்டி, அரசன் இறையிலியாக நிலத்தை அவர்களுக்குக் கொடுப்பதும் உண்டு.

## சிறப்புமிக்க அதிகாரிகள்

சோழப் பேரரசு வலுவான மையக் குவிமுக அரசாக இருந்தது. அதனால் அவ்வரசைச் சிறப்புற நடத்துவதற்குப் பலவகை அதிகாரிகளும் அலுவலரும் தேவைப்பட்டனர். தலை

2 காண்க : தி.வை. சதாசிவ பண்டாரத்தாரின் 'பிற்காலச் சோழர் சரித்திரம்', மூன்றாம் பகுதி, பக். 11

நகரில் அரசனோடு அமைச்சர் குழுவும் நால்வகைப் படையின் தலைவர்களும், அந்நால்வகைப் படைக்கும் தலைமையேற்ற மாதண்ட நாயகனும் நிலையாகத் தங்கி இருந்தனர்.

அரசனுடைய செயலகத்தில் திருவாய்க் கேள்வி, திருமந்திர ஓலை, திருமந்திர ஓலை நாயகம், விடையில் அதிகாரி, அரசியல் கருமங்களை ஆராயும் அதிகாரிகள் என்றும் பல்வகை அதிகாரிகள் சிறப்பிடம் பெற்றனர். அரசன் திருவாய் மொழிந்தருளும் ஆணைகளையும் செய்திகளையும் நேரில் கேட்டு வந்து சொல்லுபவன் திருவாய்க் கேள்வி; அதை அவ்வப்போது ஓலையில் எழுதும் அதிகாரி திருமந்திர ஓலை என்பவனாவான். இன்றைய தட்டெழுத்து -சுருக்கெழுத்து (Stenography) அலுவலர் போன்றவர் இவ்விரு அதிகாரிகளும் எனலாம். திருமந்திர ஓலை எழுதியுள்ளவற்றை மேற்பார்வையிட்டு அதில் கையொப்பம் இடும் அதிகாரியே திருமந்திர ஓலைநாயகம் எனப்படுவான். இவனை இன்றைய ஆட்சியமைப்பின் பல்வேறு துறைகளுக்குத் தலைவராக இருக்கும் தலைமைச் செயலரோடு (Chief Secretary) நாம் ஒப்பிடலாம். திருமந்திர ஓலை நாயகத்திற்கு மற்றொரு பணியும் உண்டு. குறித்த காலத்தில் குறித்த நிகழ்ச்சியை அரசன் நிகழ்த்த வேண்டும் என்பதை அவ்வப்போது அரசனுக்கு நினைவூட்டும் நேர்முக உதவியாளராக (Personal assistant) வும் அவன் பணிபுரிவான். விடையில் அதிகாரி என்பான் அரசனுடைய ஆணைகளையும் திருமுகங்களையும் கடைநிலை ஊழியர் மூலம் சேர்ப்பித்தலும், தேவையான செய்திகளுக்கு மாற்றங்களும் அவன் அனுப்பி வைப்பான்.

இந்த அரசியல் அதிகாரிகள் அன்றாட வேலை முறையைப் பின் வருமாறு செய்துள்ளனர். அரசனிடம் ஆணையைப் பெற வேண்டிய செய்தியைப்பற்றி, உடன் கூட்டத்து அதிகாரிகளுள் ஒருவன் அரசனுக்கு விண்ணப்பம் செய்வான். அதைக் கேட்ட மன்னன், உடனேயோ, அமைச்சர்களைக் கலந்த பிறகோ முடிவு செய்து, வாய்மொழியால் ஆணையைப் பிறப்பிப்பான். அதைக் கேட்டிருக்கும் திருவாய்க் கேள்வி என்னும் அதிகாரி சொல்ல, திருமந்திர ஓலை என்பான் அதை ஓலையில் எழுதுவான். அவ்வோலையின் வாசகத்தைச் சோதித்துத் திருமந்திர ஓலை நாயகம் அதில் கையொப்பமிடுவான். பின்னர் ஆணத்தி என்னும் அதிகாரி அதை அனுப்பி வைப்பான்.

அரசனுடைய ஆணையைப் பெற்று நாட்டின் பல பகுதிகளுக்கும் சென்று அரசின் அலுவல்களை ஆராய்ந்த அதிகாரிகள் கருமம் ஆராயும் அதிகாரிகள் என்று குறிப்பிடப் பட்டனர். அவர்கள் அரசியல் கருமங்கள் செம்மையாகவும் சீராகவும் செயல்படுத்தப்படு

கின்றனவா என்பதை ஆராயும் ஆய்வாளர்களாகப் (Inspectors) பணி புரிந்தனர். இக்காலத்திலும் ஒவ்வொரு துறையின் தலைமை யதிகாரிகள் வட்ட, மாவட்ட, மாநில அலுவலகங்களில் ஆய்வு நடத்தி வருவதைக் காணலாம்.

இவர்கள் அல்லாமல் ஒவ்வொரு நாட்டிலும் நாடு காவல் அதிகாரி என்று ஒருவன் இருந்தான்.

அவன் நாட்டின் அமைதியைக் காத்து வந்தான். தன்னுடைய மேற்பார்வையிலுள்ள நாட்டின் பல பகுதிகளிலும் கொலை, களவு, கலகம் போன்றவை நடைபெறுவண்ணம் அவன் கண்காணித்து வந்தான். அவை நடைபெற்றால் குற்றவாளிகளைக் கண்டுபிடித்து ஊர்ச் சபையாரிடமோ, நகரத்தாரிடமோ, அரசனிடமோ ஒப்பு வித்துத் தண்டனை பெறச் செய்வது அவனுடைய கடமையாகும். நாடு காவலுக்காக நாட்டு மக்களிடம் வாங்கப்பட்ட வரிக்கு நாடு காவல் அல்லது பாடிகாவல் என்பது பெயர், இவ்வதிகாரி இன்றைய மாவட்டக் காவல்துறைக் கண்காணிப்பாளரைப் (District Superintendent of police) போன்றவராவர்.

### புரவுவரித் திணைக்களத்தார்

நில வரியின் மூலம் கிடைத்த பொருளே சோழப்பேரரசின் முதன்மையான வருவாயாகும். அவ்வருவாயைப் பெருக்குவதற்கும், வரவேண்டியவை செம்மையாக வருமாறு செய்வதற்கும் உரிய வழிவகைகளைச் சோழப் பேரரசன் மேற்கொண்டான். அதற்காக அதிகாரிகள் பலரைக் கொண்ட ஒரு வாரியம் (Board) அமைக்கப்பட்டிருந்தது. வரிகளிலே முதன்மையானதும் அடிப்படையானதும் நிலவரியே அதைப் புரவுவரி (போற்றிக் காப்பதற்குரிய வரி) என்பர். அப்புரவுவரியைத் தண்டுவதற்கும், குறிப்பு வைப்பதற்கும் ஒரு தனி அலுவலகம் மண்டலங்கள்தோறும் தனித் தனியே அமைக்கப் பெற்றன அவற்றிற்குப் புரவுவரித் திணைக் களம் என்பது பெயர். அவற்றை 'நிலவரிக் கழகம்' என்று நாம் கூறலாம். இக்காலத்தில் மாநிலங்கள்தோறும் செயல்பட்டு வரும் வருவாய்த்துறை வாரியத்தைப் (Board of Revenue) போன்ற அமைப்பினைப் புரவுவரித் திணைக்களம் கொண்டிருந்தது.[3]

புரவுவரித் திணைக்களம் ஒரு பெரிய அலுவலகமாக இயங் கியது. ஏறக்குறைய இன்றைய மாவட்ட ஆட்சித் தலைவரின் (Collector) அலுவலகத்தைப் போன்றிருந்தது. அதில் பலவகை அலுவலர்களும் அதிகாரிகளும் பணிபுரிந்து வந்தனர். அத்திணைக்

[3] டி, பக் 13-14

களத்தின் தலைவர் (புரவுவரித் திணைக்கள நாயகம்) என்பவராவர். ஊர்தோறும் சென்று, நிலவரிக் கணக்குகள் ஒழுங்காக எழுதி, ஊராட்சி மன்றங்களில் வைக்கப்பட்டுள்ளனவா என்பதை ஆயும் அதிகாரிக்குப் (புரவுவரித் திணைக்களத்துக் கண்காணி) என்பது பெயர் ஒவ்வோர் ஊரிலிருந்தும் அரசுக்குச் சேர வேண்டிய நில வரி எவ்வளவு என்பதையும், அதைச் செலுத்த வேண்டியவர் யார் யார் என்பதையும் தெரிவிக்கும் புத்தகத்தை வரிப் பொத்தகம் என்பர். மற்றும் ஒவ்வோர் ஊரிலும் இறையிலி யாகவும், சீவிதமாகவும், தேவதானமாகவும், பள்ளிச் சந்த மாகவும் அரசன் நிலங்களை வழங்குவதை அவ்வப்போது அப் புத்தகத்தில் குறித்து வைப்பர். நிலங்களை விற்றோர், வாங்கியோர் ஆகியோரைப் பற்றிய செய்திகளையும் அப்புத்தகத்தில் காண லாம். அப்புத்தகத்தில கணக்குகளை எழுதிவைக்கும் அதிகாரி களுக்கும் வரிப் பொத்தகம் என்னும் பெயர் வழங்கியது. அவர் களுடைய தலைவனை வரிப் பொத்தக நாயகம் என்று அழைத்தனர். வரி புத்தகக் கணக்கைத் தணிக்கை செய்த அதிகாரிகளுக்கு வரிப்பொத்தகக் கணக்கு என்பது பெயர் நிலவுரிமை பற்றி அவ்வப்போது உண்டாகும் மாறுதல்களையும் புதிய சேர்க்கை களையும் வரிப்பொத்தகத்தில் குறித்து வைப்பவன் வரியிலிடு அதிகாரியாவான்.

இவர்களுக்கு அடுத்த நிலையில் முகவெட்டி, கீழ்முக வெட்டி, பட்டோலை என்னும் அலுவலர் பணி புரிந்தனர். முகவெட்டி என்பான் ஊர்களின் பெயர்கள், அவ்வூரில் நிலவரி செலுத்து வோர் போன்ற புள்ளிவிவரக் குறிப்புகளைத் தயாரித்து அளிப்பவனாவான். முகவெட்டி என்பது திருமுகவெட்டி என்னும் சொல்லின் திரிபாகலாம். கல்லிலே அரசனுடைய கட்டளையை வெட்டுபவன் என்று அவனைக் கூறலாம். அவனுக்கு உதவியாக எடுபிடி வேலைகளைச் செய்வதோடு கல்வெட்டுகளைக் கல்லில் பொறிக்கும் பணியையும் செய்தவன் கீழ்முகவெட்டி என்பவ னாவான். நாள்தோறும் நடப்பவற்றை நிகழ்ச்சிக் குறிப்பில் எழுதி வைப்பதோடு, திருமுகம் அனுப்பும் பணியையும் செய் தவன் பட்டோலை எனப்பட்டான். விசாரணைத் துறைக்குத் தலைமை தாங்கியவன் விடையில் அதிகாரி என்பவனாவான்.

நாடுகளின் எல்லைகளையும் அமைப்பினையும் கூறுபடுத்தி அளப்பவரும், விளைநிலங்களின் தரத்தை ஆய்ந்து மதிப்பிடும் அதிகாரிகளும் அக்காலத்தில் இருந்தனர். அவர்களை முறையே நாடு கூறு செய்வார், நாடு வகை செய்வார் என்று கல்

வெட்டுகள் சுட்டுகின்றன. அவர்கள் நிலமதிப்பீட்டுத் [Survey Department] துறையின் பணிகளைச் செய்தனர்.

அவர்களைப்பற்றிப் பல குறிப்புகள் இராசராசனுடைய கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. 'திருவாய் மொழிந்தருளின படிக்கு வரியிலார் வரியிலே இட்டு' எனவும், 'இப்படி கணக்கிலும் இட்டுக் கொள்ளக் கடவர்களாக வரிக்குக் கூறு செய்வார்க்கும் சொன்னோம்' எனவும், 'புரவுவரி ஆலங்குடியான்' எனவும், 'வரிப்பொத்தகம் பருத்தியூர்க் கிழவன் சிங்கன வெண்காடன்' எனவும், 'பட்டோலைப் பெருமான் அம்பலததாடி' எனவும், 'விடையதிகாரி உய்யக் கொண்டான் எழுத்து' எனவும் வரும் கல்வெட்டு வாசகங்கள் அன்றைய அதிகாரிகளுள் சிலரைப் பற்றித் தெரிந்துகொள்ள உதவுகின்றன.

இவ்வாறே நாட்டைக் கூறு செய்வோரும் வகை செய்வோரும் பலர் அக்காலத்தில் இருந்தனர் என்பதை, 'ஸ்ரீராசராச தேவர்க்கு யாண்டு இருபத்தைந்தாவது ஆமூர்க் கோட்டம் வகை செய்கின்ற புதுக்குடையான் ஏகதீரன் ஐம்பதின்மன்' என்றும், 'நாடுவகை கற்றன் ஆதித்தனுன மூவேந்த வேளான் மாராயம்' என்று திருவடந்தைக் கோயிலில் இராசராசனின் பதினேழாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது.

### பட்டங்கள் தந்து பாராட்டுதல்

அரசியல் அதிகாரிகளின் தொண்டினைப் பாராட்டி அவர்களுக்கு இராசராசன் பட்டங்கள் பல வழங்கியுள்ளான். அவை மாராயன், பேரரையன், அரையன், மூவேந்த வேளான், மாவலி வாணராயன், பல்லவரையன், விழுப்பரையன், பிரமாதிராசன், பிரமராயன் என்பன. அப்பட்டங்களுக்கு இடையே நுட்பமான படிநிலை வேறுபாடு இருந்திருக்க வேண்டும். அப்பட்டங்களைப் பெரிதும் தன்னுடைய இயற்பெயர் அல்லது சிறப்புப் பெயரோடு சேர்த்து, இராசராசன் தன்னுடைய அதிகாரிகளுக்கு அளித்துள்ளான்.

அவற்றுள் பிரமாதிராசன், பிரமாதிராயன் என்னும் பட்டங்கள் பார்ப்பனர் குடியைச் சேர்ந்தவர்க்கு மட்டும் அளிக்கப் பட்டன. சேனாபதி கிருஷ்ணன் இராமனான மும்முடி சோழ பிரம (மா)ராயன் என்னும் பெயர் இதற்குப் போதிய சான்றாகும்.

இராசராசனால் பட்டங்கள் கொடுத்துப் பாராட்டப்பட்ட அதிகாரிகள் பலர் அக்காலத்தில் இருந்தனர். சேனாதிபதி குரவன் உலகளந்தானான இராசராச மாராயன், கடைராச்சன் பட்டாலகனான நித்த விநோத விழுப்பரையன், ஈராயிரவன் பல்லவரையனான மும்முடி சோழ போசன், பெருந்தரங்கோன் சூற்றியான அருமொழிப் பல்லவரையன், அமுதன் தேவனான இராசவித்தியாதர விழுப்பரையன், பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியனாகிய தென்னவன் மூவேந்த வேளான் என்போர் அக்காலத்தில் பட்டம் பெற்றோருள் குறிப்பிடத்தக்க சிலராவர்.

## நில அளவை மதிப்பீடு

சோழப் பேரரசனின் ஆட்சியில் செய்யப்பட்ட ஆக்கப் பணிகளுள் முதன்மையானது, நாடு முழுவதிலும் இருந்த நிலங்களை அவன் அளந்தமையாகும். நிலவரியை ஒழுங்குபடுத்துவதற்கு முன்னர், 'நாட்டில் எவ்வளவு நிலங்கள் உள்ளன? அவற்றின் தரம் எத்தகையது?' என்பன போன்ற பல செய்திகளை அரசன் அறிய விரும்பினான். அதனால், தன்னுடைய பதினாறும் ஆட்சியாண்டாகிய கி. பி 1001 இல் சோழப் பேரரசு முழுவதையும் அளக்குமாறு இராசராசன் கட்டளையிட்டான்.[4] அப்பணி, குரவன் உலகளந்தான் இராசராச மாராயன் தலைமையில் தொடங்கப் பெற்றது. இரண்டு ஆண்டுகளில் நாடு முழுவதும் அளக்கப்பட்டு, அப்பணியை அவன் செம்மையாகச் செய்து முடித்தான். அவனுடைய திறமையைப் பாராட்டி, அவனுக்கு உலகளந்தான் என்னும் சிறப்புப் பெயரோடு இராசராச மாராயன் என்னும் பட்டமும் அரசனால் அளிக்கப்பட்டது. மற்றும் கேரளாந்தக வளநாட்டுத் தட்டைக்களநாட்டும் தேவனும் பள்ளித் திருநோம்பனூர் மாதேவர் ஆலயத்துப் பணி மக்கள், கோயில் செலவிற்காக ஒதுக்கப்பட்டிருந்த பொருளைக் கவர்ந்து கொண்டதைக் கண்டறிந்து உலகளவித்த திருவடிகள் சாத்தன் என்பவன் தண்டனை விதித்தான் என்று ஒரு கல்வெட்டு அறிவிக்கிறது.[5] திருச்சிராப்பள்ளி மாவட்டம் கரூர் வட்டத்திலுள்ள சோழூரில் காணப்படும் இராசராசனுடைய பதினேழாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு[6] ஒன்றில் உலகளவித்த திருவடிகள்

[4] S. I. I., Vol. 8., Nos. 222, 223; Ins. 59 of 1913: A. R. E. 1918, pt. 2; Para. 25; 44 of 1907.
[5] No. 199 of App. B. of 1917.
[6] Ibid

சாத்தன் என்ற அரசியல் அதிகாரி குறிப்பிடப்பட்டுள்ளான். இவ்விரண்டு கல்வெட்டுகளும் சுட்டும் திருவடிகள் சாத்தன் என்பானும் நிலம் அளந்த அதிகாரிகளுள் ஒருவனாக இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

தஞ்சைப் பெரிய கோயிலில் காணப்படும் கல்வெட்டுகளில் 'அளந்தபடி நிலம்' என்னும் தொடர் காணப்படுகிறது. இதனாலும் நிலம் அளக்கப்பட்ட செய்தி தெரிகிறது.

நிலம் அளப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட கோல் பதினாறு சாண் நீளமுடையது. அதனை உலகளந்த கோல் என்று வழங்கினர் நிலத்தினை நீர் நிலம், கொல்லை, நத்தம், காடு என்று அவர்கள் பாகுபடுத்தியுள்ளனர். நன்செய் நிலத்தை நீர் நிலம் என்றும், புன்செய் நிலத்தைக் கொல்லை என்றும், மக்கள் குடியிருக்கும் மேட்டுநிலப் பகுதியை நத்தம் என்றும் குறிப்பிட்டனர். நிலத்தினைக் குழி, மா, வேலி என்ற முறையில் பாகுபாடு செய்துள்ளனர். நிலத்தை அளந்து, அதன் எல்லைகளைத் தெரிவிக்கும் வகையில் கற்கள் நடுவது வழக்கம் அக்கற்களைப் புள்ளடிக் கற்கள் என்று வழங்கியுள்ளனர். "இப்பரிசு கல்லு நாட்டி எல்லைதெரித்து" எனவும், "நாற்கோ லாசறுதியில் நாட்டின புள்ளடிக்கல்லேயுற்று" எனவும் வழங்கும் கல்வெட்டுப் பகுதிகளால் இதனை நாம் அறிகிறோம்.

நாடு முழுவதிலும் நிலத்தினை அளந்த பொழுது, பலருக்கும் பொதுவாகப் பயன்படக் கூடிய பகுதிகள் வரி விதிக்கப்படாமல், இராசராசனுடைய ஆணையின்படி ஊர்ப்பொது நிலங்களாக ஒதுக்கப்பட்டன. அவை ஊர்நத்தம், தளிச்சேரி, ஈழச்சேரி, வண்ணாரச்சேரி, கம்மாளச்சேரி, பறைச்சேரி, வெள்ளான் சுடுகாடு, பறைக்குளக் (சுடுகாடு) குழி, களத்துமேடு, குடியிருக்கை, திருமஞ்சனக் குளம், ஊருணி குளம், கழனிக் குளம், நந்தவனம், ஓடை, ஊர்நிலத்து ஊடறுத்துப் போன வாய்க்கால், கன்றுமேய் பாழ்நிலம், கொட்டகாரம், சுடுகாட்டிற்குப் போகும் வழி, ஆறு, ஆறிடு படுகை, பெருவழி, மன்றம், மனை, மனைப்படப்பை, கடை, கடைத்தெரு, கிடங்கு, உவர் நிலம்[7] என்பனவாகும்.

இவற்றை நீக்கிவிட்டு, எஞ்சிய நிலத்தினை நிலவளத்தினையும், பாய்ச்சப் பெறும் நீரின் வளத்தையும் அடிப்படையாகக் கொண்டு தரம் பிரிக்கப்பட்டன.

[7] S. I. I., vol, 2. pt. I: No, 4, 71.

நிலத்தினை அளந்து தரம் பிரிக்கும் பழக்கம் பண்டைக் காலத்தில் இங்கிலாந்தைத் தவிர வேறு எந்த நாடுகளிலும் கேள்விப்படாத செய்தியாகும். வெற்றி வீரர் வில்லியம் (William, the Conqueror) இங்கிலாந்தின் நிலங்களை அளந்து, 'டூம்ஸ் டே புக்' (Dome's Day Book) எனப்படும் நிலப்பதிவேட்டினைத் தயாரிப்பதற்கு (கி.பி. 1086) எண்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பே, தமிழ் நாட்டில் இராசராசன் நிலத்தினை அளந்தும் வகைப் படுத்தியும் தீர்வையை மதிப்பிட்டும், பதிவேட்டில் பொறித்தும் உள்ளமை நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது.[8]

இராசராசன் காலத்தில் நிலத்தை அளந்தவர்கள் மிகச் சிறிய நிலத்தையும் நுட்பமாக அளந்து, வரிப் பொத்தகத்தில் பதிவு செய்துள்ளமை வியப்பிற்குரிய செயலாகும். "இறையிலி நீங்கு நிலம் முக்காலே இரண்டு மாக்காணி அரைக்காணிக் கீழ் அரையே மூன்றுமாவின் கீழ் மூன்றுமா அரைக்காணி முந்திரிகைக் கீழ் முக்காணிக் கீழ் முக்காலே ஒருமா"[9] என்று குறிப்பிட்ட ஒரு நிலத்தின் அளவினைத் தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது. அதாவது ஒரு வேலி நிலத்தில் $\frac{1}{52,428,800,000}$ என்னும் அளவுடைய நிலத்தையும் அவர்கள் அளந்துள்ளமையும் அதற்குத் தீர்வை விதித்துள்ளமையும் இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.[10] இந்நிலத்தின் பரப்பளவு $\frac{1}{60,000}$ சதுர அங்குலமாகும்.[11]

ஒவ்வோர் ஊரும் இவ்வளவு வேலி நிலங்களையுடையது என்பதை நுட்பமாக அளந்தறிந்து, அதிலிருந்து வரி விதிக்கத் தகாத பொது நிலங்களின் பரப்பைக் கழித்துக் கொண்டு, எஞ்சி நின்ற விளைநிலங்களுக்கே நிலவரி விதிக்கப்பட்டது. நிலவளம் மாறுமிடத்து நிலத்தின் தரத்தை மாற்றி வரியை உயர்த்துவதும் குறைப்பதும் உண்டு. இது அருகிய வழக்கு. எந்நிலையிலும் வரிகளை மாற்றிவிடாமல், ஒரே நிலையில், நிலையாக வைத்திருப்பது பெரு வழக்காகும். நிலையாக ஒரே நிலையில் அமைந்த நிலவரி

8 Krishnaswamy Aiyangar, S.: Some Contributions of South India to Indian Culture P. 409.
9 S. I. I., Vol. 2; pt. I: P. 56.
10 M. E. R., 1900, Rep. para 25; S. I. I., Vol. 2., p. 62.
11 Krishnaswami Aiyangar, S K.: Hindu Administrative Institutions in South India, P. 141.

யினைச் சோழ மன்னர் காலத்தில் 'நிலையிறை' (Permanent Settlement)[12] என்று குறிப்பிட்டனர். இத்தகைய வரியை 'நின்றிறை' என்று இராசேந்திரனுடைய திருவாலங்காட்டுச் செப்பேடு அழைக்கிறது.[13] ஆங்கிலேயர் இந்தியாவை ஆளத் தொடங்கிய காலத்தில் காரன்வாலிஸ் என்னும் கவர்னர் ஜெனரல் முதன் முதலாக நிலையான நிலவரித் திட்டத்தை வங்காளத்தில் நடைமுறைக்குக் கொண்டு வந்ததாகச் சரித்திரம் பேசுகிறது.[14] இந் நிகழ்ச்சிக்கு எழுநூறு ஆண்டுகட்கு முன்பே தமிழ் நாட்டில் இம்முறை வழக்கிலிருந்ததை இங்குக் கருதத்தக்கதாகும்.

## நிலவுரிமை

தமிழ் நாட்டில் நிலவுடைமை தனிமனிதனுடைய உரிமையாகவே நெடுங்காலமாக இருந்து வருகிறது. எந்தக் காலத்திலும் அதை அரசின் தனியுரிமைச் சொத்தாகக் கருதியதில்லை. குடிமக்களின் உடைமையாக இருந்த நிலம் நீங்கலாக, எஞ்சி இருந்த நிலமே அரசனுக்குரியதாகக் கருதப் பெற்றது. குறிப்பிட்ட ஓர் ஊரில் அரசனுக்குக் கோயில் எடுக்கவோ, தானம் செய்யவோ நிலம் தேவைப்பட்டால், அதை அவ்வூராட்சி மன்றத்தினரிடமிருந்து அன்பளிப்பாகவோ விலைக்குப் பெற்றோ, அதற்கு மாறாக வேறோர் இடத்தில் நிலத்தை ஒதுக்கியோ அரசன் குறிப்பிட்ட நிலத்தைப் பெறுவது வழக்கம்.[15] குடிமக்களுக்குத் தொன்று தொட்டு உரிமையாக இருந்து வந்த நிலம் 'காணியாட்சி'[16] எனப்பட்டது.

வேளாண்மைப் பொருளாதாரத்திற்கு அடிப்படையாக இருந்துவருவது நிலம். நிலத்தை உழுது பயிரிட்டு, அதன் வருவாயைக் கொண்டு வாழ்க்கை நடத்திய மக்களே நாட்டின் முதுகெலும்பாக இருந்து வருகின்றனர். சோழப் பேரரசில் இருவகை குடிமக்கள் இருந்தனர். நிலத்தை உரிமையாகப் பெற்றிருந்தவர்கள் அரசுக்கு இறை செலுத்தி வந்தனர். அவர்களைக் கல்வெட்டுகளில் 'இறை குடிகள்' என்று குறிப்பிடுவதைப் பார்க்கிறோம். மற்றொரு வகையினர் 'குடிகள்' என்று பொதுவாகச் சுட்டப்பட்டனர். அவர்களுக்குச் சொந்தமான நிலம் கிடையாது. அதனால், அவர்கள் அரசுக்கு இறை செலுத்தியதும் இல்லை. நிலக்கிழார்களுடைய வயல்களில் அவர்கள் கூலிக்கு

12 Ins. 356 of 1924.
13 S. I. I., Vol. 3: No. 205; l. 76.
14 ஸ்மித், V. A. : ஆக்ஸ்போர்ட்டின் இந்திய வரலாறு பகுதி III, பக். 247.
15 S. I. I., Vol. 8; pt. I., P 25.
16 Appadorai, A.: Economic Conditions in Southern India, Vol. I. P P. 120-121.

வேலை செய்தனர். அத்தகையோர் இக்காலத்தில் பண்ணையாட்கள (Farm labourers) என அழைக்கப்படுகின்றனர். அரசுக்கு இறை செலுத்தப்பட்ட நிலங்கள் ஓர் ஊரில் இருக்குமானால், அதைத் திறப்பு என்றும், வெள்ளான் வகை என்றும் கூறுவது வழக்கம். அரசனால் தானமாக அளிக்கப்பட்ட நிலங்களும் ஒவ்வோர் ஊரிலும் இருப்பதுண்டு. தானங்கள் பலவகைப்படும். கோயில்களுக்கு அளிக்கப்பட்ட தானம், மடங்களுக்கு அளிக்கப்பட்ட தானம், ஆசிரியர்களுக்கு அளிக்கப்பட்ட தானம், அறச் [தரும] சாலைகளுக்கு அளிக்கப்பட்ட தானம், பிராமணர்களுக்கு அளிக்கப்பட்ட தானம் என்றும் பலவகை உண்டு.

சிவன் கோயில்களுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம் தேவதானம் என்றும், திருமால் கோயில்களுக்குத் தானமாக விடப்பட்ட நிலம் திருவிடையாட்டம் என்றும், சமண, பௌத்தப் பள்ளிகளுக்குத் தரப்பட்ட நிலம் பள்ளிச் சந்தம் என்றும், பெயரிடப்பட்டுள்ளன. மடங்களுக்குக் கொடுக்கப்பட்டது மடப்புறம் எனப்பட்டது. ஆசிரியர் (குருமார்) களுக்குக் கொடுக்கப்பட்ட நிலத்தை ஆசாரிய போகம் என்று கூறுவர். அறவோருக்கு உணவு அளிப்பதற்காக அறச்சாலைகளுக்கு விடப்பட்ட நிலம் சாலா போகம் என்பதாகும். பிராமணர்களுக்கு விடப்பட்ட நிலம் பிரமதேயம் எனப்பட்டது. இவற்றிற்கு வரி கிடையாது. இதனால் இவற்றை இறையிலி நிலங்கள் என்று சுட்டுவது வழக்கம்

இவையல்லாமல், தனிமனிதர்கள் செய்து வந்த பணிகளுக்காக, அவர்களுக்கு விடப்பட்ட நிலம் சீவிதம், போகம், விருத்தி, காணி, பற்று, புறம், பட்டி, முற்றூட்டு என்னும் பல்வகைப் பெயர்களில் வழங்கியது. இவையாவும், அவரவர்கள் செய்த வேலைக்குரிய ஊதியத்திற்காகக் கொடுக்கப்பட்ட நிலங்களாகும்; தானமாகக் கொடுக்கப்பட்டவை அல்ல அரசியல் அலுவலர்க்கும் அதிகாரிகளுக்கும் வாழ்நாள் முழுவதிலும் அனுபவிக்குமாறு கொடுக்கப்பட்ட நிலம் சீவிதம். கோயிலில் அர்ச்சனை செய்வோருக்கும், மருத்துவர்களுக்கும் கூத்து ஆடுவோருக்கும் ஒதுக்கப்பட்ட நிலம் அர்ச்சனா போகம், வைத்திய போகம், நிருத்த போகம் எனப்பட்டன. கோயில்களில் இதிகாசங்கள், புராணங்கள் முதலியவற்றைப் படித்த பார்ப்பனர்க்கு வழங்கப்பட்ட நிலம் பாரத விருத்தி, பட்ட [பட்டாரகர்] விருத்தி என்றும் வழங்கப்பட்டன.

ஊர்ப் பொது மன்றங்களில் பணி புரிந்தவருக்குக் கொடுக்கப்பட்ட நிலம் மெழுக்குப் புறம், அம்பலப்புறம் என்று குறிப்பிடப்

பட்டன. ஊராட்சி மன்றங்களுக்குச் சில அறங்களைச் செய்வதற்காகக் கொடுக்கப்பட்ட நிலம் அறப்புறம் எனப்படுவதாகும். கலைத் துறையில் பணி புரிந்த கலைஞர்களுக்கு வழங்கப்பட்ட நிலம் 'காணி' என்னும் பெயருடையதாகும். பதியி(ஆடல் மகளிர்)லார் காணி, நட்டுவக்காணி, சாக்கைக(கூத்தர்)காணி, கூத்தாட்டுக் காணி, வீணைககாணி, உவச்சக்காணி, திருப்பதிகக்(ஓதுவாருக்கு) காணி, பாணக்(இசைவாணன்)காணி என்றும் பலதிறப்பட்ட காணி நிலங்களை இராசராசன் இறையிலியாகக் கொடுத்த செய்தியைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. போரில் உயிர் துறந்த வீரர்களின் மனைவிமக்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலம் உதிரப்பட்டி எனப்பட்டது. படைகளின் தலைவனுக்கு அளிக்கப்பட்ட நிலம் படைப்பற்று, வன்னியப்பற்று, என்றும் சுட்டப்பட்டன.

"வெள்ளான்வகை யொழிந்த பிற வகை நிலங்களில் பலவற்றிற்கு அக்காலத்தில் காராண்மை, மீயாட்சி என்ற இருவேறு உரிமைகள் இருந்தன என்று தெரிகிறது. காராண்மை என்பது, பயிரிடும் குடிகளது உரிமையாகும்; மீயாட்சி என்பது நிலத்தின் சொந்தக்காரரது உரிமையாகும். இக்காலத்தில் காராண்மை என்பது குடிவாரம் எனவும், மீயாட்சி என்பது மேல்வாரம் எனவும் வழங்குகின்றன."[17]

பிரமதேய நிலங்கள் இருவகைப் படும். அவை ஏக போகப் பிரமதேயம், பிரமதேயம் என்பனவாகும். ஓர் ஊர் முழுவதும் ஒரு பார்ப்பனனுக்கே பிரமதேயமாக அளிக்கப்பட்டால் அது ஏக போகப் பிரமதேயமாகும். சுந்தர சோழரின் அமைச்சரான அநிருத்த பிரமாதிராசனுக்கு அன்பில் என்னும் ஊர் தானமாகக் கொடுக்கப்பட்டது. இது தனியொருவனுக்கு வழங்கப்பட்ட பிரமதேயமாகும். தேவதானம், வெள்ளான் வகை, பிரமதேயம் மூன்றும் சேர்ந்த ஊர்களும் உண்டு.

இராசராசனுடைய கருந்திட்டைக்குடிக் கல்வெட்டு ஒன்று, பிரமதேயமும் வெள்ளான் வகையும் கலந்திருந்த ஊரில் இருந்த பிராமணர் அல்லாத பிற வகுப்பினர், தங்கள் வெள்ளான் வகை நிலத்தைக் கோயிலுக்கோ, பிரமதேயத்தின் சபையாருக்கோ விற்றுவிட வேண்டும் என்று ஆணை பிறப்பித்துள்ளதைத் தெரிவிக்கிறது. இராசராசனுடைய தமக்கையான குந்தவைப் பிராட்டியார், இராசராச சதுர்வேதி மங்கலத்து இருந்த பிற சாதியினரின் நிலங்களை விலை கொடுத்து வாங்கி, அவற்றைக் கருந்திட்

17 சதாசிவ பண்டாரத்தார், தி. வை.: op. cit; பக். 78-79

டைக்குடித் திருக்கோயிலில் திருநந்தா விளக்கு எரிக்க அறக் கட்டளையாக வழங்கினர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. இவற்றால், சோழ மன்னருக்கு எத்தகைய நிலவுரிமை இருந்தது என்பது புலனாகின்றது.

## நீர்ப்பாசனம்

உழவுத் தொழில் செழிப்புற்றால்தான் நாடு வளமுறும்; அரசிறை மிகுதியாகக் கிடைக்கும் என்னும் கருத்தினைச் சோழ மன்னன் நன்குணர்ந்திருந்தான். நிலத்தினை அளந்து, வகைப் படுத்திய பொழுது நீர்வளத்தினையும் ஓர் ஒப்பளவாகக் கொண்டு தரம் பிரித்தனர் என்பதை நாம் முன்னரே கண்டோம். மழையை மட்டும் நம்பி உழவுத் தொழிலைச் செய்வது பெரும்பயன் தருவ தில்லை என்பதை அனுபவவாயிலாக நம் முன்னோர்கள் கண்டறிந் தனர். அதனால், அவர்கள் பேராற்றில் இருந்து கிளையாறுகள் பல வற்றைப் புதிதாக வெட்டியும், பள்ளத்தாக்குப் பகுதிகளில் ஏரி களைக் கட்டியும், பழையனவற்றை அவ்வப்போது ஆழப்படுத் தியும், பழுது பார்த்தும் வந்துள்ளனர்.

இராசராச சோழனுடைய ஆட்சிக் காலத்தில் நீர்ப்பாசனத் திட்டங்கள் சில நிறைவேற்றப்பட்டன. திருச்சிராப்பள்ளி மாவட் டத்தில் ஓடும் உய்யக் கொண்டான் ஆறும், கோனேரி இராசபுரத் திற்கு அண்மையில் உள்ள கீர்த்திமான் என்னும் ஆறும் அவனு டைய காலத்தில் வெட்டப்பட்டன. அவற்றால் சோழ நாட்டில் உழவுத் தொழில் சிறப்புற முடிந்தது. மற்றும், தொன்று தொட்டு சோழ நாட்டை வற்றா வளங்கொழிக்கும் திருநாடாக்கிய காவிரி யும், அதில் இராசராசனுடைய முன்னோர்கள் வெட்டிய கிளையாறு களான மதுராந்தக வடவாறு, வீர சோழ வடவாறு, குஞ்சர மல்லன் போன்றவையும் அக்காலத்திய நீர்ப்பாசனத்திற்குப் பேரு தவியாக இருந்தன.

பேராறுகள் ஓடாத பகுதிகளிலும், அவற்றிலிருந்து கிளையாறு கள் வெட்ட இயலாத நிலப்பரப்புகளிலும் பண்டைக் காலம் முதல் கொண்டு ஏரிகள் வெட்டுவது வழக்கம். அம்முறைப்படி சோழ மன்னர் ஏரிகள் சிலவற்றை வெட்டியுள்ளனர். இராசராசன் ஆட்சிக் காலத்தில், தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள உலக புரம் என்னும் ஊரில் கண்டராதித்த பேரேரியும், திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் திருமழபாடிக்கு அருகில் உள்ள செம்பியன்

மாதேவிப் பேரேரியும் வெட்டப்பட்டன செங்கற்பட்டு மாவட்டத்தில், மதுராந்தகத்தில் உள்ள மதுராந்தகப் பேரேரியும், திரிபுவனியிலுள்ள மதுராந்தகப் பேரேரியும், உத்தம சோழனாகிய மதுராந்தகனால் வெட்டப்பட்டனவாகும். இராசராசன இளவரசனாக இருந்த காலத்தில் இவை வெட்டப்பட்டன. வட ஆர்க்காடு மாவட்டத்தில் இராசராசன் தந்தையின் பெயராலும், தமக்கையின் பெயராலும் இரண்டு ஏரிகள் வெட்டப்பட்டுள்ளன. பிரமதேசம் என்னும் ஊரில் சுந்தர சோழப் பேரேரியும், அம்மாவட்டத்தின் மற்றொரு பகுதியில் குந்தவைப் பேரேரியும் வெட்டப்பட்டுள்ளன. இவ்விரண்டும் இராசராசன் காலத்தில் அமைக்கப்பட்டன. இத்தகைய ஏரிகளைக் கண்காணிக்கும் பொறுப்பினை ஊராட்சி மன்றத்தின் ஒரு குழுவினரான ஏரிவாரியப் பெருமக்கள ஏற்றிருந்தனர். அவர்கள் ஆற்றிய பணியின் அருமை பெருமைகளை, நாம் அடுத்த இயலில் காணலாம்.

## நில வரி

சோழப் பேரரசன் காலத்தில், அரசனுக்குரிய வருவாய்களுள் நிலவரியே முதன்மையான இடத்தைப் பெற்றிருந்தது. நிலவரிக்கு, அக்காலத்தில் கடமை, காணிக்கடன் என்னும் பெயர்கள் வழங்கின. பிற வரிகள் குடிமை என்றும், சுங்கம் என்றும் சுட்டப்பட்டன. இவ்வரிகளே அல்லாமல், அரசனுக்குக் கீழ்ப்பட்டிருந்த சிற்றரசர்கள் செலுத்திய திறையும் சோழப் பேரரசின் கருவூலத்தை நிரப்பியது.

நிலவரியைப் புரவுவரி என்று அக்காலத்திய கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. இவ்வரியைத் தண்டுவதற்கு ஒவ்வொரு மண்டலத்திலும் ஓர் அலுவலகம் இருந்தது. அதற்குப் புரவுவரித் திணைக்களம் என்பது பெயர். அதன் அமைப்பினையும் செயல் முறைகளையும் நாம் முன்னரே கண்டோம். நிலவரியினைப் புரவு வரித் திணைக்களத்திற்குச் சேர்க்கும் பொறுப்பை ஊராட்சி மன்றங்கள் ஏற்றிருந்தன. ஊராட்சி மன்றத்தின் பல்வேறு குழுக்களுள் ஒன்றான பஞ்சவார வாரியப் பெருமக்கள் காணிக்கடன் செலுத்த வேண்டிய குடிமக்களிடமிருந்து ஆண்டுதோறும் நிலவரியைத் தண்டி, ஒன்றாகச் சேர்த்து மண்டலங்களில் இருந்து வந்த, புரவுவரித் திணைக்களத்திற்கு அனுப்பி வைத்தனர். நிலவரியினை, விளைச்சலில் ஆறில் ஒரு பங்காகத் தண்டினர். இவ்வாறு தண்டப்படும் நெல்லினை, ஊர்தோறும் களஞ்சியம் அமைத்துச்

சேர்த்து வைப்பர். அத்தகைய களஞ்சியத்திற்கு ஊர்க்களஞ்சியம் என்னும் பெயர் வழங்கியது. நாடுகளிலும், வளநாடுகளிலும், மண்டலங்களிலும் இத்தகைய களஞ்சியங்கள் இருந்தன. தொழிலாளருக்கும் கலைஞர்களுக்கும் ஊதியம் அளிக்கும்பொழுது, இக்களஞ்சியங்களிலிருந்தே நெல்லை அரசாங்க அதிகாரிகள் அளந்து கொடுத்தனர்.

நிலவரியை நெல்லாகச் செலுத்துவதே பெருவழக்கு. சில சமயங்களில் அதற்குரிய பொன்னும் காசும் கொடுக்கப்பட்டதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. "இறை கட்டின நிலத்தால் காணிக்கடன் இராசகேசரியோடொக்கும் ஆடவல்லான் என்னும் மரக்காலால் அளக்கக் கடவ நெல்லும் இடக்கடவ பொன்னும் காசும் பேசிக் கல்லில் வெட்டின"[18] என்னும் கல்வெட்டு வாசகத்தால் இதனை நாம் அறிகிறோம்.

நிலவரியைத் தொடர்ந்து இரண்டாண்டுகள் செலுத்தாதவருடைய நிலங்களை, மூன்றாவது ஆண்டில் பறிமுதல் செய்து ஊர்ப் பொது நிலமாக்குவது வழக்கம். இதனை, தம் இருபத்துநான்காம் ஆண்டில் இராசராசன் பிறப்பித்த ஆணையொன்று அறிவிக்கிறது. "ஈராண்டு நிரம்பி மூவாண்டு தத்தங் காணியான நிலங்களுக்கு அவ்வவ் ஊர்களிலாரோடும் ஊரிடுவரிப்பாடு இறை இறுது போனார் காணி, உடையாரைத் தவிர ஊர்நிலமாய் அவ்வவ்வூர்களிலாரே விற்றுக் கொள்ளப் பெறுவார்களாகவும்"[19] என்பது அவ்வாணையாகும். சில சமயங்களில் பறிமுதல் செய்யப்பட்ட நிலத்தை ஏலத்தில் விடுவதுமுண்டு. ஏலத்தை, அக்காலத்தில் பெருவிலை என்று குறிப்பிட்டனர். பெருவிலை என்னும் தொடரோடு அவ்வக் காலத்தில் ஆட்சிபுரிந்த அரசனுடைய பெயரை இணைத்து இராசராசப் பெருவிலை, இராசேந்திரப் பெருவிலை என்று சொல்லுவது வழக்கம். இராசராசன் காலத்தில் இவ்வாறு பெருவிலையில் விற்கப்பட்ட நிலத்தைப்பற்றி ஒரு கல்வெட்டு பேசுகிறது.[20]

சிறந்த நாகரிகம் அடைந்துள்ள இக்காலத்தைப் போன்றே வரி செலுத்தாதவருடைய ஆளோ, ஆளுமையோ அன்றைய அரசினால் தொடப்படவில்லை. அவர்களுடைய நிலங்களே ஏலத்திற்கு விடப்பட்டமை[21] இங்குக் கருதத்தக்கதாகும்.

18 S. I. I; Vol. 2; Pt. I; p. 54.
19 S. I. I; Vol. 3; pt. I; p. 14.
20 Ins 393 of 1918.
21 Krishnaswami, Iyangar, S. K. : op. cit. p. 412.

## பிற வரிகள்

இந்நிலவரியே அல்லாமல், வேறு சில வரிகளும் அரசிற்கு வருவாயாக அமைந்திருந்தன. அவை, ஒவ்வொரு தொழிலுக்கும் இடப்பெற்ற—தனித்தனிப் பெயரால் வழங்கப்பட்ட—தொழில் வரிகளாகும். இக்காலத்தில், தொழில் வரி என்னும் பொதுப் பெயரால் நாம் சுட்டுவதை, அக்காலத்தில் ஒவ்வொரு தொழிலுக்கும் உரிய சிறப்புப் பெயரால் குறிப்பிட்டு வந்தனர். எனவே, அவற்றை நாம் தொழில்வரி என்றே சுட்டலாம். அவை குசக்காணம், இலைக்கூலம், தறியிறை, செக்கிறை, இடைப்பாட்டம், ஈழம் பூட்சி, வண்ணாரப் பாறை, கண்ணாலக் காணம், நல்லா, நல்லெருது, ஓடக்கூலி, நாடு காவல், சுங்கம் என்பனவாகும்

இவற்றிலுள்ள இறை, பாட்டம், பூட்சி, கூலி என்னும் விகுதிகள் வரியை உணர்த்துகின்றன. மண்பாண்டம் செய்த குயவன் செலுத்திய தொழில் வரி குசக்காணமாகும். இலைக்கூலம் என்பது வெற்றிலையைக் கொடிக்கால்களில் பயிரிட்டு விற்பவருக்கு இடப்பட்ட தொழில்வரியாகும். துணி நெய்வோர் பயன்படுத்திய தறி ஒவ்வொன்றுக்கும் வாங்கப்பட்ட வரி, தறியிறை என்பதாகும். செக்கிறை என்பது எண்ணெயாடிய வாணியர் செலுத்திய தொழில்வரியைக் குறிக்கிறது. ஆடுமாடுகளை வளர்ப்பதையே தொழிலாகக் கொண்ட இடையரிடம் வாங்கப்பட்ட வரி, இடைப்பாட்டம் எனப்பட்டது. ஈழம் பூட்சி என்பது தென்னை, பனை முதலிய மரங்களிலிருந்து கள்ளிறக்கும் தொழில் செய்தோர் செலுத்திய வரி. ஆற்றிலோ, குளத்திலோ துணிகளைத் துவைக்கும் சலவைத் தொழிலாளி பயன்படுத்திய பாறையைக் கணக்கில் கொண்டு, வாங்கப்பட்ட தொழில் வரி வண்ணாரப் பாறை; திருமணத்தின் பொழுது அரசுக்குச் செலுத்தப்பட்ட வரி கண்ணாலக் காணம் என்பதாகும். நல்லா, நல்லெருது என்பன பசுவையும் எருதையும் விற்போர் அரசுக்குச் செலுத்திய வரிகளாக இருக்கலாம். ஓடக் கூலி என்பது ஆறுகளிலும் ஏரிகளிலும் ஓடம் செலுத்துவோரிடம் வாங்கப்பட்ட வரியாகும். ஊர்களில் கொலை, களவு முதலான குற்றங்கள் உண்டாகாதவாறு காப்பதற்குக் குடிமக்களிடம் வாங்கப்பட்ட ஒரு வரிக்கு நாடு காவல் என்பது பெயர். இதனைப் பாடி காவல் என்றும் கல்வெட்டுகள் குறிக்கின்றன. உள்நாட்டு, வெளிநாட்டு வாணிகரிடத்து வாங்கப்பட்ட வரியைச் சுங்கம் என்று சுட்டினர்.

இவையல்லாமல், இராசராசன் காலத்தில் 'நிலைநீர்ப்பாட்டம்' ஒழுக்குநீர்ப்பாட்டம்' எனும் வரிகள் சுட்டப்படுகின்றன. அவை ஏரி, குளங்களிலுள்ள நிலை நீரையும், ஆறுகளினின்று ஒழுகும் நீரையும் பாய்ச்சிக் கொள்ளுவதற்கு வாங்கப்பட்ட வரிகளாக இருத்தல் கூடும். இவற்றால், இராசராசன் காலத்தில் வரி நிலைப்பாடு (Incidence of Taxation) குடிமக்களுக்குப் பெருஞ் சுமையாக அமையவில்லை என்பது புலனாகின்றது.

### நீதி நிர்வாகம்

நாட்டில் அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டுதலே அரசனுடைய தலையாய கடமையாகும். அதை அறநெறியில் நின்று, அரசன் கருத்தாகச் செய்யவேண்டும் என்பது பண்டைச் சான்றோர்களின் துணிபாகும். அந்நெறியில் நின்ற இராசராசன் நீதி நிர்வாகத்தைச் செம்மையாகவும் சிறப்பாகவும் செய்து வந்தான் என்பதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. அக்காலத்தில் வழக்குகள் எல்லாம் பெரிதும் ஊராட்சி மன்றத்தினராலேயே விசாரிக்கப்பட்டு, தீர்ப்பு வழங்கப்பட்டன. குற்றங்களை விசாரித்து நீதி வழங்குவதற்குத் தனி அதிகாரிகளைக் கொண்ட குழு ஒன்று இருந்தது. அக்குழுவினருக்கு நியாயத்தார் எனும் பெயர் வழங்கியது. அவர்கள் கூடி விசாரணை செய்த இடம் தருமாசனம் என்று சுட்டப்பட்டது. அரசனே, தலைமை யேற்று வழக்கினை விசாரிக்கும் நீதி மன்றமே தருமாசனம் என்று வழங்கப்பட்டதாக நாம் கருதலாம்.

சோழப் பேரரசனால் வழக்குகள் எவ்வாறு விசாரிக்கப் பட்டன என்பதை விளக்கமாக நாம் அறிய இயலவில்லை. எனினும், ஊராட்சி மன்றங்களின் செயல் முறைகளிலிருந்து சிறு குற்றங்களும் உரிமை வழக்குகளும் (Civil Cases) ஊராட்சி மன்றத்தினராலேயே விசாரணை செய்யப்பட்டு, தீர்ப்பு வழங்கப் பட்டதாகத் தெரிகிறது. இக்காலத்தில் உள்ளதைப் போன்று, இராசராசன் காலத்தில் வழக்கு விசாரணை முறை சிக்கலாக இருந்ததில்லை. நியாயத்தாரிடம் முறையீடு செய்தவுடன் அம்முறை யீடு நியாயமானதா என்பதை முதலில் ஆராய்ந்தனர். பின்னர், முறையீடு செய்தவனைத் தன் குற்றச்சாட்டை அல்லது வழக்கினை ஆட்சி(வழக்கம்), ஆவணம்(பத்திரங்கள்), 'அயலார் தங்கள் காட்சி'(சாட்சி) ஆகிய மூன்றனுள் ஒன்றினாலோ, பலவற்றாலோ மெய்ப்பிக்குமாறு அவர்கள் அறிவுறுத்தினர். அவன், அவ்வாறு மெய்ப்பித்துவிட்டால், அதற்குப் பிறகு எதிர் வழக்காடி, தானும்

அவ்வாறே குற்றச்சாட்டை மறுத்துக் கூறுவான். இரு திறத்தினரின் கூற்றுக்களையும் நன்கு ஆராய்ந்து, உண்மையைத் தெளிந்து நியாயத்தார் தீர்ப்பு வழங்குவர். இவ்வாறு வழக்குகள் விரைவில் விசாரித்து, தீர்ப்பு வழங்கப்பட்டன. இத்தகைய வழக்கு விசாரணை முறையை ஆங்கிலேயர் தீர்ப்புச் சான்றோர் குழு வழக்கு விசாரணை (Trial by Jury) முறை[22] என்பர். இம்முறையை உலகிற்கு முதலில் செய்தவர் ஆங்கிலேயரே என்று அவர்கள் பெருமைப்பட்டுக் கொண்டனர். ஆனால், அம்முறை நமக்குப் புதியதன்று என்பதைச் சோழர் காலத்திய கல்வெட்டுகள் பல எடுத்துரைக்கின்றன. ஊராட்சி மன்றத்தின் பொறுப்பில் நியாயத்தார் என்னும் மூதறிஞர்கள், நாடாளும் மன்னனும், அவன் வெண் கொற்றக் குடையின் கீழ் வாழும் குடிமக்களும் மதித்துப் போற்றத்தக்க வகையில் இப்பணியைச் சிறப்பாகச் செய்துள்ளனர்.

அக்காலத்தில் உரிமை வழக்குகளுக்கும், தீய குற்ற வழக்குகளுக்கும் இடையே வேறுபாடு இருந்ததாகத் தெரியவில்லை. பிறர் பொருளை வன்முறையில் களவாடுவது, பிறன்மனைவியைக் கூடுவது, கள்ளக் கையெழுத்து இடுவது (கூடலேகை), கையூட்டு (லஞ்சம்)வாங்குவது ஆகியவை கொடிய குற்றங்களாக அக்காலத்தில் கருதப்பட்டன. அக்குற்றங்களைச் செய்தாரைக் கழுதை மீதேற்றி ஊர்வலஞ் செய்வித்தல் அக்காலத்தில் விதிக்கப்பட்ட ஒருவகை தண்டனை முறையாகும்.

ஒருவன் செய்த தவற்றிற்குப் பலர் பிணை படும்(ஜாமீன்) வழக்கம் அக்காலத்தில் இருந்தது. இதனை; "இடையன் நேறன் சாத்தனைக் கொண்டு திருநந்தா விளக்கொன்றினுக்கு இராசகேசரியால் நிசதம் உழக்கு நெய்யட்டுவதாகவும் இவன் சாவினும் போகினும் சிறைதனே சங்கிலி புகிலும் இவ்வனையோ முன்பு நின்றேமே சந்திராதித்தவற் திருவிளக்கெரிக்க நெய்யட்டுவதாக பிணைபட்டோம் இவ்வனையோம்" என்னும் கல்வெட்டுப் பகுதியால் அறிகிறோம்.

[22] நியாயத்தாருக்கும், ஜூரி முறையின் தீர்ப்புச் சான்றோர்களுக்கும் இடையே சில வேறுபாடுகள் உண்டு. தீர்ப்புச் சான்றோர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஆனால், நியாயத்தார் எனப்படுவோர் நியமிக்கப்படுபவராவர். தீர்ப்புச் சான்றோர் அவ்வப்போது மாறலாம்; நியாயத்தார் ஓரளவு நிலையான அதிகாரிகளாவர்.

அக்காலத்திலே கொலை செய்தவர் அனைவருக்குமே கொலைத் தண்டனை வழங்கப்படவில்லை. இதை இராசராசனுடைய இருபத்தெட்டாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது. தென்னார்க்காடு மாவட்டத்தில் சம்பை எனனும் ஊரில் வாணிகன் ஒருவனுக்குக் காதற் பரத்தை ஒருத்தி இருந்தாள். அவளை விரும்பி, நள்ளிரவில் வன்முறையில் சேர முயன்ற நாவலூரான் என்பானை அவ்வணிகன் கொலைபுரிந்தான். அவ்வணிகனுக்குக் கொலை தண்டனை விதிக்கப்படவில்லை. அக்குற்றத்திற்காக, அவ்வூரில் உள்ள தான்றோன்றியாழ்வார் கோயிலில் விளக்கொன்று வைப்பதற்குப் பொன் கொடுக்குமாறு ஊராட்சி மன்றத்தினர் ஏற்பாடு செய்தனர். இதை அக்கல்வெட்டு அறிவிக்கிறது, ஒருவன் அறியாமல் செய்த குற்றம் பொதுவாக மன்னிக்கப் பட்டோ, சிறிய கழுவாயுடனே விடப்பட்டது. மற்றொரு வழக்கும் இங்குக் குறிப்பிடத்தக்கது. வேட்டைக்குச் சென்ற ஒருவன், எய்த அம்பு குறி தவறி ஓர் உழவன் மேற்பட்டு அவன் இறந்தான். அக்குற்றத்திற்காக வேட்டையாடியவன் கோயிலில் விளக்கு எரிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று நியாயத் தாரால் தீர்ப்பு வழங்கப்பட்டமையும் இங்குக் கருதத் தக்கது.

கோயில் சொத்துக்களைத் தம்முடைமையாக்கிக் கொண்டவருடைய நிலங்களைப் பறிமுதல் செய்து, அந்நிலங்களையோ, அவற்றை விற்றதனால் கிடைத்த பொருளையோ இழப்புற்ற கோயிலுக்குக் கொடுக்கும் வழக்கமும் அக்காலத்தில் இருந்தது.

அரசனுக்கோ, அரச குடும்பத்தினருக்கோ, அரசுக்கோ தீங்கு செய்த அரசத் துரோகக் குற்றவாளிகளை, அரசனே நேரில் விசாரித்துத் தீர்ப்புக் கூறுவது வழக்கம். அக்குற்றவாளிகளைத் தண்டிப்பதோடு, அவர்களுடைய உடைமைகள் பறிமுதல் செய்யப்பட்டு, அரசனுடைய ஆணையால் ஏலத்திற்கு விடப்பட்டன.

இத்தகைய விரிவான அமைப்பினையுடையதாக இராசராசனின் ஆட்சி முறை அமைந்திருந்தது. முடியாட்சி முறையினைப் பின்பற்றிய ஒரு வல்லரசாகச் சோழப் பேரரசு விளங்கியது. அம்முடியாட்சி குடிநலங் கருதும் கோனாட்சியாகச் சிறப்புற்றிலங்குவதற்குரிய அடிப்படை நன்கு அமைக்கப்பட்டிருந்ததை நாம் இப்பகுதியில் கண்டோம். தனிமனிதனின் விருப்பு வெறுப்புகளுக்கு முதலிடங் கொடுக்காத வகையில், சோழப் பேரரசன் ஆட்சி இயந்திரம் நிறுவப்பட்டிருந்தது. அதன் உறுப்புக்கள் ஒன்றுபட்டு, இணைந்து இயங்கும் வகையில் அரசன் கண்காணித்து

வந்தான். பல படிநிலைகளைக் கொண்ட பரந்துபட்ட செயலகத்தையும், குவிமுக ஆட்சியின் அதிகாரச் செருக்கில்லா அதிகாரிகளையும் தன்னுடைய கவர்ச்சிமிகு ஆளுமையால் ஏவல் கொண்டான், மன்னர் மன்னன். அதனால், ஒரு பேரரசை எளிதில் கட்டிக் காத்தான். எந்தச் சிக்கலையும் மனிதப் பண்பினை மதித்துப் போற்றும் மனிதநலக் கோட்பாடு உணர்வுமிகு உள்ளத்தோடு இராசராசன் அணுகியதை, அவனுடைய கல்வெட்டுகளே தெரிவிக்கின்றன. இச்சிறப்புமிகு பண்புகளால் சற்றேறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அமைப்பாலும் செயல் திறமையாலும் பேரளவிற்கு முன்னேற்றம் வாய்ந்ததும் காலத்தால் பலவகையில் முற்பட்டதுமான ஓர் ஆட்சிமுறையை—இருபதாம் நூற்றாண்டில் காணப்படும் ஆட்சிமுறையை விடப் பல வகைகளில் வலிவும் பொலிவுமிக்க ஆட்சி முறையை—இராசராசன் நாட்டிற்கு அளித்தான்.

# 17. ஊராட்சி முறை

சோழ வேந்தரின் ஆட்சி பெருஞ்சிறப்புடையதாகப் போற்றப்படுகிறது. அதற்குரிய காரணங்கள் பல. அவற்றுள் அவர்கள் போற்றி வளர்த்த ஊராட்சி முறை முதன்மையானதாகும். இராசராசன் காலத்தில், அவனுடைய ஆணைப்படி ஊர்தோறும் சபை அமைக்கப்பட்டிருந்தது. அந்த அவையைச் சேர்ந்தோர் தத்தம் ஊரிலுள்ள நிலங்கட்கு அரசிறை விதித்தும், அதைத் திரட்டி மைய அரசிற்குச் செலுத்தியும் வந்தனர்; ஈராண்டு முடிந்ததும் இறை கொடாதவரின் நிலத்தைப் பறிமுதல் செய்து, ஊர்ப் பொதுவாக்கி விற்றனர்; நாட்டைச் சுற்றிப் பார்த்து நன்மை தீமைகளை ஆராய்ந்து தக்கவாறு தண்டம் விதித்தும் வந்தனர்; தஞ்சைப் பெரிய கோவிலுக்கு மெய்க்காவலாளர், கணக்கர், பரிச்சாரகம் செய்வோர் முதலியவர்களை அனுப்பியும் வைத்தனர். இவற்றையெல்லாம் கல்வெட்டுகள் தெளிவாகத் தெரிவிக்கின்றன. எனினும், அவற்றுள் ஊராட்சி மன்றத்தின் ஆட்சிக்குழுக்களைத் தேர்ந்தெடுக்கும் முறையைப் பற்றிய செய்திகள் காணப்படவில்லை. ஆயினும், சம்வத்சரவாரியம், தோட்டவாரியம், ஏரிவாரியம், பொன்வாரியம், பஞ்சவாரியம் போன்ற குழுக்களைச் சேர்ந்த பெருமக்கள் இருந்தமை அவனுடைய முன்னோரின் கல்வெட்டுகளினால் புலனாவதைப் போன்று, அவனுடைய கல்வெட்டுகளினாலும் தெரிய வருகிறது. இதனால், அவர்களைத் தேர்ந்து எடுக்கும் முறையும், அவர்கள் ஆற்றிய பணியும், மூதாதையர் காலத்தில் நடைபெற்றதைப் போன்றே இராசராசன் காலத்திலும் நிகழ்ந்திருக்கலாம் என்று கருத இடமுண்டு. எனவே, அம்முறையினை இங்குச் சுருக்கமாக விளக்குவது பொருத்தமாகும்.

## ஊராட்சி மன்றங்களின் வகை

அக்காலத்தில் நான்கு வகையான ஊராட்சி மன்றங்கள் இருந்தன. அவை சதுர்வேதிமங்கலங்களில் இருந்த சபை, தேவ தானங்களில் இருந்த மன்றம், பார்ப்பனர் அல்லாத பிற இனத்தவர் வாழ்ந்த ஊர்களிலிருந்த மன்றம், நகரங்களில் இருந்த மன்றம் என்பன. அவற்றை முறையே பிரமதேயச் சபை, தேவதானத்து மன்றம், ஊர் மன்றம், நகர சபை என்றும் நாம் கூறலாம். பிராமணர், பிரமதேயமாகப் பெற்ற ஊர்களுக்குச் சதுர்வேதி மங்கலம் என்பது பெயர். திருக்கோயில்களுக்கு நன் கொடையளிக்கப்பட்ட ஊர்கள் தேவதானமாகும். வணிகர் வாழ்ந்த பேரூர்கள் நகரமாகும். இக் ''கிராம சபைகளும் நகரசபைகளும் சோழ மன்னர்களின் ஆட்சிக் காலத்தேதான் மிகச் சிறந்த நிலையில் அமைந்து தம் கடமைகளை நன்கு நிறை வேற்றிப் பேரும் புகழும் எய்தின என்று ஐயமின்றிக் கூறலாம்.''

ஊராட்சி மன்றங்கள், சோழப் பெருவேந்தர் காலத்தில் எல்லா வகையான ஊர்களிலும் இருந்தன. இவ்வுண்மையை உணராமல், பிராமணர் வாழ்ந்த பிரமதேயங்களிலேயே அம் மன்றங்கள் இருந்தன என்றும், மந்திரங்களும் பிராமணங்களும் அறிந்த பார்ப்பனரே அம்மன்றத்தின் உறுப்பினராக இருந் தனர் என்றும் சிலர் கருதுகின்றனர்.[1] அக்கருத்து ஒரு தலைச் சார்பானது. நமக்குக் கிடைத்துள்ள கல்வெட்டுச் சான்றுகள் நான்கு வகையான ஊராட்சி மன்றங்கள் சோழர் காலத்தில் சிறப்புற்றிருந்ததைத் தெரிவிக்கின்றன.

## ஊராட்சி மன்றங்களின் கடமைகள்

இந்த ஊராட்சி மன்றங்களின் கடமைகள் பலதிறப்பட்ட னவாக இருந்தன. அவை நீர்ப்பாசனத்திற்குரிய ஏரிகளையும், குளங்களையும் கட்டிக் காத்து வந்தன;[2] கோயில்களை நிருவகித் தும் வந்தன;[3] நிலங்களை வாங்கியும் விற்றும் வந்தன;[4] வரி களைத் தண்டியும் நீக்கியும் வந்தன;[5] நிலத்தின் தரப்பாகு

[1] Altekar, A. S. : A History of Village Communities in Western India, P. P. 23-24.
[2] S I.I.; Vol. 3; No. 5.
[3] Ibid; No. 156.
[4] ஷை
[5] Ibid., No. 10.

பாட்டை மாற்றியும்[6] உயர்த்தியும் வந்தன;[7] அறப்புறங்களை நிருவகித்தன;[8] பணத்தைத் சேமித்து வைக்கும் நிதிநிலையங்களாகவும் பயன்பட்டன;[9] பணத்தைக் கடன் வாங்கியும்,[10] வட்டிக்குக் கடன் கொடுத்தும் வந்தன;[11] தண்டங்கள் விதித்தன;[12] ஊர் ஆட்சி ஊழியர்களைக் கண்காணித்தும்,[13] நிலங்களை வாரத்திற்கும் குத்தகைக்கும் விட்டும் வந்தன.[14]

இப்பணிகளைச் செம்மையாகவும் திறமையாகவும் செய்வதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைப் பல வாரியங்களாகப் பிரித்து, அவ்வாரியங்களிடத்து மேற்கண்ட பணிகள் பகுத்துக் கொடுக்கப்பட்டன.

ஒவ்வோர் ஊரிலும் இருந்த முப்பத்தைந்து வயது நிறைந்த ஆண்மக்கள், அவ்வூரின் ஆட்சி மன்றத்தில் உறுப்பினராக இருந்தனர். அவர்களைத் **திருவடியார்** என்று குறிப்பிட்டனர். அம்மன்றங்கள் **குறி** எனவும், **பெருங்குறி** எனவும், சபை, மகாசபை எனவும் வழங்கப்பட்டன. ஊராட்சி மன்றத்தினரால், குடவோலை முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட நிறைவேற்றுக் கழகங்களே—செயற்குழுக்களே— ஊரினை ஆண்டு வந்தன. அக்குழுக்களுக்கு **வாரியம் (Board)** என்பது பெயராகும். இராசராசன் காலத்திய ஊராட்சி முறையை அறிவதற்கு, அவனுடைய காலத்திற்கு முற்பட்ட முதற் பராந்தக சோழனுடைய உத்தரமேரூர்க் கல்வெட்டுகளும்[15] அவன் காலத்திய கல்வெட்டுகள் சிலவும் உறுதுணையாக உள்ளன. அவற்றின் உதவியைக் கொண்டு அக்காலத்தில் ஊராட்சி மன்றங்கள் எவ்வாறு செயற்பட்டன என்பதைக் காண்போம்.

6 Ins. 432 of 1917; A. R. E., 1918, pt.2, para. 48.
7 Ins. 192 of 1919; A. R. E., 1919, pt. 2: para 17.
8 Ins. 526 of 1918.
9 Ins. 186 of 1919.
10 Ins. 349 of 1921.
11 S.I.I., Vol. 3; No. 1.
12 Ins. 397 of 1913.
13 S I.I., Vol. 3; No. 6.
14 Ins. 583 of 1904; Ins. 432 of 1917; A R.E., 1918, pt. 2; para 4ſ.
15 **அவை கி பி 919, 921 ஆம் ஆண்டுகளில் பொறிக்கப்பட்டவை அவை இராசராசனுடைய ஆட்சிக்கு அறுபதாண்டுகள் முற்பட்டவை. இக்கால இடைவெளிக்குள் ஊராட்சி முறையில் பெரிய மாற்றங்கள் உண்டானதாகத் தெரியவில்லை. காண்க:** Archaeological Survey of India, A.R. 1904-5 PP. 136-142.

## உறுப்பினர் தகுதி

ஊராட்சிமன்றச் செயற்குழு உறுப்பினரைத் தேர்ந்தெடுக்குமிடத்து, உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படுவோருக்குச் சில தகுதிகள் இருக்கவேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டது. முதலாவதாக, முப்பத்தைந்து வயதிற்குக் குறையாமலும் எழுபது வயதிற்கு மேற்படாமலும் உள்ளவரே வாரியப் பெரு மக்களாகத் தேர்ந்தெடுக்கப்படும் தகுதியுடையவராவர். சொந்த மனையில் வீடும் காணிக்கடன் (நிலவரி) செலுத்துவதற்குக் குறைந்தது கால்வேலி நிலமும் அவர்களுக்கு இருக்கவேண்டும். நிறைந்த கல்வியறிவும், சிறந்த பண்பும், தூய ஒழுக்கமும் வாய்ந்தவர்களாக உள்ளவரே உறுப்பினராகும் தகுதியுடையவராவர். தூயவழியில் பொருளீட்டியவராகவும் செயல்திறன் உடையவராகவும் இருப்பவரே ஊராட்சி மன்றத்தில் இடம்பெறத் தக்கவராவர். கடந்த மூன்றாண்டுகளில் அவர்கள் எந்த வாரியத்திலும் உறுப்பினராக இருந்திருத்தல் கூடாது.

## உரிமை இழந்தவர்

எந்த வாரியத்திலாவது உறுப்பினராக இருந்து கணக்குக் காட்டாமல் இருப்பவர், மீண்டும் உறுப்பினராகத் தேர்ந்தெடுப்பதற்குரிய உரிமையை இழந்துவிடுவர். அவர்கள் மட்டுமல்லாமல், அவர்க்குச் சிறிய தாயார், பெரிய தாயார், அத்தை, மாமன் என்றின்னவர் பெற்ற மக்களும், அவர்தம் மக்களும், தந்தையும், தாயுடன் பிறந்தவன், தந்தையோடு பிறந்தவன், தம்முடன் பிறந்தவன், மனையொடு பிறந்தவன், பெண் கொடுத்த மாமன், உடன்பிறந்தாள் கணவன், மகளை மணந்தவன் என்று சுட்டத்தக்க உறவினர்களும், இத்தகையோரின் சுற்றத்தினரும் தேர்ந்தெடுக்கத் தகாதவராவர். இவர்களேயல்லாமல், மாபெரும் குற்றங்களான பிறன் மனைவியைச் சேர்தல், பார்ப்பனக் கொலை, கள்ளுண்டல், களவாடல், ஆசான் மனைவியைக் கூடல் போன்றவற்றுள் எதையேனும் ஒன்றைச் செய்தவர் என்று ஊர் குற்றப் பதிவு புத்தகத்தில் பதிவு செய்யப்பட்டவரும், அவர்க்கு உறவினரும், ஆராயாது செயலில் ஈடுபடுவோரும், கள்ளக் கையெழுத்து இடுதலாகிய கூடலேகை செய்தவரும் தகுதியற்றவராவர். மற்றும் கொடிய குற்றம் செய்தமைக்காகக் கழுதையின் மீது ஏற்றப்பட்டவரும், தீய செயல்களைச் செய்

தமைக்குக் கழுவாய் செய்யப்பெருதவரும் வாரியப் பெரு மக்களாகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்குரிய தகுதியை இழந்தவ ராவர்.

## உறுப்பினராக வாழ்நாள் முழுவதும் உரிமையற்ருேர்

எத்தகைய கையூட்டு (இலஞ்சம்) வாங்கியவரும், ஊர்த் துரோகியெனக் கருதப்பட்டவரும், பொது மகளிரோடு கூடின வரும், எத்தகைய கழுவாய்களைப் பின்னர் செய்திருந்தாலும், அவர்கள் உயிரோடு உள்ளவரை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் படுவதற்குத் தகுதியற்றவராவர்.

இராசராச சோழனின் ஆட்சிக்காலத்தில், செங்கற்பட்டு மாவட்டத்தில் இப்போது **தென்னேரி** எனப்படும் ஊரிலிருந்த உத்தம சோழ சதுர்வேதிமங்கலத்தின் சபை, பின்வரும் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றியது. மந்திரம் பிராமணம் ஆகியவற்றை நன்கு கற்றவரே வாரியங்களில் உறுப்பினராகப் பணிபுரியும் தகுதியுடையவர் என்றும் அவர்களே அம்மன்றத் தின் தீர்மானங்களை வரையும் தகுதியுடையவர் என்றும் அது அறிவிக்கிறது. மேலும், அவ்விதியை மீறுபவர் யாராக இருந்தா லும் அவர்களுக்கு அரசனுடைய திருவாணையை மறுத்தார் படும் தண்டனையைக் கொடுக்க வேண்டும் என்று அத்தீர்மானம் தெரிவிக்கிறது. சில ஆண்டுகள் கழித்து, அச்சபையே மற்ருெரு தீர்மானத்தை நிறைவேற்றி இருக்கிறது. பார்ப்பனருடைய உடைமைகளைத் திருடியவர்களும், கொடிய (மேல்படும்) குற்றங் கள் செய்தவர்களும் வாரியப் பெருமக்களாகப் பணிபுரியும் உரிமையை இழந்தவர்களாவர் என்று அது அறிவிக்கிறது.[16]

இவற்ருல் சதுர்வேதிமங்கலத்து ஊராட்சி மன்றங்களின் வாரியங்களில் ஊரிலுள்ள வயது வந்த எல்லாப் பார்ப்பனரும் உறுப்பினராக முடியாது என்னும் உண்மை புலஞகின்றது. மேலும், பிராமணர் அல்லாதாரும், பிராமணருக்குரிய ஊராட்சி மன்றங்களில் உறுப்பினராக இருந்தனர் என்பதும் மேற்கண்ட தீர்மானங்களால் உய்த்துணரத்தக்கதாக உள்ளது. பொதுவாக வயது வந்த எல்லாரும் இக்காலத்தைப்போல, அக்காலத்தில் ஊராட்சி மன்ற உறுப்பினர் தேர்தலுக்கோ, நாட்டாட்சி, நகராட்சி மன்றத் தேர்தலுக்கோ நிற்க முடியாது என்பது மேற் கண்ட விதிமுறைகளாலும் தீர்மானங்களாலும் தெளிவாகின்றது.

[16] Ins 240, 241 of 1922

## உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கும் முறை

ஒவ்வோர் ஊரும் அக்காலத்தில் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு பிரிவையும் **குடும்பு (ward)** என்பர். குடும்புகள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு பிரதிநிதி தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவ்வவ்வூரின் மக்கள் தொகைக்கு ஏற்பக் குடும்புகளின் எண்ணிக்கை வேறுபட்டன. **குடவோலை வாயிலாகக்** குடும்பின் உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தேர்தல் நடத்தும் அரசியல் அதிகாரி ஒருவர், மைய அரசின் பார்வையாளராக அமர்ந்திருப்பார். அரசன் ஆணைப்படி, நாட்டில் சபை கூடுவதற்கு என்று அமைத்த பெருமாளிகையில், இளைஞர் முதல் முதியோர் ஈறாகவுள்ள அனைவரையும் குறைவறக் கூட்டி, அன்று அவ்வூர் நம்பிமார் அனைவரையும் அழைத்து வந்து அம்மன்றத்தில் தேர்தல் அலுவலர் அமரச் செய்வர். பின்னர், அவர்களுக்கு முன் ஒரு குடத்தினை வைப்பார்கள். நம்பிமாருள் வயது முதிர்ந்த ஒருவர், அக்குடத்தினை மேலே உயர்த்தி, அதனுள் ஒன்றுமில்லை என்பதை எல்லாரும் அறியுமாறு காட்டிக் கீழே வைப்பார்.

பின்னர், ஊரிலுள்ள ஒவ்வோர் குடும்பிலும் உறுப்பினராகத் தகுதியுடையோரின் பெயர்களைத் தனித்தனி ஓலைகளில் எழுதி, அவற்றை ஒன்றாகச் சேர்த்துக் கட்டி, அவை எக்குடும்பைச் சேர்ந்தவை என்பது நன்கு புலனாகுமாறு, அக்குடும்பின் பெயர் எழுதப்பெற்ற வாயோலை ஒன்றைச் சேர்த்துக் கட்டி, அவ்வோலைக் கட்டைக் குடத்திலிடுவர். இவ்வாறு பல குடும்புகளுக்கும் உரிய உறுப்பினராவதற்குத் தகுதியுடையோர் பெயர்களை எழுதி, குடத்தில் சேர்ப்பர். பிறகு, அங்கு நடைபெறுவது இன்னதென்று அறியாத ஒரு சிறுவனைக் கொண்டு, அக்குடத்தினின்று ஓர் ஓலைக்கட்டை எடுக்குமாறு அம்முதியவர் செய்வார். பின்னர், அதனை அவிழ்த்து வேறொரு குடத்திலிட்டுக் குலுக்கி, அவற்றுள் ஓர் ஓலையை, அந்தச் சிறுவனை எடுக்கச் செய்வார்கள். அவ்வோலையைத் தாம் பெற்று, அங்குள்ள கரணத்தான் கையில் அவர் கொடுப்பார். அவன் தன்னுடைய ஐந்து விரல்களையும் அகல விரித்து, அகங்கையில் அதனை ஏற்று, அவ்வோலையில் எழுதப்பட்டுள்ள பெயரை யாவரும் அறியுமாறு படிப்பான். அங்குள்ள நம்பிமார் அனைவரும் அவ்வோலையை வாங்கிப் படிப்பர். அதன் பின்னர், அப்பெயர் ஓர் ஓலையில் எழுதிக் கொள்ளப்படும். இவ்வாறு எல்லாக் கட்டுகளையும் ஒன்றன்பின்

ஒன்றாக முன்போல் எடுப்பித்துப் பிரித்துக் குடத்தில் இட்டுக் குலுக்கி, முன்னர்ச் செய்ததைப்போல ஒவ்வோர் ஓலையாக எடுக்கச் செய்து, அவற்றைப் பதிவு செய்து கொள்வார்கள்.

## ஆட்சிக் குழுக்களை அமைத்தல்

இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைத் தகுதியும், அறிவும், வினைத்திட்பமும் கருதி பல குழுக்களாகப் பிரிப்பர். அக்குழுக்களுக்கு **வாரியம்** என்பது பெயர். ஒவ்வொரு வாரியமும் ஊராட்சியின் முக்கியமான ஒரு துறையினை நிருவாகம் செய்யும் பொறுப்பை ஏற்கும். அவை சம்வத்சர வாரியம், தோட்ட வாரியம், ஏரிவாரியம், பொன்வாரியம், பஞ்சவாரவாரியம் என்பன உத்தரமேரூர்க் கல்வெட்டுகளால் அறியப்படுவனவாகும். அவை அல்லாமல் வேறு சில வாரியங்களும், வேறு சில இடங்களில் ஊராட்சிமன்றப் பொறுப்பையேற்று இருந்தன. வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள திருப்பாற்கடல் என்னும் ஊரில் காணப்படும் பார்த்திவேந்திராதிவர்ம (இராசராசனுக்குப் பத்தாண்டுகள் முற்பட்ட காலத்தில்) னுடைய கல்வெட்டு சில புதிய வாரியங்களைச் சுட்டுகின்றது.[17] அவை கழனி வாரியம், கணக்கு வாரியம். கலிங்கு வாரியம் என்பன. வாரியங்கள் எல்லாம் நிறைவேற்றுக் கழகங்கள் போன்றவை. அதனால் ஒவ்வோர் ஊராட்சி மன்றமும், அதற்குத் தேவையான வகையில் ஆட்சிக் குழுக்களை அமைத்துக் கொண்டன. எனவே, எல்லாவகையான வாரியங்களும் ஒவ்வோர் ஊராட்சி மன்றத்திலும் இடம் பெற்றிருந்தது என்று கூற இயலாது.

உத்தரமேரூரில் முப்பது குடும்புகள் இருந்தன. ஒவ்வொரு குடும்பிற்கும் ஒவ்வோர் உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்பட்டார். அம்முப்பதின்மருள், கல்வியில் முதிர்ந்து வயதில் மூத்தவரான பன்னிருவரைச் **சம்வத்சர வாரியராகத்** தேர்ந்தெடுத்தனர். மற்றைய பதினெண்மருள் பன்னிருவர் **தோட்டவாரியராகவும்**, அறுவர் **ஏரிவாரியராகவும்** தேர்ந்திடப் பெற்றனர். மீண்டும், இம்முறைப்படியே பன்னிரண்டு ஓலைகளைத் தேர்ந்து குடத்திலிட்டுக் குலுக்குவர். அவற்றுள் பன்னிரண்டினை எடுப்பித்து, அறுவரைப் **பொன்வாரியராகவும்**, **பஞ்சவாரவாரியராகவும்** அமர்த்தினர். இவ்வாறு உத்தரமேரூர்ச் சதுர்வேதி மங்கலச்

[17] S.I.I., Vol. 3; pt, 3, No. 156; p. 327.

சபையில் சம்வத்சரவாரியம், தோட்டவாரியம், ஏரிவாரியம், பொன்வாரியம், பஞ்சவாரவாரியம் என்னும் **ஐந்து** ஆட்சிக் குழுக்கள் அமைக்கப்பட்டிருந்தன.

சம்வத்சரவாரியம் எல்லா ஊர்களிலும் இருந்தது. இதனை ஆட்டை வாரியம் என்பர். இவ்வாரியத்திற்கு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படுவோர், இதற்கு முன்னர் ஏரிவாரியத்திலும் தோட்டவாரியத்திலும் உறுப்பினராய் இருந்து அனுபவம் பெற்றவர்களாக இருப்பர். இவ்வாரியப் பெருமக்களை **ஆளுங்கணத்தார்** என்று கூறுவதுமுண்டு.

**உறுப்பினர் கடமை**

இவ்வாரியப் பெருமக்கள், ஏதேனும் தவறுதல் காரணமாக இடையில் பதவி நீக்கம் செய்யப்படலாம். பொதுவாக 360 நாட்களுக்கு அவர்கள் பதவியிலமர்ந்து பணிபுரிவர், அவ்வாரியங்களுள் சம்வத்சர வாரியம் பல பொறுப்புகளை ஏற்றிருந்தது. ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்படும் ஊராட்சி மன்ற ஆட்சிக் குழுவினைச் **சம்வத்சர (ஆண்டு) வாரியம்** என்று அழைத்தனர். அவ்வாரியப் பெருமக்கள் வழக்கு விசாரணை செய்து கொலைக்குக் கொலை, பிறவற்றிற்குச் சிறை, தளை, சங்கிலி புகுதல் முதலிய தண்டம் விதித்தலும் கோயிற் காரியங்கள் ஒழுங்குற நடக்கின்றனவா என்றுராய்தலும், ஊரைச் சுற்றிப் பார்த்து நன்மை தீமைகளை நாடி, தேவையானவற்றைச் செய்தலுமாகிய பொதுப் பணிகளை மேற்கொண்டனர். ஏரி முதலிய நீர்நிலைகளைப் பழுதுறுமற் பாதுகாத்தலும், வேளாண்மைக்குத் தேவையான நீரைச் சரிவரப் பாய்ச்சுவித்தலும் ஆகிய நீர்ப்பாசன(Irrigation)ப் பணிகளை **ஏரிவாரியப்** பெருமக்கள் செய்துவந்தனர். நன்செய் நிலத்தொடர்பான பணிகளையெல்லாம் **கழனிவாரியப்** பெருமக்கள் கண்காணித்து வந்தனர். வரவு செலவு கணக்குகளை ஆராய்ந்து மேற்பார்வை செய்யும் பொறுப்பு **கணக்கு வாரியத்**திற்குரியதாகும். தோட்டந்துரவுகளையும் புன்செய் நிலங்களையும் கண்காணித்தோர் **தோட்டவாரியப்** பெருமக்களாவர். **கலிங்கு வாரியம்** என்பது கலிங்குகளில் நீரைத் தேக்கி, அவரவருக்குரிய முறை நாள்களில் கால்வாய்களின் மூலம் வயல்களுக்கு நீரைப் பாய்ச்சி வந்தது. **பொன்வாரியம்** என்பது பலவகையாகத் திரட்டப்படும் காசுகளை ஆராய்ந்து வந்தது. மக்களிடம் வரிகளைத் தண்டி அரசின் கருவூலத்திற்கு அனுப்பிவைக்கும் பணியைப் **பஞ்சவாரவாரியம்** புரிந்து வந்தது. பொதுவாக அறப்புறங்களை ஏற்று

நடத்துவதும், அவற்றை நிருவகிப்போரைக் கண்காணிப்பதும் ஊராட்சி மன்றங்களின் முதன்மையான கடமையாகும். வாரிய உறுப்பினர்களை 'வாரியர்' என்று சுட்டும் வழக்கமும் இருந்தது. இராசராசனின் பதினைந்தாம் ஆட்சியாண்டில் சுசீந்திரம் கோயி லில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்றில் ''சபையோம் வைச்ச வாரியர் இருவரும் கரணத்தானும் கூடி தேவகாரியம் செய்வ தாகவும்' என்று காணப்படும் வாசகம் இக்கருத்தை அரண் செய்கிறது.

## உறுப்பினர் கூடும் பொதுமாளிகை

ஒவ்வோர் ஊராட்சி மன்றமும் கூடிச் செயல்முறைகளை ஆராய்வதற்கு, ஊர்தோறும் மண்டபம் அமைக்கப்பட்டிருந்தது. தஞ்சை மாவட்டத்திலுள்ள நாலூர் சபையார், நம் இராச ராச சோழனின் ஆட்சிக்காலத்தில் அவ்வூர்க் கோயிலில் இருந்த கண்டராதித்தன் மண்டபத்திலும்[18] இராசராசன் மண்டபத்தி லும்[19] வண்ணக்கனார் அம்பலத்திலும்[20] கூட்டம் நடத்தியுள்ள னர். இவற்றைப் போன்றே மதுராந்தகச் சதுர்வேதி மங்க லத்தின் ஊராட்சி மன்றத்தினர் இராசராசன் எடுப்பித்த செம் பியன்மாதேவிப் பெருமண்டபத்தில் கூடி அலுவல்களைச் செய் துள்ளனர்.[21] இவையல்லாமல், சூழ்நிலைக்கேற்பக் கோயில்களி லும் மண்டபங்களிலும் ஊராட்சி மன்றங்கள் கூடிச் செயல் புரிந்ததைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

## அவை கூடும் முறையும் காலமும்

ஊராட்சி மன்றங்கள் கூடும் நாளையும், இடத்தையும் முரசறைவித்தும், காளம் ஊதியும் ஊர் மக்களுக்கு அறிவித்து வந்தனர். ஊராட்சி மன்ற உறுப்பினர்கள் யாதோர் ஊதியமும் வாங்காமல் பணிபுரிந்து வந்தனர். அதனால், அவர்களுக்கு ஓய்வு கிடைக்கின்றபொழுது ஊராட்சி மன்றத்தைக் கூட்டிச் செயல்முறைகளை ஆய்வது வழக்கம். இன்றியமையாத நேரங் களில் பகலில் மட்டுமின்றி, இரவிலும் ஊராட்சி மன்றங்கள் கூட்டப்பட்டன; அலுவல்கள் நடத்தப்பட்டன. இராசராச னுடைய பதினாறாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று இச்செய்தியைத் தெரிவிக்கிறது.

[18] Ins. 326 of 1910.
[19] Ins. 322 of 1910.
[20] Ins. 308 of 1910.
[21] Ins. 178 of 1905, Appendix, B.

**ஊராட்சி மன்ற அலுவலர்**

ஊராட்சி மன்ற அலுவலகத்தில், வாரியப் பெருமக்கள் பிறப்பிக்கும் ஆணைகளைச் செயற்படுத்துவதற்குப் பல அலுவலர் இருந்தனர். அவர்கள் மத்தியஸ்தன், கரணத்தான், பாடி காப்பான், தண்டுவான் (தண்டல்), அடிக்கீழ் நிற்பான் என்பவ ராவர். அவர்கள் யாவரும் ஊராட்சி மன்றத்தில் ஊதியம் பெற்று, பணி புரிந்தவராவர். அவர்களுள் முதன்மையான அலுவலர் **கரணத்தான்** ஆவான். நல்ல வழியில் ஈட்டிய பொருளும் நல்லொழுக்கமும் உடையவனையே கணக்கனாக நிய மிப்பர். அவன் எழுதிய கணக்கைப் பெருமக்கள் வேண்டும் போது பிறனைக் கொண்டு காட்டாது, தானே காண்பித்து அவர்களுடைய நன்மதிப்பைக் கரணத்தான் பெறவேண்டும். அவ்வாறு செய்யவில்லையானால், அடுத்த ஆண்டு கணக்கு எழுதும் உரிமை அவனுக்கு அளிக்கப்படுவதில்லை. கரணத்தா னுக்கு ஒரு நாளைக்கு நாழி நெல்லும், ஆண்டிற்கு ஏழு கழஞ்சு பொன்னும், இரண்டு கூறையும் ஊதியமாகக் கொடுக்கப் பட்டன. ஆண்டுதோறும் எழுதி முடித்த கணக்கை வாரியப் பெரு மக்களிடத்துக் கொடுக்கின்ற பொழுது, பழுக்கக் காய்ச்சிய மழுவைக் கணக்கன் கையிலேந்தி, உறுதிமொழி கூறிக் கொடுத் திடல் வேண்டும். அப்பொழுது அவனுடைய கையில் ஊறுபாடு உண்டாகவில்லையாயின், அவனுக்குரிய ஆண்டு ஊதியமான ஏழு கழஞ்சு பொன்னோடு, காற்பங்கு பொன் சேர்த்து வாரியப் பெருமக்கள் கொடுப்பர். ஊறுபாடு உண்டாகுமானால், பத்துக் கழஞ்சு பொன் தண்டமும், வேறு தண்டனையும் கொடுப்பர்.[22]

**பாடிகாப்பான்** என்பவன் ஊரில் திருட்டு, கலகம் போன் றவை நிகழாதவாறு காவல்(Policeman) புரிபவனாவான். ஊர்கள் பலவற்றிலும் இருந்துவந்த பாடிகாப்பவர்களுக்குத் தலைவனாக நாடு காவல் அதிகாரி ஒருவன் இருந்தான். இவர்களுக்கு ஊதியம் கொடுப்பதற்கு ஒவ்வோர் ஊரிலும் **பாடிகாவல்** என்ற ஒருவகை வரி தண்டப்பட்டுவந்தது. ஒவ்வோர் ஊரிலுமுள்ள மக்கள் ஊராட்சி மன்றத்திற்கும் அரசிற்கும் செலுத்த வேண்டிய நிலவரியையும், பிற வரிகளையும் தண்டும் அதிகாரிக்குத் **தண்டு வான்** என்பது பெயராகும். இவனைத் தண்டல் என்றும் கூறுவர். ஊராட்சி மன்றத்தினருக்குக் குற்றேவல் செய்தவன் **அடிக்கீழ் நிற்பான்** என்னும் ஊழியனாவான். ஊராட்சி மன்றத் தினர் கூட்டம் நடத்தும்பொழுது, அங்குச் செய்யப்படும் முடிவு

22 A. R. E. of 1916; P. 116.

களை, அங்கிருந்து நிகழ்ச்சிக் குறிப்பு எழுதுபவன் **மத்தியஸ்தன்** என்று சுட்டப்பட்டான். சில ஊராட்சி மன்றங்களில் கணக்கனே மத்தியஸ்தனுகவும் பணியாற்றியுள்ளான். நடுநிலையாளனுகப் பணி புரிந்தமையால், அவனை மத்தியஸ்தன் என்று அழைத்தனர்.

## அரசன் திருமுகம்

அரசன் திருமுகத்தை அரசனின் அதிகாரிகள் கொண்டு வருவர். அவர்கள் ஊராட்சி மன்றத்திற்கு வருமுன்னரே எழுந்து நின்று, எதிர்சென்று தொழுது வாங்கித் தலைமேற் கொண்டு ஊ ரா ட் சி மன்றத்தினர் போற்றுவர். இதனை, ''ஸ்ரீகோவிராச ராசகேசரி வர்மரான ஸ்ரீராசராச தேவர்க்கு யாண்டு இருபத்தொன்ருவது நாட்டொழுக்குத் திருமுகம் வர, நாந்தொழுந் திருமுகங் கண்டு எதிரெழுந்து சென்று தொழுது வாங்கித் தலைமேல் வைத்துப் பிடி சூழ்ந்து பிடாகை நடந்து எல்லை தெரித்துக் கல்லும் கள்ளியும் நட்டு அறவோலை செய்த நிலத்துக்கு''[23] என்று ஆனைமங்கலச் செப்பேடு குறிப்பிடுவதால் அறியலாம்.

## ஊராட்சி மன்றத்தின் வருவாய்

ஒவ்வோர் ஊராட்சி மன்றமும், செலவிற்காகப் பொது மக்களிடம் வரியொன்று வாங்கிவந்தன. அதற்குச் **சபா விநியோகம், ஊரிடு வரிப்பாடு** என்னும் பெயர்கள் வழங்கின. பிராமணர்க்குரிய ஊர்களாகிய ச து ர் வே தி மங்கலங்களிலிருந்த ஊராட்சி மன்றத்தினர், தங்கள் செலவிற்காக ஆண்டுதோறும் வாங்கிய வரி சபா விநியோகம் என்பதாகும். இதைப்போன்று, பிற ஊர்களிலிருந்த ஊராட்சி மன்றங்களும், நகர மன்றங்களும் ஆண்டுதோறும் வாங்கிய வரியினை ஊரிடு வரிப்பாடு என்று சுட்டுவது மிரபு.

நிலவரியையும், பிற வரிகளையும் தண்டி, அரசாங்கத்திற்கு அனுப்பிவைக்கும் பொறுப்பு ஊராட்சி மன்றத்தினரைச் சார்ந்திருந்தது. இதனுல், வரி வசூலிப்பதில் சிறப்புரிமைகளும், தனியதிகாரமும் ஊராட்சி மன்றங்களுக்கு அக்காலத்தில் அளிக்கப்பட்டிருந்தன. இவ்வதிகாரத்தை தன்னுடைய இருபத்து நான்

[23] Epi. Ind. Vol. 22; No. 34.

காம் ஆட்சியாண்டின் நூற்றிருபத்து நான்காம் நாளில், தஞ்சாவூர் பெரிய சென்று வாயில் சித்திரக் கூடத்துத் தெற்கில் கல்லூரியில் வீற்றிருந்தபொழுது ஓர் ஆணையாக இராசராசன் பிறப்பித்துள்ளான்.[24] அவ்வாணையில் சோழ நாடு, சோழ நாட்டைச் சார்ந்த புறநாடுகள், தொண்டை நாடு, பாண்டி நாடு ஆகிய நாடுகளிலுள்ள ஊர்களின் காணியாளராகிய குடிமக்கள், தம் நிலங்களுக்குரிய அரசிறையும், ஊரிடு வரிப்பாடும் இம்மன்னனது பதினாறும் ஆட்சியாண்டு முதல் ஈராண்டு முடிந்து, மூன்றாம் ஆண்டு தொடங்கியும் கொடாமலிருப்பின், அவர்கள் நிலங்களைப் பறிமுதல் செய்து ஊர்ப் பொதுநிலமாக்கி, அவற்றை விற்று, அவ்வரிகளுக்கு ஈடு செய்ய வேண்டும் என்று குறிப்பிடப் பெற்றுள்ளமை இங்குக் கருதத்தக்கது.

## இருவேறு மன்றங்கள்

ஒரு சில ஊர்களில் விளைநிலங்களுள் ஒரு பகுதி, திருக்கோயிலுக்குரிய தேவதானமாகவும், மற்றொரு பகுதி உழவுத் தொழில் புரியும் மக்களுக்குரிய வெள்ளான்வகையாகவும் இருந்தன. அத்தகைய ஊர்களில் ஊராட்சியை நடத்துவதற்கு இருவகையான ஊராட்சி மன்றங்கள் இருந்தன.

## பல்வேறு கணங்கள்

சில தனியூர்களில் வேறு சில குழுக்களும் நிருவாகப் பொறுப்புடையனவாக இருந்தன. மூலபருடையார், பன்மாகேசுரர், சாத்தகணத்தார், காளிகணத்தார், குமாரகணத்தார், கிருஷ்ண கணத்தார், மணிக்கிராமத்தார், வளஞ்சியர் என்னும் குழுக்கள் அக்காலத்தில் இருந்தன. இக்குழுக்களுள் பல தேவதான ஊர்களில் இருந்த கோயில்களின் நிருவாகத்தைக் கருத்தாகச் செய்து வந்தன. தேவதான ஊர்களில் ஊராட்சி மன்றத்தின் சார்பில் திருக்கோயில் நடைமுறைகளைக் கண்காணிக்க அமைக்கப்பட்ட வாரியம் போன்ற உட்கழகமே **மூலபருடையார்** என வழங்கப் பட்டது. சிவன் கோயிலை நிருவாகம் செய்த குழுவினர் **பன்மா கேசுரர்** என்றும், சாத்தனார் கோயிலை நிருவாகம் செய்த குழுவினர் **சாத்த கணத்தார்** என்றும், காளிகோயிலைக் கண்காணித்த குழுவினர் **காளி கணத்தார்** என்றும், முருகன் கோயிலை மேற்பார்வையிட்ட குழுவினர் **குமார கணத்தார்** என்றும் கண்ணன்

[24] S.I.I., Vol. 3; No. 9.

கோயிலைக் கண்காணித்தவர் **கிருஷ்ண கணத்தார்** என்றும் அழைக்கப் பெற்றனர். வணிகப் பெயரும் நகரங்களிலிருந்த ஊராட்சி மன்றங்களான நகர சபைகளுக்கு மணிக்கிராமத்தார், வளஞ்சியர் என்னும் பெயர்கள் வழங்கின.

ஊர்களிலும் நகரங்களிலும் ஆட்சி மன்றங்கள் இருந்ததைப் போன்றே நாடுகளிலும் ஆட்சி மன்றங்கள் செயல்பட்டுவந்தன. பழுவேட்டரையர் ஆண்ட பகுதியில், நாட்டு ஆட்சி மன்றம் இருந்ததைத் தெளிவாக ஒரு கல்வெட்டு அறிவிக்கிறது.[25] இதைப் போன்றே நாடு, வள நாடு ஆகியவற்றின் உறுப்பினர்களைக் கொண்ட மண்டலப் பேரவை ஒன்றும் இருந்ததைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

**ஊராட்சி முறையின் மாட்சி**

இவ்வாறு சோழப் பேரரசன் இராசராசன் காலத்தில் ஊராட்சியும் நாட்டாட்சியும் செம்மையாகவும் சிறப்பாகவும் நடைபெற்றுவந்தது. கட்சி வேறுபாடு இல்லாத பொதுமக்கள் ஆட்சியாக, ஊராட்சி அக்காலத்தில் நடைபெற்றது. அதனால் இக்காலத்திய பஞ்சாயத்துகளிலும், ஊராட்சி ஒன்றியங்களிலும் நிலவும் உட்பகையும் கட்சிவெறியும் அக்காலத்தில் தலைகாட்டவில்லை.

சோழப் பேரரசர் காலத்தில், உள்ளாட்சியினை நடத்திவந்த ஊராட்சி மன்றங்களுக்குத் தன்னாட்சி உரிமை பேரளவிற்கு வழங்கப்பட்டிருந்தன. இதை ஊராட்சி மன்றங்களின் செயல் முறைகளே நமக்கு எடுத்தியம்புகின்றன. மைய அரசின் தலையீடு இன்றி, தொடர்ந்து புதிய நடைமுறை விதிகளை வகுத்துக் கொண்டு ஊராட்சி மன்றங்கள் செயற்பட்டமையை நமக்குக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இதனால், மையக்குவிமுக ஆட்சிக்குட்பட்ட சோழப் பேரரசில் இவை 'மிகச் சிறிய குடியரசுகளாக'ச் செழித்து வளர்ந்தன. ஆனால், இராசேந்திரன் காலத்திற்குப் பிறகு ஊராட்சி மன்றங்கள் சிலவற்றின் செயல் முறைகளில் குறைபாடுகள் தோன்றிய பொழுது, அவற்றை நெறிப்படுத்த மைய அரசு புதிய ஆணைகள் சிலவற்றைப் பிறப்பித்து, அவற்றின் அலுவல்களைத் தன் அதிகாரிகளைக் கொண்டு கண்காணிக்கவும் செய்துள்ளது. எனினும், இத்தகைய தலையீடு மிகவும் அருகிய வழக்காகவே இருந்துவந்திருக்கிறது.

[25] Ins. 356 of 1924.

சோழர் காலத்திய ஊராட்சி மன்றங்கள் தங்கள் கடமைகளைச் செய்வதில் உரிமை மிக்குடையனவாக இருந்தன. இதைத் தங்கள் ஊரின் நலனுக்குத் தேவையான ஆக்கப்பணிகளைச் செய்வதற்குரிய வரிகளை விதிப்பதில் தத்தம் விருப்பம்போல் அவை செயற்பட்டமை தெளிவுறுத்துகிறது. இதைப் போன்றே, அத்தகைய வரிகளைக் குறைப்பதிலும், வரிவிலக்கு அளிப்பதிலும் தனனுரிமை வாய்ந்தனவாக அவை இருந்தன. 'மேற்கண்ட ஊராட்சி மன்றச் செயல்முறை விளக்கத்திலிருந்து, குடிமக்களின் உரிமையுணர்வுமிக்க உள்ளக் கருத்தினை வெளிப்படுத்தும் சனநாயக நிறுவனங்களின் மூலம் சோழரின் அரசு நெறிப்படுத்தப் பட்டும் கட்டுப்படுத்தப்பட்டும் வந்த முடியாட்சி அமைப்பாக விளங்கியது[26] என்று கூறினுல், அது முற்றிலும் பொருந்துவதாகும்.

இராசராச சோழன் காலத்திய தமிழகத்தில் மையக்குவிமுக ஆட்சி வேரூன்றத் தொடங்கியது. எனினும், ஊராட்சி மன்றங்களின் உரிமைகளிலும் கடமைகளிலும் நடுவண் அரசு தலையிடாமல் செயற்பட்டமையால் பேரளவிற்கு, அதிகாரம் பன்முகப் படுத்த ஆட்சி அமைப்பே சிறப்புற்று விளங்கலாயிற்று. மேலும். தங்கள் வட்டங்களின் ஆட்சியில் ஆர்வத்தோடு கலந்து கொண்டு பணியாற்றும் வாய்ப்பினைக் குடிமக்கள் பெற்றிருந்தனர். இன்றைய இந்திய சனநாயக ஆட்சி முறையில் நாம் அத்தகைய உள்ளாட்சி முறையை நாடிச் சென்று கொண்டிருக்கின்றோம், குடிமக்களுடைய கருத்தினைப் பெரிதும் கவர்ந்தது அவரவர் ஊர்களின் ஆட்சியேயாகும். தத்தம் ஊர்களின் மட்டத்திலேயே அவர்கள் நேரடியாக ஆட்சிப்பொறுப்பில் இவ்வூராட்சி முறையினுல் கலந்து கொண்டனர். அதனுல், பேரளவிற்கு முடியரசின் தன்முனைப்பினுல் உண்டாகக் கூடிய இன்னல்களும் இடையூறுகளும், துன்பங்களும் தீங்குகளும் அடியோடு நீக்கப் படவில்லை. எனினும், கணிசமான அளவிற்கு அவை கட்டுப் படுத்தப்பட்டன; குறைக்கப்பட்டன.

தன்னிறைவும் தன்னுட்சியும் கொண்ட ஊர்கள் பலவற்றின் ஒன்றியமாக (Union) இராசராசன் காலத்திய சோழப்பேரரசு விளங்கியது. அவை ஒவ்வொன்றும் ஒரு சிறு 'அரசாக' இயங்கியது. இத்தகைய ஊராட்சியால் சிறப்புற்ற நாட்டில் நல்லதொரு சமுதாய அமைப்பு—பல்குழுவும் பாழ்செய்யும் உட்

[26] Mahalingom, T. V.: South Indian Polity, P. 380

பகையும் தோன்றாத—சமுதாய அமைப்பு நின்று நிலவுவது எளிதாயிற்று. இதனால், அவை பண்பாட்டின் வளர்ப்புப் பண்ணைகளாகவும், சிந்தனையூற்றின் வற்றாத நிலைக்களன்களாக வும், நாகரிகத்தின் நறுமலர் பூத்துக் குலுங்கும் பூஞ்சோலைகளாக வும் பொலிவுற்றன.

# 18. சமுதாய நிலை

சமுதாயம் என்பது குறிப்பிட்ட மக்களுடைய நெறிமுறைகளையும் மரபுகளையும், பழக்கவழக்கங்களையும் அடிப்படையாகக் கொண்ட ஓர் அமைப்பு. அவ்வமைப்பு குறிப்பிட்ட பழக்க வழக்கங்களை யுடைய மக்கள் குழுக்கள் பலவற்றின் கூட்டமைப்பாக விளங்குகிறது. அவ்வமைப்பின் அதிகாரமும் ஒருவர் மற்றொருவருக்கு உதவும் இயல்பினைச் சார்ந்திருக்கிறது. மக்களினத்தின் பல்வேறு குழுக்களையும் பிரிவுகளையும் நிலைக்களனாக கொண்டது சமுதாயம். மக்களுடைய நடத்தையையும் உரிமைகளையும் கட்டுப்படுத்தும் அமைப்பாகவும் அது இயங்குகிறது. தனி மனிதனின் வாழ்க்கை முழுநிறைவை அடைவதற்கு உறுதுணையாகவும் இருந்து வருகிறது. மக்கள் உரிமையுடன் செயல்களைச் செய்வதற்கு உதவுவதும் சமுதாயம்தான். அவ்வுரிமைகளைக் கட்டுப்படுத்தி, நெறிப்படுத்துவதும் சமுதாயமேயாகும். மக்கள் வாழ்க்கைக்குரிய விதிமுறைகளை வகுத்துக் கொடுப்பதும், அவற்றைத் தவறாமல் கடைப்பிடிக்குமாறு தூண்டுவதும் சமுதாயம் எனலாம்.

## இடைக்காலத் தமிழ்ச் சமுதாயம்

சமய நம்பிக்கையின் அடிப்படையில் இடைக் காலத் தமிழர் சமுதாயம் இயங்கியது; தனி மனிதனின் ஆன்மீகக் கடைத்தேற்றத்திற்காகவே சமுதாயம் இருப்பதாகக் கருதப் பட்டது. இக்குறிக்கோளினைப் போற்றி வளர்ப்பதே சமுதாயத்தின் கடமை என்று, பெரியோர்கள் நம்பினர். கிரேக்க நாட்டில் கருதப்பெற்றதைப் போன்று அரசுக்காகத் தனி மனிதன் வாழ்வதாக நம் முன்னோர்கள் நினைக்கவில்லை. இக்காலத்தில் தனிமனிதர்களின் கூட்டுத் தொகையே சமுதாயம்

என்று அறிஞர் சிலர் அறிவித்துள்ளனர். ஆனால், இராசராசன் காலத்திய தமிழ் மக்கள் இவ்வாறு கருதவில்லை. உண்மையில் அது பல குடும்பங்களின் கூட்டுத் தொகையாகவே கருதப் பட்டது. இன்றைய சமுதாயத்தின் அடிப்படை அலகாக(Unit)த் தனிமனிதர்களைக் கருதுகின்றனர். ஆனால், பண்டைத் தமிழகத் திலும் இடைக்காலத் தமிழகத்திலும் 'குடும்பமே' அடிப்படை அலகாகக் கொள்ளப்பட்டதை அறநூல்களும் இலக்கியங்களும் எடுத்தியம்புகின்றன. ஊராட்சி மன்றத்தின் அடிப்படை உறுப் பாகிய 'குடும்பும்' இவ்வுண்மையை உணர்த்துகிறது.

இக்காலத்தில் சமூக நிலையங்களையும் அமைப்புகளையும் அரசின் ஆதிக்கம் கட்டுப்படுத்துவது பெருகிக் கோண்டே வருகிறது. ஆனால், சோழர் காலத்திய ஆட்சிமுறையில் சமுதாயக் குழுக்களுக்குப் பேரளவிற்கு உரிமைகள் அளிக்கப்பட்டிருந்தன. அத்தகைய சமு தாயத்தில், தனிமனிதன் ஒவ்வொருவனும் அச்சமுதாயத்தின் குழுக்களில் ஓர் உறுப்பினனாகக் கருதப்பெற்றான். அதனால், நாட்டு மக்களிடையே குழுமனப்பான்மையே மேலோங்கி நின்றது. அம் மனப்பான்மை சமுதாயத்தின் கட்டுக்கோப்பிற்கும் நாடாளும் அரசின் ஆற்றலுக்கும் அரணாக அமைந்தது.

## (I) சமுதாய அமைப்பு

இத்தகைய மனப்பண்பின் அடிப்படையில் உருவானதே சாதிப்பாகுபாட்டு முறை. அச்சாதிப் பாகுபாட்டை அடிப்படை யாகக் கொண்டே இராசராசன் காலத்திய தமிழ்ச் சமுதாயம் அமைந்திருந்தது. அது நெகிழ்ச்சி மிக்க ஒன்றாக இருந்தது. சாதி அடிப்படையில் அமைந்த குழுக்கள் பல அக்காலத்தில் சிறப்புற்று விளங்கின. ஒவ்வொரு சாதியும் குறிப்பிட்ட ஒரு தொழிலைப் பல தலைமுறைகளாகச் செய்து வரும் தொழிற் குழுக்களின் பரிணாம வளர்ச்சியாகக் காணப்பட்டது. ஒவ்வொரு சாதியும் அதனுடைய பொருளாதார, சமூக உரிமைகளைக் காத்துக் கொள்ளுவதில் கருத்தாக இருந்தன.

### சாதிப் பாகுபாடு

வைதீக நெறி பற்றிய நான்கு வகைச் சாதிப் பாகுபாடு, தமிழகத்தில் இராசராசன் காலம் முடிய, வடவர் பண்பாட்டுச் சாதி முறையில் கால்கொண்டதாகத் தெரியவில்லை. சத்திரியர் என்னும் தனி இனம் அக்காலத்தில் இல்லை. அரச குடியைச் சேர்ந்த வர்கள், பிற்காலத்தில் வடவர் செல்வாக்கினால் தங்களைச்

'சத்திரியர்' என்று கூறிக்கொள்ளுவதில் பெருமையுற்றனர். தமிழகத்தின் சிறப்புமிக்க மூவேந்தர் குடிகள், நிலப்பிரபுக்களின் வழிவந்தவையாகும். பிற்காலத்தில் படைவீரர்களும், தானைத் தலைவர்களும் கூடத் தங்களைச் 'சத்திரியர்' என்று சொல்லிக் கொள்ளுவதன் மூலம், உயர்ந்த சாதியினராகத் தங்களை மற்றவர் கருத வேண்டும் என்று நினைத்தனர். போரிடுவதும், நாட்டு ஆட்சியை நடத்துவதும் சத்திரியருக்குரிய கடமைகளாகப் பகவத் கீதை முதல் மனுதரும சாத்திரம் ஈறான பல வடமொழி நூல்கள் எடுத்தியம்புகின்றன. தமிழகத்தில் அக்கடமைகளைச் செய்து வந்த தமிழ் மக்கள், தொழில் ஒற்றுமை காரணமாகத் தாங்களும் **சத்திரிய சாதியைச்** சேர்ந்தவராகக் கருதலாயினர். இராசராசனுக்குரிய பல்வகையான சிறப்புப் பெயர்களுள் **சத்திரிய சிகாமணி** என்பது ஒன்று. இத்தொடருக்கு 'அரசர்களின் முடிமணி' என்பது தான் பொருள். இவ்வுண்மையை உணராத அல்லது உணர விரும்பாத ஒரு சில அறிஞர்கள், வேதகாலத்து வடவருள் ஒரு சாதியினராக இருந்த சத்திரியரின் வழிவந்தவரே தமிழகத்து வேந்தர் என்றும், அவர்களுள் சிறப்பாக விசயாலயன் மரபினர் சத்திரியரின் கால்வழியினர் என்றும் கூறுவர். சோழ மன்னர் பூணூல் அணிந்திருந்தனர் என்றும் அவர்கள் மொழிவர். சங்க காலத்துத் தமிழ் வேந்தரோ, குறுநில மன்னரோ பூணூல் அணிந்திருந்தனர் என்பதற்குச் சான்றுகள் ஒன்றும் கிடைக்கவில்லை. தொல்காப்பியர் அரசருக்குரிய சின்னங்களுள் ஒன்றாக அதைச் சுட்டவில்லை. வைதிக சமயச் சடங்குகளைச் செய்யும் பொழுது, இக்காலத்திலும் புரோகிதர்கள், சடங்கினைச் செய்கின்றவருக்குப் பூணூல் அணிவிக்கின்றனர். இம்முறையில், அரசர்களுக்கு முடி சூட்டும் விழாவில் பிராமணர் செல்வாக்குப் பெற்ற காலத்தில், பூணூல் அணிவிக்கும் பழக்கத்தைப் புகுத்தியிருக்கலாம். நாளடைவில் அது புதுமைப் பொலிவுமிக்க வழக்கமாக மாறி யிருக்கக் கூடும். இதைக் கருத்தில் கொண்டு 'தமிழ் நாட்டு அரச மரபினர் தமிழர் அல்லர்; அவர்கள் வடநாட்டுச் சத்திரியரின் வழியில் வந்தவராவர். அதற்குரிய சான்று அவர்கள் பூணூல் அணிந்திருந்தமையாகும்' என்று சொல்லுவது அறிவுடைமை யாகாது. பத்தாம் நூற்றாண்டிற்கு முன்னும் பின்னும் தமிழில் இயற்றப்பட்ட நிகண்டுகளில் அரசருக்குரிய சின்னமாக முப்புரி நூல் குறிப்பிடப்படவில்லை. பிற்கால நூல்களில், அரசருக்குச் சாதி யமைப்பில் ஏற்றம் தரவேண்டும் என்று எண்ணியமையாலும், பிற்காலத்தில் பூணூல் அணிவது சிறப்பு என்று கருதப்பட்டமை யாலும் அதை அரசரோடு சேர்த்துக் கூறினர்.

எனவே, தமிழக வேந்தரைச் சத்திரியர் என்னும் சாதிக்குள் அடக்குவதோ, வடநாட்டுச் சத்திரியரின் வழியில் வந்தவர் என்று கூறுவதோ இடைக்காலத்தில் பிராமணசாதியினர், அரசர்களிடம் தாங்கள் செல்வாக்குப் பெறுவதற்குக் கட்டிவிட்ட கதைகளின் எச்சமிச்சங்களே என்பதில் சிறிதும் ஐயமில்லை. சங்க காலம் முதற்கொண்டு சோழ மன்னர்கள், உழுவித்துண்ட வேளாளர் குடியில் மணவுறவு கொண்டிருந்த செய்தியைப் பழைய இலக்கியங்களும் இடைக்காலக் கல்வெட்டுகளும் தெரிவிக்கின்றன. வேளிர் குடியினரே சோழர் குலத்திற்குப் பெரிதும் பெண் கொடுத்து வந்தனர். சோழப் பேரரசைக் கட்டிக் காப்பதில் கண்ணும் கருத்தாகவும் இருந்து வந்தனர் என்பதை நாம் வேறோர் இயலில் கண்டோம். இவற்றால் தமிழ்நாட்டு அரச குடியினர், வடநாட்டுச் சத்திரிய மரபினர் அல்லர் என்பது தெளிவுறும்.

விசயாலய சோழ மரபினரின் ஆட்சிக் காலத்தில்தான், இன்றைக்குத் தமிழகத்தில் காணப்படும் பல்வேறு சாதிகள் தோன்றின; பையப் பைய அவற்றிடையே வேற்றுமை வெறியும் பிணக்கும் பூசலும் பெருகின. உயர்ந்த சாதியினர், தாழ்ந்த சாதியினர் என்னும் வேற்றுமை இராசராசன் காலத்திய தமிழர் சமுதாயத்தில் நன்கு வேரூன்றி விட்டதைக் காணலாம்.

சமுதாயத்தின் மேல்மட்டத்தில் பார்ப்பனர் சிறப்புற்று விளங்கினர். அவர்களுள் சிலரை வடநாட்டின் பல பகுதிகளிலிருந்து சோழநாட்டிற்கு வரவழைத்து அரசர்கள் குடியேற்றினர். வேதங்களில் வல்லுநர்களாகவும், சாத்திரங்களிலும் புராணங்களிலும் தெளிந்த அறிவுடையவராகவும் அவர்கள் இருந்தனர். அவர்கள் அம்பலங்களிலும், திருக்கோயில்களிலும் இரவில் மாபாரதம், பதினெண் புராணம் முதலியவற்றைப் படித்தனர்; பொதுமக்கள் புரிந்துகொள்ளுமாறு விளக்கியுரைப்பதிலும் ஈடுபட்டிருந்தனர். வடமொழி நூல்களாலும் வேத நெறியாலும் கவரப்பட்ட மன்னர், புதுமை மோகத்தில் மதிமயங்கிப் போயினர். பிராமணரின் நல்வாழ்வைக் கருதி, அவர்களுக்கு வேத விருத்தி, பாரத விருத்தி, பட்ட விருத்தி, புராண விருத்தி, என்ற பெயர்களால் ஊர்ப்பொது நிலங்களையும் ஊர்களையும் மானியங்களாக அவர்களுக்கு வழங்கினர். அவ்வூர்களுக்கு பிரமதேயம், சதுர்வேதி மங்கலம் என்று அவர்கள் பெயரிட்டனர். மேலும், திருக்கோயில்களில் நாள்தோறும் நண்பகற் பொழுதில் பார்ப்பனருக்கு உணவளிக்கும் பொருட்டு அரசர்களும், அதிகாரிகளும், செல்வர்களும் அறக்கட்டளைகள் பல அமைத்ததைப் பற்றிக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

பார்ப்பன மரபைச் சேர்ந்தவர்கள் சோழப் பேரரசின் அமைச்சர்களாகவும், படைத் தலைவர்களாகவும் பணி புரிந்துள்ளனர். அநிருத்த பிரமாதிராசன் என்பவன் இராசராசனுடைய தந்தையிடம் அமைச்சனாக இருந்தான். அவனுக்கு இறையிலியாகக் கருணாகர மங்கலம் என்னும் ஊர் அளிக்கப்பட்ட செய்தியைச் சுந்தர சோழனின் அன்பில் செப்பேடு அறிவுறுத்துகிறது. இராசராசனின் படைத் தலைவர்களுள் பலர் பிராமணராக இருந்தனர். அவர்களுள் கிருஷ்ணன் இராமனான மும்முடிச் சோழ பிரமமாராயன் என்பவன் குறிப்பிடத்தக்கவன். அவன் இராசேந்திர சோழனுடைய ஆட்சியிலும் படைத் தலைவனாக விளங்கினான்.

பிராமணருக்குத் தானமாக வழங்கப்பட்ட பிரமதேயங்களும் சதுர்வேதி மங்கலங்களும் அக்காலத்தில் மிகப் பலவாக இருந்தன. அவனி நாராயண சதுர்வேதி மங்கலம், மதுராந்தகச் சதுர்வேதி மங்கலம், இராசராசச் சதுர்வேதி மங்கலம், உத்தரமேரு சதுர்வேதி மங்கலம், செம்பியன் மாதேவிச் சதுர்வேதி மங்கலம், கண்டராதித்த சதுர்வேதி மங்கலம், பிரமதேசம் என்பன அவற்றுள் செல்வமும் செல்வாக்கும் பெற்றிருந்தன. அவ்வூர்களில், பார்ப்பனரே பெரிதும் வாழ்ந்து வந்தனர். மற்ற ஊர்களில் அவர்கள் வாழ நேரிட்டால், அவர்கள் தனித்த பகுதிகளில் தனிக் குழுவினராக வாழ்ந்தனர். அத்தனிப் பகுதிக்கு அகரம்[1] என்னும் பெயர் வழங்கியது.

அரச குருவாகச் சில வடநாட்டுப் பிராமணர் சோழப் பேரரசில் சிறப்புற்றனர். ஈசான பண்டிதர் என்பவர் இராசராசனுடைய குரு என்பதை நாம் முன்னரே கண்டோம். ஊராட்சி மன்றங்களில் அவர்களுக்கு முதன்மையிடம் அளிக்கப்பட்டது. இத்தகைய செல்வாக்கினைப் பெறுவதற்கு, அரசர்களை வேத நெறியைப் போற்றி மனுநெறியைத் தழைக்கச் செய்யுமாறு அவர்கள் தூண்டினர். அக்காலத்திய பிராமணர் சிலரின் கல்வியறிவும், தூய ஒழுகலாறும் அரசருடைய உள்ளத்தைக் கவர்ந்தன. அதனால், அரசர் அவர்களைப் போற்றியாதரித்தனர்.

கோயிலின் நிருவாகப் பணியும், அறக்கட்டளைகளும் பெரும்பாலும் பார்ப்பனரிடமே ஒப்புவிக்கப்பட்டன. சிவன் கோயிலை நிருவகித்த மூலபருடையார் என்னும் குழுவில் பார்ப்பனரே இருந்தனர். சில கோயில்களில் பணி புரிந்த பிராமணர் அக்

[1] 'அக்கிரகாரம்' என்னும் ஆரியச் சொல்லின் திரிபே 'அகர'மாகும்.

கோயில் நிலங்களைத் தமதாக்கிக் (அபகரித்துக்) கொண்டதையும், நாள் வழிபாட்டில் திருவமுதுக்கு ஒதுக்கப்பட்ட தானியத்தைக் களவாடிவிட்டு, இறைவனுக்குத் திருவமுது செய்வதை நிறுத்தி விட்டதையும் அரசியல் அதிகாரிகள் கண்டுபிடித்து, தண்டனை வழங்கியதை இராசராசனுடைய கல்வெட்டுகள் சில தெரிவிக்கின்றன.[2]

மன்னனும் மக்களும் பிராமணர், ''உளநிறைவுடன் நல் வாழ்க்கையில் நின்று வேதம் ஓதி, இறைபணி புரிந்து, அறம் ஓம்பி மக்களிடையே கல்வியறிவையும் ஆன்மிக விழிப்பையும் தோற்று விப்பதற்காகவே'' ஏராளமாக நன்கொடை வழங்கிப் போற்றி னர்''. ஆனால், விளைவோ வேறு விதமாயிற்று. தமிழ் மன்னரும், தமிழ் மக்களும் வரையாது வழங்கிய வாழ்க்கை நலன்களைப் பெற்ற பிராமணர்கள் தனித்து வாழ்ந்து, மக்களிடையே குல வேறுபாடுகளைப் பெருக்கித், தமிழர் அனைவரையும் சூத்திரர் என்ற இழி குலத்தினராகக் கருதிக் கோயில்களிலும், மடங்களி லும், ஏனைய பொது அறச்சாலைகளிலும் ஒதுக்கி வைத்து விட்டார்கள். ஒரு கோயிலைக் கட்டிக் குடமுழுக்குச் செய்விக்கும் தமிழன் ஒருவன், தான் கட்டிய கோயிலிலேயே தொலைவில் ஒதுங்கி நிற்கவும், பிராமணர்களின் பின்னின்று கோயில் 'பிர சாதங்களைப்' பெறவும் ஒப்புக் கொண்டு விட்டான். கோயில் கருவறையில் வடமொழியின் ஆரவார ஓசை ஓங்கவும், தமிழ் ஒலி மறையவும் வழக்காறுகள் வகுக்கப்பட்டன. தேவார ஆசிரியர்கள் காலத்தில் தமிழர் கருவறைக்குட் செல்லும் உரிமை பெற்றிருந்தும், சோழர் பாண்டியர் காலத்தில் அவ்வுரிமையை அவர்கள் இழக்க''[3] நேர்ந்தது என்று வரலாற்றுப் பேரறிஞர் ஒருவர் மனப்புழுக்கத்தோடு மொழிந்துள்ள கருத்துகள் இங்கு நினைவு கூர்தற்குரியதாகும்.

வாணிகம் செய்துவந்த மக்கள் 'வாணியர்' என்றும், 'செட்டிகள்' என்றும் அழைக்கப் பெற்றனர். ''எயில் கோட் டத்து எயில்நாட்டு நகரம் காஞ்சிபுரத்து அருமொழி தேவப் பெருந் தெருவில் வியாபாரி குமாரப் பெரு **வாணியன்** தேவன்''[4] என்னும் கல்வெட்டின் வாசகத்தாலும், ''மலை மண்டலத்து வள்ளுவ நாட்டு முரஞ்சைத்த மங்கலத்து சாத்தன் பேராயிர **செட்டி** வைத்த திருநந்தா விளக்கு[5] என்னும் கல்வெட்டுத் தொடராலும் வாணிகம் செய்து வந்தவர்களுக்கு வழங்கிய

[2] S.I.I., Vol. 3; P. 102; 69 of 1911.
[3] கே. கே. பிள்ளை: தமிழக வரலாறு—மக்களும் பண்பாடும், பக். 299.
[4] S.I.I., Vol. 3; No. 68.
[5] தென்னிந்திய கோயிற் சாசனங்கள், பாகம் I பக். 366

பெயரினை நாம் அறிகிறோம். வாணிகர்களுள் நாநா தேச திசை யாயிரத் தைந்நூற்றுவர், மணிக்கிராமத்தார், நகரத்தார், வளஞ்சியர் போன்ற பல குழுக்கள் இருந்தன. இவ்வடிப்படையில், செட்டிமார்களுக்குள்ளேயே பிற்காலத்தில் பல சாதிப் பிரிவுகள் தோன்றின.

பண்டைக் காலம் முதல் நிலத்தினை உழுது பயிரிட்டு வந்த **உழவர்களும்** உழுவித்துண்டு வாழ்ந்த வேளாளர்களும் சோழப் பேரரசில் சிறப்புற்று விளங்கினர். உழுவித்துண்போர் குறுநில மன்னர்களாகவும், சிற்றரசர்களாகவும், அரசியல் அதிகாரிகளாகவும், படைத் தலைவர்களாகவும் பணியாற்றி வந்தனர். நிலத்தை உழுது பயிரிட்டு வந்த உழவர் **வெள்ளாளர்** எனப்பட்டனர். இராசராசன் காலத்தில், குன்றவத்தனக் கோட்டத்து வெள்ளாளருக்குச் சலுகைகள் சில அளிக்கப்பட்டதைக் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது.

**அகமுடையார்** என்னும் ஒரு பிரிவினர் அக்காலத்திய தமிழ்ச் சமுதாயத்தில் எழுச்சியுற்றிருந்தனர். அவர்களை **அகம்படி முதலிகள்** என்று கல்வெட்டுக்கள் சுட்டுகின்றன. அன்றைய தமிழ்ச்சமுதாயத்தின் மற்றொரு முக்கிய சாதியினராகக் **கைக்கோளர்கள்** வாழ்ந்தனர். இப்பெயர் தொடக்கத்தில், 'வெற்றியைக் கைக்கொள்பவர்' என்னும் பொருளில், தோள்வலிமிகுந்த காலாட் படையினரைச் சுட்டியது. காலப்போக்கில், அது தனிப்பட்ட ஒரு சாதியினரைக் குறிக்கும் பெயராகவே வழங்கத் தலைப்பட்டதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. ''உகண்ணுட்டுடையார் அருமொழிதேவ தெரிஞ்ச **கைக்கோளரில்**, கற்றளி பட்டாலகன்''[6] என்னும் கல்வெட்டு வாசகத்தால் நாம் இதை அறியலாம்.

இவர்கள் அல்லாமல், கொல்லன், தச்சன், கணக்கன், வண்ணான், கம்மாளர், அம்பட்டன் போன்ற பிற சாதியினரும் அக்காலத்தில் ஒவ்வோர் ஊரிலும் வாழ்த்து வந்தனர். குறிப்பிட்ட ஓர் ஊரில் எண்வகைச்சாதிகள் வாழ்ந்ததாக ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது.[7] இராசராசன் காலத்திய பேரூர்களில் சாலியத்தெரு,[8] ஈழச்சேரி,[9] வண்ணாரச்சேரி,[10] கம்மாணசேரி[11]

6 144 of 1928.
7 442 of 1920
8 S.I.I., Vol. 2; No. 91.
9 Ibid; No. 4.
10 Ibid; No. 4.
11 Ibid; No. 4.

இடைக்குடி[12] தீண்டாச்சேரி[13] என்னும் பல பகுதிகள் இருந்தன. நெசவுத்தொழில் செய்த மக்கள் வாழ்ந்த தெரு சாலியத் தெரு என்று பெயர் பெற்றிருந்தது. கள்ளிறக்கும் தொழில் செய்த ஈழவர் வாழ்ந்த பகுதி ஈழச்சேரி என்றும், சலவைத் தொழிலாளர் வாழ்ந்த பகுதி வண்ணாரச்சேரி என்றும் கம்மாளர் வாழ்ந்த இடம் கம்மாணசேரி என்றும் ஆயர்வாழ்ந்த பகுதி இடைக்குடி என்றும், சமுதாயத்தின் கடைநிலையில் ஒதுக்கப் பட்டவராக இருந்த அரிசனங்கள் வாழ்ந்த பகுதி தீண்டாச்சேரி என்றும் வழங்கப் பெற்றன. சாதி அடிப்படையில் மக்கள் தனித்து வாழ்ந்ததை இப்பெயர்கள் தெரிவிக்கின்றன.

காலத்தைக் கணித்துரைத்த கணியனைக்[14] கூட குறிப்பிட்ட ஒரு சாதியைச் சேர்ந்தவனாகவே கருதினர். நாவிசஞ் செய்வோனை[15]யும் அம்பட்டனையும் ஒரு சாதியைச் சேர்ந்தவராகக் கொள்ளும் வழக்கம் இருந்தது. குயவரும் தனிச்சாதியினராகவே கருதப் பட்டனர்[16]

அன்றைய சமுதாயத்தில் தீண்டாமை பையப்பைய வேரூன்றத் தொடங்கியது. பறையர் தனிச்சேரியில் வாழ்ந்து வந்தனர் அவர் களுக்கெனத் தனிச்சுடுகாடும் இருந்தது.[17] பிற சாதியினரைப் போல அவர்களுக்கும் முழுச்சொத்துரிமை இருந்தது. ஊராட்சி மன்றத்தினர் எழுதிக்கொடுத்த ஆவணங்களில் அவர்களும் கையொப்பமிட்டனர். பறையர்களுள் சில பிரிவுகள் இருந்தன. அப்பிரிவுகளுள் ஊர்ப்பறையன் என்னும் பிரிவு சமூகத்தில் உயர்ந் ததாகக் கருதப்பட்டது. இராசராசன் காலத்தில், ஊர்ப்பறையன் மண்டை சோமநாதன் ஏழிசை மோகப் படைச்சன் என்பான் கோயிலில் சந்தி விளக்கெரிக்க தானம் வழங்கியதை ஒருகல்வெட்டு தெரிவிக்கிறது.[18] புல்லுப் பறிக்கிற பறையன், மாட்டிறைச்சியை உண்ட பறையன் என்னும் பிரிவுகளும் இருந்தன.[19] பறையர் வாழ்த்த பகுதிகள் ஊருக்கு வெளியே தனித்த இடங்களில் அமைக் கப்பட்டிருந்தன. அவை பறைச்சேரி என்றும் புலைப்பாடி என்றும் வழங்கப்பட்டன. அதைத் **தீண்டாச்சேரி** என்று சுட்டும் வழக்கும் உண்டு.[20]

[12] Ibid; No. 64.
[13] Ibid: No. 5.
[14] Ibid; No• 4.
[15] Ibid; No 66.
[16] Ibid; No. 66.
[17] S.I.I., Vol. 2; No. 5
[18] S.I.I., Vol. 7; Nc. 794
[19] Ibid; No. 118.
[20] S.I.I; Vol. 2 , No. 5.

## வலங்கை, இடங்கைப் பிரிவினர்

அக்காலத்தில் தமிழ்ச் சமுதாயத்தில் வலங்கை, இடங்கை என்னும் சாதிக் குழுக்கள் தோன்றலாயின. வலங்கைப் பிரிவினர், சோழப்பேரரசின் சிறப்புமிக்க படை வீரர்களாக விளங்கினர். இடங்கைப் பிரிவில் பல்வகை கைத்தொழில்கள் புரிந்த சமூகத் தினரும், வாணிகம் செய்தோரும் இடம் பெற்றிருந்தனர். இப் பிரிவுகளும் வகுப்புகளும் எவ்வாறு தோன்றின என்பதைத் தெளிவாக அறியமுடியவில்லை. இடங்கையர் காசிப முனிவரது வேள்வியைக் காக்க வேள்விக் குண்டத்திலிருந்து படைக்கப் பட்டனர் எனக் கூறப்படுகிறது.

இடங்கையர் எனும் பெயர் வந்தமைக்குக் காரணம், காசிப முனிவர் பல்லக்கிலிருந்து இறங்கிய பொழுது இடப்பக்கமாகத் தாங்கி அவரைக் கீழே இறக்கியவர்கள் இடங்கையர் என்று சுட்டப்பட்டதாகக் கூறுவதும் உண்டு. சோழ மன்னன் அரிந்தமன் என்பான் வடநாட்டிலிருந்து மறையவரைத் தமிழகத்திற்கு அழைத்து வந்த போது, அவர்தம் மிதியடிகளையும் உடைகளையும் தாங்கிக் கொண்டு இடங்கையர் தென்னாட்டிற்கு வந்தனர் என்று ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது.[21] தங்கள் குலத்திற்குப் புகழ் தேடும் பொருட்டு, அக்காலத்திய மக்களால் கட்டப்பட்ட ஒரு புராணக் கதையாகவே இதை நாம் கருதலாம்.

வலங்கை, இடங்கை என்ற பாகுபாடு எவ்வாறு தோன்றின என்பதைத் திட்டவட்டமாகக் கூறுவதற்குரிய சான்றுகள்கிடைக்க வில்லை. காஞ்சிபுரத்தில் உள்ள கல்வெட்டு ஒன்று, அரசனிடம் தங்கள் வழக்கை எடுத்துரைக்க இரு கூட்டத்தினர் வந்தனர் என்றும், அவர்களுள் ஒரு கூட்டத்தார் அரசனுடைய வலதுகைப் பக்கம் நின்று, மற்றொரு கூட்டத்தினர் மீது குற்றஞ்சாட்டினர் என்றும், அரசனுடைய இடக்கைப்பக்கம் நின்ற கூட்டத்தினர் அதை மறுத்துரைத்தனர் என்றும் குறிப்பிடுகிறது.[22]

தமிழகத்திற்கு வெளியே இருந்து வந்து, இங்குக் குடி புகுந்த வர்கள் இடங்கையராக ஒருங்கு திரண்டிருக்கலாம். காளியைப் பூசிக்கின்ற வாமாசாரிகளை இடங்கையர் என்று சுட்டுவது மரபு. சிவபெருமானுடைய இடப்பாகத்தில் இருப்பவள் சக்தி. அச் சக்தியை முழுமுதற் கடவுளாக வழிபட்டவர்கள் வாமாசாரிகள். எனவே, அச்சமயத்தினரை **இடங்கையர்** எனச் சுட்டும் வழக்கம்

[21] 34 of 1907: 489 of 1907.
[22] 34 of 1913: Para 39: 489 of 1912.

உண்டாயிற்று என்பர். இடங்கைச் சாதியினரின் தலைவர்கள் காளியை வழிபட்ட கம்மாளர்களாவர். எனவே, அவர்களுடைய குழுவிற்கு **இடங்கையர்** எனும் பெயருண்டாகி இருக்கலாம் என்பர்.

வலங்கையர் என்ற சமூகப்பிரிவிற்கு வேளாளர் தலைவராவர். அவர்கள் சிவனையோ, திருமாலையோ வழிபட்டுவந்தனர். தஞ்சைப் பெரிய கோயிலில் இராசராசனுடைய பல்வேறு பெயர்களைக் கொண்ட வலங்கை வேளைக்காரர்கள் இருந்திருக்கின்றனர். இராச ராசத் தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர், அரிதுர்க்க லங்கனத் தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர், மூர்த்த விக்ரமா பரணத் தெரிந்த வலங்கை வேளைக்காரர், இரண முகராமத் தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர், இராஜ கண்டிவத் தெஞ்ந்த வலங்கை வேளைக்காரர், சத்ரு புஜங்கத் தெரிந்த வலங்கை வேளைக்காரர், அழகிய சோழத் தெரிந்த வலங்கை வேளைக்காரர், சத்திரிய சிகாமணித் தெரிந்த வலங்கை வேளைக்காரர் முதலிய பலவகை வலங்கை வேளைக்காரப் படையினர் அக்காலத்தில் சிறப்புற் றிருந்தனர்.

இப்பெயர்கள் யாவும், வலங்கை வேளைக்காரர் என்பது அரசனுடைய படையின் ஒருவகைப் பிரிவைச் சேர்ந்தவர் என்பதைத் தெரிவிக்கின்றன. நம் பேரரசனுடைய படையில் வளங்கை வேளைக்காரனாக வெள்ளாளன் ஒருவன் இருந்தான் என்பதை ஒரு கல்வெட்டால் நாம் அறிகிறோம்.[22a] பிற்காலத்தில் இவ்விரு குழுவினருக்கும் இடையே தீராப்பகை மூண்டதையும் அதனால் இரத்தம் சிந்தப்பட்டு வந்ததையும் சரித்திரம் பேசுகிறது.

**கலப்புச் சாதியினர்**

மற்றும் அனுலோமர், பிரதிலோமர் என்னும் கலப்புச் சாதியினரைப்பற்றிய செய்திகள் சில கல்வெட்டுக்களில் இடம் பெற்றுள்ளன. இவர்கள் முறையே உயர்சாதி ஆணிற்கும் கீழ்ச் சாதி பெண்ணிற்கும், கீழ்ச்சாதி பெண்ணிற்கும் மேல்சாதி ஆணிற்கும் பிறந்தவர் என்று வடமொழி தரும சாத்திரங்கள் தெரிவிக்கின்றன.[23]

இராசராசன் காலத்தில் சாதிப்பூசல்கள் தோன்றவில்லை. ஒவ்வோர் ஊரிலும் இருந்த பல்வகைச்சாதியினர் தத்தம் கடமை களைச் செய்வதில் கருத்தாக இருந்தனர். பொதுப்பணிகளைச் செய்வதில் ஆர்வம் உடையவராய்ப் பிற சாதியினரோடு ஒத்

[22a] 238 of 1917.
[23] Kane, P. V ; History of Dharmasastra, Vol. I Pt. 2, P 229.

துழைத்தனர். ஆயினும், மனித வாழ்க்கைத்குத் தேவையான அடிப்படை உரிமைகள் மேல்மட்டத்திலிருந்த ஒரு சில வகுப்பினருக்கே வழங்கப்பட்டிருந்தன. மற்றவர்கள் அடக்கியொடுக்கப்பட்டும், சுரண்டப்பட்டும் வந்தனர். இதனுல் உண்டான மனக்குமுறலும், ஏமாற்றமும் ஏக்கமும் வளர்ந்து, முதல் குலோத்துங்க சோழன் காலம் முதல், சாதிப்பூசல்களாகவும்' கலகங்களாகவும் வெளிப்பட்டன.

## மகளிர் நிலை

இராசராசன் காலத்தில், தமிழகத்தின் மகளிர் உரிமையுடன் வாழ்ந்தனர். பெண்கள் ஆண்களுக்கு அடிமையாக வாழவேண்டும் என்ற எண்ணம் சமுதாயத்தில் வேரூன்ருத காலம் அது. அவர்கள் அன்பும் அறனும் அணியெனப் பூண்டு வாழ்ந்தனர்; கற்பினை உயிரினும் சிறந்ததாகப் போற்றினர். அக்காலத்திலும் ஆண் மகன் தன்னுடைய கற்பினைப்பற்றிக் கவலையுற்றதாகத் தெரியவில்லை. பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கப்பட்டிருந்தது.

ஆடவர் பல பெண்களை மணம் புரிந்து கொண்டனர். இப்பழக்கம் அரசர்களிடம் சிறப்பாகவும், செல்வரிடம் பொதுவாகவும் இருந்துவந்தது. ஆனல், குடிமக்களிடம் இம்முறை அருகிய வழக்காகவே காணப்பட்டது. பெரும்பாலும் கூட்டுக்குடும்பமாக அக்கால மக்கள் வாழ்ந்தனர். அதனுல், குடும்பத்தலைவனுகிய தந்தைக்கும், தாய்க்கும் குடும்பப்பொறுப்பு மிகுதியாக இருந்தது.

கணவனை இழந்த பெண்கள் கைம்மை நோன்பு மேற்கொள்ளுவதே பெருவழக்காகும். அரச குடும்பத்தைச் சேர்ந்த அரசிகளுள் சிலர், தம் கணவரோடு உடன்கட்டை ஏறினர். இராசராசனின் பெரிய பாட்டியான செம்பியன் மாதேவியார், தம் மகனுக்காக— மதுராந்தக உத்தம சோழனுக்காக— கணவன் இறந்த பின்னரும் உயிர் வாழ்ந்தார். ஆனுல், இராசராசனின் தாயான வானவன் மாதேவியார் தம் கணவருடன் உடன்கட்டை ஏறினுர். இப்பழக்கம் குடிமக்களிடம் மிகவும் அருகிய ஒன்ருகவே காணப்பட்டது. சக்களத்தி கொடுமை செய்வாளே என்று அஞ்சி ஒருத்தி தன் கணவனுடன் உடன்கட்டை ஏறிய செய்தியைப் பிற்காலத்தில் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது.[24]

[24] 156 of 1906.

பெண்களுக்கு எழுதப் படிக்க வாய்ப்பு அளிக்கப்பட்டது. பெண் கல்வி போற்றி வளர்க்கப்படவில்லை. அரச குடும்பத்தைச் சேர்ந்த பெண்களுக்குத் தமிழ்க் கல்வியில் பயிற்சி அளிக்கப்பட்டது. அவர்கள் இலக்கியங்களிலும், சமய நூல்களிலும், புராணங்களிலும் ஆழ்ந்த அறிவு பெற்றிருந்தனர். இவற்றோடு ஆடல் பாடலிலும் அவர்கள் தேர்ச்சிபெற்றிருந்தனர். பேரரசன் இராசராசனின் திருமகளான இளவரசி குந்தவைக்கு வழுவூரைச் சேர்ந்த இராசராசப் பேராசான் என்னும் சிறப்புப்பெயர் பெற்ற நாடகக் கலைஞர், நாட்டியம் பயிற்றுவித்ததாகத் தெரிகிறது. அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான கலைகளில், அக்காலத்திய பெண்மணிகள் நன்கு பயிற்சி பெற்றிருந்தனர். அவர்கள் தங்கள் உரிமைக்காகப் போராடவில்லை. ஆனல், தங்கள் கடமைகளையும் உரிமைகளையும் உணர்ந்து குடும்பப்பணியில் தங்களை ஈடுபடுத்திக் கொள்ளுவதையே பெரும் பேறுகக் கருதினர். அதன் மூலம் அவர்கள் ஆன்மீக விடுதலையை நாடினர்.

அன்றைய அரச குடும்பமகளிருள் செம்பியன் மாதேவியாரும் ஆழ்வார் குந்தவைப் பிராட்டியாரும் அகவாழ்க்கையில் பெருஞ் சிறப்புப் பெற்றிருந்ததோடு, பொது வாழ்க்கையிலும் பிறருக்கு அறிவுரை கூறும் அளவிற்குச் சிறப்புடையவர்களாக விளங்கினர். அவர்கள் திருக்கோயில் கட்டுவதிலும், பழைய கோயில்களைப் புதுப்பிப்பதிலும் பேரார்வம் கொண்டிருந்தனர். கோயில்களில் அன்றாட வழிபாட்டிற்கும், திருவிழாக்கள் நடத்துவதற்கும் ஏராளமான பொன்னையும் பொருளையும் அறக்கட்டளையாக அவர்கள் வழங்கியுள்ளனர். இராசராசனின் பட்டத்தரசி கோயில் எடுப்பித்ததையும், பிற மனைவியர் அறக்கட்டளை ஏற்பாடு செய்ததையும் நாம் முன்னரே கண்டோம். தளிச்சேரிப் பெண்டிரும், அரண்மனையில் சமையல் வேலை செய்து வந்த பெண்டிரும் கூட கோயில்களில் பல நிவந்தங்கள் நிறுவியுள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கது.

## ஆடல் மகளிர்

ஆடல் மகளிர் அன்றைய சமுதாயத்தில் சிறப்பிடம் பெற்றிருந்தனர்; பெரிதும் சமயத்தோடு தொடர்புடைய விழாக்களிலேயே ஆடல் மகளிர் ஆடியும் பாடியும் மக்களை மகிழ்வித்தனர். இயல்பாகவே ஆடலிலும் பாடலிலும் அம்மகளிர் சிறந்து விளங்கினர். ஆண்களோடு சரிநிகர் சமானமாகப் பழகக்கூடிய வாயப்பை ஆடல் மகளிர் பெற்றிருந்தனர்.

திருக்கோயில் திருப்பணியில் ஈடுபட்டிருந்த ஆடல் மகளிரைத் **தேவரடியார்** என்று கல்வெட்டுகள் தெரிகின்றன. அவர்களுள் **தலைக்கோலிகள்** என்னும் பட்டம் பெற்றவர் ஆடல் மகளிர் பலருக்குத் தலைவியராகவும், வேந்தர் அவையில் நடனமாடும் நாட்டிய நங்கையராகவும் விளங்கினர். அவர்கள் வேத்தியல், பொதுவியல் என்னும் இருவகை நடனக் கலைகளிலும் தேர்ச்சி பெற்றிருந்தனர். அவர்களுள் ஐந்நூற்றுவர் தலைக்கோலி வீராபரணத் தலைக்கோலி என்பவர் இங்குக் குறிப்பிடத்தக்கவரா வர். இராசராசன் தஞ்சைப் பெரியகோயிலைச் சுற்றி 400 தேவரடியார்களைக் குடியேற்றிய செய்தி,[25] யாவரும் அறிந்தது. அவன் காலத்திலேயே திருக்கோவலூர் வீரட்டானேசுவரர்க் கோயிலில் நாடக மகளிர் முப்பத்திரண்டுபேர் தொண்டுபுரிந்து வந்தமையும்[26] இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

ஆடல் மகளிருக்கு அக்காலத்தில் **தளிச்சேரிப் பெண்டுகள், பதியிலார், கோயிற் பிணாக்கள்** என்னும் பெயர்களும் வழங்கின. இராசராசன் காலத்தில் சிறப்புற்று விளங்கிய பெரிய தளிச்சேரி நக்கன்**மழலைச்**சிலம்பு, ஆயிரத்தளி **நக்கன் பூங்கா**, பெரியதளிச்சேரி நக்கன்**மாதேவி**, தளிநக்கன் கருமாணிக்கம், **நீறணிபவளக்குன்றம்** எடுத்த பாதம் போன்ற பெயர்களையுடையோர் திருக்கோயில் வழிபாட்டில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டிருந்தனர். கோயிலில் திருவலகிடுவதும், திருமெழுக்கிடுவதும், மலர் தொடுத்தலும் தேவரடியார்கள் நாள்தோறும் செய்து வந்த சில பணிகளாகும் நாளும் காலையிலும், மாலையிலும் இறைவன் திருமுன்னர்தேவாரம் திருவாசகம் ஓதுவதும், விழாக்காலங்களில் நடனமாடுவதும் அவர்கள் ஆற்றிய சிறப்புமிக்க கலைத் தொண்டுகளாகும். அக்காலத்தில் பெரும்பாலான கோயில்களுள் தேவரடியார்கள் பணிபுரிந்துவந்தனர். அவர்களுள் சிவன் கோயிலில் பணிபுரிந்தவர் உருத்திரக்கணிகையர் எனப்பட்டனர்; சிவபெருமானின் ஊர்தியாகிய காளைகளை (ரிஷபத்தினை)ச் சின்னமாக உடலில் பொறித்துக் கொண்டமையால் **ரிஷபத் தளியிலார்** என்றும் அவர்கள் அழைக்கப்பட்டனர். அவர்களுக்கு மானியங்கள் பல வழங்கப்பட்டுள்ளன. தேவரடியார்களுள் சிலர் தாங்கள் விரும்பிய ஆடவனைத் திருமணம் செய்து கொண்டு இல்லறம் நடத்தியதைச் சில கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

இத்தேவரடியார்களே, பிற்காலத்தில் தேவதாசிகள் என்னும் பெயரோடு திருக்கோயில்களில் ஆடல் பாடல் கலைகளை நடத்தியும், பிற பணிகள் செய்தும் வந்தனர். இத்தேவரடியார்

25 S. I. I. Vol. 2, No. 66.
26 Ibid. Vol. 7., No. 863.

வகுப்பினர் பல்லவர் காலத்திலேயே மிக அருகிய நிலையில் தமிழகத்தில் இருந்தனர் என்பதைக் கல்வெட்டுகளால் நாம் அறிகிறோம். பெண்களை— சிறப்பாகக் கலைகளில் வல்ல பெண்களைக்— கோயில் திருப்பணிக்குரியவர்களாக்கும் வழக்கம் எக்காலத்தில், எவ்வாறு தமிழரிடையே தோன்றியது என்பதைத் தெளிவாக நம்மால் அறிய முடியவில்லை. சங்க காலத்தில் ஆடல் பாடலில் வல்ல விறலியர் சிறப்பாகப் போற்றப்பட்டனர்; சிலப் பதிகார காலத்தில் ஆடல் மகளிர் அரசவை சார்ந்த ஆடலரசி களாகத் தலைக்கோல் பட்டம் கொடுத்துச் சிறப்பிக்கப்பட்டனர். ஆனால், சங்க காலத்தில் பரத்தையர் என்றும், வரைவின் மகளிர் என்றும் சுட்டப்பட்ட பெண்ணினத்திற்குரிய குறைபாடு மிக்க ஒழுகலாறு சிலப்பதிகாரத்தில் ஆடல் மகளிராக விளங்கிய கணி கையர்க்குரியதாகக் கருதப் பட்டது. எனவே, அவர்களுள் எல் லாரும் அரசவை சார்ந்த ஆடல் மகளிராக (**Courtisans**) மட்டும் வாழ முடியவில்லை. அதனால், பலர் பொது மகளிராகப் பரத் தமைத் தொழிலைச் செய்து வயிற்றைக் கழுவ நேர்ந்தது.

இவ்வாறு சமுதாயத்தின் இழிவுக்கும் பழிப்புக்கும் இறை யாகும் அவலநிலையை அவர்கள் அடைந்து கொண்டிருந்தனர். அந்நிலையில் அவர்களுடைய வாழ்க்கைக்குப் புத்தொளி ஊட்டி யவன் நம் இராசராசன் எனலாம். கோயில் திருத்தொண்டில் அவர்களை ஈடுபடுத்துவதன் மூலம் அவ்வினத்தின் மாசைத்துடைப் பதோடு, சமுதாயத்தின் கண்களுக்குப் புனிதத் தன்மை வாய்ந்த திருத்தொண்டர்களாகத் தோன்றுமாறு அவர்களுடைய நிலையில் அவன் ஒரு மாற்றத்தை உண்டாக்கினான். அதனால் அவர்கள் எழுச்சியும் ஏற்றமும் பெற்றனர். அவர்களுள் ஒருபகுதியினர் தெய்வத்திருமகளிராகவும், மற்றொரு பகுதியினர் கலைச்செல்வி யராகவும் தத்தம் கடமைகளைக்கண்ணெனப் போற்றிவாழ்ந்தனர்.

### அடிமைகள்

'ஒரு நாடு சிறந்து விளங்க வேண்டும் என்றால், அந்நாட்டில் உழைப்பதற்கென்றே ஒரு சாரார் இருந்தாக வேண்டும்' என்று கிரேக்க நாட்டு அறிஞன் பிளேட்டோ கூறினான். அவனுடைய அடிமை மாணவனை அரிஸ்டாட்டில் 'அடிமை என்பவன் உழைப் பதற்கு என்று பிறந்த மனித இயந்திரம்' என்று குறிப்பிட்டான். அவர்களிருவரும் உரிமையற்ற அடிமைகள் இருப்பது நாட்டிற்கு நன்மையாகும் என்று மொழிந்தனர். அவர்கள் கூறியவை உண்மை என்பதைக் கிரேக்க, ரோமானியப் பேரரசுகளின் வர லாற்றால் நாம் அறிகிறோம். ரோமானியப் பேரரசு இங்கிலாந்து

முதல் எகிப்துவரை பரவியிருந்த காலத்தில், ரோமாபுரியில் அடிமைகள் இல்லாத வீடே கிடையாது. தமிழகத்தில் தோன்றிய சோழப்பேரரசு கடல்கடந்த நாடுகளில் கொடிகட்டி ஆட்சிபுரிந்த காலத்தில் அடிமைகள் என்று சொல்லத்தக்கார் சிலர் இங்கும் இருந்தனர் என்பதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

சோழப் பெருவேந்தன் காலத்திய அடிமைகள் இருவகைப் படுவர். தங்களைத் தாங்களே வறுமை காரணமாகக் கோயில் பணிக்காக விற்றுக் கொண்டதனால் அடிமைகளாக மாறியவர் ஒரு சாரார்;[27] இன்னொரு பிரிவினர் செல்வரின் குடிகளில் பல தலை முறைகளாக அடிமைத்திறம் பூண்டு, ஊழியம் செய்து வந்தவரா வர். செல்வனின் மகளுக்குத் திருமணம் ஆகின்றபொழுது அவளுக் கும் அவள் கணவனுக்கும் அடிமைகள் இத்தனைபேர் சீதனமாகக் கொடுக்கப்பட்டனர் என்று ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது.[28] ஆயினும், இவ்வடிமைகளுள் பெரும்பாலோர் கோயில்களுக்கு அடிமையானவர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

நந்திவர்ம மங்கலத்து மத்தியஸ்தன் சந்திரசேகரன் என்பான் தன்னுடைய அடிமைப்பெண்கள் மூவரை வயலூர்த்திருக்கற்றளிப் பரமேச்சுரர் கோயிலில் திருப்பதிகம் பாடுவதற்கும் கவரிப்பிணாக் களாகத் தொண்டுபுரிவதற்கும் அளித்தனன் என்று ஒரு கல்வெட்டு (கி.பி 948 இல்) தெரிவிக்கிறது.[29] இது இராசராசன் காலத்திற்கு முற்பட்ட நிலையில் நடைபெற்றதாகும். திருநெல்வேலி மாவட்டம் நாங்குநேரி வட்டத்திலுள்ள கருங்குளம் இராசசிம்மேசுவர முடை யார் கோயிலுக்குப் பறை கொட்டும் ஓர் உவச்ச அடிமையை அரசியல் அதிகாரி ஒருவன் கி.பி. 1104 இல் தந்த செய்தியை அவ்வூர்க் கல்வெட்டு ஒன்றுஅறிவிக்கிறது.[30] இவ்வடிமைகள் திருக் கோயிலைச் சேர்ந்தவர்களாவர்.

செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள திருவிடவெந்தையில், இராசராசனின் பதினேழாம் (கி.பி. 1202) ஆட்சியாண்டுக் கல் வெட்டு ஒன்று காணப்படுகிறது. அதில் சிரீவராக தேவர் கோயி லுக்குப் பட்டினவர் (மீனவர்) குடும்பங்கள் பன்னிரண்டை அவ் வட்டாரத்து நாடு கண் காட்சி, நாடுவகை என்னும் அதிகாரிகள் அடிமைகளாகக் கொடுத்த செய்தி விரிவாகக் கூறப்பட்டிருக் கிறது. அக்குடும்பங்களைச் சேர்ந்த பன்னிருவர் (ஆண்மக்கள்)

[27] 86 of 1911.
[28] 80 of 1913, 94 of 1926: 1925, 2: 18,
[29] 149 of 1936-37.
[30] 280 of 1927-28

மீன் பிடித்தலாலும் நெசவுத் தொழிலாலும் கிடைத்த வருவாயில் ¾ கழஞ்சு பொன்னைக் கோயிலுக்குக் கட்டணமாக ஆண்டு தோறும் செலுத்த வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. மற்றும் அக்கோயிலில் ஆண்டிற்கு இருமுறை நடைபெறும் திருவிழாவில் இறைவனின் திருமேனி உலா வரும்பொழுது, அதைத் தூக்கிச் செல்லும் பணியைச் செய்ய வேண்டும் என்றும் அவர்கள் அறிவுறுத்தப்பட்டனர். அவ்வூரின் சபையும், ஊரும் ஆகிய ஆட்சி மன்றங்கள் அவர்களையும் அவர்களுடைய கால்வழியினரையும் போற்றிக் காப்பதாக உறுதியளித்திருந்தனர்.[31] அவர்களை நாம் அடிமைகள் என்று சொல்லுவது தலைமுறை, தலைமுறையாக ஊழியம் செய்யும் தொழிலை மேற்கொண்ட அளவிற்குத்தான் பொருந்தும். அவர்களுக்கு விழாக்களின் பொழுது கோயில் பிரசாதம் உணவாக அளிக்கப்பட்டதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். அக்குடும்பங்கள் எதற்காக அடிமைகளாக்கப்பட்டன என்பதை நாம் அறிந்துகொள்ள முடியவில்லை. 'வறுமையின் காரணமாக அவர்கள் தங்களை அடிமைப்படுத்திக் கொண்டனரா? அல்லது வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க முடியாமையால் அவ்வதிகாரிகள் அவர்களை அடிமைகளாக விற்று, தங்களுக்குச் சேரவேண்டிய பொருளை ஊராட்சியினரிடமிருந்து பெற்றுக் கொண்டனரா? என்பது தெளிவாகப் புலனாகவில்லை. ஆண்டுதோறும் முக்கால் கழஞ்சு பொன்னைக் கோயிலுக்குச் செலுத்த ஒவ்வொரு குடும்பத்தினரும் ஒப்புக்கொண்டமை ஓரளவிற்கு இவ்வாறு கருத இடந்தருகிறது.

### கல்வி நிலை

பொதுக்கல்வி அன்று வளர்ச்சியுற்றிருந்ததாகத் தெரியவில்லை. சமுதாயத்தின் மேல்மட்டத்திலிருந்த அரச குடியினரும், பார்ப்பனருமே கல்வி கற்றலைத் தங்கள் சிறப்புரிமையாகக் கொண்டிருந்தனர். எனினும், பிற வகுப்பினர் தமிழ்க்கல்வியைப் பெறுவதற்கு ஒருவகை வாய்ப்பு இருந்தது. அக்காலத்தில் திண்ணைப்பள்ளிகள் பல இருந்தன. அவற்றில் பணிபுரிந்த ஆசிரியர் 'வாத்தி' எனப்பட்டார்.[32] கோயில்களில் திருப்பதிகங்கள் ஓதுவதும், இராமாயணம், பாரதம், புராணங்கள் போன்றவற்றை விளங்க உரைத்தலும் நடைபெற்று வந்தன. அவற்றின்மூலம் பொது மக்களுக்கு கல்வியறிவு பரப்பப்பட்டு வந்தது என்று நாம் கூறலாம்.

[31] 274 of 1910;
[32] 323 of 1917 17 of 1920

ஊராட்சி மன்ற நடைமுறைகளைக் கவனிக்கின்ற பொழுதும் கல்வெட்டுகளையும் செப்பேடுகளையும் நோக்குகின்ற பொழுதும் பிழையில்லாமல் எழுதவும், படிக்கவும் பொதுமக்கள் கல்வியறிவு பெற்றிருந்ததாகத் தெரியவில்லை. எனவே, சங்க காலத்திற்குப் பிறகு பொதுக்கல்வியையும், தமிழ்க்கல்வியையும் அரசரோ, செல்வரோ பெரிதும் போற்றிவளர்க்கவில்லைஎன்று நாம் கூறலாம். தனிமனிதர்களாக இருந்த புலவர் பெருமக்கள் சிலரே பொதுக் கல்வியைத் தமிழ்க் கல்வியாகப் பயிற்றுவித்தனர்.

ஆனால், சமயக்கல்வி போற்றப்பட்டது. சமணப் பள்ளிகளிலும் பௌத்த விகாரைகளிலும் குறிப்பிட்ட சிலருக்கு மட்டும் கற்பிக்கப்பட்டு வந்தது. பல்லவர் காலத்தைப் போன்றே கல்வி சோழர் காலத்திலும் வேத பாடசாலைகள் பல இருந்தன. சோழமன்னர் வடமொழிக் கல்விக்கே பேராதரவு தந்துள்ளனர். அக்கல்லூரிகளில் புராணங்கள், இதிகாசங்கள் சிவ தருமம், சோம சித்தாந்தம், சாமவேதம், பிரபாகரரின் மீமாம்சை, வியாகரணம் போன்ற பல பாடங்கள் கற்பிக்கப்பட்டன. வடஆர்க்காடு மாவட்டத்தில் போரூர் வட்டத்தில் காமப்புல்லூர் (காம்பலூர்) என்ற ஊரில் வேதப்பயிற்சி பள்ளி ஒன்று நடைபெற்றது. செங்கல்பட்டு மாவட்டத்தில் ஆணியூர்(ஆனூர்) என்ற கிராமத்தில் வேதம், பாணினியின் இலக்கணமாகிய அஷ்டாத்தியாயி ஆகியவற்றைப் பயிற்றுவிக்கப்பட்ட விருத்திகள் அளிக்கப் பட்டிருந்தன.[32a]

இராசேந்திர சோழன் காலத்தில், தென்னார்க்காடு மாவட்டத்தில் இராசராச சதுர்வேதி மங்கலம் (எண்ணாயிரம்) என்ற ஊரில் வேதம், மீமாம்சை முதலியவற்றைக் கற்பித்த கல்லூரி ஒன்று சிறப்புற்று விளங்கியதை காணுகின்றோம். அக்கல்வி நிலையம் இராசராசன் காலத்திலேயே செயல் பட்டு வந்ததாகத் தெரிகிறது. இவற்றிலிருந்து தமிழ் மன்னர்கள் தமிழை வளர்க்கத் தவறினார்கள் என்பதும், தமிழ்நாட்டு மக்களுள் பெரும்பாலோரான தமிழருக்குத் தேவையான கல்வியைக் கற்பதற்கு வசதிகள் செய்து தருவதில் அவர்கள் சிறிதுகூட ஆர்வம் காட்டவில்லை என்பதும் தெளிவாகப் புலனாகின்றது.

இராசராசன் காலத்திய கல்வெட்டுகளிலிருந்து கணக்கியல் துறையில் பண்டைத்தமிழ் மக்கள் எத்தகைய முன்னேற்றம் அடைந்திருந்தனர் என்பதை நாம் உய்த்துணர முடிகிறது. நில அளவில் மிகநுட்பமான அளவு முறை பின்பற்றப்பட்டது. இறையிலி நீங்கு நிலம் முக்காலே இரண்டுமாக்காணி அரைக்

[32a] 76 of 1932-33

காணிக் கீழ் அரையே மூன்றுமாவின் கீழ் மூன்றுமா அரைக் காணி முந்திரிகைக் கீழ் முக்காணிக் கீழ்முக்காலே ஒருமா[33] என்ற இத்துணைச் சிறுபகுதி அளவுள்ள நிலத்தையும் அளந்து காணிக்கடன் வரையறுக்கப்பட்டது. இதனால், இந்தக் கீழ் வாயிலக்கக் கணக்கில் அன்றைய தமிழர் நன்கு தேர்ச்சியுற்றிருந் தனர்[34] என்பது தெரிகிறது.

தொழிற் கல்வியில் மக்கள் மரபு வழிப் பயிற்சி பெற்றிருந் தனர். அது குலக் கல்வியாகவே இருந்து வந்தது. பல்வேறு தொழில்களைச் செய்த தொழிலாளிகளிடத்து, செயல்முறை மூலம் அத் தொழில்களைக் கற்றனர். குறிப்பிட்ட ஒரு தொழிலைச் செய்து சிறப்புற்ற ஒருவரிடம், நான்கைந்து பேர் செயல்முறை மாணவராக ஐந்து ஆண்டுகள் தங்கியிருந்து தத்தமக்குத் தேவை யான தொழிற் கல்வியைக் கற்றனர். இராசராசன் வியத்தகு தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டினன். அக்கோயிலைக் கட்ட திறமை வாய்ந்த கட்டடக் கலைஞர் முதற்கொண்டு கல்தச்சர் வரையிலிருந்த அனைவரும் தத்தம் தொழிலில் நல்ல பயிற்சியும் தேர்ச்சியும் பெற்றிருந்தனர் என்பது புலனுகின்றது. இத் தகைய தொழில்களில், அத் தொழிலாளிகள் தேர்ச்சியும் தெளிவும் பெற்று இல்லாமல் இருந்தால், 'மாபெரும் பொறி யியல் சாதனை' என்று போற்றப்படும் தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டியிருக்க முடியுமா என்பது கருதத் தக்கதாகும்.

தொழிற் கல்வி, வயிற்றுப் பிழைப்பிற்குரிய கலையாக இருந்தது. அதனுல், அது குலக் கல்வியாகப் போற்றி வளர்க்கப் பட்டது. இந்த அளவிற்குக்கூட 'வாழும் உயிர்க்குக் கண்' என்று கருதப்பட்ட பொதுக்கல்வியை அரசன் போற்றி வளர்க்க வில்லை என்பது வருந்தத்தக்க செய்தியாகும்.

காலக் கணக்கு முறையில் ஓராண்டினை ஆறு பருவங்களா கவும், பன்னிரண்டு மாதங்களாகவும் பகுத்து இருந்தனர். ஓராண்டிற்கு 360 நாட்கள் என்னும் கணக்குப் பெருவழக்காக இருந்தது. 365 நாட்கள் என்னும் எண்ணமும் நிலவியது.[35] ஆண்டுக் கணக்குச் சூரியனை மையமாக வைத்தும், சந்திரனை மையமாக வைத்தும் இருவகையாகக் கணக்கிடப்பட்டது. ஒரு நாளின் பல்வேறு நாழிகைகளைக் கணக்கிட்டுரைக்கும் கடிகைக் காப்பாளரும் அக்காலத்தில் இருந்தனர். இவற்ருல் வானநூல் கல்வி ஒரு சிலரால் பயிலப்பட்டு வந்தமை புலனுகின்றது.

[33] S.I I Vol. 2: No. 66
[34] Ibid. Vol. 2: Pt. I.. P. 56.
[35] 556 of 1904: 731 of 1909; 504 of 1918.

## நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும்

இடைக் காலத் தமிழ் மக்களிடத்துப் பலவகை நம்பிக்கைகள் காணப்பட்டன. நல்ல நாள் பார்த்துச் செயல்களைச் செய்யத் தொடங்குவதும், பிறந்த நாளைக் குறித்து ஒருவருடைய வாழ்க்கையைக் கணிப்பதிலும் அவர்கள் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். நிமித்தம் பார்ப்பதும், சகுனம் பார்ப்பதும் அவர்களுடைய வழக்கமாகும். கனவுகள் பலிக்கும் என்றும், விடியற் காலையில் காணும் கனவு தவறாமல் பலிக்கும் என்றும் அவர்கள் நம்பினர். பெண்களுக்கு இடக்கண், இடத்தோள் துடித்தால் நன்மையும், ஆண்களுக்கு இடக்கண், இடத்தோள் துடித்தால் தீமையுண்டாகும் என்றும் அவர்கள் கருதினர். ஒருவர் தும்மினால், 'நூறாண்டு வாழ்க' என்று வாழ்த்துவதும் அக்காலத்திய வழக்கமாகும்.

சோழப் பேரரசு சிறப்புற்று விளங்கிய காலத்தில் தமிழ் நாட்டு மக்களிடையே பலவகையான பழக்க வழக்கங்கள் நன்கு வேரூன்றியிருந்தன. அவற்றுள் பல, சங்க காலம் முதற்கொண்டு தமிழ் மக்களிடையே நின்று நிலவி வந்தனவாகும். மகப் பேற்றினைப் பெறும் பேறாக இராசராசன் காலத்திய தமிழர் கருதினர். குழந்தைகள் பிறந்ததும், அவற்றிற்கு மண் பொட்டிட்டுப் போற்றினர்; குளிப்பாட்டி மருந்து ஊற்றினர். குழந்தை பிறந்த நாளைக் குறித்து, சாதகம் கணித்தனர், குழந்தை பிறந்த பத்தாம் நாளிலோ, பன்னிரண்டாம் நாளிலோ, அதற்குப் பெயரிடும் விழா கொண்டாடப்பட்டது. ர்ப்பனப் பிள்ளைகளுக்கு பூணுல் அணியும் விழா ஏழாம் ஆண்டை ஒட்டி நடைபெற்றது. பொதுவாகப் பிள்ளைகளை ஐந்தாம் ஆண்டில் திண்ணைப் பள்ளிக்கோ, தனிப்பட்ட புலவரின் வீடுகளுக்கோ கல்வி கற்க அனுப்பி வைக்கப்பட்டனர். அவ்வாறு பள்ளிக்கு அனுப்புவதையும், முதன் முதல் எழுதக் கற்றுக் கொடுப்பதையும் சிறப்பு மிக்க சடங்காக அவர்கள் கருதினர்; விழா வெடுத்தனர். அப்பொழுது, எழுத்தறிவிக்கும் ஆசிரியருக்கு ஆடை அணிகளும் பொற்காசும் அன்பளிப்பாகத் தரப்பட்டது. குழந்தைகளுக்குக் காப்பு அணிவதும், அரைநாண் கயிறு அணிவதும், பொன் வெள்ளி நகைகள் அணிவதும் வழக்கம்,

அக்காலத்திய திருமணம் சங்க காலத்திய திருமண முறைகளிலிருந்து, பெரிதும் வேறுபட்டு விளங்கியது. பன்னிரண்டு வயது நிறைந்தவுடன் பெண்ணிற்குத் திருமணம் செய்தனர். திருமணத்திற்குரிய நல்ல நாளைப் பார்த்தனர், அந்நாளில் சிறந்த

நாழிகையில் பெரிதும் மாமுது பார்ப்பான் மறைவழி நின்று, தீ வலம் செய்யுமாறு மணமக்களை நெறிப்படுத்துவான். திருமணத்தில் மணமகன், மணமகளுக்கு 'அம்பொன்மணி நூலினை' (தாலியை) அணிவிப்பான். இராசராசன் காலத்தில் மணிகள் இழைக்கப்பட்ட தாலிகள் கோயிலில் உள்ள அம்மன் சிலைகளுக்கும் அணிவிக்கப் பட்டன. 'வரதட்சணை' அளிப்பதை அன்றைய தமிழ் மக்கள் அறிந்ததில்லை. பெரிதும் நெருங்கிய உறவினரிடையேதான் மணவுறவு — கொள்வினை, கொடுப்புவினை — இருந்து வந்தது. கலப்பு மணம் அக்காலத்தில் ஒளிமறைவாகச் செய்யப் பட்டது. இராசராசன் தன் மகளைக் கீழைச் சாளுக்கிய அரசிளங் குமரனுக்கு மணம் செய்து கொடுத்தது கலப்பு மணமாகாது. பெண்ணின் பெற்றோர் தம் மகளுக்கு நில புலன்களையும், பொன்னையும் பொருளையும் சீதனமாக அளித்ததோடு, அடிமைகளையும் அனுப்பி வைத்தனர். மணமுறிவு பெறும் பழக்கமோ, குழந்தைத் திருமண முறையோ, கைம் பெண்கள் மறுமணம் செய்து கொள்ளும் வழக்கமோ அக்காலத்தில் நடைமுறையில் இல்லை.

விருந்தினரை வரவேற்று உபசரிப்பது இல்லறக் கடமைகளுள் சிறப்பு மிக்கதாகக் கருதப்பட்டது. வெற்றிலை, பாக்குக் கொடுத்து விருந்தினரை வரவேற்பதும் வழியனுப்புவதும் வழக்கமாகும். உணவு உண்டவுடன் வெற்றிலை போடுவது பரவலாக வழக்கில் இருந்தது. வாழை இலைகளிலும், ஆலிலைகளிலும் உணவு உண்பது உண்டு. மேட்டுக்குடி மக்கள் பொன் வள்ளத்திலும், வெள்ளிக் கிண்ணியிலும் உணவு உண்டனர்.

பிணத்தை எரிப்பதே பெருவழக்காக இருந்தது. சுடுகாடுகளுள் உயர்ந்த சாதியருக்குத் தனியாகவும், தாழ்ந்த சாதியருக்குத் தனியாகவும் இடங்கள் ஒதுக்கப்பட்டு இருந்தன. ஆண்களோடு பெண்களும் சுடுகாட்டிற்குச் செல்லும் வழக்குண்டு. கணவனை இழந்த மகளிர் அங்கு வளையல்களை உடைத்து அணிகலன்களைக் கழற்றி யெறிந்தனர். பிணத்தை எரித்த புலையன், உப்பில்லாமல் பொங்கிய சோற்றைப் பலியாகத் தூவுவான்; வாய்க்கரிசி இடும் வழக்கமும் அக்காலத்தில் இருந்தது.

அரசனுக்கு முடி சூட்டப்படும் நாள் ஆண்டு தோறும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அரசன் இறந்தநாள், வருத்தத்திற்குரிய நாளாகக் கருதப்பட்டது. அதனால், அதைக் **கரிநாளாகக்** கருதினர். அந்நாளில் எத்தகைய நன்னிகழ்ச்சியையும் செய்வதில்லை. காலப் போக்கில் கரிநாள்கள் நினைவுநாள்களாக மாறின.

இல்வுண்மையை உணராமலேயே, இன்றும் தமிழ் மக்களுள் பலர், ஒவ்வொரு திங்களிலும் சில கரி நாட்களைப் பஞ்சாங்கத்தில் கண்டு அஞ்சுகின்றனர். இறந்தவருடைய ஆவி, சிறப்பாக உடன்கட்டை ஏறியவருடைய ஆவியின் நீர் வேட்கை தணியும் பொருட்டுத் தண்ணீர்ப் பந்தல் வைத்து, வழிப் போக்கருக்கு நீர் மோர் வழங்குவது ஓர் அறச்செயலாகப் போற்றப்பட்டது. இறந்தவருடைய நினைவாக நடுகல் நட்டு வழிபாடு செய்வதும், பள்ளிப் படைக் கோயில் எடுப்பதும் உண்டு. கருவுற்ற மகளிர் இறந்து விட்டால், நள்ளிரவில் சுடுகாட்டிலிருந்து தங்கள் வீட்டிற்கு அவர்களுடைய ஆவிகள் வரும் என்று அன்றைய தமிழ் மக்கள் நம்பினர். அப்படி அந்த ஆவிகள் வரும் பொழுது குழந்தைப் பாரத்தைத் தூக்கிக் கொண்டு வர இயலாமல் தள்ளாடுமாம். அந்த ஆவிகளினுடைய துன்பத்தைக் குறைக்க சுடுகாட்டிலிருந்து ஊர் வரையுள்ள வழியில் மூன்று நான்கு சுமைதாங்கிகள் கட்டுவது உண்டு. அந்த ஆவிகள் இரவு நேரத்தில் தம் வீடு நோக்கி வருகின்ற பொழுது, இடையில் உள்ள சுமைதாங்கிகளின் மீது குழந்தைச் சுமையை இறக்கி ஓய்வெடுத்துக் கொள்ளும் என்று நம்பினர். அச்சுமை தாங்கிகள் பகற் பொழுதில் மூட்டைகளைத் தூக்கிச் செல்வோருக்கும், வாணிகச் சாத்திற்கும் வேறுவகையில் பயன்பட்டன.

## ஆடைகள்

ஒரு நாட்டின் நாகரிக வளர்ச்சியை அளப்பதற்குரிய அளவு கோல்களுள், குறிப்பிட்ட காலத்தில் அந்நாட்டு மக்கள் பயன் படுத்திய ஆடை அணிகளை ஓரளவுகோலாகக் கொள்ளுவது வழக்கம். இராசராச சோழன் காலத்திய தமிழ் மக்கள் இத் துறைகளில் நன்கு முதிர்ச்சியுற்ற நாகரிகத்தினை அடைந்திருந் தனர். அவர்கள் பயன்படுத்திய ஆடைகள் பருத்தி நூலாலும் பட்டாலும் நெய்யப்பட்டவை; நேர்த்தியும் சீர்த்தியும் வாய்ந் தவை. பாலாவி போன்ற நுண்துகில், பொங்கும் நுரையைப் போன்ற கலிங்கம், காடியூட்டிய பூந்துகில், முயல் இரத்தம் போன்ற செவ்வண்ணப்பட்டுகள், வெண்பட்டு, பசிய இலைவேலைப் பாடுடைய பட்டுகள், வெளிநாட்டு மெல்லிய ஆடைகள் ஆகிய வற்றை அக்காலத்திய மக்கள் அணிந்து மகிழ்ந்தனர்.

அவர்கள் துணிகளை வெட்டி, தைத்து உடைகளாக அணிய வும் நன்கு அறிந்திருந்தனர். ஆனால், பெரிதும் மேட்டுக்குடி மக்களே அத்தகைய உடைகளை அணிந்தனர். உடைகளைத் தைத் துக் கொடுக்கும் தொழிலாளிக்குத் **தய்யான்** என்பது பெயர்.

இக்காலத்தில், அச்சொல்லின் திரிபாகத் 'தையல்காரன்' என்னும் சொல் வழங்கிவருகிறது. கோயிலுக்குத் தேவையான துணிகளைத் தைப்பதற்குக் கூட இராசராசனால் தையல்காரர் நியமிக்கப் பட்டிருந்தனர். தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் திருப்பணி செய்வதற்கு அமர்த்தப்பட்ட தொழிலாளிகளுள் தையல்காரரும் இருந்தனர் என்பதை,

> **தய்யான்** ஒருவனுக்குத் தேவன் கவாலியான **வீரசோழப் பெருந்தய்யானுக்குப்** பங்கு ஒன்றும், மேற்படி ஒன்றுக்கு **சிப்பன் மழபாடியான கேரளாந்தகப் பெருந்தய்யானுக்குப்** பங்கு ஒன்றும், **ரத்நத் தய்யா**ன் ஆச்சன் கருந்திட்டைக்குப் பங்கு ஒன்றும்[36]

என்னும் கல்வெட்டுப் பகுதியால் அறிகிறோம்.

பொதுவாக, ஆண்கள் முழங்கால் வரையில் வேட்டியணிந் தனர்; தலையில் தலைப்பாகை அணிந்தனர். அவர்கள் இடுப்பில் மேல் துண்டினைக் கச்சமாகக் கட்டிக் கொள்ளுவது வழக்கம். மகளிர் கொய்சகம் வைத்துச் சேலைகள் கட்டிக் கொண்டனர் அக்காலத்தில் புடவை என்னும் சொல் பொதுப் பொருளில் பயன்படுத்தப்பட்டது. ஆண், பெண் ஆகிய இருசாராரும் அணிந்த ஆடைகளைக் குறிக்கும் சொல்லாக வழங்கியது. பெண் கள் தம் மார்பகத்துக்குக் கச்சு அணிந்திருந்தனர்.[37] அதற்குமேல் மேலாடை அணிவதோ, தாவணி போடுவதோ வழக்கம் இல்லை. பெரிய இடத்துப் பெண்கள், பலர் முன்னிலையில் தோன்றும் பொழுது, மேலே உத்தரியத்தை விரித்துப் போர்த்திக் கொள் ளுவதுண்டு.[38] அரச குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் தங்கள் உடலழகை வெளிக்காட்டத்தக்க வகையில் மிகவும் மெல்லிய ஆடைகளை அணிந்திருந்தமை தஞ்சை இராசராசேச்சுரத்தில் உள்ள ஓவியங்களால் தெரியவருகிறது.

போர் வீரர்கள் முழங்கால்வரை வட்டுடை அணிந்திருந் தனர். எலி மயிரினால் போர்வைகள் நெய்யப்பட்டன. அரசரும், உயர் அதிகாரிகளும் மேலாடையோடு, சால்வை முதலியவற்றை யும் அணிவது வழக்கமாகும்.

36 S. I. I., Vol. 2; No. 66: Sect. 499.
37 க. த. தி: 'பண்டைத் தமிழ் மகளிரும் கச்சணிதலும்' இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் இரண்டாவது கருத்தரங்கு மலர், 1970: பக். 117-18
38 சீவகசிந்தாமணி, 2457.

**அணிகள்**

அழகிற்கு அழகு செய்யும் முறைகள் பல. அவற்றுள் அணி கலன்களை அணிந்து தோற்றப்பொலிவை மிகுதிப்படுத்துவது ஒரு முறை. ஆண்களும் பெண்களும் அணிகள் பல அணிந்து கொள்ளு வதில் ஒருவரோடு ஒருவர் அக்காலத்தில் போட்டியிட்டனர். சிப்பி, சங்கு முதலியவற்றால் செய்யப்பட்ட நகைகளை, ஏழை எளிய மக்கள் அணிந்து மகிழ்ந்தனர். வெள்ளியாலும், பொன்னு லும் செய்யப்பட்ட நகைகள் எண்ணற்றவை வழக்கில் இருந்தன. அவற்றில் நவமணிகள் இழைக்கப்பட்ட நகைகள் சிறப்பு மிக்கனவாகக் கருதப்பட்டன. முத்து, பவழம், இரத்தினம், மர கதம், வயிரம், கோமேதகம் போன்ற மணிகள் அணிகலன் களில் இழைக்கப்பட்ட செய்தியைக் கல்வெட்டுகள் தெரிவிக் கின்றன. அணிகலன்களில் நவமணிகளை பதித்து இழைக்கும் வேலைப்பாட்டைச் செய்த தொழிலாளரையும் 'தய்யான்' என்று சுட்டுவது அக்காலத்தில் வழக்கமாகும்.

தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் எழுந்தருளுவிக்கப் பட்ட தெய்வத் திருமேனிகளுக்கும், அடியார்களின் படிமங் களுக்கும் இராசராசனாலும், அவனுடைய உற்றார் உறவினராலும் வழங்கப்பட்ட அணிகள் பல கல்வெட்டுகளில் குறிப்பிடப் பட்டுள்ளன. மற்றும், அக்காலத்திய இலக்கியங்களிலும் ஓவியங் களிலும் அணிகலன்கள் பல இடம் பெற்றுள்ளன.

மிகுதியான அணிகலன்களை அணிந்து கொள்ளுவதில் பெண்களே பேரீடுபாடு கொண்டிருந்தனர். பொன்னினால் செய்யப்பட்டவற்றையும் நவமணிகள் பதித்தவற்றையும் அரச குடும்பத்தினரும், செல்வ மங்கையரும் அணிந்தனர். கோயில் களில் உள்ள தேவிகளுக்கு வழங்கப்பட்ட பொன் அணிகலன்கள் முத்தாலும், பவழத்தாலும், மணிகளாலும் இழைக்கப் பட்டன வாகும்.

அக்காலத்திய **கழுத்தணிகள்** கண்டநாண், புல்லிகைக் கண்ட நாண், பாசமாலை, மாணிக்கத்தின் தாலி, மாணிக்கத்தின் உழுத்து, வயிர உழுத்து, மூன்றாக அடுத்து விளக்கின கண்டத்துடர் (சங்கிலி), புறத்துடர், திரள்மணிவடம், தாலிமணிவடம், பஞ்ச சரி(ஐந்துசரம்), ஏகாவல்லி(ஒற்றைச் சரமாலை), சப்தசரி (ஏழு சரங்கொண்டமாலை), பொன்னுணிற் கோத்த மாணிக்கத்தின் திரு திரிசரம், காசுமாலை, பதக்கம், மாங்காய் நாண் என்பனவாகும்,

சுட்டி, தெய்வ உத்தி, திருமுடி, வீரபட்டம், இராசாவர்த்தம், திருக்களாவம், திருமகரம், முத்தின் சிடுக்கு என்பன அக்காலத்திய தலையணிகளாகும்.

திருமகரம், திருக்குதம்பை, தோடு, வடுகவாளி, கொட்பு, தூக்கம் (தொங்கட்டான்) முதலியன காதணிகளாகும். வாகு வலயம், அரதனக் கடகம், பவழக் கடகம், வயிர சாயலம், கைக்கடகம் என்பன தோளணிகளாகும். வளையல்களில் பலவகை இருந்தன. அரதன (இரத்ந) வளையல், முத்து வளையல், திருக்கைக் காறை, பட்டைமேற் குண்டுவைத்து விளக்கின வளையல், முத்தின் சூடகம், முத்தின் மாத்திரை என்பன கைக்காப்பும் கைவளையல் களுமாகும். கைவிரல் மோதிரங்கள் அரதன (இரத்ந) மோதிரம், நவரத்தின மோதிரம் என்பனவாகும். இடுப்பு அணிகளாக உதர பந்தனம், மேகலை, ஸ்ரீசந்தம், பொன்னின் பட்டைக்காறை (ஒட்டியாணம்) என்பன அணியப்பட்டன. இடுப்பிற்குப் பின்னல் பிட்டங்களில் அணியப்பட்ட அணிகலன் பிருஷ்ட கண்டிகை என்பதாகும்.[39]

திருக்கால்வடம் (பட்டை) திருவடிக்காறை (காப்பு) திருக்கால் மோதிரம் என்பன அன்றைய காலணிகளாகும். கிங்கிணிப் பெருநாண் கழுத்து அணியா அல்லது காலணிகலனு என்பது புலனாகவில்லை; பெரும்பாலும் இடுப்பில்அணியும் சரடாக அது இருந்திருக்கக் கூடும். இவையல்லாமல் சோனகச் சிடுக்கின் கூடு என்றோர் அணி இராசராசனுடைய கல்வெட்டில் குறிப்பிடப் படுகிறது.

> **சோனகச் சிடுக்கின் கூடு** ஒன்றிற் கட்டின மாணிக்கம் ஒன்பதும் மரகதம் ஒன்பதும் உட்பட நிறை முக்காலே நாலு மஞ்சாடியுங் குன்றிக்கு விலைகாசு நாலு[40]

என்னும் கல்வெட்டுப் பகுதியில் அவ்வணி இடம் பெற்றுள்ளது. இடைக்காலத்தில், அரேபிய நாட்டினைச் **சோனகம்** என்று சுட்டும் வழக்கம் உண்டாயிற்று. அச்சொல் யவனரைக் குறிப்பிடவும் பயன்படுத்தப் பட்டுள்ளது. எனவே, யவன நாட்டில் அல்லது அரேபியா போன்ற நடுக்கிழக்கு நாடுகளில் செய்யப்பட்ட கூடு போன்ற ஓர் அணிகலனே சோனகச் சிடுக்கின் கூடு என்று நாம் கூறலாம். வடுகவாளி என்பது வடுக (ஆந்திரர்) மகளிர் அணிந்த வாளி(காதணி)யாகும்.

[39] S. I. I; Vol. 2: No. 3; 59; 86; 93:
[40] Ibid; 93.

இராசராசனுடைய கல்வெட்டுகளில் சிலம்பு, பாடகம், தவளைக் கிண்கிணி போன்ற அணிகலன்களைப் பற்றிய குறிப்புகள் காணப்பெறவில்லை. ஆனால், கி. பி. பத்தாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட இலக்கியங்களில் இவ்வணிகளைக் காண முடிகிறது. அன்றை அரசமாதேவியரும், அரசிளங் குமரியரும் சுட்டி, தெய்வ உத்தி, பொற்பூ முதலிய தலையணிகளையும், நெற்றியில் சூட்டு. காதுகளில் மகரக்குழை, கழுத்தில் முத்துமாலை, பிறைவடம், நட்சத்திரமணி மாலை, வலம்புரி முத்துகள் கோத்தவடம், நிரைத் தாலி, மாணிக்கத்தாலி, மணிவடம் போன்றவற்றையும் அணிந்தனர். இக்காலத்தில் சுரையென வழங்குவதை 'நிலையாணி' என்றும், திருகாணி என்பதை (ஓடாணி) என்றும், பொன்னின் மாற்றை அறிய வுதவும் உரையாணியைத் 'தண்டவாணி' என்றும் அக்காலத்தில் வழங்கினர்.

அக்காலத்திய கல்வெட்டுகளிலும், இலக்கியங்களிலும் மூக்குத்தியோ, பிற மூக்கு அணிகளோ இடம் பெறவில்லை. இதனால், மூக்கில் அணிகலன்கள் அணியும் வழக்கம் மிகவும் பிற்பட்ட காலத்தில் தோன்றியதாகத் தெரிகிறது. பெரும்பாலும் இசுலாமியப் பெண்களிடம் இருந்தே, மூக்கிற்கு அணிகலன் அணியும் வழக்கத்தை நம் தமிழ்ப் பெண்கள் கற்றிருக்கலாம்.

இராசராசன் பகைவரை வென்று, அவர்களிடமிருந்து திறையாகவும், கவர்பொருளாகவும் கொண்டுவந்த பொன்னும் மணியும் அளவிடற்கு அரியன. அவை நாட்டு மக்களுடைய கைகளிலும் குவிந்திருந்தன.[41] அதனால், செல்வச் செழிப்பு மிகுந்தது; அணிகலன்கள் பல வற்றைச் செய்யும் பணி பெரு வளர்ச்சியுற்றது.

## ஒப்பனை முறை

ஓவியங்களும் சிற்பங்களும் அக்காலத்தில் ஒப்பனைக்கலை அடைந்திருந்த முன்னேற்றத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. தங்களை அலங்கரித்துக் கொள்ளுவதில் அன்றைய பெண்கள், இன்றைய நாகரிக நங்கையருக்கு எவ்வகையிலும் சளைத்தவரல்லர், ஒப்பனையின் மூலம் தம் அழகினைக் கவர்ச்சியும், தோற்றப் பொலிவும் மிக்கதாக்கிக் கொள்ளுவதில் அக்காலத்திய மகளிர் பெருமையுற்றனர். அன்றைய மகளிர் நெட்டையாகவோ, குட்டையாகவோ இல்லை; இடைப்பட்ட உயரமுடையவராக இருந்தனர். அவர்களுடைய குழைவுமிக்க மலர்க்கொடி போன்ற

41 S. I. I; Vol. 2. No. 93.

தோற்றமும், மிகவும்மெலிந்த துடியிடையும், அகன்றும் பருத்தும் புடைத்தும் விளங்கிய கொங்கைகளும், சுழித்துத் திரண்ட கன்னங்களும், பொங்கிவரும் புதுநிலவு போன்ற முகமும் அம் முகத்தில் பிறையனைய நெற்றியும், கடைந்தெடுத்தகால்கைகளும், கண்களில் கவர்ச்சி (மையல்) மிகு சுடரொளியும், புன்னகை தவழும் இதழ்களும் அவர்களை அழகோவியங்களாகப் பொலிவுறச் செய்தன. இவற்றால் மென்மையும் நொசிவும் குழைந்த உடற் கட்டும் உடைய எழிலரசிகளாக அவர்கள் விளங்கினர். அவ்வழகி களின் ஓவியங்கள் இன்றும் நம்முடைய கண்ணையும் கருத்தையும் கவருகின்றன.

அவற்றை நோக்குகின்ற பொழுது, தம்மை ஒப்பனை செய்து கொள்ளுவதில் நெடுநேரம் அம்மகளிர் செலவிட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. பலவகையான நறுமணப் பொருள்கள் ஊறிய நீரில் அவர்கள் நீராடினர்; கண்களுக்கு மை தீட்டிக் கொண்டனர்; கொங்கைகளில் குங்குமக் குழம்பை பூசிக் கொண்டனர்; விரல்களுக்கும் பாதங்களுக்கும் செம்பஞ்சு குழம்பு ஊட்டுவது வழக்கம். கூந்தலுக்கு நறுமணத்தைலங்கள் பூசுவதும், புகை ஊட்டுவதும் உண்டு; மலர்களைக் கொத்தாகவும், செண் டாகவும், வளையமாகவும் அவர்கள் அணிந்தனர். அக்காலத்தில் பலவகையாக மகளிர் தங்கள் கூந்தலை முடித்தனர். பலவகைக் கொண்டைகள் போட்டுக் கொண்டனர். அவற்றுள் கூடைக் கொண்டை பெருவாழ்வு பெற்றிருந்தது. மலர்மாலைகளும், மணி மாலைகளும் மங்கையரின் அழகிற்கு அழகு செய்தன. மணமகளுக்கு உடல் முழுவதும் செந்நிறம் ஊட்டினர்.

மகளிரின் ஒப்பனைக்குரிய கருவிகள் பல இருந்தன. ஒருவகைக் கண்ணாடியும், பளிங்குக் கல்லும் அவர்கள் கோலத்தைப் பிரதி பலித்துக் காட்டின. தலை வாருவதற்குப் பலவகை சீப்புகள் இருந்தன. அவற்றுள் யானை மருப்பினால் செய்யப்பட்ட சீப்புகள் சிறப்புமிக்கன. வண்ணப் பொடிகளை நறுமணம் ஊட்டி, உடலில் பூசிக்கொள்ளுவதும் அன்றைய வழக்கம். மங்கையர் முகத்திற்கு மஞ்சள்பூசி, திலகமிட்டுத் தோற்றப் பொலிவுடன் விளங்கினர். இத்தகைய சொகுசுமிக்க மகளிர் அன்றைய மேட்டுக்குடிகளைச் சேர்ந்தவர்கள் என்பதை நாம் மறத்தலாகாது.

## பொழுதுபோக்கு

ஆடவருடைய பொழுதுபோக்கிற்குப் பல வாய்ப்பு வசதிகள் இருந்தன. கோழிப் போரில் படைத்தலைவர்களும் கலந்து கொண்டனர். ஆட்டுக்கிடாப் போர் மற்றொரு வகையான

பொழுதுபோக்கு. பொது மன்றங்களிலும், மரத்தடிகளிலும் ஆண் மக்கள் சொக்கட்டான், சதுரங்கம் போன்ற விளையாட்டுகளை விளையாடினர்.

ஆண்களும் பெண்களும் நீர்விளையாடலில் பெருவிருப்பம் கொண்டிருந்தனர். மகளிர் கழங்கு ஆடினர். அவர்கள் பந்தாடுவதில் வல்லவராய் விளங்கினர். பூப்பந்தாட்டம் அவர்களுடைய சிறப்புமிக்க விளையாட்டு. ஊஞ்சலாடுவது மகளிர்க்கும் மைந்தருக்கும் பொதுவான பொழுது போக்கு. பொம்மைக் கலியாணம் செய்வதில் அன்றைய சிறுமியரும் பேரீடுபாடு கொண்டிருந்தனர்.

**வாழ்க்கை வசதிகள்**

நாகரிக வாழ்க்கைக்குத் தேவையான வாழ்க்கை வசதிகள் பலவற்றை அவர்கள் பெற்றிருந்தனர். பலவகையான குடைகள் பயன்படுத்தப்பட்டன. அரசனுடைய வெண்கொற்றக் குடைக்கும் கோயிலில் உள்ள இறைவன் திருக்குடைக்கும் இடையில் பல திறப்பட்ட குடைகள் இருந்தன. வட்டக்குடை, பீலிக்குடை என்பன அவற்றுள் சிறப்புடையன. ஏழை எளிய மக்கள் பனை ஓலையால் பின்னப்பட்ட ஓலைக்குடையைப் பயன்படுத்தியதையும் பார்க்கின்றோம்.

மதுவகைகள் பல இருந்தன. அரசன் மது அருந்துவதில்லை என்பதை நாம் முன்னரே கண்டோம். வெற்றிலையுடன் பாக்கையும் பச்சைக் கற்பூரத்தையும் சேர்த்து மெல்லுவர். செருப்பு அணிவது பெருவழக்காக இல்லை. தோலினால் செய்யப்பட்ட செருப்பும், மரக்கட்டைச் செருப்பும் வழக்கில் இருந்தன. ஆடவர் தலைமுடியைக் குடுமியாக முடித்து, முன் பகுதியையும், தாடியையும் மழித்துக் கொண்டனர்; அரும்பு மீசை வைத்துக் கொள்ளுவது ஆடவரின் வழக்கமாகும்.

மேட்டுக்குடி மக்கள் பல்லக்கை ஊர்தியாகப் பயன்படுத்தினர். களிறுகளும், பிடிகளும், கோவேறு கழுதைகளும், குதிரைகளும் அரச மரபினரின் ஊர்திகளாகும், தேரினைப் பயன்படுத்துவது அருகிய வழக்காயிற்று. ஏழை யெளிய மக்கள் இரண்டு சக்கர வண்டிகளைப் பயன்படுத்தினர்.

வீட்டுத் தட்டுமுட்டுச் சாமான்கள் பல செப்பினால் செய்யப்பட்டிருந்தன. பலவகைப்பட்ட தட்டுகள் செய்யப்பட்டன. மாம்பழ வடிவிலும், வாழை இலை வடிவிலும் செய்யப்பட்ட

தட்டுகள் இங்குக் குறிப்பிடத்தக்கன. செப்புக் குடங்களும், வெண்கலக் குடங்களும், கிடாரம் என்ற அகன்ற வாயும் குறுகிய கீழ்ப்பகுதியும் கொண்ட பாத்திரமும் பெருவழக்கில் இருந்தன. மண்டை ஓட்டு வடிவில் கிண்ணங்களும், வட்டில்களும், கிண்ணிகளும் புழக்கத்தில் இருந்தன. திருநீற்றுமடல் பெரியனவாகவும் சிறியனவாகவும் செய்யப்பட்டன. எச்சில் படிக்கமும் உலோகத்தால் செய்யப்பட்டிருந்தது. பூண் அணியப்பட்ட வளை தடிகளும், யானைமருப்புகளும் பயன்படுத்தப்பட்டன. அவற்றைக் 'கொம்பிற் கொள்கை' என்று அழைத்தனர். ஈயோட்டும் கருவிக்கு 'ஈச்சொப்பிக்கை' என்பது பெயர். அதை உலோகத்தால் செய்தனர். வெற்றிலைப் பாக்குப் பெட்டிக்கு 'இலைச்செப்பு' என்பது அக்காலத்தில் வழங்கிய பெயராகும்.

## உணவும் மருந்தும்

உணவினை 'ஆருயிர் மருந்து' என்று பண்டைச் சான்றோர் வழங்கினர். உடலில் உயிர் மருவி (பொருந்தி) யிருக்குமாறு செய்வது மருந்து. அப்பணியைப் பொதுவாக உணவும், சிறப்பாக மருந்தும் செய்து வருகின்றன.

### உணவு

அரிசியே முதன்மையான உணவுப்பொருள். பலவகைப்பட்ட அரிசிகள் அக்காலத்திலும் இருந்தன. செஞ்சாலி, செந்நெல் என்பன சிறப்புமிக்கன. தூவெள்ளரிசியினால் செய்த உணவை இறைவனுக்குப் படைத்தனர். அரிசியோடு, பயறுகள், தினை, வரகு, எள், கம்பு, சோளம், மலையரிசி, அவரை, உளுந்து, முதலிய தானியங்களும் உணவுப் பொருள்களாகப் பயன்பட்டன. அவல், பொரி முதலியன அக்காலத்தில் சிறப்புமிக்க இடைவேளைச் சிற்றுண்டிகளாகும். பால்சோறு, புளிச்சோறு, அக்கார வடிசில் (சர்க்கரைப் பொங்கல்) தயிர்ச்சோறு, கறியமுது (காய்கறி கலந்த உணவு) போன்ற பலவகைச் சோறுகள் அக்காலத்தில் சமைக்கப்பட்டன.[42] காய்கறிகளை வதக்கியும் வாட்டியும் பொரித்தும், துவட்டியும் தாளித்து உண்டனர். சோற்றுடன் கட்டித்தயிரையும், ஆடைத் தயிரையும் கலந்து இனிதுண்டனர். கட்டுச்சோறு கட்டிக்கொண்டு வெளியூர்ப் பயணம் செய்வது பெருவழக்கமாகும்.

[42] S. I. I., Vol. 2; Pt. 2; P. 127-128.

மா, பலா, வாழை ஆகிய முப்பழமும் விருப்புடன் தின்னப் பட்டன. கிழங்கு வகைகள், தேன் முதலியனவும் உணவுப் பொருள்களாகப் பயன்பட்டன. நெய், உணவில் சிறப்பிடம் பெற்றிருந்தது.

ஏழை யெளிய மக்கள் நொய்க் கஞ்சியையும், பழைய சோற்றையும் அமிழ்தமாகக் கருதினர். வயல்களில் வேலை செய்த உழவர்களும், கைத்தொழில் புரிந்த தொழிலாளிகளும் இருவேளை உணவையே உண்டனர். அவ்வுணவும் எளிமையானதாகவே இருந்தது.[43]

புலால் உணவு உண்டோர் பலராக இருந்தனர். ஆடு, கோழி முதலியவற்றின் இறைச்சியை மக்கள் பெரிதும் உண்டனர். பன்றி இறைச்சியையும், மாட்டிறைச்சியையும் தின்றோர் இழிவாகக் கருதப்பட்டனர்.

மணைமேல் அமர்ந்து, உண்கலன்களில் உணவினையிட்டு உண்பது பெருவழக்கு. வாழை இலையில் உணவு உண்பதும், உண்பிப்பதும் பெருஞ்சிறப்பாகக் கருதப்பட்டது.

பெருவழிகளிடையே தண்ணீர்ப் பந்தல் வைத்து, வழிப் போக்கருக்கு நீர் வழங்குவது ஓர் அறச் செயலாகக் கருதப் பட்டது. நீரில் நறுமணப்பொருள்களைக் கலந்து வழங்குவர். தண்ணீர்ப் பந்தலுக்குத் தேவையான தண்ணீரைப் பெரிய கிணறுகளை வெட்டி, அவற்றிலிருந்து நீரைச் சேந்திக் கொண்டனர். வழிப்போக்கருக்கு நீர் வழங்குவதற்கு கண்ணன் ஆரூரன் என்னும் அதிகாரியால் வெட்டப்பட்ட கிணறு, இராசராசப் பெருங்கிணறு என்று வழங்கப்பெற்றது. செயங்கொண்ட சோழ மண்டலத்துக் காலியூர்க் கோட்டத்து, தனியூர் உசாலாகிய விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலத்தின் மேலைப்பெருவழியில் ஒரு கிணறும் தொட்டியும் அமைத்து, அதில் நீரிரைப்பார் முதலியோருக்கு ஆறு திங்களுக்கு நிவந்தமாக 60 கலம் 6 தூணி நெல்லை அவன் அளித்ததாகத் தெரிகிறது.[44] இதிலிருந்து தண்ணீர்ப்பந்தல் ஆண்டிற்கு ஆறுமாத காலமே திறக்கப் பட்டிருக்கும் என்பது புலனாகின்றது.

[43] Appadurai, A. : Economic Conditions of South India, Vol. I. PP, 146-8.
[44] S. I. I., Vol. III. Pt. I, P. 7

## மருத்துவ வசதி

மருத்துவக் கலை அக்காலத்தில் நன்கு வளர்ச்சி யுற்றிருந்தது. நோயினைத் தணிப்பதற்குரிய மருந்துகளையும் மூலிகைகளையும் பேரளவில் பயன்படுத்தினர். புண், கட்டி போன்றவற்றைக் குணப் படுத்துவதற்குரிய அறுவை மருத்துவமும் ஓரளவிற்குச் சிறப்புற்று விளங்கியது. போரில் புண் பட்டவருக்குப் பலவகையான அறுவை மருத்துவம் செய்யப்பட்டது. நெய்க்கிழி வைத்தல், எண்ணெய் பத்தரில் கிடத்தல், ஒடிந்த உருக்கிரும்புகளை அறுத் தெடுத்தல், புண்களுக்கு மருந்து வைத்தல் போன்ற மருத்துவப் பணிகள் அக்காலத்தில் செய்யப்பட்டன.[45]

மருத்துவ மனைகளும் அக்காலத்தில் நிறுவப்பட்டிருந்தன. அவற்றிற்கு 'ஆதுர சாலைகள்' என்னும் பெயர் வழங்கியது. இராசராசனின் தமக்கையான குந்தவைப் பிராட்டியார், தம் தந்தையின் பெயரால் தஞ்சை மாநகரில் 'சுந்தர சோழர் விண்ணகர் ஆதுர சாலை' என்ற மருத்துவமனை ஒன்றை நிறுவினர். அதனைச் செம்மையாக நடத்துவதற்கு மருத்துவக் காணியாக நிலமும் அவள் அளித்துள்ளாள்.[46]

## மக்களுக்கு வழங்கிய பெயர்

அக்காலத்தில் அவரவர் பின்பற்றிய சமயத்தின் சார்பில், மக்களுக்குப் பெயரிடப்பட்டன. சைவசமயத்தைச் சேர்ந்த வருக்குச் சிவபெருமானின் திருப்பெயர்களே அல்லாமல் அவருடைய அடியார்களின் பெயர்களும் இடப்பட்டிருந்தன. சிறப்பாக தேவாரம் பாடிய அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரின் பெயர்கள் பலவகையாக மக்களுக்கு வழங்கப்பட்டன. அம்பலத்தாடி, திருநாவுக்கரையன், திருஞான சம்பந்தன், ஆரூரன், எடுத்தபாதம், கம்பன், சீராளன், கூத்தன், வெண் காடன், கணவதி, மறைக்காடன், வீதிவிடங்கன் என்னும் பெயர் கள் பெருவழக்குடையன.[47]

வைணவ சமயத்தினர் இராமன், கிருஷ்ணன், கோபாலன் போன்ற பெயர்களைப் பூண்டிருந்தனர், இராம கிருஷ்ணன் என்பது இக்கால வழக்கு. கிருஷ்ணன் இராமன் என்பது அக்கா

[45] சீவக சிந். 819
[46] 248. and 249 of 1923.
[47] S.I.I., Vol.2; No. 68.
[48] S.I.I. Vol. 2; pt 3: No. 65.

லத்திய வழக்கு. வைணவக் குடும்பத்தினரும் சைவசமயப் பெயரைப் பூணும் பழக்கம் இருந்தது. இராமன் கணவதி என்பது இதற்கு நல்லதொரு சான்றாகும்.[48]

நாயன்மார் நால்வருள், திருவாதவூரடிகளான மாணிக்க வாசகரின் பெயரை மக்களுக்கு இடும் வழக்கத்தை அக்காலத்தில் காணமுடியவில்லை. மகளிருக்குத் தேவியின் திருப்பெயர்கள் பல வழங்கின. உமை, மகேசுவரி, மாதேவி, திருநீலகண்டி, சந்திர மல்லி (மௌலி) போன்ற பெயர்களையுடைய பெண்கள் பலர் அக்காலத்தில் வாழ்ந்தனர். சமயத் தொடர்பு இல்லாத பெயர்களும் பெண்களுக்கு அக்காலத்தில் இடப்பெற்றிருந்தன. குப்பை, புகழி, மழலைச் சிலம்பு, சித்திரவல்லி, காமி என்னும் பெயர்கள் இதற்குப் போதிய சான்றாகும். சுந்தரமூர்த்தி நாயனாரின் மனைவியான பரவையாரின் பெயரை அக்காலத்தில் பொது மகளிர் சிலர் பூண்டிருந்தனர்.[49]

## தலைநகரின் அமைப்பு

தஞ்சைமா நகர் இராசராசன் காலத்தில் வீறுமிக்க தலை நகராக விளங்கியது. அந்நகரம் இருபெரும் பகுப்புகளையுடைய தாக இருந்தது. தஞ்சாவூர் உள்ளாலை என்பது தலைநகரின் மையப் பகுதியாகும். அதில் அரண்மனையும் தஞ்சைப் பெருவுடையார் கோயிலும் முதன்மையிடத்தைப் பெற்றிருந்தன. அவற்றைச் சார்ந்து அரசனின் கொலுமண்டபம், ஆவணக்களரி, அறச்சாலை, பெரும்பண்டாரம், படைக்கலக் கொட்டில் அரசியல் அதிகாரிகள், படைத் தலைவர் ஆகியோரின் மாளிகைகள் முதலியன இருந்தன. அவற்றையொட்டி ஆடரங்கும் நாடக சாலையும் நகரை அணி செய்தன.

நகரின் நடுவில் திருபுவனமாதேவிப் பேரங்காடி, கொங்காள் வார் அங்காடி, இராசராச பிரம மாராயன் அங்காடி போன்ற கடைத் தெருக்களும் இருந்தன. இவற்றைச் சூழ்ந்து வீரசோழப் பெருந்தெரு, இராசவித்தியாதரப் பெருந்தெரு, சயங்கொண்ட சோழப் பெருந்தெரு, சூரசிகாமணிப் பெருந்தெரு, வானவன் மாதேவிப் பெருந்தெரு என்னும் பல பெரியதெருக்கள் இருந்தன. மற்றும், கந்தர்வத் தெரு, வில்லிகள் தெரு, ஆனையாட்கள் தெரு, ஆனைக்கடுவார் தெரு, மடைப்பள்ளித் தெரு, பன்மையார் தெரு, சாலியத் தெரு, போன்ற பல தெருக்களும் இருந்தன.[50]

[49] S. I. I; Vol. 2; No. 66.
[50] S. I. I; Vol. 2; No. 64, 95.

இவையல்லாமல், தஞ்சாவூர்ப் புறம்படியில் அபிமான பூஷணத் தெரிந்த வேளம், அருமொழித் தேவர் தெரிந்த திருபரி களத்தார் வேளம், இராசராசத் தெரிந்த பாண்டித் திருமஞ் சனத்து வேளம், உத்தமசீலியார் வேளம், உய்யக்கொண்டார் தெரிந்த திருமஞ்சனத்து வேளம், பஞ்சவன் மாதேவியார் வேளம் போன்ற தொழிலாளர் குடியிருப்புகளும், இராசராசப் பிரம மாராயப் படைவீடு முதலியனவும் சிறப்புற்று விளங்கின.[51]

நகரத்திற்கு வெளியே கைத்தொழிலில் வல்ல வினைஞரின் சேரிகள் இருந்தன. அவற்றிற்கு அப்பால் 'தீண்டாச்சேரி'கள் இருந்தமை இங்குக் கருதத்தக்கது.[52] இத்தகைய ஊரமைப் பினையும், சமுதாய அமைப்பினையும் ஒப்பிட்டுப் பார்க்கின்ற பொழுது வேளாண்மைப் பொருளியல் அடிப்படையில் வளர்ந்த தமிழ்ச்சமுதாயம் சாதிவெறிக்கு ஆளாகிச் சிதறுண்டு போகும் அவல நிலையைப் பையப் பைய அணுகிக் கொண்டிருந்ததை நாம் காணமுடிகிறது; தீண்டாமைப் பேய் தலைவிரித்து ஆடுவதற்கு, அக்காலத்தில் ஆ ய த் த ம் செய்து கொண்டிருந்தது[53] என்று கூறினால், அது தவறாகாது. மகளிரின் மாண்புமிகு கல்விநிலை மறைந்துவிட்டது. கல்வியும் கலையறிவும் பெரிய இடத்துப் பெண் களுக்கும் பொதுமகளிருக்கும் உரிய சொத்துகளாயின. தனி யுடைமைப் பொருளியல் நிலை செழித்தோங்கத் தொடங்கியது. நிலமானியப் படைமுறையும், சதுர்வேதி மங்கலங்களின் தோற் றமும் அன்றைய சமுதாய வாழ்க்கையில் வகுப்புரிமைப் போராட்டம் மூளுவதற்குரிய சூழ்நிலையை உருவாக்கின.

51 ஷை, பக்; 237-40.
52 ஷை, எண். 5.
53 ஒரு கல்வெட்டில் தீண்டாச்சேரியும், பறைச்சேரியும் ஒருங்கே கூறப்பட் டுள்ளதைக் காணுகின்றோம். இதனால், பறைச்சேரிகள் வேறெனவும், தீண் டாச்சேரிகள் வேறெனவும் அறிஞர் சிலர் கருதுகின்றனர். இதற்குச்சான்றாக 'பறை முதலிகள்' என்று சில கல்வெட்டுகளில் வரும் வாசகத்தைக் காட் டுவர். இதனால், அவர்கள் எல்லாப் பறையரும் தீண்டாதவர் அல்லர் என் பதும், எல்லாப் பறைச்சேரிகளும் தீண்டாச் சேரிகள் அல்ல என்பதும் ஓர் தற்குரியது' என்பர். இந்நிலை காலப்போக்கில் மறைந்து விட்டதை கருத்தில் கொண்டு நோக்கினால், இராசராசன் காலத்தில் 'தீண்டாமை' பற்றிய கருத்து, தமிழ்ச் சமுதாயத்தில் செல்வாக்குற்றிருந்ததை நாம் மறுக்க இயலாது. (சாண்க 5. 1. 1; Vol.2: No. 5; No.118) என்பது புலனாகும்.

# 19. பொருளியல் நிலை

பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்பது வள்ளுவர் வாய்மொழி, ஒரு பேரரசை நிறுவி, அதைக் கட்டிக் காக்கும் பொறுப்புடன் இராசராசன் ஆட்சி புரிந்தான். அவன் நாட்டின் வளத்தைப் பெருக்குவதன் மூலம், அரசின் வருவாயைப் பெருகச் செய்தான். அதற்காக நாட்டில் உள்ள நிலமனைத்தையும் அளந்து, வகைப்படுத்தி நிலத்தீர்வையை அவன் விதித்தான். நிலவருவாயை அடுத்துத் தொழில் வரியின் மூலம் கணிசமான அளவிற்கு அரசிற்குப் பொருள் கிடைத்து வந்தது.

இவையல்லாமல், ஆண்டுதோறும் குறுநிலமன்னர்கள் செலுத்திவந்த திறைப்பொருள் சோழப் பேரரசின் கருவூலத்தை ஓரளவிற்கு நிறைத்து வந்தது. மற்றும் உள்நாட்டு, வெளிநாட்டு வாணிகத்தினால் சோழ நாட்டுப் பொருள் வருவாய், வளமும் வலிவும் பெற்றது. தள்ளா விளையுளும் தாழ்விலாச் செல்வரும் சோழப் பேரரசைச் செல்வச் செழிப்பு மிக்கப் பேரரசாக விளங்கச் செய்தனர்.

## தொழில்கள்

### உழவுத் தொழில்

உழவுத் தொழிலே முதன்மையான தொழிலாக விளங்கியது. விளைச்சலைப் பெருக்கவும், உழவுத்தொழிலைச் சிறப்புறச் செய்யவும் நீர்ப்பாசனத் திட்டங்கள் பல செயற்படுத்தப் பட்டன. நிலத்தின் வளத்தினைப் பெருக்குவதன் மூலம் இரண்டு மூன்று போகங்கள் பயிரிடப்பட்டன.

நிலம் குடிமக்களுடையதாகும். அரசன் அந்நிலக்கிழார்களிடமிருந்து நில வரியைப் பெற்று வந்தான். நிலத்தை உழுதுண்ட உழவர்கள் சிலரே. உழுவித்துண்ணும் பெருநிலக் கிழார்களிடம் நிலமற்ற பண்ணையாட்கள் கூலிக்கு வேலை செய்து வந்தனர். கூலியை நெல்லாகவே அக்காலத்தில் கொடுத்து வந்தனர். நிலத்தினை வாரத்திற்கும், குத்தகைக்கும் பயிரிடும் முறைகள் அக்காலத்தில் நடைமுறையில் இருந்தன. தேவ தானங்களையும் அறப்புறங்களையும் பயிரிட்ட குடியானவர்கள் பெரிதும் இம்முறைகளைப் பின்பற்றினர்.

பெரும்பாலான ஊர்களிலிருந்த நிலங்கள் அவ்வூரிலிருந்த பல வகுப்பினருக்கும், கோயில்களுக்கும் உரியனவாக இருந்தன. குறிப்பிட்ட சில ஊர்களில் மட்டும் சிறப்பாக சதுர்வேதி மங்கலங்களில் பெரும்பாலும் அவ்வூரில் வாழ்ந்த பார்ப்பனருக்கே அவ்வூர் நிலம் அனைத்தும் உரியதாக இருந்தது.

அரசியல் அதிகாரிகளும் குறுநில மன்னர்களுமே பெருநிலக் கிழார்களாக விளங்கினர். இராசராசனின் முப்பத்திரண்டாண்டுக் கால ஆட்சியில் போர்கள் நிறைந்திருந்தன. எனினும், உழவுத் தொழில் எக்காரணத்தாலும் பாதிக்கப்படாமல், அரசனால் கருத்தாகப் போற்றிக் காக்கப்பட்டது.

## நெசவுத் தொழில்

உணவிற்கு அடுத்து மனிதனுக்குத் தேவைப்படும் பொருள் உடையாகும். உடையினை உண்டாக்குவதற்குப் பலர் நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். பருத்தியாடைகளும் பட்டாடைகளும் மிக நேர்த்தியாகவும் கண்கவர் வனப்புடனும் நெய்யப்பட்டன. மெல்லிய நயமிகு துகில்கள் அக்காலத்தில் பெருஞ்சிறப்பு வாய்ந்தனவாகப் போற்றப்பட்டன. சோழ நாட்டின் ஒரு பகுதியாக இருந்த கூறை நாடு, சீர்த்திமிகு பருத்தியாடைகளைத் தயாரித்தன. அதனால் கூறை நாட்டுச் சேலைகள் சோழப் பேரரசு முழுவதிலும் பெரிதும் தேவைப்பட்டன. உறையூரும், மதுரையும் ஆடைகளை உற்பத்தி செய்யும் பணியில் முன் நின்றன. சோழப் பேரரசின் வடவெல்லைப் பகுதியிலிருந்த கலிங்கமும் வேங்கி நாடும் அக்காலத்தில் நெசவுத் தொழிலில் சிறப்புற்று விளங்கின.

பட்டும் பருத்தியும் அல்லாமல், வேறு செயற்கை நூல்களும் விலங்குகளின் மயிர்களும் ஆடை நெய்வதற்குப் பயன்படுத்தப்பட்டன. ஆடை நெய்யும் தொழிலையே நம்பி வாழ்ந்த மக்கள் மிகப் பலராவர். நெசவுத் தொழில் செய்துவந்த குடும்பங்களில்

இருந்த ஆடவருள் அஞ்சா நெஞ்சமும், ஆற்றலும் மிக்கவர்கள் அரசின் படைப்பகுதியில் வீரர்களாகவும், படைத் தலைவர்களாகவும் பணிபுரிந்தனர். மற்ற ஆண்களும் பெண்களும் நெசவுத் தொழிலைக் குடும்பத் தொழிலாகச் செய்து வந்தனர்.

### உப்பு விளைவித்தல்

உப்பளங்கள் அரசின் மேற்பார்வையில் இயங்கிவந்தன. ஆயிரக் கணக்கான மக்கள் உப்பளங்களில் வேலை செய்தனர். உப்பிற்கு இருவகை வரிகள் விதிக்கப்பட்டிருந்தன. மைய அரசுக்கும், உள்ளாட்சி அரசுக்கும் உப்பு உற்பத்தி செய்தவர் வரி செலுத்தினர். மரக்காணம், வரியூர், ஆயத்துறை, நாகப்பட்டினம் போன்ற கடற்கரைப் பகுதிகளில் உப்பு விளைவிக்கும் தொழில் செழிப்புற்று விளங்கியது.

### கட்டடத் தொழில்

சோழப்பேரரசின் விரிவிற்கேற்ப நாட்டிலே பல கைத்தொழில்கள் பெருகின. அவற்றுள் கட்டடத் தொழில், தச்சுத் தொழில், உலோகத் தொழில் முதன்மையான இடத்தைப் பெற்றன. அரண்மனைகளும் மாளிகைகளும் ஒரு பக்கத்தில் புத்தம் புதிதாகக் கட்டப்பட்டு வந்தன. மற்றொரு புறம் கோட்டைக் கொத்தளங்களும் அமைக்கப்பட்டு வந்தன. வேறொரு பக்கம் திருக்கோயில்கள் பல கற்றளிகளாக மாற்றப்பட்டும் புதிய கோயில்கள் பல கட்டப்பட்டும் வந்தன. அக்கோயில்களைக் கட்டுவதிலும், அவற்றில் சிற்பங்களைச் செதுக்குவதிலும் ஆயிரக் கணக்கான கல்தச்சர்கள் பணி புரிந்தனர்.

### தச்சுத் தொழில்

வீடுகளையும் மாளிகைகளையும், கோயில்களையும் அமைப்பதில் தச்சர்கள் பலர் ஈடுபட்டிருந்தனர். கடற்படைக்குத் தேவையான போர்க் கப்பல்களையும், வாணிகத்திற்குரிய மரக் கலன்களையும் செய்வதில் பயிற்சியும் தேர்ச்சியும் மிக்க தச்சர்கள் அக்காலத்தில் சிறப்புற்றிருந்தனர்.

### உலோகத் தொழில்

எண்ணற்ற போர்க் கருவிகளைச் செய்து குவித்த கருமார் இரும்பிலும், உருக்கு இரும்பிலும் சிறந்த வேலைப்பாடுடையவராக விளங்கினர். அவர்கள் செய்த படைக்கலன்கள் சில கிடைத்

துள்ளன. அவை உறுதியும், நீடித்து உழைக்குந் தன்மையும், கூர்மையும் உடையன. வீடுகளின் தேவைகளுக்குரிய பாத்திரங்கள் பல செம்பினுலும், பித்தளையினுலும் செய்யப்பட்டு வந்தன. வெள்ளியினுல் சாமான்கள் செய்யப்பட்டதைப்பற்றிக் கல்வெட்டுக்கள் பேசுகின்றன. இவை யாவும் செல்வர் வீடுகளில் புழக்கத்தில் இருந்தன. ஏழை மக்களிடையே மண்பாண்டங்களே பெரு வழக்காக இருந்தன. அறச்சாலைகளிலும், மடங்களிலும் கூட மண் பாண்டங்களே பயன்படுத்தப் பட்டன. கோயில்களில் செம்பு, பித்தளை, பஞ்சலோகம், வெள்ளி முதலியவற்ருல் செய்யப்பட்ட பாத்திரங்களும் வழிபாட்டுக் கருவிகளும் புழக்கத்தில் இருந்தன. இராசராசன் காலத்தில் செய்யப்பட்ட வெண்கலச் சிலைகள் அத் தொழிலின் நேர்த்திக்கும் சீர்த்திக்கும் சிறந்த சான்று பகருகின்றன.

## அணிகலத் தொழில்

பொன், வெள்ளி ஆகிய சிறப்புமிக்க உலோகங்களில் பணிபுரிந்த தொழிலாளிகள் பலர் செல்வச் செழிப்புடன் வாழ்ந்தனர். மேட்டுக்குடி மக்களுக்கு அழகிய அணிகலன்கள் பலவற்றை நேர்த்தியாகச் செய்து கொடுத்த கலைஞர்கள், சமுதாயத்தில் பேரும் புகழும் பெற்றிருந்தனர். பலதிறப்பட்ட அணிகலன்களைப் பற்றிய செய்திகள் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. முத்துகள், விலைமதிப்புமிக்க பிற மணிகள் போன்றவற்றின் வகைகளும், குற்றங்களும் தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகளில் விரிவாகக் குறிப்பிடப் பட்டுள்ளன. அவற்றிலிருந்து, அக் காலத்தில் வைரம், இரத்தினம், முத்து முதலிய மணிகளின் ஆராய்ச்சியில் வல்லவர்கள் பலர் இருந்தமை புலனுகின்றது. அம் மணிகளை இழைத்து, எழில் மிகு அணிகலன்களைச் செய்தவரின் தொழில் நுட்ப அறிவு, இன்றைய நகைத் தொழிலாளர்களின் திறனையும் விஞ்சக் கூடியதாகும். அவ்வணிகலன்களின் வடிவமும் வனப்பும் இன்றைய கலைஞர்களால் எளிதில் அறிந்து கொள்ள முடியாதவையாகும். அரண்மனையில் இருந்தவருக்குச் செய்யப்பட்ட அணிகலன்களைவிட, கோயில்களுக்குச் செய்யப்பட்ட அணிகலன்களே மிகுதியாக இருந்திருக்குமோ என்று எண்ணம் எழுகிறது. இராசராசன் காலத்தில் தஞ்சையின் நகைத் தொழிலாளரின் கைவண்ணம் ஒப்புயர்வற்ற நிலையை அடைந்திருந்தது.

## வெல்லம் காய்ச்சும் தொழில்

கரும்பைப் பிழிந்து, சாற்றினைக் கொண்டு வெல்லமும் நாட்டுச் சருக்கரையும் செய்யும் தொழில், பேரூர்களில் சிறந்த நிலையை அடைந்திருந்தன. இத்தகைய தொழில்களே அக்காலத்தில் பெருகியிருந்தன. இவற்றைப் பற்றிய செய்திகள் மிக அருகியே காணப்படுகின்றன.

## ஏற்றமுறு தொழில்கள்

அரசருடைய ஆதரவைப் பெற்ற தொழில்கள் சில அக்காலத்தில் இருந்தமை கல்வெட்டுகளால் தெரிய வருகிறது. அரசவையிலோ, கோயிலிலோ முக்கியமான தொழிலாளராகக் கருதப்படவேண்டும் என்னும் உரிமையைக் காஞ்சிபுரத்தைச் சேர்ந்த பட்டுசாலியர் பெற்றிருந்தனர். அவர்கள் அரச குடும்பத்தின் ஆடைகளை நெய்து கொடுத்த சிறப்பினைப் பெற்றிருந்தனர். அவர்களைக் காஞ்சி ஊரகம் கோயிலின் நிதி நிர்வாகக் குழுவில் உத்தம சோழன் உறுப்பினராக அமர்த்தியிருந்தான். அவர்களுக்கு வரிச்சலுகை அளிக்கபட்டிருந்தது.

# உள்நாட்டு வாணிகம்

## பெரு வழிகள்

அக்காலத்தில் வாணிகம் செழிப்புற்று விளங்கியது. உள் நாட்டு வாணிகம் செம்மையாகவும் சிறப்பாகவும் நடைபெற அரசு ஊக்கம் அளித்து வந்தது. சரக்குகளை ஓரிடத்திலிருந்து வேறோர் இடத்திற்கு வண்டிகளிலும், கால் நடைகள் மீதும் எளிதில் எடுத்துச்செல்லுவதற்கு வசதியான சாலைகள் அமைக்கப் பட்டிருந்தன. சோழப் பேரரசினை வேங்கி நாடுமுதல் குமரிவரை இணைத்த நெடுஞ்சாலைகள் பல இருந்தன. சிறு தெருக்கள் 'வழி' என்றும், நெடுஞ்சாலைகள் 'பெருவழிகள்' (High ways) என்றும் வழங்கப்பட்டன. வடுகப் பெருவழி, கொங்கப் பெருவழி, பெண்ணுகடப் பெருவழி, தஞ்சைப் பெருவழி, இராசாசிரய புரத்துப் பெருவழி, பட்டினப் பெருவழி என்பன போன்ற பல பெருவழிகள் அக்காலத்தில் சிறப்புற்றிருந்தன. அப்பெருவழிகள் மூன்று கோல் (முப்பத்தாறு அடி) அகலமுடையனவாக இருந்தன. அவற்றின் நடுப்பகுதி மேடாக ஆமை முதுகுபோல் அமைக்கப்பட்ட செய்தியை மதுராந்தகத்தில் உள்ள உத்தம

சோழனின் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது.[1] அப்பெருவழிகள் வழியாக வாணிகச் சாத்துக்கள் நாட்டின் பல பகுதிகளுக்குப் பொருள்களைக் கொண்டு சென்று வாணிகம் செய்துவந்தன. பெருவழிகளைக் காவல் புரியும் பணியில் ஊராட்சி மன்றங்களும் பொறுப்பேற்றிருந்தன. வெட்டி, அமிஞ்சி என்னும் ஊழியர்கள் இத்தொழிலைச் செய்தனர்.

## கடைத் தெரு

முக்கியமான நகரங்களில் கடைவீதிகள் பல இருந்தன. கூல வீதி, அறுவை வீதி என்பன போன்ற பெயர்கள் அவற்றிற்கு வழங்கின. தானியங்களை விற்ற கடைத்தெரு கூல வீதி எனவும், துணிமணிகள் வாணிகம் செய்யப்பட்ட தெரு அறுவை வீதி என்றும் பெயர் பெற்றிருந்தன. இவற்றைப் போன்ற பல தெருக்கள் தஞ்சைமாநகரில் இராசராசன் காலத்தில் இருந்தன. குறிப்பிட்ட ஒரு பொருளை, ஆட்சியாளர் எங்கு விற்கவேண்டும் என்று அறிவித்துள்ளனரோ அங்குத்தான் விற்க வேண்டும் என்ற நியதி இருந்தது. யார் வேண்டுமானாலும், எதை வேண்டுமானாலும், எங்கு வேண்டுமானாலும் விற்கலாம் என்னும் இக்காலத்தில் பெருகிவரும் பழக்கம் அக்காலத்தில் இல்லை.

> ''கோவிராச ராசகேசரி வன்மர்க்கு யாண்டு பதினேழாவது, காலியூர்க் கோட்டத்து தன் கூற்று சிவசூளாமணி மங்கலமாகிய ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலத்து இவ்வாட்டை தன்மவாரியப் பெருமக்கள் உள்ளிட்ட மகா சபையோம்......... பணித்த எழுத்து...... இவ்வூரில் **வெற்றிலை விற்பார் பிடாரி கோவிலன்றி விற்ருரை** ஏரிவாரியப் பெருமக்களே ஏரிக்கு முதலாக கழஞ்சு பொன் தண்டலு கொள்ளப் பெறுவாராகவும் இப்பரிசு பணித்தோம் மகா சபையோம்.''[2]

என்னும் கல்வெட்டால், எந்தப் பொருளையும் குறித்த இடத்தில் அல்லாமல், வேறிடத்து விற்கக் கூடாது என்பதும், அந்த விதியை மீறியவர்கள் ஊராட்சி மன்றத்திற்குத் தண்டம் செலுத்தியமையும் தெரிய வருகின்றன.

ஓர் ஊரின் கடைத் தெருவில், பிற ஊர்களைச் சேர்ந்தவர்கள்— சுற்றுப் பக்கத்து ஊர்களைச் சேர்ந்தவர்கள்— பொருள்களைக் கொண்டு வந்து விற்பனை செய்தால், அதற்காக அவ்வூராட்சி மன்றத்திற்கு, அவர்கள் அங்காடிக் கூலி செலுத்தவேண்டும் என்னும் வழக்கு இருந்தது. இதனை,

[1] S.I.I., Vol. 4; pt. 3; 15-170.
[2] 336 of 1925.

"சேற்றூர்க் கூற்றத்து பிரமதேயம் நாலூர் பட்டப் பெருமக்கள் உள்ளிட்ட பெருங்குறிப் பெருமக்களேம் எங்களூர் திருமயானத்து ஸ்ரீ மூலஸ்தானத்து மகாதேவர்க்கு நாங்கள் விற்றுக் குடுத்த எங்களூர்க் கடைத் தெருவில் அங்காடிக் கூலியாவது பிறவூர் நின்று நெல்லும் அரிசியும் மற்றும் கிடந்து விற்பன குவாலால் நாழி கொள்ளப் பெறுவதாகவும், நிறுப்பன நிறையால் ஒரு பலம் கொள்ளப் பெறுவதாகவும். வெற்றிலைக் கூடையால் ஒரே பற்றும், பாக்குக் கூடையால் இரண்டு பாக்கும் கொள்ளப் பெறுவதாகவும்"[3]

என்னும் ஊராட்சி மன்ற நடைமுறைச் செயற்குறிப்பு ஒன்றால் அறிகிறோம்.

அக்காலத்தில், பண்டமாற்று முறையும் வழக்கில் இருந்து வந்ததைப் பல கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. உள்நாட்டு வாணிகத்தில் பண்டமாற்று முதன்மையிடம் பெற்றிருந்ததாகத் தோன்றுகிறது. தஞ்சைப் பெரிய கோயிலுக்குப் பலர் பலவகையான பொருள்களை நாள்தோறும் வாடிக்கையாக அனுப்பி வந்தனர். அவர்களுக்கு நெல்லே பண்டமாற்றாகக் கொடுக்கப்பட்டது. இதனை,

"புளியங்கறி யமுதுக்கு வாழைப்பழ மூன்றும் அமுது செய்ய வாழைப்பழம் பதினைஞ்சும் ஆக வாழைப்பழம் பதினெட்டுக்கு நெல்லு ஐஞ்ஞாழியும், கறியமுதுக்கு நெல்லு அறுநாழியும், கறியமுதுக்கும் தயிரமுதுக்கும் உப்பு உழக்காழாக்குக்கு நெல்லு உழக்காழாக்கும், போனகக் குருத்து (வாழை இலை) பண்ணிரன்டுக்கு நெல்லு இருநாழியும், அடைக்காயமுது பாக்கு முப்பதும், வெள்ளிலையமுது அறுபதுக்கும் நெல்லு நாழி"[4]

என்னும் இராசராசனின் கல்வெட்டால் அறியலாம்.

### வாணிகக் குழுக்கள்

கடல்கடந்த நாடுகளோடு இராசராசன் காலத்தில் வாணிகத் தொடர்பு சிறப்புற்றிருந்தது. இவ்வெளிநாட்டு வாணிகத்தைச் சோழ நாட்டின் புகழ் மிக்க வாணிகக் குழுக்கள் பேரளவில் திட்டமிட்டு நடத்திவந்தன. அக்குழுக்களுக்கு நாநா தேச திசையாயிரத்து ஐந்நூற்றுவர்,[5] மணிக்கிராமத்தார், நகரத்தார், வளஞ்சியர் என்னும் பல பெயர்கள் வழங்கின.

[3] Ibid.
[4] S I I., Vol. 2; pt. 2; pp. 127-128.
[5] 193. 402 of 1939-40.

## நாநா தேசி திசையாயிரத்து ஐந்நூற்றுவர்

அவற்றுள் **நாநா தேசி திசையாயிரத்து ஐந்நூற்றுவர்** என்பதற்கு எல்லா நாடுகளிலும் பல்வேறு திசைகளிலும் வாணிகம் செய்த ஐந்நூற்றுவர் என்றும், எல்லா நாடுகளிலும் திசைகளிலும் வாணிகம் செய்த ஆயிரத்து ஐந்நூற்றுவர் எனப் பொருள் படும். இவற்றுள் இரண்டாவது பொருளே பொருத்தம் உடையதாகும். நாநா தேசம் என்பது எல்லாத் தேசங்களும் எனப் பொருள்படும். உலகத்தின் பல திசைகளிலும் உள்ள பல்வேறு நாடுகளுக்கும் சென்று வாணிகம் செய்தமையால் அக்குழுவினருக்கு இப் பெயர் வழங்கியது எனலாம்.

## மணிக்கிராமத்தார்

**மணிக்கிராமத்தார்** தலைநகரங்களில் சிறப்புற்று விளங்கிய வாணிகக் குழுவினர். உறையூர் மணிக்கிராமம், காவிரிப்பூம் பட்டினத்து மணிக்கிராமம், கொடும்பாளூர் மணிக்கிராமம் என்னும் கல்வெட்டு வாசகங்கள் இதை உணர்த்துகின்றன.[6] இம் மணிக்கிராமத்தைச் சேர்ந்தவர்கள் பல அறங்களைச் செய்துள்ளனர்.

## நகரத்தார்

பெரிய நகரங்களிலிருந்த வாணிகர் குழுவிற்கு **நகரத்தார்** என்பது பெயர். வாணிகத் தொழிலில் ஈடுபட்டிருந்த வாணிகரின் நலன்களைக் கருத்தில் கொண்டு, இக்குழுவினர் பல பணிகள் புரிந்து வந்தனர்; நகரத்தின் ஆட்சியைத் திறமையாக நடத்தி வந்தனர். இத்தகைய நகரத்தார் குழுக்கள் அக்காலத்தில் காஞ்சிபுரம், மாமல்லபுரம், நந்திபுரம், மயிலாப்பூர் முதலிய ஊர்களில் இயங்கி வந்தன.

## வளஞ்சியர்

இம்மூவகை வாணிகக் குழுக்களே அல்லாமல், வளஞ்சியர் என்னும் மற்றொரு குழுவும் அக்காலத்தில் அருகிய வழக்காக இருந்து வந்தது. தென்னிலங்கை **வளஞ்சியர்** என்று அக்குழுவினைக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இதனால், அவர்கள் இலங்கையைச் சேர்ந்த வாணிகக் குழுவினராக இருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. இலங்கையில் காணப்படும் கல்வெட்டு ஒன்று, அவர்கள் ஈழ நாட்டினர் என்பதையும்,

[6] Ins. 519 of 1905; S.I.I., Vol. 9: No. 16.

பௌத்த சமயத்தினர் என்பதையும் தெரிவிக்கின்றது.[7] அவர்கள் வாணிகத்தின் பொருட்டு, தமிழ்நாட்டில் தங்கியிருந்தனர். பல அறச் செயல்களை அக்குழுவினர் செய்துள்ளனர். சமய வேறுபாடு கருதாமல், சிவன் கோயிலுக்கும், திருமால் கோயிலுக்கும் அறக் கட்டளைகள் பலவற்றை அவர்கள் வழங்கியுள்ளனர். அவற்றுள், தஞ்சை மாவட்டம், மாயூர வட்டத்திலுள்ள திருவேள்விக்குடிக் கோயிலில் ஒரு பகுதியைத் திசையாயிரத் தைந்நூற்றுவரும் வளஞ்சியரும் கட்டுவித்தனர்[8] என்பதும், தஞ்சை மாவட்டம் நன்னிலம் வட்டத்தில் உள்ள திருக்கண்ணபுரத்தி லிருந்த கருணாகர வீரர் மடத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களைத் திருவிழாக் காலங்களில் உண்பிக்கும் பொருட்டு, ஒவ்வொருவரும் இரண்டு காசு வரி கொடுக்க வேண்டுமெனத் தென்னிலங்கை வளஞ்சியர்கள் தமக்குள் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டனர்[9] என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கன.

இந் நால்வகைக் குழுக்களுள், நகரத்தார் என்னும் குழு, நகராட்சி மன்றப் பணியையும் செய்து வந்தது. நகரங்களில் வாழ்ந்த வணிகப் பெருமக்களின் நலனைக் கருதி, வணிகப் பெருமக்களால் நடத்தப்பட்ட ஊராட்சி மன்றமே நகரமாகும். மற்றவகையில் இந்நான்கு குழுக்களும், குறிப்பிட்ட ஒரு தொழிலைச் செய்வோர் அமைத்துக் கொண்ட வாணிகத் தொழிற் குழுக்களாகும் இதனை, ஆங்கிலத்தில் 'கில்டு' (guild) என்பர். நாட்டிலே வாணிகர்க்கு இருந்த செல்வாக்கினையும், நாட்டாட்சியில் அவர்கள் ஏற்றிருந்த பங்கினையும் இக்குழுக்களின் செயல்முறைகள் நமக்குத் தெரிவிக்கின்றன.

இவ்வாணிகக் குழுவினர் ஒவ்வொருவரும் சிறு காவற்படை ஒன்றைத் தங்களுடன் வைத்திருந்தனர். தங்கள் உடைமைகளையும். தங்களையும், வழிப்பறி செய்வாரிடமிருந்து காப்பாற்றிக் கொள்ள, இப்படைகளை அவர்கள் பயன்படுத்திக் கொண்டனர். இக்குழுக்களுக்குச் சோழப் பேரரசின் எப்பகுதிகளிலும் சென்று வாணிகம் செய்யும் முழுவுரிமை அளிக்கப் பட்டிருந்ததாகத் தெரிகிறது.

7 S. I. I. Vol. 4: No. 396.
8 131 of 1926.
9 505 of 1922.

## வெளிநாட்டு வாணிகம்

### சீனுவோடு தொடர்பு

வெளிநாட்டு வாணிகத்தில் இக்குழுக்கள் பெரிதும் ஈடுபட்டிருந்தன. பேரரசன் இராசராசன் காலத்தில், சீனுவோடு நெருங்கிய வாணிகத் தொடர்பு உண்டானதை நாம் முன்னரே கண்டோம். கி பி. 1012 ஆம் ஆண்டில் சோழ நாட்டிலிருந்து ஒரு தூதர் குழு சீனுவிற்குப் புறப்பட்டது; 1015 இல் அது சீனுவை அடைந்தது என்னும் குறிப்பு, சீனுவின் காலவழிச் செய்திக் கோவையில் காணப்படுகிறது. இதனுல், இராசராசன் காலத்திலேயே, அத்தூதர் குழு சோழ நாட்டிலிருந்து அனுப்பப் பட்டிருக்க வேண்டும் என்பது புலனுகின்றது.

### கிழக்காசிய நாடுகளோடு வாணிகத் தொடர்பு

தமிழகத்திலிருந்து தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கு முத்து, யானைத் தந்தம், பவழம், கண்ணுடிக் கல், சந்தனக் கட்டை, பாக்கு, ஏலம், பளிங்கு, பருத்தி நூலாடை, வண்ணப் பட்டு போன்ற பொருள்கள் ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தன என்பது சௌ-ஜீ-குவா என்ற சீனநாட்டு வரலாற்றுக் குறிப்பேடு ஒன்ருல் தெரிய வருகிறது.

அந்நாடுகளிலிருந்து அகில், சந்தனம், சூடம், சீனச்சூடம், அம்பர், தக்கோலம், இலவங்கம், குங்குமம், தமாலம்பச்சிலை, நிரியாசம் போன்ற பல பொருள்கள் சோழப் பேரரசில் இறக்கு மதி செய்யப்பட்டன. அக்காலத்தில் கீழைக் கடற்கரைப் பகுதியில் மயிலை, மாமல்லபுரம், நாகப்பட்டினம், கொற்கை முதலிய துறை முகங்கள் சிறப்புற்றிலங்கின. இவற்றுள் நாகப்பட்டினம் சோழப் பேரரசின் செழிப்புமிக்க துறைமுகப் பட்டினமாக விளங்கியது.

### மேற்கத்திய நாடுகளோடு வாணிக உறவு

அராபிய நாட்டுச் சோனகர் தமிழகத்தோடு நெருங்கிய வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். அங்கிருந்து பேரள விற்குக் குதிரைகள் இறக்குமதி செய்யப்பட்டன. இராசராசன் காலத்தில் வெளிநாட்டு வாணிகம் நன்கு பெருகியிருந்தது. அதனுல், வெளிநாட்டுப் பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்ட தோடு, தமிழகத்தின் பொருள்கள் பேரளவில் ஏற்றுமதியும்

செய்யப் பட்டன. இவ்வாணிகப் பொருள்களுக்கு இடப்பட்டிருந்த சுங்க வரியால் சோழப் பேரரசிற்குப் பெரும் பொருள் வருவாயாக வந்தது.

## கடனும் வட்டியும்

பணத்தைக் கடன் வாங்கும் முறைகள் பல அக்காலத்தில் வழக்கில் இருந்தன. அவற்றுள், வாக்குறுதிக் கடன் பத்திரம் (pro-note) என்பது இக்காலத்தில் பெருவழக்காக இருந்து வரு வதைப் போன்றே, இராசராசன் காலத்திலும் பெருவழக்குற் றிருந்தது.

### கையெழுத்து ஓலைமுறை

இதற்குத் திருவாவடு துறையில் உள்ள கல்வெட்டு ஒன்று நல்ல சான்றாகிறது. இம்முறைக்குக் 'கையெழுத்து ஓலைமுறை' என்பது பெயர். அந்த ஊரிலிருந்த ஊராட்சி மன்றம், அவ்வூரி லிருந்த கைக்கோளன் ஒருவனிடம் **கையெழுத்து ஓலைமுறை** மூலம் பணம் கடன் வாங்கி இருந்தது. எக்காரணத்தாலோ, அக்கைக் கோளனுடைய சொத்துக்களை அரசன் பறிமுதல் செய்யுமாறு உத்தரவிட்டான். அந்நிலையில், தான் கடன் கொடுத்திருந்த பணத் தைத் திருப்பித் தருமாறு அவ்வூராட்சி மன்றத்தினரை அவன் வேண்டினான். அவ்வூராட்சி மன்றத்தினர் கடன் வாங்கிய பணத் தைத் திருப்பித் தராமல், அதற்கு ஈடாக அவ்வூரிலிருந்த நிலத்தை அவனுக்கு ஒதுக்கித் தந்தனர். அதைக் கொண்டு, அரசனுடைய கடனை அவன் அடைத்தான் என்ற செய்தியை, அக்கல்வெட் டால்[10] நாம் அறிகிறோம். இதனால், அக்காலத்திய கொடுக்கல் வாங்கல் முறையைப் பற்றி நாம் ஓரளவிற்கு அறிய முடிகிறது.

### வட்டி

கடன் கொடுக்கப்பட்ட தொகைக்கு அக்காலத்தில் குறைந்த அளவு, நூற்றுக்குப் பன்னிரண்டரை வீதம் வட்டி வாங்கப் பட்டதைத் தஞ்சைப் பெரிய கோயிலிலுள்ள கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.[11] வட்டியைப் **பொலிசை** எனவும் **பலிசை** எனவும் வழங்கினர். வட்டியைப் பெரிதும் நெல்லாகவே கொடுத்து வந்தனர். சில சமயங்களில் கடன் வாங்கப்பட்ட முதலுக்குப் பொன்னாகவும் திருப்பிக் கொடுத்துள்ளனர்.

[10] 105 of 1925.
[11] 255 of 1921; 8 of 1897

திருக்கோயில்களுக்கு அறக்கட்டளை வழங்கியவர், அவ்வறக் கட்டளைக்குரிய பொருளை அவ்வூரிலுள்ள ஊராட்சி மன்றத்தினரிடம் **வாடாக் கடனாகக்** கொடுத்து, அதன் வட்டியைக் கொண்டு, அவ்வறப்பணிகளைச் செய்யுமாறு ஏற்பாடு செய்துள்ளனர். பெரும்பாலும் கோயில்கள், தங்கள் பொருளை ஊர் மக்களிடத்து வட்டிக்குக் கொடுத்து வந்தன. வட்டியை நெல்லாகவே பெற்று வந்தன. கடன் கொடுக்கப்பட்ட முதலுக்கு மோசம் வரும் என்ற ஐயம் எழுமானால், கடன் வாங்கிய ஐந்தாம் ஆண்டு இறுதியில், கோயில் நிருவாகிகளின் முன்னர் கடன்பட்டவன் அம்முதலைக் கொண்டு வந்து காட்டவேண்டும்.[12] என்ற வழக்கம் அக்காலத்தில் இருந்தது. கடன் வாங்கியவர் வட்டியை ஒழுங்காகச் செலுத்த வில்லையானால், தண்டத் தொகையை நாள்தோறும் செலுத்தும்படி அவர்கள் வற்புறுத்தப் பட்டனர். சில சமயங்களில் அவர்களுடைய நிலங்களுக்கு நீர்ப் பாய்ச்சப்படுவது நிறுத்தப்பட்டது.

### சிறுசேமிப்பு

பேரரசன் இராசராசன் ஆட்சிக் காலத்தில், மகளிரும் சிறுவரும் சிறுபாடு (சிறு சேமிப்பு) செய்யும் பழக்க முடைவராக இருந்தனர் என்பதை ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது.[12a]

## விலையும் கூலியும்

### பொருள்களின் விலை

அக்காலத்தில் பொருள்களின் விலைகள் யாவும் காசினாலோ, நெல்லின் அளவினாலோ குறிக்கப்பட்டு வந்தன. கழஞ்சு பொன்னையும், களம் நெல்லையும் அடிப்படை விலைத்திட்டமாக அக்காலத்தில் கொண்டிருந்தனர். ஒரு கழஞ்சு பொன், இன்றைய சவரனில் 4/9 பகுதியாகும். இன்று சவரன் ரூ 400 விற்கிறது. இந்த அடிப்படையில் நோக்கினால் ஒரு கழஞ்சு பொன் விலை ரூ 178 ஆகும். பத்தாம் நூற்றாண்டில் ஒரு கழஞ்சு பொன்னைக் கொண்டு 15 கலம் நெல் வாங்க முடிந்ததைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இதனால், அக்காலத்தில் ஒரு கலம் நெல் 12 ரூபாய்க்கு விற்கப்பட்டிருக்க வேண்டுமெனத் தெரிகிறது.

[12] 264 of 1913: A. R. E. 1914: Pt. 2. para. 17.
[12a] S. I. I., III, No. 212.

**கூலி வகை**

கோயில்களில் பணி புரிந்த ஊழியருக்குக் கொடுக்கப்பட்ட கூலிகளைப்பற்றி நாம் அறியமுடிகிறது. அவர்களுக்குப் பணமாகவோ, நெல்லாகவோ, இரண்டும் கலந்தோ கூலி கொடுக்கப்பட்டு வந்தது. நாற்பது கலம் முதல் 200 கலம் வரை விளைச்சலைத் தரும் நிலங்கள் அவர்களுக்குச் சீவிதமாக அளிக்கப்பட்டிருந்தன. வெண்கொற்றக் குடை பிடிப்போனுக்கு 40 கலம் நெல்லைத் தரும் 2/5 வேலி நிலமும், முரசறைவோன், தண்ணீர் தெளிப்போன், விளக்கேற்றுவோன், சோதிடம் கூறும் இளையோன், மழித்தல் தொழில் செய்வோன் ஆகியோருக்கு 50 கலம் நெல்லைத் தரும் 1/2 வேலி நிலமும் சீவிதமாகக் கொடுக்கப்பட்டது, இசைவாணர், இளந் தச்சன் முதலியோருக்கு 75 கலம் விளைச்சல் தரும் ¾ வேலி நிலம் கொடுக்கப் பட்டது. சங்கு ஊதுவோன், தலைமைக் குயவன், சலவைத் தொழிலாளி, சோதிடம் பார்க்கும் முதியவன், தையற்காரன், ஆடைகளில் பூவேலை செய்வோன், கண்காணிக்கும் பொற்கொல்லன் ஆகிய அனைவரும் 100 கலம் விளைச்சல் தரும் ஒரு வேலி நிலத்தைச் சீவிதமாகப் பெற்றிருந்தனர். துணைக் கரணத்தான், முரசறைவோரில் மூத்தவன், நகைகளில் கல்லிழைப்போன், தலைமைத் தச்சன் ஆகியோர் 150 கலம் விளைச்சலைத் தரும் 1 1/2 வேலி நிலத்தை தத்தம் தொழிலுக்குரிய சீவிதமாகப் பெற்றிருந்தனர். கணக்கனும், இசை பாடும் கணிகையர் கண்காணிப்பாளரும் 200 கலம் விளைச்சலைத் தரும் இரண்டு வேலி நிலத்தைத் சீவிதமாகப் பெற்றிருந்தனர்.[13] இக் கூலி முறையை நோக்குகின்ற பொழுது ஒரு நாளைக்கு ஒரு தொழிலாளி சராசரி நான்கு நாழி நெல்லுக்குக் குறையாமல் கூலி பெற்று வந்தான் என்பது புலனாகின்றது.

திருவாமாத்தூரிலுள்ள இராசராசன் காலத்திய கல்வெட்டு ஒன்றில், கோயில் நிலத்தைப் பயிரிட்டவரிடம் இருந்து கி.பி. 1010 வரை கோயிலுக்கு நெல்லை அளந்த பள்ளிகளுக்குக் கொடுக்கப்பட்ட கூலியைப்பற்றிய குறிப்பு காணப்படுகிறது. ஒரு கலம் நெல்லை அளந்து கொடுப்போருக்கு அரை நாழி நெல் கூலியாகக் கொடுக்கப்பட்டது.[14]

நாள் கூலிக்கு வேலை செய்த மக்கள் பலர் அக்காலத்தில் இருந்தனர். அவர்கள் பெரிதும் வயல்களில் வேலை செய்தனர்; இரு நாழி நெல்லையே கூலியாகப் பெற்றனர். தோட்டங்களில்

[13] S. I. I, Vol. 2, No 66: S. I. I, Vol, 3; No, 4
[14] 16 of 1922.

கூலிவேலை செய்தவரும் இருந்தனர். கோயில்களின் பூந்தோட்டங்களில் ஆண்டு முழுவதும் கூலி வேலை செய்தவர்களைப்பற்றி இராசராசனுடைய கல்வெட்டுகள் சில செய்திகளைத் தெரிவிக்கின்றன. ஒரு மரக்கால் இரண்டு நாழி நெல் ஒரு மாதத்திற்கு ஒரு தோட்ட வேலையாளுக்குக் கூலியாகக் கொடுக்கப்பட்டது. ஏழு பாடகம் பரப்பளவு கொண்ட தோட்டமொன்றில் ஆண்டு முழுவதற்கும் அத்தகைய கூலியாட்கள் எண்மர் தொடர்ந்து வேலை செய்து வந்தனர்; ஆறுமா பரப்பளவு உடைய மற்றொரு தோட்டத்தில் இரண்டு பேர் ஆண்டு முழுவதும் கூலி வேலை செய்தனர்.[15]

## நாணயங்கள்

### பொற்காசு

இராசராசன் காலத் ாணயங்கள் சில கிடைத்துள்ளன. அவை, பெரிதும் செப்புக் காசுகளாக உள்ளன. பொற்காசு சில அருகிய வழக்காக உள்ளன. மதுராந்தக தேவன் மாடை, இராசராசன் மாடை[16] என்னும் பொற்காசுகள் அக்காலத்தில் புழக்கத்தில் இருந்தன. மாடை என்பது ஒரு கழஞ்சு(நாற்பது குன்றிமணி) எடையுள்ளது; ஒன்பதரை மாற்றுடையது என்று தெரிகிறது. குறிப்பிட்ட அரசன் தன் ஆட்சிக் காலத்தில் வழங்கிய காசினை, 'அன்றாடு நற்காசு' என்றும், புழக்கத்திலிருக்கும் முந்தைய காசுகளைப் 'பழங்காசுகள்' என்றும் வழங்கினர்.

### ஈழக்காசு

இவை அல்லாமல், ஈழக்காசுகள்[17] சோழ நாட்டில் வழக்கிலிருந்தன. அவை, ஈழநாட்டு அரசர்கள் வழங்கிய காசுகளாகும். அவை அரைக் கழஞ்சு எடையும், ஒன்பதரை மாற்றும் உடைய பொன் நாணயங்களாகும்.

### அக்கம்

**சோழ நாராயணன்** என்ற பெயருடைய வெள்ளி நாணயம் இராசராசன் காலத்தில் வழக்கில் இருந்தது. அக்கம் என்னும் பெயருடைய காசு இராசராசன் காலத்தில் பெருவழக்கில் இருந்ததைக் கல்வெட்டுகளால் நாம் அறிகிறோம். தஞ்சைப்

[15] 172 of 1915; 45 of 1925.
[16] Desikachari, T. south Indian Coins, p. 69.
[17] 141 of 1902 Appx. B.

பெரிய கோயிலில் உள்ள மன்னர் மன்னனின் கல்வெட்டொன்று 'திருப்பள்ளித் தாமத்துக்கு நிசதம் அக்கம் அரையாக ஓராட்டைக்கு அக்கம் நூற்று எண்பது. இவை காசு ஒன்றுக்கு அக்கம் பன்னிரண்டாக வந்த காசு பதினைஞ்சும்' என்று குறிப்பிடுகிறது.[18]

## செப்புக்காசுகள்

இராசராசன் காலத்தில் வழங்கப்பட்ட செப்புக் காசுகள் ஈழத்தின் பல பகுதிகளில் கிடைத்துள்ளன. அவை நல்ல வேலைப் பாடுடையன, அவை அகன்றும், ஒரே சீரான வட்ட வடிவ அமைப்பும் உடையன. அரசனின் நிற்கும் வடிவமும், அதை யடுத்து குத்துவிளக்கும் பொறிக்கப்பட்டுள்ளன. மற்றொரு பக்கத்தில் தீக்குண்டத்தில், தனது வலது கையால் அரசன் அவிப் பொருளை இடுவதைப் போன்ற வடிவமும், அதையடுத்து செங்குத்தான நிலையில் மீனின் வடிவமும் செதுக்கப்பட்டுள்ளன. இத்தகைய காசுகள் மிகக் குறைவாகவே கிடைத்துள்ளன. இவை சோழ பாண்டியரின் கூட்டணியையோ, பாண்டியரின் மீது சோழர் பெற்ற வெற்றியைத் தெரிவிப்பனவாகவோ வெளியிடப் பட்டிருக்க வேண்டும்[19] என்பர்.

இராசராசனுடைய காசுகள், சோழப் பேரரசின் பல்வேறு பகுதிகளிலும் புழக்கத்தில் இருந்தன. மேலைச் சாளுக்கிய நாட்டிலும், கதம்பர்களின் கோவாவிலும் பேரளவிற்கு அவை கிடைத்துள்ளன.

## அளவைகள்

### நிறுத்தல் அளவை

பலவகைப்பட்ட அளவை முறைகள் அக்காலத்தில் வழக்கிலிருந்தன. அவை முறையே எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் முறைகளை அடிப்படையாகக் கொண்டிருந்தன. மணிகளும் பொன்னும், வெள்ளியும் போன்றவற்றை எடுத்தலளவையில் களஞ்சு, மஞ்சாடி, குன்றி என்னும் அரச முத்திரையிட்ட குடிஞைக் கல்லால் நிறுத்தனர். செம்பு, பித்தளை, வெண்கலம், தரா என்னும் உலோகங்களும், சர்க்கரை, கடுகு, மிளகு, புளி என்னும் உணவுப்பொருள் வகையைச் சேர்ந்தனவற்றையும்

18 141 of 1912; 484 of 1925.
19 Biddulph, C. H.: Coins of the Cholas, P. 33.

நிறைக் கல்லால் நிறுத்தனர். கோயில் நகைகளில் இருந்த விலை மதிப்புமிக்க மணிகள் **ஆடவல்லான்** என்னும் கல்லால் நிறுக்கப் பட்டன.

''இனி, செம்பு, பித்தளை, 'செப்புக்குடம் ஒன்று நிறை மூவாயிரத்து எண்பத்து முப்பலம்' என்றாற்போல எத்துணையாயி னும் பலத்தால் நிறுக்கப்பட்டனவே யன்றி, இற்றை நாளையில் வழங்கும் சேர், வீசை, துலை முதலியவற்றால் நிறுக்கப் பெறாமை யின், இந் நிறுத்தற் கருவிகள் அக்காலத்தில் வழக்கில் இல்லை'' என்பதை நாம் உய்த்துணரலாம் என்பர் அறிஞர் சிலர்.

**முகத்தலளவை**

முகத்தலளவைக் கருவிகள் பல வழக்கில் இருந்தன. நெல் அரிசி, பயறு, பருப்பு, உப்பு, நெய், பால், தயிர் முதலியன செவிடு, ஆழாக்கு, உழக்கு, உரி, நாழி, குறுணி, பதக்கு, தூணி, கலம் என்ற முகக்குங் கருவிகளால் அளக்கப் பெற்றன. அரச முத்திரையிட்ட மரக்காலுக்கு **இராசகேசரி** என்பது பெயர். அதற்குச் சமமான மரக்கால் ஒன்று இராசராசன் காலத்தில் வழக்கில் இருந்தது. இதற்கு **ஆடவல்லான்** என்பது பெயர். பெரும்பாலும் தலைநகரத்திலும், கோயிலிலும் இம்மரக்கால் வழக்கில் இருந்திருக்கலாம். மற்றொரு வகை மரக்காலுக்கு **அருண்மொழி** என்னும் பெயரும் வழங்கிற்று. **வீதிவிடங்கன்** என்பது இராசராசன் காலத்தில் வழங்கிய வேறொரு வகை மரக்காலுக் குரிய பெயராகும்.[20]

**நீட்டலளவை**

இவையல்லாமல் நீட்டல் அளவைக் கருவிகளும் இருந்தன. அவை தோரை, விரல் சாண், முழம் என்பன. அதனை 'இரு முழமே, ஒரு விரலே, இரண்டு தோரை நீளமும்' என்னும் கல் வெட்டுப் பகுதியால் அறியலாம். இவ்வளவை முறையின் பெரிய அளவு, கோல் எனப்பட்டது. பொதுவாகக் கோலின் நீளம் பன்னிரண்டு அடிகளாகும். நிலம் வேலி, மா, குழி, செறு என்னும் அளவை முறையால் கணக்கிடப்பட்டது.

[20] 21 of 1922.

## இராசராசன் காலத்திய அளவை முறை

### (1) நிறுத்தல் அளவை[21]

2 குன்றி = 1 மஞ்சாடி,
20 மஞ்சாடி = 1 கழஞ்சு ( 68 முதல் 72 தானிய எடை)

### (2) நீட்டல் அளவை[22]

8 தோரை = 1 விரல்
12 விரல் = 1 சாண்
2 சாண் = 1 முழம்
8 முழம் = 1 கோல்

### (3) முகத்தல் அளவை[23]

5 செவிடு = 1 ஆழாக்கு
2 ஆழாக்கு = 1 உழக்கு
2 உழக்கு = 1 உரி
2 உரி = 1 நாழி
8 நாழி = 1 குறுணி
2 குறுணி = 1 பதக்கு
2 பதக்கு = 1 தூணி (காடி)[24]
3 தூணி = 1 கலம்

21 S. I. I., Vol 2; pt. I; P. 8.
22 Ibid: p. 48
23 Ibid: P. 10.
24 219 of 1921 (Rajaraja-22)

# 20. சமய நிலை

பல்லவர் காலத்தில் பக்தி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. அதன் விளைவாகப் பல நிலைத்த பயன்கள் உண்டாயின. இறைவனை இடையறாத பக்தியோடு வழி படுவதே சிறந்த சமய நெறியாகக் கருதப்பட்டது. கல்வி யறிவில்லா மக்களும் வீடு பேறு அடைவதற்குதவும் சிறந்த வழி பக்தி நெறி என்னும் கொள்கை மக்களுடைய உள்ளங்களில் நன்கு வேரூன்றியிருந்தது. இறை வழிபாட்டிற்குரிய திருக் கோயில்கள் சில கற்றளிகளாக்கப்பட்டன; பல புதியன வாகக் கட்டவும் பட்டன. சங்கராச்சாரியரின் அரிய பணியினால் பௌத்த சமயம் பொலிவிழந்து போயிற்று. ''ஆனால் அதன் விளைவாக மக்களுக்குக் கடவுள்மாட்டு பக்தி குறைந்து வந்தது. வெறும் தருக்க வாதமாகவும் அறிவு நிலையில் மட்டும் உணரக் கூடியதாகவும் இருந்த வேதாந்தமானது, மக்களிடையே கடவுள் பற்றைத் தோற்றுவிக்கவும் அறத்தாறு ஒழுக்கங்களை வளர்க்கவும் போதுமானதாகக் காணப்படவில்லை. ஆகவே, சைவமும் வைணவமும் கோயில்களின் அமைப்பிலும், சமய இலக்கிய வளர்ச்சியிலும் மக்கள் கருத்தை ஈர்க்கும் நோக்கத்தில் கருத்தை''ச் செலுத்தின. அதன் பயனாகச் சைவ சித்தாந்தம், விசிட்டாத்துவிதம் என்னும் இருவகைக் கோட்பாடுகள் அளவை நூல் முறையில் ஆராயப்பட்டன. மும்மூர்த்திகளைப் பற்றிய கொள்கை அன்றைய சமயத்தில் ஏற்றுக்கொள்ளப் பட்டது.

### சிவ வழிபாடு

இத்தகைய சூழ்நிலை சமயத் துறையில் நிலவிய காலத்தில், இராசராசன் தமிழகத்தை ஆளும் பொறுப்பை ஏற்றான். சைவ சமயமும் வைணவ சமயமும் தமிழகத்தின் இருபெரும் சமயங்களாகச் சிறப்புற்றோங்கின. இடைக்காலச் சோழ மன்னர் யாவரும் சைவ சமயத்தைச் சார்ந்தவர்களாக இருந்தனர். இராசராசனின்

மூதாதையர் சிவ நெறியைப் போற்றிப் பரப்புவதில் பேரீடுபாடு கொண்டிருந்தனர். சோழப் பேரரசிற்குக் கால்கோள் விழா நடத்தியவன் ஆதித்த சோழன். காவிரியின் இரு கரைகளிலும் இருந்த பழைய செங்கற்களாலான சிவன் கோயில்களைக் கருங்கற் கோயில்களாக அவன் மாற்றினான்.[1] ஆதித்தனுடைய மகனான முதற் பராந்தகன் தில்லைச் சிற்றம்பலத்தில் பொன் வேய்ந்தான்.[2] அவனுடைய மூத்த மகனான இராசாதித்தன் திருநாவலூரில் சிவன் கோயில் ஒன்றை எழுப்பினான்.[3] அவன் தம்பியான கண்டராதித்த சோழர் திருப்பழனத்திற்குப் பக்கத்தில் கண்டராதித்த சதுர்வேதி மங்கலம் என்னும் ஊரை உண்டாக்கினார். அங்கு ஒரு சிவன் கோயிலை அவர் கட்டினார்.[4] இவ்வரசனுடைய மனைவியான செம்பியன் மாதேவியார் திருக்கோயில் திருப்பணிகள் பலவற்றைச் செய்துள்ளார். இவ்வம்மையார், ஆதித்தனைப் பின்பற்றிப் பாடல் பெற்ற கோயில் சிலவற்றைக் கற்றளியாக மாற்றினார். அவை திருத்துருத்தி, திருக்கோடிகா, ஆரூர் அரநெறி, திருக்கரை, திருமுதுகுன்றம், தென்குரங்காடுதுறை, திருநல்லம், ஆனுங்கர் என்னும் ஊர்களில் உள்ள திருக்கோயில்களாகும்.[5] இவர் பல கோயில்களுக்குப் பொன், வெள்ளிப் பாத்திரங்களையும், நகைகளையும் விளக்குகளையும் நிவந்தமாக அளித்துள்ளார். இவற்றோடு பல வேலி நிலங்களை அக்கோயில்களுக்கு இவர் மானியமாகவும் வழங்கியுள்ளார். இத்திருப்பணிகளோடு அமையாது, தம் பெயரால் 'செம்பியன் மாதேவி' என்னும் ஓர் ஊரை அமைத்து, அதில் ஒரு சிவன் கோயிலையும் அவர் எழுப்பியுள்ளார். அக்கோயிலில் கண்டராதித்தனைச் சிவலிங்கமாக அமைத்து அவர் வழிபடுவதை உணர்த்தும் படிமம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

### பேரரசனின் பெரும் பணி

தம் முன்னோர்களைப் போன்றே இராசராசனும் திருக்கோயில் திருப்பணியில் பேரார்வம் காட்டினான். ஆறு ஆண்டுகள் அரிதின் முயன்று தஞ்சைப் பெரிய கோயிலை அவன் கட்டிய வரலாற்றை, நாம் முன்னரே கண்டோம். அக்கோயிலில் தெய்வத் திருமேனிகளையும் நாயன்மாரின் படிமங்களையும் அவன் எழுந்தருளச் செய்தான்; ஒவ்வொன்றுக்கும் விலையுயர்ந்த நகைகள் அணிவித்தான்; நாள் வழிபாட்டிற்கும் திரு விழாக்களுக்கும் பல ஊர்களை மானி

1 Epi. Ind. Vol. 15; P. 47.
2 A. R. E. 1906, P. 69.
3 333-350 of 1902.
4 201 of 1929.
5 75, 103 of 1926; 33 of 1931; 571. 200 of 1904; 47 of 1919.

யங்களாக வழங்கினான். அவனுடைய குடும்பத்தினரும், அரசியல் அதிகாரிகளும் அரசனைப் பின்பற்றி அக்கோயிலில் அளவில்லா அறக்கட்டளைகளை அமைத்தனர். அக்கோயிலில் இசையையும், நாட்டியத்தையும் வளர்க்கத் தமிழகத்தின் பல கோயில்களி லிருந்து 400 பதியிலாரைத் தஞ்சையில் அவன் குடியேற்றினான். ஒவ்வொருத்திக்கும் ஒரு வீடும், ஒரு வேலி நிலமும் கொடுக்கப் பட்டன.[6]

## அரச குரு

பண்டைத் தமிழகத்தில் சமய குருமார்கள் அரசவையில் ஆதிக்கம் பெற்ற அரச குருமார்களாக விளங்கியதில்லை. பாண்டிய மன்னருக்கு அகத்தியர் அரச குருவாக இருந்தார் என்னும் கதை இடைக்காலத்தின் தொடக்கத்தில் ஆட்சி புரிந்த பாண்டிய மன்னரின் செப்பேடுகளில் காணப்படுகிறது. ஆனால், இதற்குச் சங்க இலக்கியத்துள் சான்றுகளில்லை.

இராசராசன் காலத்தில் தென்னிந்தியச் சைவ சமயிகளுக் கும் வடநாட்டுச் சைவ சமயத்தினருக்கும் நெருக்கமான தொடர் புண்டாயிற்று. கங்கைக் கரையில் சிறப்புற்று விளங்கிய சைவ சமய குருமார்கள் சிலர் தஞ்சைக்கு வரவழைக்கப்பட்டனர்; தஞ்சைப் பெரிய கோயிலில் பூசை செய்யும் பொறுப்பு மிக்க பதவியில் அவர்கள் அமர்த்தப் பெற்றனர். அவர்களுள் இராச ராசன் காலத்தில் **ஈசானசிவம்** என்பவர் சிறப்புற்று விளங்கினார். இவரை, இராசராசன் அரச குருவாகப் போற்றி மதித்தான் என்று கருத இடமுண்டு. இப்பேரரசனுடைய மகனான இரா சேந்திரன் காலத்தில், தஞ்சைப் பெரிய கோயிலில் சர்வ சிவ பண்டிதர் என்னும் குரு பூசை புரிந்து வந்தமையும், அவருக்கும் அவருடைய சீடர்களுக்கும் 'ஆசாரிய போகம்' விடப்பட்டமை யும் கல்வெட்டுகளால் தெரிய வருகின்றன;[7] இதனாலும், சோழ அரசருக்குக் குருவாகச் சிலர் விளங்கியமை புலனாகின்றது.

## சைவத்தின் பிற கிளைகள்

வடநாட்டுச் சைவ சமயத்தின் பிரிவுகளான காபாலிகம், பாசுபதம், காளாமுகம் என்பனவற்றைத் தழுவிய துறவிகளும் அக்காலத்திய தமிழகத்தில் வாழ்ந்தனர். பொதுவாக, அவர் களைச் 'சிவயோகிகள்' என்று சுட்டுவது வழக்கமாக இருந்தது.

[6] 357 of 1907 & 626 of 1909,
[7] S. I. I., Vol. 2: No. 20.

அவர்களுள் காளாமுகக் கிளையைச் சேர்ந்தவர்கள் செல்வாக்கு மிக்கவராக விளங்கினர். சிவன் கோயில்களுக்கு வழங்கப்பட்ட நிவந்தங்களை நிருவகிக்கும் பொறுப்பில் காளாமுகத் துறவிகள் சிலர் விளங்கினர்.

இரண்டாம் பராந்தக சோழனுடைய ஆட்சிக் காலத்தில் கொடும்பாளூர் குறுநில மன்னரான விக்கிரமகேசரி, தம் தலை நகரில் 'மூவர் கோயிலைக்' கட்டினார். அதையடுத்து அவர் ஒரு மடத்தை நிறுவினார். வடமதுரை (மத்துரா)வில் சிறப்புற்று விளங்கிய ஆத்திரேய கோத்திரத்தைச் சேர்ந்த வேதவல்லுநரான வித்தியாராசி என்னும் குருவை வரவழைத்து அம்மடத்திற்குத் தலைவராகக் கொடும்பாளூர் வேளார் அமர்த்தினார்.[8] அத்தலைவர் பழுத்த காளாமுகச் சைவர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. அவர் வழிவந்தோர் இராசராசன் காலத்தில் நாட்டின் பல பகுதி களில் சமயத் தொண்டாற்றி வந்தனர்.

### திருமுறைகள் தொகுப்பு

இராசராசன் சைவ சமயத்தின் வளர்ச்சிக்கு ஆற்றிய அரும் பணிகளுள் தலை சிறந்தது திருமுறை கண்டதாகும். திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி என்னும் பெரியாரைக் கொண்டு, சைவ சமயத்தின் திருமறையாகிய தேவாரத் திருப்பதிகங்களைத் தொகை வகை செய்து, உலகிற்கு உதவிய பெருமை அவனையே சாரும்.

### திருப்பதியம் ஓதுதல்

அவன் காலத்திற்கு முன்பே, சில கோயில்களில் திருப்பதிகம் ஓதப்பட்டு வந்தன. இதை நாம் கல்வெட்டுகளால் அறிகிறோம்.[9] ஆனால் அவை அந்தந்தக் கோயிலுக்குரிய தேவாரப்பாடல் களாகும். ஆனால், இராசராசனுடைய இத்திருப்பணியால், நாயன்மார்கள் காதலாகிக் கசிந்துருகி, இறைவனுடைய திருவருட்பேற்றினைப் புகழ்ந்து பாடிய பாடல்கள் நாட்டு மக்களிடையே நன்கு பரவத் தொடங்கியது அதன் மூலம் சைவ சமயப் பற்றும், பக்தியும் ஆக்கமும் ஊக்கமும் பெற்றன. பல கோயில் களில் திருப்பதியம் ஓதுவதும், மக்கள் அதைக் கேட்டுக் கசிந்துருகு வதும் அன்றாட நிகழ்ச்சியாயின.

[8] Ins. of Pudukkottai State, No. 14
[9] S. I. I. Vol. 3; p. 93; 99 of 1929; 104 of 1929 etc

தஞ்சைப் பெரிய கோயிலில் இறைவன் திருமுன்னர் திருப்பதிகம் விண்ணப்பஞ் செய்வதற்காக இசைத் தமிழில் வல்லார் நாற்பத் தெண்மர், உடுக்கை வாசிப்பான் ஒருவன், கொட்டி மத்தளம் கொட்டுவான் ஒருவன் ஆக ஐம்பதின்மர் அமர்த்தப் பெற்றனர். இவ் வைம்பதின்மருக்கும் நாள் தோறும் முக்குறுணி நெல் ஊதியமாகக் கொடுக்கப்பட்டது. இவர்களைப் பிடாரர் (பட்டாரகர்) என்று கல்வெட்டு சுட்டுகிறது. இவ் வைம்பதின்மருடைய பெயர்களிலும் சிவன் என்னும் பட்டப் பெயர் அணி செய்தது. இராசராச பிச்சனுன சதாசிவன், மகாதேவன் திருஞான சம்பந்தனுன ஞானசிவன் என்பன பெயர்கள் இதைத் தெரிவிக்கும்.[10] இவர்கள் யாவரும் பிராமண வகுப்பைச் சேர்ந்தவராவர். இறைவன் முன்னிலையில் தமிழ்ப் பாடல்களை ஓதி வழிபாடு செய்யும் நிலை, இராசராசன் காலத்தில் வழக்கில் இருந்தமை இங்குக் கருதத் தக்கதாகும். இவர்கள் அல்லாமல் கானபாடி, ஆரியம்பாடுவாரும், தமிழிசை பாடுவாரும் திருக்கோயில்களில் பணிபுரிந்தனர்.

## சிவனின் பல்வேறு மூர்த்தங்கள்

சைவ சமயத்தினர் இறைவனைப் பல்வேறு மூர்த்தங்களில் வணங்கிப் போற்றினர். சிவலிங்க வழிபாடு பெருவழக்காகும். சந்திரசேகரர், கல்யாண சுந்தரர், உமா மகேசுவரர், நடராசர். தட்சணமூர்த்தி, பிச்சாடணர் போன்ற திருமேனிகள் சிற்பங்களாகவும் சிலைகளாகவும் கோயில்களில் இடம் பெறலாயின. சைவ சமயத்தில், பல்லவர் காலத்திலேயே அம்பலவாணரின் திருக்கூத்து தத்துவம் வளர்ச்சியுற்றது. ஆயினும், இராசராசன் காலத்திலேயே அது சிற்பத்திலும் ஓவியத்திலும் மலர்ச்சியுற்றது. திருக்கோயில் அமைப்பு முறைகளையும். வழிபாட்டு நெறிகளையும் எடுத்துரைப்பன ஆகமங்கள். அவை, சோழர் காலம் முதற் கொண்டு தமிழகத்தில் நன்கு பரவலாயின. அதனல், சைவ சமயத்திற்குப் புதியதோர் பொலிவும், வலிவும் உண்டாயிற்று. சைவ சமய குரவர்கள் நால்வரும் தம் பாடல்களின் மூலம் சிவ வழிபாட்டையும், நடராச தத்துவத்தையும் பல்லவர் காலத்திலேயே நாட்டு மக்களிடை நன்கு பரப்பினர். எனினும், அவர்களுடைய தமிழ் மறையில் பொதிந்து கிடந்த மெய்ப்பொருள் கருத்துகளைத் தனியே அகழ்ந் தெடுத்து, சிலைகளில் வடித்துத் தந்த சிறப்பு இராசராசனுக்கும், அவன் வழி வந்த சோழ மன்னர்க்குமே யுரியதாகும்.

[10] S. I. I. Vol. 2; Pt. 3; No. 65.

### நடராசத் திருமேனி

இறைவனுடைய ஐந்தொழில் தத்துவமே அம்பலவாணரின் திருக்கூத்தில் அமைந்துள்ள உட்பொருளாகும். அம்பலவாணரின் திருவுருவத்தில் அமைந்துள்ள உடுக்கை படைப்பைக் குறிக்கிறது; அருட்கை அளிக்கும் தொழிலைக் குறிக்கிறது; தீ, அழித்தல் தொழிலைச் சுட்டுகிறது; ஊன்றிய திருவடி மறைப்பையும் தூக்கிய திருவடி அருளுந் தொழிலையும் புலப்படுத்துகின்றன.[11] இவ்வைந் தொழில் தத்துவத்தின் விளக்கங்களாகவே திருமுறைகளும் சித்தாந்த சாத்திரங்களும் அமைந்துள்ளன.

தில்லைத் திருச்சிற்றம்பலம் என்று சிதம்பரத்தில் உள்ள நடராசப் பெருமானின் திருக்கோயில் போற்றப்படுகிறது. அது இராசராசன் காலத்திற்கு முன்பிருந்தே சீரும் சிறப்பும் பெற்றுத் திகழலாயிற்று. ஆதித்த சோழன் திருச்சிற்றம்பலத்திற்குப் பொன் வேய்ந்தான். அவன் வழி வந்த பிற சோழ மன்னர்களும் சிதம்பரம் நடராசப் பெருமானிடத்துப் பேரீடுபாடு கொண்டிருந்தனர். இதனால், நாட்டின் பல பகுதிகளில் இருந்த சிவன் கோயில்களிலும், புதிதாகக் கட்டப்பட்ட சிவன் கோயில்களிலும் நடராசப் பெருமானுடைய மூர்த்தத்தில் சிவ வழிபாடு சிறப்புறலாயிற்று. தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள ஆடவல்லான் திருமேனியும், திருநல்லம் எனப்பட்ட கோனேரிராச புரத்தில் செம்பியன் மாதேவியால் கற்றளியாக கட்டப்பட்ட ஸ்ரீ கண்டராதித்தன்' என்னும் கோயிலில் உள்ள அம்பலவாணரின் திருமேனியும் கவின்மிகு கலையழகிலும், காண்பவர் உள்ளத்தைக் கவரும் தெய்விக ஆற்றலிலும் ஒப்புயர்வற்றனவாகும். இராசராசன் சகம் 926 (கி. பி. 1004) இல் தில்லைச் சிற்றம்பலத்திற்குப் பல நிவந்தங்கள் வழங்கினான் என்று 'கொங்கு தேச ராசாக்கள்' என்னும் நூல் கூறுகிறது. இதைப்பற்றி வேறு சான்றுகள் கிடைக்கவில்லை.

### மூவர் வழிபாடு

இக்காலத்தில் தேவாரம் பாடிய மூவர் முதலிகளின் படிமங்களைக் கோயில்களில் எழுந்தருளச் செய்து, வழிபாடு செய்யும் பழக்கம் உண்டாயிற்று. மற்றும் மெய்ப்பொருள் நாயனார், சிறுத்தொண்டர் போன்றோருடைய சிலைகளும் கோயில்களில் இடம் பெறலாயின. சைவ நாயன்மார்களின் பெயர்களை, மக்கள் தங்கள் குழந்தைகளுக்கு இட்டு வழங்குவது பெரு வழக்காக இருந்தது.

11 உண்மை விளக்கம் 36

## திருமால் வழிபாடு

இராசராசன் சிவ நெறியைச் சார்ந்தவனாக விளங்கினான். ஆயினும், மக்கள் மேற்கொண்டு ஒழுகிய சமயங்கள் அனைத்தை யும் அவன் பரிவுடன் போற்றி ஆதரித்தான். பக்தி நெறியின் மற்றொரு கிளையாக வைணவ சமயம் தமிழகத்தில் சிறப்புற்றிலங் கியது. இராசராசன் காலத்தில், வைணவ சமய ஆசாரியர் திவ்வியப் பிரபந்தத்தை முழு நிறைவுடைய திரு நூலாகச் செய்து மக்களிடையே பரப்பி வந்தனர். இத் திருப்பணியைச் செய்தவர் நாதமுனி என்னும் வைணவப் பெரியாராவார். இராசராச னுடைய தந்தையின் காலத்தில் வழங்கப்பட்ட அன்பில் செப் பேட்டில் குறிக்கப்படும் 'ஸ்ரீ நாதர்' என்பவர் நாதமுனி யடி களாகவே இருத்தல் வேண்டும் என்பது வரலாற்று அறிஞரின் கருத்தாகும்.[12] அவர் பிறந்த ஊரின் பெயர் வீரநாராயணபுரம். இராசராசனுடைய தந்தையான இரண்டாம் பராந்தக சோழ னுக்கு 'வீரநாராயணன்' என்னும் சிறப்புப் பெயர் வழங்கியமை இங்கு நினைவு கூர்தற்குரியதாகும்.

## திவ்வியப் பிரபந்தம்

இராசராசன் காலத்தில், உக்கல் என்னும் ஊரில் பொறிக்கப் பட்ட கல்வெட்டு ஒன்றில், திருமாலினைத் 'திருவாய் மொழித் தேவர்' என்று சுட்டும் வழக்கம் காணப்படுகிறது.[13] மற்றும் இப் பேரரசனின் மகனாகிய முதலாம் இராசேந்திரன் காலத்தில், உத்தரமேரூரில் உள்ள திருமால் கோயிலில் பூசை நடைபெறும் சமயத்தில் 'திருப்பதியம்' ஓதப்பட்ட செய்தியை இரு கல்வெட்டு கள் தெரிவிக்கின்றன. பூசை நடைபெறும் சமயத்தில் நம்மாழ் வாரின் திருவாய் மொழியைத் தவறாமல் ஓதுவதற்கு மூன்று ஸ்ரீ வைணவர்கள் நியமிக்கப்பட்டு, அவர்களுக்குத் தேவையான பொருள் வசதிக்காக அறக் கட்டளைகள் அமைக்கப்பட்டதையும் அக் கல்வெட்டுகளால் அறிகிறோம்.[14] இவற்றிலிருந்து இராச ராசன் காலத்தில் சைவத் திருமுறைகள் தொகை வகைப்படுத்தி அடங்கன்முறை யாக்கப்பட்டதைப் போன்று, வைணவ சமயத் திரு நூலான நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமும் இராசராசன் காலத்திற்குச் சற்று முற்பட்ட காலத்தில் முறைப்படுத்தப்பட் டிருக்கக் கூடும் எனத் தோன்றுகிறது. மற்றும் இம்மன்னர் மன்ன னுடைய ஆட்சிக் காலத்தில் சிவன் கோயில்களிலும் திருமால்

12 Nilakanta Sastri K. A. : The Cholas, P. 638.
13 S. I. I. Vol 3; P. 5.
14 1761, 181 of 1923; 194 of 1923

கோயில்களிலும் தமிழ் மறைகளான தேவாரமும் திவ்வியப் பிரபந்தமும் 'திருப்பதிகங்கள்' என்னும் பொதுப் பெயரோடு ஓதப்பட்டு வந்தமையும் புலனாகின்றது.

இவையல்லாமல், திவ்வியப் பிரபந்தத்தை அடியொற்றி, யாரோ ஓர் அருட் செல்வரால், 'கோலனார் குழல்' என்னும் தொடக்கத்தோடு இயற்றப்பட்ட திருப்பதியம் ஒன்று திருமால்புரம் திருக்கோயிலில் கி.பி. 995 இல் ஓதப்பட்டு வந்த செய்தியை ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது.[15] ஆழ்வார்களுடைய பாசுரங்கள் மக்களுடைய உள்ளங்களில் ஆழப்பதிந்திருந்தன. அவற்றைப் போல உள்ளத்தை உருக்கும் பக்திப் பாடலை அக்கால திருமால் அடியார்கள், தாங்களாகவே இயற்ற முயன்றும் உள்ளனர் என்பதை இக்கல்வெட்டுச் செய்தி தெரிவிக்கிறது. சைவ நாயன்மார்களுடைய திருப்பதிகங்களும், வைணவ ஆழ்வார்களுடைய பாசுரங்களும் ஒத்த நிலையில் நாட்டில் நன்கு பரவியிருந்தமை, அச் சமயங்கள் பெற்றிருந்த பெருவாழ்வை உணர்த்துகிறது.

**வேத பாராயணம்**

இராசராசனுடைய பதினைன்காம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு ஒன்று, பண்டாரவாடை என்னும் ஊர்த் திருக்கோயிலில், மார்கழித் திருவாதிரைத் திருவிழாவின் பொழுது நடைபெற்ற வேத ஒப்புவித்தல் போட்டி ஒன்றைக் குறிப்பிடுகிறது. திருவாதிரைத் திருநாள் இரவு, ஜைமினீய சாம வேதத்தின் குறிப்பிட்ட ஒரு பகுதியை ஒப்புவிக்கின்றவருள் சிறந்தவருக்குப் பரிசு அளிப்பதற்கு ஓர் அறக்கட்டளை நிறுவப்பட்ட செய்தியும் இங்குக் குறிப்பிடப் தக்கதாகும்.[16]

இராசராசனுடைய தந்தையின் பெயரால், எண்ணாயிரம் என்ற ஊரில் சுந்தர சோழ விண்ணகர் என்னும் திருக்கோயில் சிறப்புற்று விளங்கியது. இத்திருமால் கோயிலுக்கு, இராசராசன் காலத்தில் நிவந்தங்கள் சிலவிடப்பட்டன. அவனுடைய தமக்கை சுந்தர சோழ விண்ணகர் ஆதுரசாலை என்னும் மருத்துவ மனைக்குப் பொன்னும் பொருளும் கொடுத்து உதவியுள்ளார். இம் மருத்துவ மனை, சுந்தர சோழ விண்ணகர்[17] என்னும் திருமால் கோயிலின் சார்பில் நடத்தப்பட்டதாக இருத்தல் கூடும்.

[15] 333 of 1906
[16] 266 of 1923
[17] விஷ்ணு கிரகம் என்னும் ஆரியச் சொல்லின் திரிந்த வடிவமே 'விண்ணகரா'கும்.

திருமாலின் பல்வேறு அவதாரங்களுள், இராமன், கண்ணன் என்னும் இருவகை மூர்த்தங்களும் மக்களால் பெரிதும் போற்றி வழிபடப்பட்டன. நரசிம்ம வடிவத்திலும், வராகப் பெருமாள் வடிவத்திலும் திருமாலை வழிபடும் வழக்கமும் உண்டாயிற்று. பிடாரி வடிவில் சக்தி வழிபாடும் சிறப்புற்று விளங்கியது.

## திருக்கோயில் வழிபாடு

பல்லவர் காலத்தில் கற்றளிகளாகக் கோயில்களை அமைக்கும் முறை அரும்பிப் பையப் பைய சோழப் பெருமன்னர் காலத்தில் வளர்ச்சியுற்று, சிறந்தது. இராசராசன் காலத்தில் திருக்கோயில்கள் சமய நிறுவனங்களாக மட்டும் விளங்கவில்லை; சமுதாய நிலையங்களாகவும், பண்பாட்டுக் கருவூலங்களாகவும், கலைக் கழகங்களாகவும் அவை பொலிவுற்றன, அரசனுடைய அரண்மனைக்கு நிகரான முறையில் அவை அமைக்கப்பட்டன. மண்ணுலகக் கோமான்களின் கோயில்களைப் போன்று, விண்ணகக் கடவுளரின் திருக்கோயில்கள் கட்டப்பட்டன. அவற்றின் அமைப்பு முறை நாட்டு மக்கள் போர்க்காலங்களில் தற்காப்பிற்காக அடைக்கலம் அடையும் வலிமைமிகு கோட்டையாகவும் பயன்பட உதவியது.

## கோயில்கள் ஆற்றிய பணிகள்

சமுதாயத்தின் சிறப்புமிக்க அலுவல்கள் பலவற்றின் தலைமை நிலையமாக கோயில் விளங்கிற்று. நாட்டு மக்கள் எல்லோருக்கும் கோயில் உரித்தானது என்ற எண்ணம் அன்றைய மக்களுடைய உள்ளத்தில் ஆழ வேரூன்றி இருந்தது. அதனால் கோயிலில் நடைபெற்று வந்த அலுவல்களையும், நிகழ்ச்சிகளையும், சமுதாயத்தின் பல்வேறு நிலைகளில் இருந்த மக்கள் எல்லாரும் ஒன்றாகச் சேர்ந்து இடையறாது செய்துவந்தனர். கோயில் பணிகளில் போட்டிக்கு இடமில்லை. எனவே, பொறாமையும் பாழ் செய்யும் உட்பகையும் தோன்ற வாய்ப்புமில்லை. கோயிலில் பயன்படுத்தப்பட்ட அழகுக் கலைகளும் சமுதாய நலனை—மக்களிடையே மனிதப் பண்பாட்டை வளர்ப்பதையே— நோக்கமாகக் கொண்டிருந்தன. தெய்வத் திருமறைகளும் திருக்கோயிலில்தான் போற்றி வளர்க்கப்பட்டன. பூசை வேளைகளில் திருப்பதிகங்களையும், திவ்வியப் பிரபந்தத்தையும், வேதங்களையும் கட்டாயமாக ஓதுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தமை இதற்குச் சிறந்த சான்றாகும்.

சமுதாய வாழ்க்கையின் சிறந்த பண்பாகிய கூடிப் பணி புரியும் கூட்டு முயற்சிக்குக் கோயில் ஒரு பயிற்சிக் களமாக விளங்கியது. சிறிய அளவில் செங்கல், சுதைகளால் கட்டப்பட்டும்,

ஊரார் எல்லாரும் சேர்ந்து எளிய முறையில் வழிபாடு செய்யப் பட்டும் வந்த கோயில்கள் அருகிப் போயின. பெரிய கற்கோயில் கள் வானுற வோங்கி நின்றன. அவற்றின் அமைப்பு வேலைப் பாடு. கலையுணர்வு முதலியவற்றைப் புலப்படுத்துவதற்கு ஏற்ற தாக இருந்தது. நாட்டின் பல பகுதிகளிலும் கோயில்கள் பல எழுப் பப்பட்டன. அதனால், பல்வகைப்பட்ட சிக்கல்கள் நிறைந்த அன்றாட வழிபாட்டு முறை வளர்ந்தது. கோயில் வழிபாட்டின் தேவைகளை நிறைவேற்ற, அன்பர்கள் பலர் ஆர்வத்தோடு அறக் கட்டளைகளை நிறுவ முன்வந்தனர். இதன் பயனாகப் பொன்னும் பொருளும் நிலங்களும் கோயில்களின் கருவூலங்களை நிறைத்தன. செல்வச் செழிப்பும், வளமிக்க வாழ்வும் கோயிலைச் சார்ந்து வாழ்ந் தோரை எளிதில் அடைந்தன. கோயிலுக்கு வழங்கப்பட்ட அறக் கட்டளைகள் ஆர்வத்தோடும் பெருந் தன்மையுடனும் வழங்கப் பட்டன. அவற்றைக் கண்ணும் கருத்துமாகப் போற்றிக் காக்கும் பொறுப்பு கோயில் நிருவாகத்தினருக் குரியதாயிற்று. கோயில் கண்காணிப்பு அதிகாரிகள், தாங்கள் பெற்ற செல்வத்தைப் பய பக்தியுடன் போற்றிக் காத்தனர்.[18] மேலும், புதிய சேமிப்பு களால் நிதி நிலையை வளர்த்து, பிற்காலத் தலைமுறையினரிடம் ஒப்படைத்துச் சென்றனர்.

கோயிலில் பெருகி வளர்ந்த செல்வத்தால், அருகில் உள்ள மக்களுக்குக் கடன் கொடுத்து உதவும் பணியைக் கோயில் நிரு வாகிகள் மேற் கொண்டனர். தனி மனிதருக்கு மட்டுமல்லாமல், ஊராட்சி மன்றங்களுக்கும் கடனுதவி செய்து, வட்டி வாங்கிய செய்தியைக் கல்வெட்டுகள் பல தெரிவிக்கின்றன. இவ்வாறு பொது மக்களின் வாழ்க்கையோடு நெருக்கமான தொடர்பு கொண்டிருந்தது கோயில் வழிபாடு. மக்கள் வாழ்க்கையில் கோயில்கள் பெற்றிருந்த சிறப்பும் ஆற்றிய அரும்பணியும் இடைக் காலத் தமிழகத்தின் வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத்தக்க செய்திகளாகும்.

இத்தகைய சிறப்புமிக்க கோயில் நிருவாகத்திற்குச் சிறந்த தோர் எடுத்துக் காட்டாக இராசராசன் எடுப்பித்த தஞ்சைப் பெருவுடையார் கோயில் விளங்கியது. அக்கோயில் நிருவாக முறையின் ஒவ்வொரு பகுதியும், அதனை மக்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு கூறுடனும் தொடர்பு உடையதாகச் செய்யவேண்டும் என்னும் கருத்துடன் திட்டமிட்டு வகுக்கப்பட்டதைப் போல்

[18] S. I. I., Vol. 2: pt. 2. No. 38, 41, 282 of 1906, 210 of 1929, 189 of 1929 & 537 of 1922.

ான்றுகிறது. இராசராசனுக்குப் பிறகு கட்டப்பட்ட கோயி
ர அனைத்திலும் தஞ்சைப் பெரிய கோயிலின் சாயல் பேரவ
லோ, சிறிய அளவிலோ படிந்திருப்பதை நாம் காணலாம்.

## ோயில் ஒரு தொழில் நிலையம்

நல்ல முறையில் பெரிய கோயில்கள் கட்டத் தேர்ச்சிமிகு கல்
ச்சர் பலர் தேவைப்பட்டனர். தெய்வத் திருமேனிகளைக் கல்
லும் செம்பிலும், ஐம்பொன்னிலும் செய்வதற்குப் பயிற்சி மிக்க
ற்பிகள் பல ஆண்டுகள் தொடர்ந்து பணிபுரிந்தனர். சிலை வடிப்
தில் கொல்லரும் கன்னரும் ஈடுபட்டிருந்தனர்; மரவேலைகளைச்
செய்வதற்குத் தச்சர் பயன்படுத்தப் பட்டனர்; அணிகலன்கள்
செய்வதில் பொற்கொல்லர் பலர் ஈடுபட்டிருந்தனர்.

கோயிலின் அன்றாட வழிபாட்டிற்குப் பலவகைத் தொழி லாளர் தேவைப்பட்டனர். பூஞ்சோலைகளை அமைத்துக் கண் காணிப்போர், பூப்பறித்து மாலை தொடுப்போர், கோயிலைக் கூட்டித் துப்புரவு செய்வோர், நீரிறைப்போர், திருவிளக்கு ஏற்றுவோர், திருவிளக்கிற்கு நெய், எண்ணெய் முதலியன கொண்டு வந்து தருவோர், மணியடிப்போர், சங்கு ஊதுவோர், மங்கல இசைக் கருவிகளை முழக்குவோர், ஆடை வெளுத்துக் கொடுப்போர், திருப்பதியம் ஓதுவோர், வேத பாராயணம் செய் வோர், இறைவன் திருமேனிக்குத் திருமஞ்சனம் செய்து தூப தீப ஆராதனை செய்யும் குருக்கள்மார், இறைவனுக்குத் திருவமுது சமைப்போர், நாட்டியமாடும் நடன மங்கையர் முதலிய கலைஞர் களுக்கும் தொழில் வினைஞருக்கும் திருக்கோயிலில் நாள் தோறும் தொடர்ந்து பல பணிகள் காத்திருந்தன. இவற்றையெல்லாம் கண்காணிக்க ஸ்ரீகாரியம் செய்யும் அதிகாரி ஒருவர் அமர்த்தப் பட்டிருந்தார். அவருக்கு ஸ்ரீகாரியம் செய்வார் என்னும் பெயர் வழங்கியது.[19]

கோயில்களுக்கு மானியமாக விடப்பட்ட நிலங்களைப் பயிரிடுப்
ழுவர்களும், அறுவடையில் கிடைத்த நெல்லைக் கோயில் களஞ்சி
த்தில் கொண்டு சேர்ப்போரும், களஞ்சியக் கண்காணிப்பு அதி
ாரிகளும் கணக்கு எழுதுவோரும், பதிவேடுகளைக் கண்காணி
பாரும் கோயில்களில் பணிபுரிந்தனர். இவ்வாறு பல வகையாச
தாழில் வினைஞருக்கும் கலைஞர்களுக்கும் அவரவர் தகுதிக்கேற்
பலை கொடுக்கும் தொழில் நிலையமாகக் கோயில்கள் அக்கால
ல் பயன்பட்டன.

[19] S. I. I., Vol. 2; No 38: PP. 152.

வேளாண்மைப் பொருளியல் அமைப்பில் நம் நாடு அன்று சிறந்து விளங்கியது. அவ்வமைப்பில், திருக்கோயில்கள் செல்வமும் செல்வாக்குமிக்க ஒரு பெருநிலக் கிழாரைப் போன்று பலருக்கும் வாழ்வளிக்கும் பெருந் தொண்டினை ஆற்றி வந்தன. நில உடைமை, வேலைவாய்ப்புக்களை அளித்தல், பொருளை ஈட்டிப் பிறருக்குப் பகிர்ந்து வழங்கல், மக்கள் உழைப்பை நன்கு பயன் படுத்தல், கொடுக்கல் வாங்கல் மூலம் பொருளைப் பெருக்குதல், கல்வி வளர்ச்சிக்கு உதவுதல் அரும் பொருள்களைப் போற்றிக் காத்தல், மருத்துவ மனைகளை நடத்துதல், ஏழை எளிய மக்களுக்கு உணவு வழங்கும் பணி புரிதல், நாடக அரங்குகளை நிறுவி விழாக் காலங்களில் நாடகம் நடத்துதல், இசைக் கலையைப் போற்றி வளர்த்தல் போன்ற பல கடமைகள் கோயில்களிடம் ஒப்படைக்கப்பட்டு இருந்தன.

இவ்வாறு மக்கள் 'மண்ணில் நல்ல வண்ணம்' வாழ்வதற்குரிய பல பணிகளைச் சிறப்பாகக் கோயில்கள் செய்தன. அவற்றோடு அமையாமல், மக்களின் ஆன்மிகக் கடைத்தேற்றத்திற்குரிய நெறி முறைகளை வகுத்து, வழிகாட்டும் வான் பொருளாகவும் திருக்கோயில்கள் திகழ்ந்தன. சுருங்கச் சொல்லின் நாகரிக வாழ்க்கையின் சிறப்பு மிக்க இயல்புகள் அனைத்தையும் தம்மகத்தே பெற்ற தலையூற்றாகக் கோயில்கள் விளங்கின. அதன் செயல் முறைகள் அனைத்தும் மனிதப் பண்பை மதித்துப் போற்றி, அருளாட்சியை உலகில் நிலைநாட்டும் நோக்கத்துடன் அமைக்கப்பட்டிருந்தன.

## பொது மன்றம்

நமக்குக் கிடைத்துள்ள ஆயிரக்கணக்கான கல்வெட்டுகளுள் பெரும்பாலானவை, கோயில்களுக்கு வழங்கப்பட்ட கொடைகளையும், நிறுவப்பட்ட அறக்கட்டளைகளையும் பற்றியனவாக உள்ளன. ஊரில் உள்ள மக்கள் அனைவரும் கூடிக் கலந்து பேசுவதற்குரிய பொது இடமாகக் கோயில் பயன்பட்டது; ஊராட்சி மன்றத்தின் செயல்களை ஆய்ந்து நடைமுறைக்குக் கொண்டு வர முயலும் செயலகமாகவும், அலுவலகமாகவும் அது விளங்கியது. பொதுமக்களுக்குத் தேவையான பத்திரங்களை எழுதிப் பதிவு செய்யும் பதிவாளர் அலுவலகமாகவும், பதிவு செய்யப்பட்ட பத்திரங்களைப் போற்றிக் காக்கும் ஆவணக் காப்பகமாகவும் கோயில்கள் திகழ்ந்தன. இவையல்லாமல், சமயச் சொற்பொழிவாற்றப் படும் திருச்சபையாகவும் அவை பயன்பட்டன. இத்தகைய செயல் முறைகளுக்குக் கோயில்கள் ஊராட்சி மன்றங்களின் பொது மன்றங்களாகப் பயன்பட்டன.

## கல்வி நிலையம்

கோயில்களின் ஆதரவில் கல்வி நிலையங்களை நிறுவுவது தொன்றுதொட்டு நம் நாட்டில் இருந்து வரும் பழக்கமாகும். கிருத்துவப் பாதிரிமார்கள் இந்திய மண்ணில் காலெடுத்து வைப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே, நம் மூதாதையர் கோயிலின் பொருளைக் கொண்டு அவற்றின் ஆதரவில் கல்வி நிலையங்களை நடத்தியுள்ளனர். தேவார பாடசாலைகள், வேத பாடசாலைகள் போன்ற கல்வி நிலையங்கள் அன்றைய சூழலுக்கேற்ற கல்வியை மக்களுக்கு அளித்தன. அதில் பயில்வோருக்கு இலவச உணவையும் உடையையும் உதவி, கல்வியைப் பரப்ப கோயில் முயன்றது. வடமொழியில் உள்ள வேதங்களையும், இதிகாசங்களையும், புராணங்களையும், தரும சாத்திரங்களையும் இரவு வேளையில் மக்களுக்கு விரித்துரைக்கும் பணியைப் பல கோயில்கள் மேற்கொண்டிருந்தன. அப்பணி முட்டின்றி நடைபெறுவதற்கு மன்னனும், செல்வர்களும் பல அறக்கட்டளைகளைக் கோயில்களில் நிறுவினர்.

இராசராசன் காலத்தில் (கி. பி. 999) செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஆனியூரில் (ஆனூர்) இருந்த மகாசபை வேதங்களையும், பாணினியின் வியாகரணத்தையும் கோயிலில் பயிற்றுவிக்கும் ஆசிரியருக்கும் பயிலும் மாணவருக்கும் பட்ட விருத்திக்கு நிவந்தம் அளித்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

## நூல் நிலையம்

கோயிலில் சமயத் திருநூல்களின் சுவடிகள் பேணிக் காக்கப்பட்டன. சிதம்பரம் கோயிலிலிருந்து நம்பியாண்டார் நம்பி தேவாரத் திருப்பதிக ஏடுகளை மீட்டு, முறைப்படுத்திய செய்தியை நாம் முன்னரே கண்டோம். சமய நூல்கள் அல்லாமல், சிறப்பு மிக்க இலக்கண இலக்கியங்களின் சுவடிகளும் கோயிலில் இருந்த சரசுவதி பண்டாரங்களில் போற்றிக் காக்கப்பட்டன.

## மருத்துவ மனை

மக்கள் உயிரின் நோயாகிய இரு வினையை அறுக்க உதவும் மருத்துவ நிலையமாகக் கோயில்கள் விளங்கின. மேலும், மக்களின் உடல் நோயைத் தீர்க்கும் மருத்துவ வசதிகளையும் அவை செய்து வந்தன. சில கோயில்களின் சார்பில் படுக்கைகள் பல கொண்ட மருத்துவ மனைகள் நடத்தப்பட்டன.

### நாடக சாலை

பெரிய கோயில்கள் ஒவ்வொன்றிலும், திருவிழாக் காலங்களில் கூத்துகளையும், நாடகத்தையும் நடித்துக் காட்டுவதற்குரிய நாடக அரங்கு ஒன்று இருந்தது. அம்மேடைகளில் இசை விருந்தும் அளிக்கப்பட்டன.

### விரிவுரை மண்டபம்

சமய சாத்திரங்களையும், திருமறைகளையும் மக்களுக்கு விரித்துரைக்கும் மண்டபம் பெரும்பாலான கோயில்களில் இருந்தன. அறிவிலும் பண்பிலும் சிறந்த சான்றோர்கள் அம்மண்டபத்திலிருந்து சமய உண்மைகளை மக்களுக்கு விரிவாக எடுத்துரைத்தனர்.

### ஆவணக் காப்பகம்

கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டு ஒவ்வொன்றும், பண்டைக்கால வரலாற்றுச் சிறப்புமிக்க நிகழ்ச்சி ஒன்றை உலகம் மறந்துவிடாதவாறு போற்றிக் காத்து வருகின்றன. அக்கல்வெட்டுகளில் பல, கோயிலுக்கு வழங்கப்பட்ட கொடைகளைக் குறிப்பிடுகின்றன; மற்றும் சில அரசனுடைய ஆணைகளையும், போர் நிகழ்ச்சிகளையும் அழியாமல். பதிவு செய்து காத்து வருகின்றன. திருஞான சம்பந்தரின் தேவாரத்துள் இன்று காணப்பெறாத பாடல் ஒன்றினை, திருவிடை கழிக் கோயில் சுவரில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டில் நாம் காணுகிறோம்.

இதைப் போன்று மறைந்து போன இராசராச நாடகம், இராசராச விசயம் முதலிய நூல்களைப் பெயரளவிலாகிலும் நாம் தெரிந்துகொள்ளுவதற்குக் கல்வெட்டுகளே காரணமாகும். இத்தகைய கல்வெட்டுகளாகிய ஆவணங்களைப் போற்றிக் காக்கும் அரும்பணியைத் தமிழகத்தின் கோயில்கள் நெடுங்காலமாகச் செய்து வருகின்றன.

### பழம்பொருள் காட்சிசாலை

தொன்று தொட்டு, நம் முன்னோர்கள் போற்றி வளர்த்த கலைகளின் வளர்ப்புப் பண்ணையாக கோயில் விளங்கி வருகின்றது. மறைந்து போன பல பழக்க வழக்கங்களையும், அணி வகைகள்,

உடைகள் போன்றவற்றைச் சிற்பங்களாகவும் பொருள்களாகவும் போற்றிக் காக்கும் பழம்பொருள் காட்சிச் சாலையாகக் கோயில் இன்றும் காட்சி தருகிறது.

## அறக் கட்டளைகளை நிருவகிக்கும் நிலையம்

கோயில்களில் விளக்கு எரிக்க, பலர் ஆடுகளை நிவந்தமாக அளிப்பது அக்காலத்திய வழக்கு. செங்கற்பட்டு மாவட்டம், மாமல்லபுரத்திற்கு அருகிலுள்ள சாளுவங்குப்பத்தில் அதிரண சண்ட மண்டபத்தின் முன்னுள்ள இராசராசனின் கல்வெட்டு ஒன்று இருக்கிறது. அதில் ஆமூர் கோட்டத்து ஆமூர் நாட்டு திருவிழிச்சிலிலுள்ள அதிரணசண்டேச்சுரர் கோயிலில் நந்தா விளக்கொன்று எரிப்பதற்கு ஆடுகள் அளித்தமை குறிப்பிடப் பட்டுள்ளது. இதைப்போன்று சாவா மூவாப் பேராடுகள் கோயில்களுக்கு வழங்கப்பட்ட செய்தியைப் பல கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இவ்வறக் கட்டளையைக் கண்காணிக்கும் பொறுப்பு கோயிலின் அன்றாடத் திருப்பணிகளைக் கண்காணித்து வந்த அதிகாரிக்கு உரியதாகும்.

தேவதான நிலங்களும் கோவிலில் நிறுவப்பட்ட அறக்கட்டளைகளும் எத்தகைய நிலையில் இருக்கின்றன என்பதை அவ்வப் போது ஆராய்ந்து அறிவதற்கு, இயங்கும் ஆய்வுக்குழு ஒன்று இராசராசன் காலத்தில் பணிபுரிந்து வந்தது. அக்குழுவில் மது ராந்தகன் கண்டராதித்தனார், திருவடிகள் சாத்தனார், அருண் மொழி வேளார் போன்ற உறுப்பினர் பலர் இருந்தனர்.

பழைய கோயில்களைப் புதுப்பித்த பொழுது, அக்கோயில்களில் இருந்த கல்வெட்டுகளைப் படி யெடுத்துக் கொள்ளுவர். அதன் பின்னர் அக்கோயிலை இடித்தோ, மாற்றியோ அமைப்பர். புதிய தாகக் கோயில் கட்டப்பட்ட பின்னர், அரசனுடைய ஆணையைக் கருத்தில் கொண்டு, அவன் திருவுள்ளப்படி, படியெடுத்து வைக்கப் பட்ட கல்வெட்டுகளைப் புதிதாக அக்கோயிலில் பொறிப்பது அக் காலத்திய வழக்கமாகும்.[20]

இவ்வாறு, மக்களுடைய வாழ்க்கையை மையமாகக் கொண்டே, இராசராசன் காலத்திய கோயிலின் அன்றாடச் செயல் முறைகள் அமைந்திருந்தன; மக்களின் நலங் கருதும் நிலையமாகக் கோயில்கள் விளங்கின. அவை மக்களின் புற வாழ்க்

[20] S.I.I. Vol. 5, P, 275.

கையை வலிவும் பொலிவும் பெறச் செய்தன; அத்துடன் அக வாழ்க்கையாகிய ஆன்மிக வாழ்க்கை ஏற்றம் பெறுவதற்கும் பல வாய்ப்பு வசதிகள் அமைத்துத் தந்தன. அசைக்க முடியாத கடவுள் நம்பிக்கையையும், அற வுணர்வையும் மக்களிடையே பரப்புவதற்குக் கோயில் வழிபாடு ஒரு சிறந்த கருவியாக விளங்கியது; இறைவனுடைய திருவருள் திறத்தினை உலகிற்கு உணர்த்துவது திருக்கோயில் வழிபாடு. இதை இராசராசன் காலத்திய தமிழ் மக்கள் நன்கு உணர்ந்திருந்தனர். எனவே நாட்டு மக்கள் வேறுபாடின்றித், தத்தம் தகுதிக் கேற்ற வகையில் பொன்னையும் பொருளையும், உழைப்பையும் உணர்வையும் நல்கி அப்புனிதப் பணியை மேன்மேலும் சிறப்புறச் செய்தனர்.

**திருவிழாக்கள்**

திருவிழாக்கள் பல அக்காலத்திய கோயில்களில் கொண்டாடப்பட்டன. இராசராசனுடைய பிறந்த நாளை, ஐப்பசித் திங்கள் **சதயத் திருநாளாகப்** பல கோயில்களில் கொண்டாடினர். சிதம்பரத்தில் ஆனித் திருமஞ்சனமும், திருவாதிரைத் திருநாளும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டன. கார்த்திகைத் திருநாள், சங்கராந்தி, தைப்பூசம், மாசி மகம், பங்குனி உத்தரம், சித்திரை வருடப் பிறப்பு போன்ற திருவிழாக்களும் சிவன் கோயில்களில் சிறப்பாக எடுக்கப்பட்டன. திருமால் கோயில்களில் சூடிக் கொடுத்த சுடர்க் கொடியின் ஆடிப்பூர நோன்பும், உறியடி விழாவும், மகர சங்கராந்தியும் கொண்டாடப்பட்டன.

மக்கள் நேர்த்திக் கடன் செலுத்தும் வழக்கம் இருந்தது. திருவிழாவிற்கு வரும் மக்களின் பசியையும் நீர்வேட்கையையும் தணிப்பதற்கும் பல தண்ணீர்ப் பந்தல்கள் வைத்து, உணவும் நீரும் உதவும் அறச் செயலைப் பலர் செய்தனர்.

**மடங்கள்**

சைவ சமயச்சார்பான மடங்கள் பல இராசராசன் காலத்திற்கு முன்பே தமிழகத்தில் தோன்றியிருந்தன.[21] காலப் போக்கில் அவை மிகப் பலவாகப் பல்கிப் பெருகின. அவற்றை நாம் இருவகையாகப் பாகுபடுத்தலாம். வடநாட்டுச் சைவ சமயத்தின் சார்புடையவை ஒருவகையாகும். தமிழகத்து சைவ சமயத்தினைப்

21 181 of 1912; 111 of 1925.

போற்றியவை மற்றொரு வகையாகும். இம் மடங்கள் யாவும் பொதுக் கல்வியையும் சமயக் கல்வியையும் மக்களிடையே நன்கு பரப்பின.

வடநாட்டுச் சைவ சமயச் சார்புடையவற்றைக் காளாமுக மடம், காபாலிக மடம், கோளகி மடம் என்று நாம் கூறலாம். இவையல்லாமல் வேறு சில மடங்களும் இருந்தன.

காளா முகச் சைவரின் மடம் கொடும்பாளூர், வேடல், மேல் பாடி, திருவானைக்கோவில் போன்ற ஊர்களில் சிறப்புற்று விளங் கின.[22] திருவொற்றியூரில் காபாலிக மடம் ஒன்று இருந்தது.[23] கோளகி மடம் என்ற பெயரில் பல மடங்கள் பல ஊர்களில் இருந் தன. அவை பாசுபத சைவ சமயத்தின ருடையனவாகும். திரு நெல்வேலி மாவட்டத்தில் அம்பா சமுத்திரத்தை அடுத்த வாலீசு வரம் என்னும் இடத்தில் ஒரு மடம் இருந்தது. அங்கு இரண்டு குரு தேவர்கள் இருந்தனர். அவர்கள் 'திருஞானம்' என்னும் நூலைக் கோயிலில் படித்து விளக்கினர். கோளகி மடத்தை முதன் முதல் தக்காணத்தில் ஏற்படுத்தியவர் விஸ்வேஸ்வர சம்பு என்பவராவர். அம்மடத்தில் பொதுக் கல்வியும், சமயக் கல்வியும் கற்பிக்கப் பட் டன. தேர்ச்சிமிக்க ஆசிரியர்கள் வேதங்கள், இலக்கியம், ஆகமங் கள் முதலியவற்றைக் கற்பித்தனர். மற்றும் இசையையும் நடனத் தையும் வளர்க்கப் பாடல் மகளிரும் மருத்துவர் ஒருவரும் பல வகைப் பணிமக்களும் இருந்தனர். ஆடல் மகளிரும், இசைக் கருவி யாளரும் நியமிக்கப்பெற்றனர்.[24] இத்தகைய முறை தமிழகத்துக் கோளகி மடங்களிலும் இருந்திருக்கலாம். இம்மடங்கள் திருவா ரூர், மதுரை, திருநெல்வேலி முதலிய இடங்களிலும் இருந்தன.[25]

வாரணாசியைச் சேர்ந்த கொல்லா மடத்துக் கிளை மடங்கள் தொண்டை மண்டலத்தில் திருப்பாசூரிலும், பாண்டி நாட்டுப் பிரான் மலையிலும் இருந்தன.[26] மற்றும் வாரணாசியைச் சேர்ந்த பிட்சா மடத்துக் கிளைகள் பந்தணை நல்லூர், பாண்டிநாட்டுத் திருப்புத்தூர், தொண்டை மண்டலத்துத் தேவிகாபுரம், திருநெல்வேலி மாவட்டத்து மணப்படைவீடு முதலிய இடங் களில் இருந்தன. அம்மடங்களின் தலைவர்கள் சமயப் பரப்புநர் களாகப் பணி புரிந்தனர்.[27]

[22] 129 of 1907; 352, 357 of 1911; 192 of 1928.
[23] 371 of 1912.
[24] 1917; P. 124.
[25] 396 of 1916; 364 of 1916; 1929- 30; P. 77.
[26] 111 of 1930: 209, 211 of 1924; A. R. E. 1929-30; p. 9.
[27] 72 of 1930-31; 164, 173 of 1935-36; 352 of 1912: 443 of 1909.

தமிழ் நாட்டுச் சைவசமயச் சார்புடைய மடங்களுள் மிகவும் பழமையானது திருவாவடு துறையில் உள்ள மடமாகும். இம் மடம் இராசராசன் ஆட்சிக்கு வருவதற்கு முன்பே நிறுவப் பட்டது.[28] ஆயினும், இப்பேரரசனுக்குப் பிறகே தென்னாட்டுச் சைவ மடங்கள் பல தோன்றின.

குகைகள் என்ற பெயரில் வேறொரு வகையான மடங்களும் அக்காலத்தில் இருந்தன. இக் குகைகள் பெரும்பாலும் சிவன் கோவில்களுள் கட்டப்பட்டன; பாதுகாப்பு மிகுந்தனவாக இருந்தன. திருமுறைகளில் வல்ல சைவத் துறவிகளைத் தலைவர் களாகப் பெற்றிருந்தன. அவர்கள் திருமுறைகளைப் பிறருக்குக் கற்பித்தனர். இத்தகைய குகைகள் திருத்துறைப் பூண்டி, தில்லை சீகாழி, திருப்புகலூர் போன்ற இடங்களில் இருந்தன.

இவையல்லாமல் வைணவ சமயச் சார்பான மடங்களும் சில இருந்தன. அவற்றுள் உத்தரமேரூரில் இருந்த குந்தவை மடத் தைப் பற்றிய செய்திகள் சில தெரியவருகின்றன.[29]

வைதிக சமயத்தின் இரு கிளைகளான சைவ வைணவ சமயங் களைப் போன்றே, புறச் சமயங்களான பௌத்த, சமண சமயங் களை மன்னன் ஆதரித்துப் போற்றினன். எல்லா சமயத்தினருக் கும் அவன் சமவுரிமை யளித்திருந்தான். இதனை, அப்பேரரச னுடைய கல்வெட்டு ஒன்றால் அறியலாம். "சோணாட்டும் சோணாட்டுட்படும் புறணி நாடுகளிலும், தொண்ட நாட்டிலும் பாண்டிநாடான ராஜராஜ வளநாட்டிலும் பார்ப்பன ஊர்களி லும் வைகானச ஊர்களிலும் சமணர் ஊர்களிலும் காணி உடையார்"[30] என்னும் கல்வெட்டுப் பகுதியால், புறச் சமயத் தினரும் ஒத்த நிலையில் வைத்துக் கருதப்பட்டதை உணரலாம்.

### பௌத்த சமயம்

அக்காலத்திய தமிழகத்தில், பௌத்த சமயம் அருகிய நிலையில் இருந்தது. நாகப்பட்டினத்தில் கடாரத்து அரசன் எடுப்பித்த பௌத்த விகாரைக்கு, இராசராசன் ஆனை மங்கலம் என்னும் ஊரைப் பள்ளிச் சந்தமாக அளித்தான். அக்காலத்தில்

[28] 111 of 1925.
[29] 184 of 1923.
[30] 112 of 1917.

நாகப்பட்டினம் பௌத்த சமயப் பண்பாட்டின் நிலைக்களனாக விளங்கியது. இதற்கு அடுத்த நிலையில், காஞ்சிமா நகர் புத்த சமயச் சார்புடைய நகரமாகத் திகழ்ந்தது. இவற்றைத் தவிர நாம் புத்த சமயத்தைப் பற்றி வேறொன்றும் தெரிந்து கொள்ள இயலவில்லை.

## சமண சமயம்

சமண சமயத்தின் செல்வாக்குக் குன்றியிருந்தது. ஆனால், தமிழகத்தின் பல பகுதிகளில் அச் சமயம் தழைத்திருந்தது. இராசராசன் காலத்தில் இறை (வரி) நீக்கப்பட்ட நிலங்களில் பள்ளிச் சந்தம்' என்பது ஒன்றாகும். சமணரின் கோயில்களே 'பள்ளிகள்' என்று போற்றப்பட்டன. இராசராசன் காலத்தில் சமணத் துறவிகள் பலர் தமிழகத்தின், பல பகுதிகளில் வாழ்ந்து வந்தனர்.

தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள திருநறுங் கொண்டை என்னும் ஊரிலிருந்த 'பெரிய பள்ளியில்' (இராசராசனுடைய பதினேழாம் ஆட்சியாண்டில்) இரு நந்தா விளக்குகள் எரிப்பதற்கு நிலத்தைப் பள்ளிச் சந்தமாகக் கொடுத்த செய்தியை ஒரு கல் வெட்டு தெரிவிக்கிறது.[31] திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள திருமழபாடியில் குந்தவைப் பிராட்டியார் சமண சமயக் கோயில் ஒன்றைக் கட்டினார்.[32] மற்றும் இராசராசபுரம் எனப்பட்ட தாதா புரத்திலும் அவர், அத்தகைய கோயிலை எடுப்பித்துள்ளார்.[33] மற்றும் வேடல், சிற்றாமூர், திருப்பருத்திக் குன்றம் போன்ற ஊர் களில் சமண சமயம் வாழ்வும் வளமும் பெற்றிருந்தது.

## சமயப் பொறை

முற்போக்குக் கொள்கைகளைக் கொண்டு வாழ்ந்தவன் இராச ராசன். சைவ சமயத்திடத்துப் பேரீடுபாடு கொண்டிருந்த அவன், பிற சமயத்தினரை மதித்துப் போற்றினான். அச்சமயங்களுக்குத் தேவையான ஆதரவை அவன் நல்கினான். பொறுமையோடு புறச் சமயத்தின் கருத்துகளில் உண்மை நாடும் உள்ளப் பாங்கினை அவன் இயல்பாகவே பெற்றிருந்தான். அதனால்தான், தஞ்சையில் தான் எடுப்பித்த பெரிய கோயிலின் விமானத்தில் வைணவ சமய

[31] 385 of 1902.
[32] S. I. I. Vol I; PP 67-8.
[33] 8 of 1919.

தெய்வங்களுக்கும் பௌத்த சமய கருத்துகளுக்கும் இடம் கொடுக்க முடிந்தது போலும்! அவனே உருவாக்கிய தமக்கையார் தாதா புரத்தில் சிவன், திருமால், ஜீனர் ஆகிய மூவருக்கும் ஒரே இடத்தில் மூன்று கோயில்களைக் கட்டியுள்ளார். அக்காலத்திய மக்களின் சமயப் பொறையுணர்வை உலகிற்கு உணர்த்த இதை விடச் சிறந்த சான்று வேறொன்றும் தேவையில்லை என்க!

# 21. கலை நிலை

ஒரு நாட்டில் வாழும் மக்களின் மன வளத்தையும் வாழ்க்கை வளத்தையும் ஒட்டியே, அந்நாட்டின் கலை வளர்ச்சி அமையும். வயிற்றுக் கவலை இன்றி வாழும் மக்களாலேயே, கலைகளைப் போற்றி வளர்க்க முடியும். நாகரிகத்தின் நல்லதொரு சின்னமே கலையுணர்வு. நாகரிகத்தின் கொடுமுடியில் வீறுடன் விளங்கிய நாடுகள் எல்லாம், கலைத்துறையில் காண்பவர் வியக்கத் தக்க வகையில் முன்னேற்றம் அடைந்திருந்ததை நாம் அறிகிறோம்.

தன்னுடைய இனத்தின் விழுமிய இலட்சியங்களையும் அகக் காட்சிகளையும் எடுத்துரைப்பவனாக அல்லது அவற்றிற்கு நல்ல தொரு வடிவத்தினைக் கொடுக்கும் நன் முயற்சியில் ஈடுபடுபவனாக உள்ளவன் எவனோ, அவனையே கலைஞன் என்று உலகம் போற்றுகிறது. காலத்தின் இதயத் துடிப்புகளையும், மக்களின் உள்ளார்ந்த விழைவுகளையும் அழிந்தொழியாதவாறு பொன்றாப் புகழ் பெற்று விளங்கச் செய்பவன் கலைஞன்

தமிழகத்தின் வரலாற்றில் இரண்டு பொற்காலங்களைக் காணுகிறோம். அவற்றுள் சோழப் பேரரசர் காலம் வெற்றிச் சிறப்பிலும் அறிவுத் திறனிலும், ஆட்சி முறையிலும், கலைப் படைப்பிலும் என்றும் காணாத வளர்ச்சியையும் முதிர்ச்சியையும் கண்டது. தமிழகம் அதனால் சீர்த்தியும் சிறப்பும் பெற்றது. எத்தகைய நாகரிகமும் உச்ச நிலையை அடைவதற்கு முழு நிறைவான வளர்ச்சியைப் பெறுவதற்குத் தேவைப்படுவது அரசியல் ஆதிக்கமும் பொருளாதார மேம்பாடுமாகும். அவற்றின் மூலம் வாழ்க்கையின் பல்வேறு தேவைகளையும் நிறைவேற்றிக் கொள்ள முடியும். இத்தகைய வாய்ப்பு வசதிகளைச் சோழர் காலத்திய தமிழகம் பேரளவிற்குப் பெற்றிருந்தது. அன்றைய தமிழகத்தில் கலைமகளும் திருமகளும் களி நடம் புரிந்தனர். அறிவுத் திறனும்

ஆன்மிக உணர்வும் இணைந்தும் இழைந்தும் வளர்ந்த காலம் அது! பேரளவிற்குப் புலனுகர் இன்ப அனுபவமும், கருத்து வெளிப்பாடும் ஒருங்கிணைந்து ஒப்பற்ற கலைப் படைப்புகளை உலகிற்கு வழங்கிய காலம் அது!

முதன் முதலாகத் தமிழகம், இராசராசன் காலத்தில் ஆன்மிக உணர்விலும் அறிவுத் திறனிலும் ஒன்றுபட்ட நாடாக ஒளிரத் தொடங்கியது; மக்கள் வாழ்க்கையில் அமைதியும் இன்பமும் இயைந்து நின்றது; மன நலத்தோடு மண்ணில் நல்ல வண்ணம் வாழ வழி பிறந்தது; குறுகிய மன வேற்றுமைகளையும், எளிதில் ஒழிக்க இயலாத தடைகளையும் கடந்து தமிழினத்தின் அறிவுத் திறனும், ஆன்மிகப் பண்பாடும், கலையுணர்வும் காலத்தின் அறை கூவலை ஏற்று, ஏறுநடை போட்டன. அதனால், மக்கள் உள்ளத்தே புதியதோர் எழுச்சியும், புத்துணர்ச்சியும் பொங்கி வழியத் தொடங்கின. இவ்வெழுச்சியும், உணர்ச்சியும் கல்லிலும் செம்பிலும், ஏட்டிலும் பாட்டிலும் எதிரொலித்தன. தமிழ்த் திருநாடு திருக்கோயில் நிறைந்த திருநாடாக எழிலும் ஏற்றமும் வலிவும் பொலிவும் பெற்றதாயிற்று. தமிழருடைய ஆன்மாவின் உறைவிடமாகக் கோயில்கள் விளங்கின.

இதனால், துறவிகளின் மடங்களாகவோ, அரைகுறை தெய்விக ஆற்றல் படைத்த குருமார்களின் கோட்டைகளாகவோ இராசராசன் காலத்தில் திருக்கோயில்கள் விளங்கவில்லை. அறத்தின் தாயகமாகவும் கலைகளின் வளர்ப்புப் பண்ணையாகவும் கோயில்கள் மாறின. அவற்றின் சிற்பங்களினுடைய அமைப்பும் வடிவமும், சுவரோவியங்களின் வண்ணமும் வனப்பும், வினைத்திட்பம் வாய்ந்ததோர் இனத்தின் இதயத் துடிப்புகளையும் ஆன்மிக வேட்கையையும் படம் பிடித்துக் காட்டுகின்றன.

## திருக்கோயில்கள்

இராசராசன் காலத்தில் கட்டப்பட்ட கட்டடங்கள் என்று சொல்லத்தக்கன ஒன்றும் இன்று கிடைக்கவில்லை. அவன் காலத்தில் கட்டப்பட்ட கோயில்கள் சில இன்றும் நன்னிலையில் உள்ளன. அவன் கட்டிய கோயில்களுள் தலைசிறந்து விளங்கும் தஞ்சைப் பெருவுடையார் கோயில், திராவிடக் கட்டடக் கலைப்பாணியின் முடிமணியாக விளங்குகிறது.

## பெரிய கோயிலின் அமைப்பும் அழகும்

இராசராசனும், அவனுக்குப் பின்னர் வந்த சோழ மன்னர்களும் திராவிடக் கட்டடக் கலைப்பாணியின் வளர்ச்சிக்குப் பெருந்தொண்டு ஆற்றியுள்ளனர். அவர்களுள் இராசராசன் எடுப்பித்த தஞ்சைப் பெரிய கோயில் நம் உள்ளத்தை நெகிழ்விப்பது; மகிழ்ச்சியூட்டுவது; மனக்கிளர்ச்சியை உண்டாக்குவது. இக்கோயிலில் பல கட்டு அமைப்புகள் உள்ளன. அவை பெரிய கோயில் அமைப்பு முறை அச்சோடு இணைக்கப்பட்டுள்ளன. நந்தி மண்டபம், மாமண்டபம், அர்த்த மண்டபம் ஆகியவனைத்தும் கருவறையோடு சேர்ந்து நடுமையமாக அமைக்கப்பட்டுள்ளன. இவற்றைச் சூழ்ந்து நான்கு புரத்திலும் திண்மையான மதில் சுவர்கள் உள்ளன. இத்திட்டத்தின் மேற்கு முனையில் உள்ள விமானம், சுற்றிலுமுள்ள கட்டடங்களை விட நேர்த்தியும் சீர்த்தியுமுடையதாய்க் காண்பவருடைய கண்களை எளிதில் கவர்ந்து விடுகிறது. இவ்விமானம் அழகுமிக்க பிரமிட்டு போன்றதோற்றம் உடையது. இதனுடைய சிறப்புமிகு கலையழகு, அதனுடைய உறுப்புகளின் எளிமையான அமைப்பிலே ஊற்றெடுக்கிறது. இதனுடைய உறுப்புகள் மூன்று. அவை சதுரமானதும் செங்குத்தானதுமான அடித்தளம், உயர்ந்து கூம்பிய உடற்கட்டு ஆகிய இரண்டோடு கலசத்தோடு கூடிய எழில்மிகு வளைமாடமாகிய சிகரம் என்பன. இவற்றுள் செங்குத்தான அடித்தளப்பகுதி 24.75 மீட்டர் (82 அடி) உடைய சதுரப் பக்கங்களையும், 15.25 மீட்டர் (50 அடி) கொண்ட உயரத்தையும் உடையது. இதிலிருந்து பதினாறு மாடங்களைக் கொண்ட பிரமிட் போன்ற உடற்கட்டு மேல்நோக்கி வடிவில் குறுகிக் கொண்டே செல்லுகிறது. இதனுடைய முடியின் பரப்பு அளவு, அடித்தளத்தின் பரப்பு அளவில் மூன்றில் ஒரு பகுதியாகும். அம்முடியின் அமைப்பு சதுரமான மேடைபோல் இருக்கிறது. அதன்மீது உள்நோக்கி வளைந்த கழுத்து அமைப்போடு கூடிய சிகரம் அமைந்துள்ளதைக் காணலாம். வானுற உயர்ந்தோங்கும் இயல்புடைய விமானத்தின் கட்டமைப்பிற்கு முத்தாய்ப்பு வைத்ததைப் போன்று இச்சிகரம் விளங்குகிறது.

அழகுமிகு விமானத்தின் கட்டட மேற்பரப்பு, அதன் மொத்த வடிவத்தோடு பொருத்தமாகவும் இயைபுடையதாகவும் தோன்றுகிறது. மிகவும் கீழ்மட்டத்திலுள்ள சுவர்களையும், நேரான பகுதிகளையும் அலங்கரிப்பதற்காக வகுக்கப்பட்டுள்ள திட்டம், சிறப்பு மிக்கதாகும். அப்பகுதிகள் இரண்டு மாடங்களைக் கொண்டதாக விளங்குமாறு பருமனுக மேலே தொங்கிக் கொண்டிருக்கின்ற கபோதகத்தால் பிரிக்கப்பட்டுள்ளன. இவற்

றின் மேலும் கீழும் வரிசையாகச் சுவர் கடந்து நிற்கும் இரண்டு கட்டைகள் போன்ற கல் தூளங்கள் காணப்படுகின்றன. இவை யனைத்தும் ஒன்ருகச் சேர்ந்துள்ள பகுதியில், புதியன படைக்கும் அறிவுத்திறன் பல வகையான சிற்ப வடிவில் வெளிப்பட்டிருக் கிறது. அச் சிற்பங்களின் இலைகொடி போன்ற கலைக் கருக்களும், அவற்றைத் தெளிவாகப் புலப்படுத்தும் முறைகளும் இவ்விமானத் தினைக் கவர்ச்சி மிக்கதாகச் செய்கின்றன. இச்சிற்ப அமைப்பு, மேலை நாட்டினர் போற்றும் 'அறிவுமரத்' (Tree of Knowledge) தைப் போன்று தோன்றுகிறது. இந்தச் சிற்ப வகை இச்சுவர்களின் ஆழமான பிற்பகுதியை அணி செய்கின்றன. இதற்கடுத்து கல் தளங்களால் பிரிக்கப்பட்ட அறைகள் உள்ளன. அவ்வறை களின் நடுவில் சமயக் கருத்தொன்றை விளக்கும் சிற்பம் ஒன்று இடம் பெற்றிருக்கிறது. தனக்கென அமைக்கப்பட்ட சிற்பச் சூழ்நிலைகளுக்கு இடையில், அச்சிற்பங்கள் யாவும் வீறுடன் விளங்குகின்றன. இப்பகுதியில் புராணக் கதைகளில் வரும் நிகழ்ச்சிகள் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இவை, விமானத்தின் ஒவ்வொரு பக்கத்தின் முழுத் தோற்றத்தைப் பொலிவுறச் செய்கின்றன. இவற்றிடையே பரந்த இடைவெளி கள் உள்ளன. அவ்விடைவெளிகளில் இன்னும் பல சிற்ப வேலைப் பாடுகளைச் செய்திருக்கலாம் என்ற எண்ணத்தை அவை எழச் செய்கின்றன.

இக்கட்டட மேற்பரப்பிற்கு மேல் ஒடுங்கிச் செல்லும் விமா னப் பகுதி உள்ளது. விமானத்தின் பருத்த தோற்றத்தின் கலை யழகு மிகுதிப்படும் வகையில், பல நேர்த்தியான வேலைப்பாடுகள் செய்யப் பட்டுள்ளன. அதன் மேற் பரப்பில், குறுகிச் செல்லும் அடுக்குகளையுடைய இடை நிலை தளமட்டக் கோடுகள், சிற்ப வேலைப்பாடு கொண்ட அலங்கரிக்கப்பட்ட சிறு கோயில்களை இடையில் வெட்டுமாறு அழகுறத் திட்டமிட்டு அமைக்கப் பட்டுள்ளன. இதனுல் பேரழகு வாய்ந்த கட்டடக் கலை நயம் நம் கருத்தைக் கவருகிறது. இவ் விமானத்தின் மேல் மட்டத்தில் முற்றிலும் வடிவில் வேறுபட்ட வட்ட வடிவமான கவிந்த சிகரம் உள்ளது. இதன் நான்கு பக்கங்களிலும் சிறகுகளைக் கொண்ட மாடக் குழிகள் உள்ளன. இதனுல், அச்சிகரத்தின் புறத் தோற்றத் திலும் வனப்புடையதாக விளங்குகிறது. பிரமிட்டு (Pyramid) போன்ற கட்டமைப்பையுடைய இந்த விமானத்தை எழுப்பிய வர்கள், நல்ல காப்புமிகு திட்டத்தின் அடிப்படையில் இதை அமைத்துள்ளனர் என்று கூறலாம். 'இத்தகைய வடிவம் பருமை யுடன் கூடிய வலிமையும் நிலைபேற்றுத் தன்மையும்' உடையதாக விளங்கும் என்று அவர்கள் கருதியிருக்கக் கூடும். இதைப் போன்று

நிலைபேறு வாய்ந்த வேலைப்பாட்டினைப் படைப்பதில் மனிதர்கள் இன்று வரை தன்னுணர்வு இல்லாமலேயே முயன்று வருகின்றனர். ஆனால், இன்றுவரை இதைப் போன்றதொரு நிலையான கட்டமைப்பையுடைய விமானத்தை உண்மையில் யாரும் அமைக்கவில்லை. சோழர் காலத்திய கட்டடக் கலையின் தலைசிறந்த படைப்பான இவ்விமானத்தில், நிலைத்த வாழ்வும் பயனும் தருகின்ற பண்பினை மட்டும் நாம் காணவில்லை. அருகிலிருந்து பார்த்தாலும் தொலைவிலிருந்து நோக்கினாலும், அது வானவெளியில் தொங்குவதைப் போன்ற தோற்றம் உடையதாக எழில்மிகு சமநிலையோடு சமைக்கப்பட்டிருக்கிறது. திராவிடக் கைத்தொழில் கலைஞரின் ஒப்புயர்வற்ற நேர்த்திமிகு கலைப் படைப்பு இவ்விமானம் என்பதில் சிறிதும் ஐயமில்லை; இதைப்போன்றே, இந்தியக் கட்டடக் கலை முழுமைக்கும் தஞ்சைக் கோயில் விமானம் ஓர் உரைகல்லாக ஒளிர்கிறது".[1]

## பெரிய கோயிலின் மாட்சி

தன்னுடைய பேராற்றலை நன்குணர்ந்த மன்னர் மன்னனான இராசராசன், அவ்வாற்றலின் வீறுமிக்க வடிவமாக இக்கோயிலை எழுப்பியுள்ளான். கட்டடக் கலைப் பண்பாட்டில் உண்டான வடிவ அமைப்பியல் முறைகளையும், மரபுகளையும் போற்றிக் காக்கும் வகையில் அவன் இக்கோயிலை அமைத்துள்ளான். அதே சமயத்தில், இதுவரையில் வெளிப்படுத்தப் படாத உள்ளார்ந்த உணர்வுகளுக்கும் விழுமிய குறிக்கோள்களுக்கும் வடிவம் கொடுக்கும் வகையில் கட்டடக் கலைப்பாணியில் மாற்றங்களும் திருத்தங்களும் செய்ததோடு, நேர்த்திமிகு புதிய இயல்புகளையும் அவன் புதிதாகச் சேர்த்துத் தஞ்சைப் பெரிய கோயிலை அமைத்துள்ளான். இந்தியக் கட்டடக் கலை யமைப்பாளர் இதுவரை மேற்கொண்ட முயற்சிகளுள் இதைப்போன்ற விரிவானதும், உயரமானதும், பேரளவாவினை வெளிப்படுத்துவதுமான கலைப் படைப்பு வேறொன்றும் இல்லை. தென்னிந்தியக் கட்டடக் கலை வளர்ச்சியில் இக்கோயில் மாபெரும் திருப்பு மையமாகும்.

உலகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து கலையியல் அறிஞர் பலர் இக்கோயிலைக் காண இங்கு வந்த வண்ணம் உள்ளனர். இதை நேரில் கண்டு, அழகினைப் பருகி இன்புறும் கலைஞர்கள் பலராவர். அவர்களுள் சிலர், இதன் எழிலையும் ஏற்றத்தையும் சொல்லிலே வடித்துத் தந்துள்ளனர். சிம்மர் (Zimmer, H.) என்பார்,

[1] Bromn, Percy: Indian Architecture, Vol. I; P. 86

கோயில்களுக்கு எல்லாம் அரசனாக விளங்குவது இத்தஞ்சை இராசராசேச்சுரக் கோயில். இதன் ஒரே சீரான கட்டமைப்பில் ஒருவகையான கட்டுப்பாடும் ஒழுங்கும் வாய்ந்த படைத் துறை மதி நுட்பம் புலனாகின்றது. இதனுடைய பருமைசால் வலிமையை, அம்மதி நுட்பம் கீழ்ப் படுத்தி விட்டது; அளவை முறை இயைபின் ஒருமைப்பாட்டிலும், அமைப்புத் திட்டத்தின் தெளிவிலும் பிற கோயில்களை வென்று விடுகிறது. எதிர் காலத்தில் அமைக்கப்படும் கோயில்களின் சிறப்பியல்பு களாக விளங்கக் கூடிய விண்ணகத்தைத் தாவிப் பறக்கும் கோபுரங்களுக்கும் சிற்ப அலங்காரத்திற்கும் வேறுபட்ட நிலையில், முற்றிலும் நிலையமைதியோடு பெருமித மிக்க அளவில், புகழ் வாய்ந்த கோயிலை இராசராசன் அமைக்க விரும்பினான். அக்கோயிலின் விமானம் மாபெரும் தோற்றத்தோடு வனப்பு நிறைந்த வடிவழகை யுடையதாகும். வெற்றிமிகு போர்களுக்குப் பின் புதியதொரு பேரரசை நிலையாக நிறுவிய சாதனையை இவ்விமானம் எதிரொலிக்கிறது.[2]

பேரரசன் இராசராசன் எடுப்பித்த இக்கோயிலை, அவனுடைய ஆற்றல்மிகு மைந்தன் இராசேந்திரன் அமைத்த கங்கை கொண்ட சோழீச்சுரத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கின்ற பொழுது, ஓர் உண்மை புலனாகின்றது. ''தஞ்சைப் பெரிய கோயிலின் நீண்ட துர தள வேறுபாட்டு எல்லைக் கோடுகளும், மனிதர்களும் தெய்வங்களும் போர் விருப்பத்தோடு இருப்பதைப் பிரதிபலிக்கும் சிற்பங்களும் அக்கோயிலின் ஆற்றல் மிகு ஆண்மையின் வீறார்ந்த இயல்பினைப் புலப்படுத்துகின்றன. இதற்கு நேர்மாறான நிலையில் இராசேந்திரனால் எடுக்கப்பட்ட கங்கை கொண்ட சோழீச்சுரம் வட்ட வடிவ தள வேறுபாட்டு எல்லைக் கோடுகளும் நெளிவு சுளிவுகளும் நிறைந்த பெண்மையின் பேரழகைப் பிரதிபலிக்கின்றன.''[3]

இதே கருத்தினைப், பெர்சி பிரவுன் என்பார், தஞ்சை பெரிய கோயிலுக்குப் பின்னர் எழுப்பப்பட்ட 'கோயிலில், இன்பக் களியாட்டக் கவர்ச்சி நம் கருத்தை ஈர்க்கிறது; முழுநிறைவுற்ற பெண்மை நலத்தின் பேரழகு பொங்கி வழிகிறது. இதற்கு மாறாகத் தஞ்சைப் பெரிய கோயிலில் ஆண்மையின் ஆற்றல்சால் வீறமைதி ஒளிவீசுகிறது. இவ்விரு கட்டடக் கலைப் படைப்புகளை ஒப்பிட்டுப் பார்க்கின்ற பொழுது, அமைப்பு முறையில் மட்டும் அல்லாமல், பல்வேறு நுட்பமான வேலைப்பாடுகளிலும் வேறுபட்டு

[2] Zimmer Heinrich: The Art of Indian Asia, Vol. I; P. 219.
[3] Encyclopaedia of World Art, Vol. 4; P. 450.

விளங்குவது புலனாகின்றது. தஞ்சை விமானத்தைப் பெருமிதத் தோற்றமும் **காப்பியக் கலைநலம்** கனிந்த வடிவமைதி யுடையது என்று கூறுவோமானால், கங்கை கொண்ட சோழீச்சுரம் கீழை நாடுகளின் புலனுகர் இன்ப வெறியூட்டும் **தன்னுணர்ச்சிப் பாடல் (Lyric)** எனலாம்''[4] என்று வேறுவகையில் உணர்த்தி யுள்ளமை இங்குக் கருதத்தக்கதாகும்.

இத்தகைய சிறப்புகளைக் கொண்ட தஞ்சைப் பெருவுடையார் கோயில் தமிழ்ப் பண்பாட்டின் கருவூலமாகவும், தமிழரின் கற்பனைத் திறனில் தோன்றிய கலைப் பெட்டகமாகவும் காலந்தோறும் கவர்ச்சிமிகு மாட்சியுடையதாக விளங்குவதில் வியப்பு ஒன்றும் இல்லை!

இடைக் காலத் தமிழ் மக்கள் ஆன்மிகப் பண்பாட்டில் மேம்பாடுற்று விளங்கினர். மனித வாழ்க்கையின் நிலையாமையை அவர்கள் நன்குணர்ந்திருந்தனர். அக்காலத்தில் வாழ்ந்த சோழப் பெருவேந்தன் இராசராசன், நிலையற்ற வாழ்க்கைக்கு நிலையான கட்டடங்களை அமைப்பதில் நாட்டம் செலுத்தவில்லை; உலகம் அழியினும் தான் அழியாது நிலைபெற்று விளங்கக்கூடிய இறைவனைப், போற்றி வழிபடுவதற்கு நிலையான பெருங் கோயிலை எடுத்தான். அக்கோயிலின் வானளாவிய விமானம், அவனுடைய உள்ளத்து எழுந்த உயர்ந்த நோக்கத்தின் ஒப்புயர்வற்ற சின்னமாகத் திகழுகின்றது.

## பிற கோயில்கள்

இராசராசன் காலத்தில் கட்டப்பட்ட கோயில்கள் பல. அழகாதிரிப் புத்தூரில் உள்ள கோயிலின் கருவறை நம் பேரரசனின் ஏழாம் ஆட்சியாண்டில் கற்றளியாக மாற்றப்பட்டது; ஒன்பதாம் ஆட்சியாண்டில் சித்தூர் மாவட்டத்தைச் சேர்ந்த லட்டிகம் என்று இப்பொழுது வழங்கப் பெறும் கோயட்டூரில், 'இருங்கோளீசுவரம்' என்ற கற்கோயில் கட்டப்பட்டது. சிறிய கோபுரவாசல், மூன்றடுக்குகள் கொண்ட சிறிய விமானம் கிரீவம், சிகரம், தூபி ஆகியவற்றோடு இக்கோயில் அழகுற அமைக்கப்பட்டுள்ளது.

அதே மாவட்டத்தில், மேற்பாடியில் முதலாம் பராந்தகன் காலத்துக்கு முன்பிருந்தே செங்கற் கோயில் ஒன்று இருந்தது. அவ்வூருக்கு இராஜாச்ரய புரம் என்னும் பெயரும் வழங்கியது.

[4] Brown, Percy : op cit P. 86

அங்கு, மன்னர் மன்னனின் பதினன்காம் ஆட்சியாண்டின் 258 ஆம் நாளில், பழைய செங்கற்கோயில் கற்றளியாக அமைக் கப்பட்டது. அதற்குச் சோழேந்திர சிம்மேசுவரம் என்னும் பெயரிடப் பட்டது. அதற்கு அருகில், இவ்வூரில் இறந்துவிட்ட தன் பாட்டனை அரிஞ்சயனுக்குப், பேரரசன் 'அரிஞ்சய ஈசுவரம்' என்னும் பள்ளிப்படைக் கோயிலைத் தன்னுடைய இரு பத்தொன்பதாம் ஆட்சியாண்டில் எழுப்பியுள்ளான்.

அவனுடைய பதினறும் ஆட்சியாண்டில், தென்னர்க்காடு மாவட்டத்திலுள்ள திருவக்கரை என்னும் ஊரில் இருந்த சந்திர மௌலீசுவரம் என்னும் கோயிலைச் செம்பியன் மாதேவியார் கற்கோயிலாக மாற்றியமைத்தனர். திருவாரூரில் உள்ள திரு வரத்துறைக் கோயிலை இவ்வம்மையாரே எடுப்பித்ததாகத் தெரிகிறது.

தாதாபுரத்தில், குந்தவைப் பிராட்டியால் கட்டப்பட்ட கோயில்களை நாம் முன்னரே கண்டோம். இராசராசனுடைய இருபத்து மூன்றும் ஆட்சியாண்டில், திருநெல்வேலியைச் சேர்ந்த ஆத்தூரில் இராசராச **விண்ணகர்** என்னும் பள்ளி கொண்ட பெருமாளின் கோயில் கட்டப்பட்டதையும், அக் கோயிலுக்குத் துர்க்கை, பகவதி, சப்தமாதர், சேத்திர பாலர், கணபதி ஆகிய தெய்வங்களின் திருமேனிகளைத் திருப்பூவணம் உடையாரான சோமநாத தேவர் எழுந்தருளுவித்ததையும் கல்வெட்டு ஒன்றால் நாம் அறிகிறோம்.

இராசராசனுடைய பட்டத்தரசி உலகமா தேவியார் திருவை யாற்றில் எடுப்பித்த **உலகமா தேவீசுரம்** என்னும் வட கயிலாயம் கோயிலைப் பற்றிய செய்திகள் வேறோர் இடத்தில் விரித்துரைக் கப் பட்டுள்ளன.

இலங்கையின் வட பகுதியை இராசராசன் கைப்பற்றினன் என்பதை நாம் முன்னர்க் கண்டோம். அதன் தலைநகரான பொலனருவாவில், சிவபெருமானுக்கு இருதளக் கற்றளி யொன்றை அவன் எடுப்பித்தான். அதில் எண்கோணச் சிகரத் தையும், ஒரு கிரீவத்தையும் நாம் காணலாம். அக்கற்றளியின் முன் புறத்தில் சிறு மண்டபம் ஒன்று உள்ளது.

## கோயில் கட்டடக் கலையின் சிறப்பியல்புகள்

அக்காலத்திய கோயில் கட்டடக் கலையில் காணப் பெறும் சிறப்பியல்புகள் சிலவற்றை இங்குக் காணலாம். கோயில்களுக்குத் தலை வாயிலில் உயர்ந்த கோபுரங்கள் அமைக்கும் பழக்கம் அக் காலத்தில் இல்லை. ஆனால், கருவறையின் மீது வானுற உயர்ந்த விமானத்தை அமைப்பதே மரபு. அவ்விமானங்களின் வெளிப்புற வேலைப்பாடு மிகவும் எளிய முறையினதாகும்; நுட்பமான வேலைப் பாடுகள் வழக்கிற்கு வரவில்லை. மேலும், சுவர்களை வேலைப் பாடில்லாமல் வெறுமனே அமைப்பதில் அன்றைய சிற்பிகள் ஒரு வகை அழகைக் கண்டனர்.

சோழப் பெருவேந்தனுக்கு முற்பட்ட காலத்திய கோயில் களில்—சிறப்பாகப் பல்லவர் காலத்திய கோயில்களின் இடைகழி (அந்தராளம்) கருவறையோடு ஒன்று சேர்க்கப்பட்டு, மேற் கோப்பு இரண்டையும் மூடுவதைக் காணலாம். ஆனால், இம் முறை இராசராசன் காலத்தில் வழக்கொழிந்தது. தஞ்சைப் பெரிய கோயில், கங்கை கொண்ட சோழீச்சுரம் கருவறையையும் பெருமண்டபத்தையும் அந்தராளம் இணைக்கிறது. மேற்கோப்பு கருவறையின்மீது கட்டப்பட்டுள்ளது. அந்தராளத்தை அரை மண்டபம் (அர்த்த மண்டபம்) என்று சுட்டும் பழக்கம் தொடங் கியது. அதிட்டானத்தில் உள்ள தாமரைப் பிதுக்கம் முதன் முதலாக எட்டுப்பட்டைகளை யுடையதாக மாற்றப்பட்டிருக்கிறது. பல்லவர் காலத்திய கோயில் தூண்களில் இடம் பெற்றிருந்த சிங்க வேலைப்பாடு மறைந்து பிதுக்கங்கள் தோன்றியுள்ளன. தூணின் தலைப்பகுதியிலும் மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. தூணினுடைய காலின் மேலும் தலைப்புக்கும் இடையில் தாமரைக் கட்டு எறுனும் புதிய பகுதி புகுத்தப் பட்டுள்ளதை நாம் காண லாம். இப்பகுதியின் இடை பானை போன்று குழிந்து தோன்று கிறது; பலகை மிகவும் அகன்றதாக அமைக்கப்பட்டிருக்கிறது. இவ்வுறுப்பு பருமனாகவும் இதழ் வேலைப்பாடு கொண்டும் விளங்கு கிறது.

போதிகையின் இரண்டு ஓரங்களும் பல்லவர் காலத்தியதைப் போல வளைவாக இல்லை. ஓரங்கள் கோணமாகச் செதுக்கப் பட்டுள்ளன; நடு மையத்தில் பிதுக்கம் இடம் பெற்றுள்ளது. திருமேனிகளுக்கு அமைக்கப்படும் மாடக் குழிகளில் (கோஷ்டங் களில்) புராணக் கதைகளை அல்லது மனித வடிவங்களைச் சித்திரிக் கும் சிற்பங்கள் பேரளவில் அமைக்கப்பட்டுள்ளன. அதிட்டானத் திலும் கபோதத்திற்கு மேலும் யாளிகளின் வரிசை அமைக்கப்

பட்டுள்ளன. கபோதத்தின் அடிப்பகுதியில் பூத கணங்களின் வடிவங்களும், வெளிப்புறம் கூடுகளும் கொடிக்கருக்கு வேலையும் செதுக்கப்பட்டுள்ளன. கூடுகளின் தலைப்பகுதியில் முன்பிருந்த பிதுக்கங்கள் மறைந்து விட்டன அவற்றிற்குப் பதிலாகச் சிங்க முகம் அல்லது மூன்று மடிப்புகளைக் கொண்ட வளைவு வேலைப்பாடு புதியதாகப் புகுத்தப்பட்டிருக்கிறது. பல்லவர் காலத்திய கோயில்களில் இடம்பெற்ற அரைவட்ட வளைவுகளுக்குப் பதிலாக சிற்ப வேலைப்பாடற்ற வட்டங்கள் காணப்படுகின்றன. மண்டபங்கள் கோயிலின் ஒரு முக்கிய பகுதியாக மாறின. தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள மண்டபங்கள் பிற்காலத்திய நூற்றுக் கால், ஆயிரக்கால் மண்டபங்களுக்கு முன்னோடிகளாக அமைந்துள்ளன.

திருச்சுற்றுலையில் பரிவார தெய்வங்களுக்குச் சிறு சிறு கோயில்கள் அமைக்கும் பழக்கம் இராசராசன் காலத்திலேயே தொடங்கியது என்று கூறினால் அது தவறாகாது.

### சிற்பக் கலை

கட்டடக் கலையின் ஒரு கூறாக விளங்குவது சிற்பக் கலை. கலையுணர்வை வெளிபடுத்துவதில் சிற்பக் கலையே தலை சிறந்ததாகும். இந்தியச் சிற்பக் கலையில், வடிவம் ஆழ்ந்த கருத்துணர்வை அடிப்படையாகக் கொண்டது. வடிவமும் வடிவத்தின் ஊடகமாகிய செய்முதற் பொருளும் ஒன்றோடொன்று கலந்தவையாகும். இதனால், செதுக்கப்பட்ட சிற்பங்கள் அனைத்திலும் மிகுந்த குழைவுத் தன்மை கொஞ்சி விளையாடுகிறது. இக் குழைவுத் தன்மை, கல்தச்சனின் கற்பனையில் தோன்றும் வடிவங்களைத் தெளிவாகவும் அழகாகவும், உயிர்த்துடிப்புடனும் வடிப்பதற்குப் பேருதவி புரிகிறது.

இந்தியச் சிற்பக் கலை இலட்சிய நோக்குடையது; ஆன்மிக அனுபவத்தைக் குறியீடுகளால் உணர்த்துவது; அப்பாலைத் தத்துவத்தின் கடந்த நிலைக் காட்சியாக விளங்குவது; ஆயினும் வாழ்க்கையைக் கூர்ந்து நோக்குவதிலும், படம் பிடித்துக் காட்டுவதிலும் நிகழ்வியல் பாங்குடையது. இந்தியக் சிற்பக் கலை; தன்னுடைய இரு அடிகளையும் நிலத்தில் (மண்ணுலகில்) ஊன்றிய வண்ணம் எப்பொழுதும் விண்ணை நோக்கி எழுகிறது.

## இராசராசன் காலத்திய சிற்பங்கள்

இராசராசன் காலத்திய சிற்பக் கலை, இதற்கு விதிவிலக்கன்று, சோழர் காலத்திய கோயில்களின் சுவரில் சிற்ப வேலைப்பாடில்லாமல் வைக்கும் வழக்கம் இருந்தது. அதனால், தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் சிற்பங்கள் மிகுதியாக இல்லை. ஆனால், வேலைப்பாடற்ற வெறும் பகுதிகளை விடுவதனால் அழகு மிகுவதை நாம் காணுகின்றோம். எனினும், திருவுண்ணாழிகையின் வெளிப்புறச் சுவர்களில் உள்ள மாடக் குழிகளில் தெய்வத் திருமேனிகள் பல காட்சி தருகின்றன.

இக்காலத்திய சிற்பங்களைத் தெய்வத் திருமேனிகள், படிமங்கள், அணிவேலைகள் என்று நாம் பாகுபடுத்தி யுரைக்கலாம். பெரிய கோயிலில் உள்ள தட்சண மேரு விடங்கள் எனப்படும் பெருவுடையார் எளிய சிற்ப வேலைப்பாடு அமைந்த லிங்கமாகும். குடிமல்லத்தில் காணப்படும் சிவலிங்கத்தில் மனித வடிவில் இறைவனுடைய வடிவம் பொறிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், இப்பெருவுடையாரில் அத்தகைய சிற்பம் ஒன்றும் இடம் பெறவில்லை. உமா பரமேசுவரியின் சிலை இராசராசன் காலத்தில் செய்யப் பட்டதாகத் தெரியவில்லை.

கோயிலின் திருவாயிலில் உள்ள நந்தி இராசராசனுடைய காலத்திய சிற்பிகளின் கைவண்ணத்திற்குச் சிறந்ததொரு சான்றாகும். 3.66 மீட்டர் (பன்னிரண்டடி) உயரமும், 5.95 மீட்டர் (பத்தொன்பதரை அடி) உயரமும், 2 மீட்டர் (எட்டேகால் அடி) அகலமும் உடையது இந்நந்தி; ஒரே கல்லினால் செய்யப்பட்டது. பெருமிதத் தோற்றமுடைய இந்நந்தியின் வடிவம் உயிர்க் களையுடையது. கண்கள் உறங்குகின்ற பாவனையில் உள்ளன. ஆனால் அதே சமயத்தில் தன்னுடைய நீண்ட நாவினை வளைத்து, மூக்கினுள் விட்டு துழாவுகின்ற நிலையில் அது காட்சி தருகிறது. அதை நோக்குகின்ற பொழுது நாம் எங்கோ பார்த்த எருதின் நினைவு நமக்கு எழுகிறது. அதன் கழுத்தினை இரண்டு பட்டையில் வரிசை வரிசையாகத் தொங்குகின்ற மணிகள் அணி செய்கின்றன. அதன் பின்புறத்தில் வாலைச் சுற்றிலும் சிற்ப வேலைப்பாடு செய்யப் பட்டிருக்கிறது. இந் நந்தியின் வால் வளைந்து தொங்கும் பாணி நேர்த்தி மிக்கதாகும். சுருங்கச் சொல்லுவது என்றால், காங்கேயத்துக் காளை ஒன்று மண்டியிட்டுப் படுத்திருப்பதைப் போன்ற எண்ணமே இந்நந்தியைக் காணுகின்ற பொழுது எழுகிறது.

## பௌத்த சிற்பங்கள்

இத்திருக்கோயில் உண்ணாழிகைக்குள் நுழைவதற்குள்ள வாயில்கள் மூன்று உள்ளன. அவற்றுள் தெற்குத் திருவாயிலின் கீழ்ப் பகுதியில் பௌத்த சிற்பங்கள் சில காணப்படுகின்றன. அவை புத்த சாதகக் கதைகளைச் சித்திரிக்கின்றன. போதி மரத்தின் கீழ் புத்தர் பெருமான் வீற்றிருக்கிறார். அறிவொளி பெற்ற ஆசானிடம் அவருடைய சீடர்கள் பணிவுடன் அறவுரை கேட்கும் பாணியில் நிற்கின்றனர். மற்றொரு பக்கத்தின் மேற்புறத்தில் தேவ அரம்பையர் ஆடியும் பாடியும் வாழ்த்துகின்றனர். அப்பக்கத்தின் கீழ்ப் பகுதியில் அரச மரபைச் சேர்ந்தவர்கள் புத்தர் பெருமானை நோக்கியவண்ணம் நிற்கின்றனர். இதையடுத்துள்ள மற்றொரு சிற்பத்தில் போதி மரத்தின் அடியில் புத்தர் பெருமான் நிற்கின்றார். அவருக்கு முன்னால் கூப்பிய கைகளுடன் சிலர் நிற்கின்றனர்; மற்றும் சிலர் கூப்பிய கைகளுடன் மண்டியிட்டு வணங்குகின்றனர்.

மேற்கண்ட இரு சிற்பங்களிலும் உள்ள போதி மரங்கள் வடிவத்தில் வேறுபடுகின்றன. முதல் சிற்பத்தில் உள்ள போதி மரம் வீற்றிருக்கும் புத்தர் தலைக்கு அருகில் இருக்கிறது; விசிறியைப் போன்ற வடிவில் மிகுதியான கிளைகளையுடையதாய்க் காணப்படுகிறது. அடுத்துள்ள சிற்பத்தில் பருத்த தண்டு ஒன்றின் மேல் விசிறி போன்ற வடிவில் சில கிளைகள் தழைத்து விரிந்துள்ளன. இவ்விரு பௌத்த சிற்பங்களும் சிவன் கோயிலில் இடம் பெற்றுள்ளமை நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது.

## துவார பாலகர்

தஞ்சை பெரிய கோயிலின் வாயில்களில் காவல் புரியும் துவார பாலகரின் சிலைகள் பெருமிதத் தோற்றம் உடையன. இச்சிலைகள் 5.49 மீட்டர் (18 அடி) உயரமும் 2.43 மீட்டர் (8 அடி) அகலமும் உள்ளன. இடது காலை ஊன்றி, வலது காலை எடுத்து, கையில் உள்ள கதையின் மீது சார்த்திய நிலையில், அமைதி தவழும் முகத்துடன் அவை காட்சி தருகின்றன. நாயக்க மன்னர் காலத்திய துவார பாலகர் கோரைப்பல்லும் கொடிய தோற்றமும் உடையவர்களாவர். இக்கோயிலின் ஏழு வாயில்களிலும் இணையாக உள்ள துவார பாலகர் அரசனுடைய அரண்மனையில் கருத்துடன் காவல் புரியும் காவல்காரரைப் போன்றுள்ளனர்.

## விமானத்தில் உள்ள சிற்பங்கள்

விமானத்தில் பரவலாகப் பல சிற்பங்கள் உள்ளன. அவை அலங்காரச் சிற்பங்கள், கட்டட நுணுக்க வேலைப்பாடுகள், இலை கொடிகள், மரங்கள், யாளி, சிங்கம் போன்ற விலங்குகள், பறவைகள், பாடலுக்கேற்ப ஆடுபவர், புராணக் கதைகள் சில வற்றை விளக்கும் வடிவங்கள் முதலியனவாகும். இவை யாவும் நுட்பமும் கலையழகும் வாய்ந்தனவாகும்.

## பிச்சாடன மூர்த்தி

தஞ்சைப் பெரிய கோயிலின் புறச்சுவர் மாடங்களில் அழகிய வேலைப்பாடு அமைந்த சிலைகள் சில அமைக்கப் பட்டுள்ளன. அவற்றுள் பிச்சாடனர் மூர்த்தியின் சிலை பேரழகு வாய்ந்த தாகும். தாருகாவனத்து முனிவர்களின் ஆணவத்தை அழித் தொழிக்க, ஆடையணியாது அழகனாகப் பிச்சையோட்டைக் கையிலேந்திப் புறப்பட்டார் சிவபெருமான். இவருடைய அழகில் மயங்கி நிறை அழிந்தனர் அம்முனிவர்களின் பத்தினிமார் என்பது ஒரு கதை. அப்பிச்சைக்கார வேடத்தில் இறைவன் எழுந் தருளும் கோலத்தில் இச்சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது.

" 'அரைநிர்வாணப் பக்கிரி' யாகக் கூட அவன் இல்லை. முழு மையாக ஆடையற்ற அழகனாக அவன் தோன்றுகிறான். ஏதோ பிச்சை கேட்கும் நிலையில் இருக்கிறான் என்றாலும், இப்பேரண்டத் தில் உள்ள உயிர்கள் அனைத்திற்கும் உணவளிப்பவன் அவனே என்னும் கருத்தை உணர்த்தும் வகையில், அவன் காலடியில் உள்ள மானுக்குப் புல்லைப் போடுகிறான்" என்பதை இச்சிற்பம் தெளிவாகத் தெரிவிக்கிறது. அவனுடைய திருக்கை நான்கனுள் ஒரு கை துடியேந்தியுள்ளது; கபாலம் தாங்கியுள்ளது மற்றொரு கை; ஒரு கை மானிற்குப் புல்லிடுகிறது; மற்றொரு கை அருட் பாலிக்கிறது; வியத்தகு அலங்காரத்தோடு கூடிய மணி மகுடம் முடியினை அணிசெய்கிறது; முகத்திலே புன்முறுவல் தவழுகிறது. இவை யாவும் வனப்புமிகு சிற்ப வடிவிலே வீறுடன் விளங்கு கின்றன.

## சந்திர சேகரர்

மற்றொரு பக்கமுள்ள மாடக் குழியில் சந்திர சேகரரின் கற் சிலை கவினுறக் காட்சி யளிக்கிறது. சிவபெருமானுடைய அருள் வடிவங்களுள் ஒன்று சந்திர சேகரர் திருக்கோலம். சடையிலே சந்திரனைத் தாங்கிய கோலத்தில் அமைதியும் அருளும் நிறைந்த

நிலையில் இறைவன் நிற்கின்றார். மழுவேந்திய கையும் மானைப் பிடித்த கையும் அவருடைய அழகிற்கு அழகு செய்கின்றன. அடைக்கலம் அளிக்கும் கையும், அருட்கரமும் அவருடைய தோற்றத்தைப் பொலிவுறச் செய்கின்றன. இடையில் இறுக்கிக் கட்டிய ஆடையும் அணிகலன்களும், மார்பிலும் தோளிலும் மணி மாலைகளும் பொன்னரி மாலைகளும் பொருந்தி நிற்கின்றன. முகத்தில் புன்னகையோடு பொருந்திய பெருமித உணர்வு குமிழிடுகிறது. அவரைச் சுற்றி, அவருடைய அடி முதல் நீண்ட கோள வடிவில் திருவாசி செதுக்கப்பட்டுள்ளது. அவருடைய திருவடிகள் தாமரை மலரில் ஊன்றி நிற்கின்றன. நாளெல்லாம் கண்டாலும் தெவிட்டாத கவின் காட்சியை இச்சிலை அளிக்கிறது.

## தட்சணா மூர்த்தி

இக்கோயிலின் தென்புறச் சுவரில் உள்ள மாடக் குழி ஒன்றில் தட்சணா மூர்த்தியின் சிலை ஒன்று சிறப்புடன் விளங்குகிறது. ஆலின் கீழிருந்து சனகாதி முனிவர்க்கு, அறமுரைத்த ஆண்டவனின் ஆசிரியக் கோலம் நல்ல முறையில் வடிக்கப்பட்டிருக்கிறது. சின்முத்திரை காட்டும் கையும் சுவடியேந்திய கரமும் நம் கருத்தைக் கவருகின்றன. அவருடைய திருமுகத்தில் சிந்தனையின் பதிவும், அறிவொளியின் சுடரும் எழிலாடுகின்றன. வணக்கத்திற் குரிய சிவஞானச் செம்மலைக் காணும் உணர்வு, இச்சிலையைக் காணுகின்ற பொழுது நமக்கு உண்டாகிறது.

## தையல் பாகன்

மேற்குப் புறச் சுவரில் 'தையல் பாகனாக' இறைவன் விளங்கும் சிலை யொன்று காட்சி தருகிறது. சிவனும் சக்தியும் இணைந்த நிலையில்தான் ஊன், உயிர், உணர்வு அனைத்தும் தோன்றுகின்றன என்னும் உண்மையை உணர்த்தும் சிலை இது.

ஆண், பெண் ஆகிய இரு வடிவமும் இணைந்த இச் சிலையை மிகவும் திறமையுடன் சிற்பி செதுக்கியுள்ளான். 'தோலும் துகிலும், குழையும் சுருள்தோடும், பால் வெள்ளை நீறும் பசுஞ் சாந்தும் சூலமும் தொக்க வளையும் உடைத் தொன்மைக் கோலத்தை' நம் முன் கொண்டுவந்து அவன் நிறுத்துகின்றான். பெண்ணின் வயிற்றைச் சுற்றி வட்டமிடும் பிட்டியை மூர்த்தியின் இடப் பகுதியில் பெண்ணின் எழில் எல்லாம் புலப்படுமாறு பெரி

தாக்கி, அதற்கே ஓர் அழகினை அவன் ஊட்டியிருக்கிறான். இத னால் மாதிருக்கும் பாதியன் மண்ணகத்தை மயக்கும் மாய வித்தைக்காரனாகத் தோன்றுகிறான்.

## கருவூர்த் தேவரும் இராசராசனும்

கோயிலைக் கட்டியவர்களுடைய வடிவத்தை, அக்கோயிலில் யாங்காகிலும் ஒரு பகுதியில் செதுக்கிவைப்பது வழக்கம். இவ் வழக்கத்திற் கிணங்க தஞ்சைப் பெருவுடையார் கோயிலை எடுப் பித்த இராசராசனையும், அவனுடைய வணக்கத்திற்குரிய கரு வூர்த் தேவரையும் அழகிய சிற்பங்களாக, இக்கோயிலின் சுவரி லுள்ள மாடக் குழி ஒன்றில் அமைத்துள்ளனர். அரசனும் ஆண்டி யும், அன்பும் பண்பும் நிறைந்த திருக்கோலத்தில் காட்சி தருகின் றனர். இவை அரைவடிவ சிற்பங்களாகும். ஒரு சிறு மேடை யில் அவ்விருவரும் வீற்றிருப்பதைப் போன்று நமக்குத் தோன்று கிறது. ஆனால், இடுப்பிற்குக் கீழே அவர்களுடைய உடைகளின் மடிப்புகள் அலை யலையாகச் செதுக்கப்பட்டுள்ளன. இடப் புறத் தில் கருவூர்த் தேவர் காட்சி தருகிறார். அவர் யோகத்தில் அமர்ந் திருக்கிறார். அவருடைய இடது கை சின்முத்திரையோடு விரிந் திருக்கிறது; வலது கை அருட்கரமாக அமைக்கப்பட்டிருக்கிறது; முகத்தில் குறுந் தாடியும் மீசையும் காணப்படுகின்றன. இக் காலத்திய பண்டார சந்நிதானங்கள் காதுகளில் அணியும் பொன வளையங்களைப் போன்று கருவூர்த் தேவரின் காதுகளிலும் வளை யங்கள் தொங்குகின்றன; விழிகள் ‘தூங்காமல் தூங்கு’கின்றன; அகன்ற நெற்றியில் திருநீற்றுப் பட்டை போன்ற மெல்லிய கோடுகள் உள்ளன. நெற்றிக்குமேல், தலையில் சடாமுடி காணப் படுகிறது. அவருடைய முகத்தின் அருள் கனிந்த பொலிவு நம் உள்ளத்தைக் கவருகிறது. இச் சிற்பத்தை அருகிலிருந்து பார்த் தாலும், சிறிது தொலைவிலிருந்து நோக்கினாலும், ஆன்மிகப் பண் பாடு மிக்க சான்றோர் ஒருவரைக் காண்பதால் உண்டாகும் மன நிறைவும், புல்லரிப்பும் நமக்குத் தோன்றுகின்றன.

அடுத்துள்ள சிற்பம் இராசராசனுடையதாகும். அவ னுடைய இடது கையை வளைத்து இடுப்பின் மீது பொருத்தப் பட்டிருக்கிறது. இதனால், அரசனுடைய தோற்றத்தில் பெரு மிதப் பண்பு பளிச்சிடுகிறது; வலது கை அருள்பாலிக்கும் நிலையில் அமைக்கப்பட்டிருக்கிறது; மார்பிலே கண்ட சரமும், பொன் னரி மாலையும் பொலிவுடன் விளங்குகின்றன, எடுப்பான மூக்கும் சிறிது தடித்த உதடும் அரும்பு மீசையும் முகத்தை அணி செய் கின்றன; நீண்ட பெருங் காதுகளில் வளையங்கள் தொங்குகின்

றன. பரந்த நெற்றியில் வெண்ணீறு போன்ற கீற்றுகள் காணப் படுகின்றன. இறைவழிபாட்டில் ஈடுபட்ட அன்பர்களின் கண்களைப் போன்று இராசராசனுடைய கண்கள் மூடியும் மூடாமல் முகிழ்த்து நிற்கின்றன. வேலைப்பாடு மிக்க நீண்ட நெடுமுடி, அவன் தலையை அலங்கரிக்கிறது. முகத்தில் அமைதியும் ஆளுமை மிக்க ஒருவகைக் கவர்ச்சியும் நிழலாடுகின்றன. கருவூர்த் தேவரின் தலை சிறிது கீழ் நோக்கிக் குனிந்த வண்ணம் இருக்கிறது. இராசராசனுடைய தலை இயல்பான நிலையில் நிமிர்ந்த வண்ணம் இருக்கிறது. இதனால், அரசனுடைய வீறுமிக்க பெருமிதத் தோற்றம் புலனாகிறது.

இதைப் போன்றதோர் ஓவியம் திருவுண்ணாழிகையின் உட்புறச் சுவரில் உள்ளதைப் பின்னர் காண்போம். இச் சிற்பத்தையும் அவ்வோவியத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கின்ற பொழுது, அரசனும் யோகியும் ஒரே வகையான தோற்றப் பொலிவுடன் தோன்றுகின்றனர். 'இவை, இராசராசனையும் கருவூர்த் தேவரையும் சுட்டுவன என்று கூறுவது பொருந்துமா? அதற்கு என்ன சான்று இருக்கிறது?' என்று சில ஆராய்ச்சியாளர் வினவுகின்றனர். எந்த வடிவத்தின் கீழும் இராசராசன் கருவூர்த் தேவர் என்று அவர்களுடைய பெயர்கள் பொறிக்கப்பட்டிருக்கவில்லை என்பது உண்மை. இராசராசனுடைய இருபத்தொன்பதாம் ஆட்சியாண்டில் திருவிசலூர் மகாதேவர் கோயிலில் துலர்பாரம் புக்கருளினன்; அவனுடைய பட்டத்து அரசி இரணிய கருப்பும் புகுந்தனள்.[5] இச்செய்தியைத் தெரிவிக்கும் கல்வெட்டிற்கு மேலே, இறைவனை வணங்கும் நிலையில் ஓர் அரசனும் அரசியும் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளனர் என்பதை நாம் முன்னரே கண்டோம். அச்சிற்பத்தில் உள்ளவர்கள் நம் இராசராசனும், அவன் பட்டத்து அரசியான தந்திசத்திவிடங்கி எனப்பட்ட உலகமாதேவியாருமாக இருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.[6] அச் சிற்பத்தில் காணப்படும் அரசனும் தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள சிற்பத்திலும் ஓவியத்திலும் காணப்படும் அரசனும் தோற்றத்தில் பெரிதும் ஒத்திருக்கின்றனர். இந்த ஒப்புமையை அடிப்படையாகக் கொண்டு நோக்குகின்ற பொழுது, மேற்கண்ட சிற்பத்திலும், ஓவியத்திலும் காணப் பெறும் அரசன், இராசராசனே என்று கருதலாம். இராசராசேச்சுரத்தினைப் போற்றிப் பாடியவர் கருவூர்த் தேவர்.

[5] 42 of 1907.
[6] ARE. 1925, II, 12, ante, PP. 168-169.

அவரைச் சிறப்பிக்கும் வகையில் பேரரசனோடு தேவரையும் அக்காலத்திய கலைஞர்கள் சிற்பமாகச் செதுக்கி இருக்கலாம்; ஓவியங்களாகத் தீட்டியும் இருக்கலாம்.

## சிற்பங்களின் அமைப்பும் அழகும்

இவையல்லாமல் சோழப் படைவீரர், விநாயகர், திருமால், நடராசர், மார்க்கண்டேயர், லிங்கோத்பவர், கங்காதரர், கலியாண சு ந் த ர ர், மகிஷாசூர மர்த்தனி முதலிய சிலைகள் விமானத்தையும், புறச்சுவர்களையும் அ ணி செய்கின்றன. இவற்றைத் தனித்தனியே விளக்கியுரைக்கின், இந்நூல் சிற்பக் களஞ்சியமாகிவிடும். எனினும், இச்சிற்பங்களிலும், நாம் முன்னர்க் கண்ட முக்கியச் சிற்பங்களிலும் இழையோடிச் செல்லும் சிறப்பியல்புகள் சிலவற்றை இங்கு ஆய்ந்தறியலாம். இதனால், அக்காலத்திய சிற்பக் கலையின் நோக்கையும் போக்கையும் நாம் எளிதில் உணர வாய்ப்புண்டாகும்.

பொதுவாக, இச்சிற்பங்கள் எல்லாம் புடைப்புச் (Relief) சிற்பங்களாகும். படிமங்களும் இவ்வகையைச் சேர்ந்தவை. இச்சிற்பங்கள் நேர்த்தியும் விறுவிறுப்பும் உ டை ய ன. ஆகம நூல்களின் விதிமுறைகளைக் கருத்தில் கொண்டு சிற்பங்கள் வடிக்கப்பட்டன. எ னி னு ம், அவற்றைப் படைக்கும் கலைஞனின் கற்பனைக்கு மிகுதியான இடம் கொடுக்கப்பட்டது. இயந்திரத் தாலானவை போன்றதும் கட்டுப்பாட்டுக் குட்பட்டதுமான சிற்பங்கள் இராசராசன் காலத்தில் படைக்கப்படவில்லை. எழில் மிகு தோற்றப் பொலிவும், நுட்பமான வேலைப்பாடும் அக்காலத்திய சிற்பங்களின் சிறப்பியல்புகளாகும். வடிவ அமைப்பிலும் கவர்ச்சிமிகு உயிர்க்களையோடு கூடிய இயக்கத்திலும் இச்சிற்பங்கள் தலை சிறந்தன.

இச்சிற்பங்களில் தெய்வத் திருமேனிகளுக்கும் மனித வடிவங்களுக்கும் இடையே உள்ள சிறப்பான வேறுபாடு எளிதில் புலனாகின்றது. பல்லவருடைய சிற்பங்களில் அரசனுக்கும் தெய்வத்திற்கும் புறத் தோற்றத்தில் எத்தகைய வேற்றுமையையும் காண இயலாது; அரசிகளின் சிலைக்கும் சத்தியின் திருமேனிகளுக்கும் இடையே வேற்றுமை இருப்பதில்லை. ஆ ன ல், சோழருடைய சிற்பங்களில் தெய்வத் திருமேனிகளுக்கும் அரசரின் படிமங்களுக்கும் இடையே தோன்றும் வேற்றுமைப் பண்புகளை நாம் எளிதில் கண்டுணரலாம். தெய்வத் திருமேனிகளில் மனிதப் பண்பை விஞ்சிய ஒருவித தெய்விகக் களையைக் காணுகின்றோம்.

மனித உடற்கூற்று அமைப்பிலிருந்து வேறுபட்ட நிலையில், சிற்சில புதுமைப் பண்புகளுடன் அவை பொலிவுறுகின்றன. இயற்கையில் குறிக்கோளியல்போடு பொருந்திய அழகை யெல்லாம் ஓரிடத்தில் திரட்டி வைத்ததைப் போன்று அவை தோன்றுகின்றன.

இராசராசன் காலத்திய கோயில்களில் மட்டும் அல்லாமல் சோழர் காலத்திய கோயில்கள் எல்லாவற்றிலுமே நாம் காதல் களியாட்ட(மிதுன)ச் சிற்பங்களைக் காணமுடியாது. அக்காலத் திய சிற்பங்கள் அனைத்தும் பண்பார்ந்த அமைதியுடையன; மனித னின் இழிந்த உணர்வுகளைத் தூண்டுவன அல்ல. பெண்களுடைய சிற்பங்கள் அழகுடையன. ஆனால், அவற்றின் ஊடே அன்னை பராசக்தியின் அன்பும், பண்பும் தவழ்ந்து விளையாடுவதை, இன்றும் நாம் கண்டு மகிழலாம். இவ்வாறு கூறுவதனால், சோழர் காலச் சிற்பிகள், பெண்மையின் பேரழகினைக் கண்டு, நுகர்ந்து, மகிழ்ந்து, இன்புறும் கலையுணர்வு அற்றவர்கள் என்று கருதுவது தவறாகும். பெண்மையின் மென்மையையும், உட லுறுப்புகளின் எழிலையும் ஏற்றத்தையும், உடலமைப்பின் வளத் தையும் வனப்பையும், திருமுகத்தின் அழகையும் ஆன்மிகக் கவர்ச்சியையும் சிற்பத்தில் வடித்துத் தர, அன்றைய, சிற்பிகள் மறந்துவிடவில்லை. மெலியுமிடை, தடிக்கு முலை, வேய் இளந் தோள், சேயரிக்கண் வென்றி மாதர்' என்று கம்பன் தீட்டிய சொல்லோவியத்தைக், கல்லோவியங்களில் கவினுறக் காட்டி யுள்ளனர் அச்சிற்பிகள். ஆனால், அவர்கள், 'சொல் நலம் கடந்த காமச் சுவையைப் பல்லுருவம் ஆக்கி, இந்நலம் தெரிய வல்லார் எழுதியது' என்று இழித்துக் கூற இயலாவகையில் அழகிற்கு ஓர் அழகினை யூட்டி யுள்ளனர்.

சுருங்கச் சொல்லுவது என்றால், மனிதரின் இதயங்களுக்கு மிக அருகில் தெய்வங்களைக் கொண்டு வந்து நிறுத்துவதற்குரிய ஒரு கருவியாகவே சிற்பக் கலையைச், சோழப் பேரரசர் காலத்திய சிற்பிகள் போற்றி வளர்த்துள்ளனர் எனலாம்.

## வெண்கலச் சிலைகள்

தமிழகத்தின் கலைப்பொருள்களில், தலை சிறந்த படைப்பு வெண்கலச் சிலைகள், அவற்றை உலகம் போற்றிப் பாராட்டி வருகிறது. அவற்றுள்ளும் இராசராசன் காலம் முதல் படைக்கப் பட்ட சோழர் காலத்திய வெண்கலச் சிலைகளே, ஒப்புயர்

வற்றதாகக் கருதப்படுகின்றன. கலையுலகில் தமிழகத்திற்குச் சீர்த்தியையும் கீர்த்தியையும் தேடித் தந்துள்ள தனிப்பெருங் கலை இவ்வெண்கலச் சிலைகளைப் படைக்கும் கலையாகும்.

இச்சிலைகள் வெண்கலத்தால் செய்யப்பட்டன. அவ்வெண் கலத்தில் பேரளவிற்குச் செம்பு கலக்கப்பட்டது. இவ்வுலோகக் கலவையை நன்முக உருக்கி, மெழுகினால் செய்யப்பட்ட சிலையின் மீது ஊற்றி, மண்ணில் குளிர வைப்பர். அந்நிலையில் உள்ளே மெழுகு உருகிவிடும். பின்னர், சிறு சிறு உளிகளைக் கொண்டு நுட்பமான வேலைப்பாடுகளைச் சிற்பிகள் அவற்றில் செய்வர். முகம் போன்ற உறுப்புகளுக்குப் பொன் நிறத்தைப் பூசுவர். இத்தகைய சிலைசெய்யும் முறைக்கு 'இழந்த மெழுகு' (Lost wax) முறை என்பது பெயர். இக்கலையில் அன்றைய தமிழகக் கொல்லர்கள் தேர்ச்சி மிக்கவராக விளங்கினர்.

தஞ்சைப் பெரிய கோயிலில் காணப்படும் கல்வெட்டுகளில் சில, இத்தகைய வெண்கலச் சிலைகளின் வகைகளையும் செய்யப் பட்ட முறைகளையும் குறிப்பாக புலப்படுத்துகின்றன. கோயில் களில் தெய்வத் திருமேனிகளை எழுந்தருளச் செய்து வழிபடும் வழக்கம் நாயன்மார், ஆழ்வார் ஆகியோரின் அரிய முயற்சி களால் நாடெங்கும் பரவியது. அதனால், பழைய கோயில்கள் புதுப்பிக்கப்பட்டன; புதிய கோயில்கள் பல கட்டப்பட்டன. கோயில்கள் மிகுதியாகப் பெருகப் பெருக அக்கோயில்களில் வழிபடுவதற்குரிய தெய்வங்களின் திருமேனிகளைச் செய்யும் கலை, பெரு வளர்ச்சியுற்றது. அதனால், கெட்டியான செப்புத் திரு மேனிகளைச் செய்யும் பழைய முறை பையப் பைய மறைய லாயிற்று. விரைவாகவும் செம்மையாகவும், நேர்த்தியாகவும் புதுமைப் பொலிவுடனும் சிலைகளை வார்க்கும் முறை வளர்ச்சி யுற்றது. கனமான சிலைகள், உள்ளீடு இல்லாத சிலைகள் தடித்த பக்கங்களைக் கொண்ட சிறிதளவு உள்ளீடு இல்லாத சிலைகள் என்னும் மூவகையான சிலைகள் அக்காலத்தில் செய்யப்பட்டன.

இச்சிலைகளைச் செய்வதற்குரிய விதிமுறைகளை வகுத்துக் கூறும் நூல்கள் பல இருந்தன. அவற்றில் கூறப்பட்டுள்ள நெறி முறைகளைப் பின்பற்றிக், கருத்துடன் இச்சிலைகள் செய்யப் பட்டன. இருப்பு நிலைக்கும் இயக்க நிலைக்கும் இடையே ஒரு கணப்பொழுதினைப் படம் பிடித்துக் காட்டுவதைப் போன்ற மாபெரும் சாதனைகளாக இச்சிலைகள் விளங்குகின்றன. அதே சமயத்தில் வடிவத்தின் வனப்பாலும், முகச் சாயலாலும், உட லுறுப்புகள் உணர்த்தும் முத்திரைகளாலும் உவகை யூட்டும் இன்பவுணர்வு அவற்றில் ததும்புகின்றன.

இராசராசன் காலத்தில், சிலைகள் பல கோயில்களில் எழுந்தருளிவிக்கப்பட்டன. ஆயினும், இன்று நமக்குக் கிடைப்பன மிகச் சிலவேயாகும். அழகிய பெண், இலட்சுமி, பார்வதி, பத்தினிதேவி, இராசராசன் மனைவியாகிய சோழமாதேவி, சைவ சமய குரவர்கள் முதலியோருடைய சிலைகளும், உலகப் புகழ் மிக்க நடராசப் பெருமானின் திருவுருவச் சிலையும் இங்குக் குறிப்பிடத் தக்கனவாகும்.

## பெண்ணழகி

ஆனந்த குமாரசுவாமியால், வாஷிங்டன் நகரத்து பீரியர் கலைக் கூடத்தில் (Freer Art Gallery) கண்டெடுக்கப்பட்ட வெண்கலச் சிலை, ஒரு பெண்ணழகியினுடையதாகும். அவளுடைய அழகு நம் 'உள்ளத்தின் அமைதியைக் குலைக்கிறது.' இச்சிலையை, அவர் இலட்சுமியாகவோ, பார்வதியாகவோ இருக்கலாம் என்று கூறியுள்ளார். மேலும், அவர் இச்சிலையினை இராசராசனுடைய பெரிய பாட்டியான செம்பியன் மாதேவியின் வடிவமாக இருக்கலாம் என்றும் கருதியுள்ளார்.[7]

## திருமகள்

திருநெல்வேலி மாவட்டத்தில் சேரமா தேவி என்னும் ஊரின் பாழடைந்த கோயிலில் சில சிலைகள் கண்டெடுக்கப் பட்டன. அவற்றுள் திருமகளின் சிலை சிறப்புடையதாகும். நின்ற கோலத்தில் திரிபங்க அமைப்பில் அச்சிலை உள்ளது. பிற்காலச் சிலைகளில் காணப்படும் மார்புக் கச்சு இச்சிலையில் இடம் பெறவில்லை. இப் பண்பு இராசேந்திரன் காலம் வரையில் செய்யப்பட்ட சிலைகளில் காணப்படும் ஓரியல்பாகும். வலதுகாலைச் சிறிது வளைத்த நிலையில் இத்தெய்வத் திருமேனி செய்யப்பட்டுள்ளது. இலக்குமி கொடி போன்ற தோற்றமும் இளமைத் துடிப்பும் மிக்கவளாகக் காட்சி அளிக்கிறாள். இந்தியப் பெண்மையின் இலட்சிய வடிவமாக அவள் படைக்கப் பட்டிருக்கிறாள்.

## பார்வதி

தென்னிந்திய வெண்கலச் சிலைகளுள் சிறப்புமிக்க பெண் வடிவமாகக் கருதப்படுவது பார்வதியின் திருமேனியாகும். ஒன்பது தாலங்களைக் கொண்ட உயரமுடையது; நீண்ட கைகளையும் கால்

[7] Nilakanta Sastri, K. A.: The Cholas, P. 726.

களையும் கொண்டது. இடது காலினைத் தொங்கவிட்ட வண்ணம், வலது காலை வளைத்துத் தாமரை பீடத்தில் பொருத்தி அமர்ந்த கோலத்தில் இவ்வம்மை காட்சி தருகிறாள். இடது கையைத் தாமரை பீடத்தில் ஊன்றிய நிலையில் வலதுகை அருட் கையாகவும் அமைக்கப் பட்டுள்ளது; விழிகள் நிலத்தை நோக்கிய வண்ணம் உள்ளன; முகத்தில் பொலிவும் புன்முறுவலும் தவழுகின்றன; அழகிய ஆடை அணிகலன்கள் அவளை அணி செய்கின்றன. செல்வக் குடியில் தோன்றிய சீரிள மங்கை யொருத்தியின் சாயலை, இச்சிலையில் நாம் காணுகின்றோம். நேர்த்திமிக்க வேலைப்பாட்டோடு பெண்மையின் மென்மையும் குழைவும் பொருந்திய எழில்மிகு தோற்றமுடையது இச்சிலை.

## பத்தினித் தெய்வம்

லண்டன் மாநகரத்து அரும்பொருள் காட்சி யகத்தில் இருக்கும் வெண்கலச் சிலை இது. கி.பி. பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இச்சிலை இருக்கலாம் என்று அறிஞர் கருதுகின்றனர். இதை இலங்கையிலிருந்து இங்கிலாந்திற்குக் கொண்டு சென்றனர். மரபு வழிவந்த பண்புகளின் நிலைக்களனாகப் **பத்தினித்தேவி** காட்சியளிக்கிறாள். மெலிந்த இடையும் திரண்ட கொங்கைகளும் தடித்த துடைகளும் இப்பெண்ணிற்குப் பேரழகைத் தருகின்றன. இல்லத்தரசியின் ஏற்றமிகு பெருமிதத் தோற்றமும், தாய்மையின் அன்பு தவழும் திருமுகமும் இவ்வம்மை கற்பின் தெய்வம் என்ற உணர்வை ஊட்டுகின்றன. அன்பும், அடக்கமும், நாணமும் கொண்ட தமிழகப் பெண்மையின் வற்றாத பேரூற்றின் சின்னமாகப் பொன்றாப் புகழ்பெற்று விளங்குவது இப்பத்தினித் தெய்வச் சிலையாகும்.

## சோழப் பேரரசி

காளத்தியில் உள்ள திருக்கோயிலில் சோழமாதேவியின் சிலை ஒன்று இருக்கிறது. பேரரசன் இராசராசன் மனைவியருள் ஒருத்தி சோழமாதேவி. அவளுடைய சிலையை, இராசராசனுடைய மகனை இராசேந்திரன் இக்கோயிலில் எழுந்தருளச் செய்திருக்கிறான். தமிழகத்தின் வெண்கலச் சிலைகளுள், இது ஓர் அரசியின் வடிவத்தை நமக்குத் தெளிவாகக் காட்டும் சிறப்புமிக்க சிலையாகும். பெருந்தன்மையோடு கூடிய, பண்பாடு நிறைந்த பெண்ணரசியாகத் தோற்றமளிக்கிறாள் இவ்வரசி.

மேற்கண்ட பெண் தெய்வத் திருமேனிகளிலும், பத்தினிக் கடவுளின் திருவுருவத்திலும், இவ்வரசியின் சிலையிலும் தமிழ் மக்களுடைய பெண்மை அழகைப் பற்றிய இலட்சியம் பையப் பைய வளர்ந்து சிறந்து முழு நிறைவு அடைந்துள்ளதைக் காணலாம். புலனுகர் இன்பத்திற்கு அப்பாற்பட்ட **அன்னையாக**, அருள்மிகு **சக்தியாகப்** போற்றும் பண்பின் எதிரொளியை நாம் இச்சிலைகளில் காணுகின்றோம்.

**சைவ சமய குரவர்**

இராசராசன் காலத்தில் தேவாரம் பாடிய அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவருக்கும் தஞ்சைப் பெரிய கோயிலில் படிமங்கள் அமைக்கப் பட்டதை நாம் முன்னரே கண்டோம். ஆனால், இன்று சுந்தரரின் சிலையையும், அவர் மனைவி பரவையார் சிலையையும் தவிர அக்கோயிலில் பிற சிலைகளைக் காணோம். இலங்கையிலுள்ள கொழும்பு மாநகரின் அரும் பொருள் காட்சியகத்தில் தேவாரம் பாடிய மூவருடைய சிலைகளோடு மாணிக்க வாசகரின் சிலையும் இடம் பெற்றிருக்கின்றன. இவ்வடியார்களுடைய திருவுருவங்கள் பக்தியால் உள்ளம் நைந்துருகும் இயல்பினைத் தெளிவாகப் புலப் படுத்துகின்றன.

> சமய வழிபாட்டிற்குரிய தெய்வத் திருமேனிகளில் அமைத்துக் காட்டாது விடப்பட்ட பக்தி நிலையானது, அடியார்களின் இத்திருவுருவங்கள் மூலம் புலப்படுமாறு செய்யப்பட்டுள்ளது. இதனால், ஒரு பக்தன், தன்னுடைய வழிபடு தெய்வம் எழுந்தருளி வருவதை எதிர் கொள்ள விருக்கும் நிலையை இவ்வடிவங்கள் காட்டுகின்றன. இந்நிலை, அப்பக்தனுக்குப் புலனாகாமல், தெய்வத்தின் வருகையினால் அவனுடைய உள்ளத்துள் எழும் அசைவுகளின் ஓசையால் உண்டாகும் இதயத்தின் மலர்ச்சியே யன்றி, பருப்பொருள் சார்பான ஓசைக்குச் செவி சாய்த்தலால் உண்டாவதன்று. இவ்வடியார்களின் திருவுருவங்களின் குழைவுத் தன்மையில் பக்தியுணர்வு மிகச் சிறந்த முறையில் வெளிப்படுத்தப் பட்டுள்ளதைக் காணுகின்றோம்.[8]

இத்தகைய அடியார்களின் திருவுருவங்களில் தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் உள்ள சுந்தரருடைய சிலையும், நங்கை பரவையார் சிலையும் நம் கருத்தைக் கவருகின்றன.

[8] Kramrisch, St. : Indian Sculpture, P. 120.

சைவ சமய அடியார்களுள் மூன்றுவதாக வைத்துப் போற்றப் படுபவர் சுந்தரர். அவரை நம்பியாரூரர் என்றும் தம்பிரான் திருத்தோழர் என்றும் கூறுவர். தம்மைத் தடுத்தாட் கொண்ட இறைவனது திருவருளின் பெருமையை நினைந்து, அவர் வய மாகித் தமது மெய்மறந்த நிலையை இத்திருவுருவம் குறிக்கின்றது. சொல்லாலும், எழுதுகோலாலும் உணர்த்தமுடியாத அப் பேரின்ப நிலையினை யாவரும் உணர்ந்து இன்புறுமாறு இச்சிலை படைக்கப்பட்டுள்ளது எனலாம். இதனை நோக்கும்பொழுது எல்லா அன்பருடைய உள்ளங்களும் அருள் மயமாகின்றன. இறைவனுடைய திருவடியில் தம்மை ஒன்றுபடுத்தி, நுகர நுகரத் தெவிட்டாத இன்பத்தை நுகர்ந்து வாழும் பக்தர்களு டைய மனநிலையினைப் புறத்தே புலனுகுமாறு இத்திருவுருவம் படைக்கப் பட்டுள்ளமை நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. இச் சிலை முழுவதிலும் தெய்விகப் பேரின்பத்தில் மூழ்கித் திளைக்கும் பக்தனுடைய எதிர்ச் செயலின் துடிப்பு அலையலையாக எழுவதை நாம் காணுகின்றோம். இந்நிலையில் நம்மை நாமே மறந்து, அத னுடைய அழகில் ஒன்றி விடுகின்றோம்.

அவருடன் அருகில் நிற்கும் நங்கை பரவையாரின் சிலை பெண்மையின் நலமெல்லாம் ஓரிடத்தில் ஒருங்கே திரண்டதைப் போன்று தோற்றப் பொலிவுடன் திகழ்கிறது. அவருடைய திருமுகத்தின் அருள்கனிந்த பார்வையோடு பொருந்திய பக்தி யுணர்வு பொங்கி வழிகிறது. இவ்விரு சிலைகளையும், தமிழகத் தின் தலை சிறந்த வெண்கலச் சிலைகளுள் நிகழ்வியல் பாங்குப் பண் புடையனவாகக் கூறலாம்.

**நடராசர்**

தென்னிந்தியாவின் சிறப்புமிக்க வெண்கலச் சிலை படைப்புக் கலையின் ஒப்புயர்வற்ற படைப்பாக நடராசப் பெருமானின் திருமேனியை உலகம் போற்றுகிறது. இறைவனைக் காண வேண்டும் என்னும் பேராவல் மனிதன் சிந்திக்கத் தொடங்கிய நாள் முதல் இன்று வரை ஆயிரமாயிரம் உள்ளங்களில் ஊற் றெடுத்து இருக்கிறது. ஆனுல், அப்பேராவல் முழுமையாக நிறைவேறிற்று என்று சொல்லக் கூடியவர்கள் உலகில் இல்லை என்று கூறினுல், அது தவருகாது. இல்லையென்றுல் திருவருட் செல்வியாகிய காரைக்கால் அம்மையார்,

எவ்வுருவோ நும்பிரான்
என்பார் கட்கு என்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவம் ஏது?

(அற்புதத். 61)

என்று இறைவனிடம் கேட்பாரா? இதனாலேயே 'ஒரு நாமம், ஓர் உருவம் ஒன்றும் இல்லாத'வன் இறைவன் என்றனர். அவனே, 'இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன், இவன் இறைவன் என்று எழுதிக் காட்ட வொண்ணாது' என்று அப்பர் பெருமான் அழுத்தந் திருத்தமாக அறிவுறுத்தியுள்ளார்.

ஆனால், உருவம் இல்லாத இறைவனுக்கும் உருவத்தைத் தம் கற்பனையில் வடித்துத் தந்த அருளாளர் பலர், உலகில் தோன்றியுள்ளனர். தமிழகத்தில் தோன்றிய அருட்செல்வர்களின் திருவுள்ளத்தில் 'வான் நின்று இழிந்து வரம்பு இகந்து மாபூதத்தின் வைப்பு எங்கும் ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும் புறத்தும்' இயங்குகின்ற இறைவன் ஆடும் பெருமானாகக் காட்சி யளித்துள்ளான். விண்ணிறைந்தும் மண்ணிறைந்தும் விளங்கும் ஒளியாய் நிற்கும் அந்தத் தனி முதல்வனை, ஒவ்வோர் அணுவிலும் இயங்கும் வியப்பிற்குரிய பேராற்றலாகத் தமிழ்ச் சான்றோர் கண்டனர்; 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்பதை அவர்கள் நன்குணர்ந்திருந்தனர். அணுவுக்குள் அணுவாய் நின்று அதனை மட்டும் அல்லாமல், அண்டங்களையே ஆட்டுவிக்கிறான் என்பதை அறிவிக்கும் வகையில் ஆடல் வல்லானின் திருவுருவத்தை அவர்கள் படைத்தனர். அனைத்தையும் ஆட்டுவிக்கின்றவன் தானும் ஆடிக்கொண்டே தான் ஆட்டுவிக்க இயலும் என்பது அச்சான்றோர்களின் துணிவு. இவ்வாறு, ஆடும் பெருமான் தமிழ் நாட்டுக் கலைஞனுடைய கற்பனையில் தோன்றியிருக்கவேண்டும். தமிழ் மக்கள் கண்ட இறைவனின் திருவுருவங்களுள் தலைசிறந்தது நடராசப் பெருமானின் திருக்கோலம் என்று கூறினால் அது தவறாகாது.

இக்காலத்திய கலைவல்லார் ஒருவர், அம்பலவாணரின் தெய்வத் திருமேனியை முதன் முதல் உலகிற்குப் படைத்துத் தந்தவர் தமிழர் அல்லர்; நடனமாடும் சிவனுடைய சிற்பங்கள் சோழர் காலத்திற்கு முன்பே பாதாமியிலும், ஐயவோலிலும், எல்லோராவிலும் காணப்படுகின்றன[9] என்று ஒரு கருத்தைத் தெரிவித்து வருகிறார். பல்லவப் பெருவேந்தர்கள் காலத்திலேயே நடராசப் பெருமானின் திருவுருவம் தமிழ் நாட்டில் வழிபடும்

[9] Kandalavala, Karl: Vincent Smith's. A History of Fine Art in India and Ceylon, Note to Chapter 10; PP. 126-127.

மூர்த்தியாக விளங்கியது, சைவ சமய குரவரான அப்பர் தில்லைச் சிற்றம்பலத்தில் ஆனந்த தாண்டவமாடும் நடராசப் பெருமானைக் கண்டு வணங்கினர். அப்பொழுது அவர்,

''குனித்த புருவமுங் கொவ்வைச்
    செவ்வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்
    மேனியில் பால்வெண் ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற்
    பாதமுங் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டு
    வதேஇந்த மாநிலத்தே''

(தேவாரம் 4941)

என்று பாடிய தேவாரப் பாடல் நடராசப் பெருமானின் திருக் கோலத்தைச் சொல்லோவியமாகத் தீட்டிக் காட்டுவதை யாவ ரும் நன்கறிவர். அப்பர் பெருமான் மகேந்திரவர்மன் காலத்தில் வாழ்ந்தவர் என்பதில் அறிஞரிடையே கருத்து வேற்றுமை இல்லை.

மற்றும், சிதம்பரத்தில் உள்ள நடராசர் கோயிலுக்கு முதன் முதல் பொன் வேய்ந்தவன் சிம்மவர்மன் என்ற பல்லவ மன்னனு வான். ''சிம்மவர்மன் என்ற பெயர் கொண்ட பல்லவ அரசர் பலர் இருந்தனர். அவருள் கி.பி. 436 முதல் 458 வரை அர சாண்ட சிம்மவர்மனே மேற்சொன்ன திருப்பணியைச் செய்திருத் தல் வேண்டும்.... அப்பர் காலத்தில் சிதம்பரத்தில் பொன் அம் பலம் இருந்தமைக்கு அவர் பாக்களே சான்றாகும்.[10] இதைக் கருத்தில் கொண்டு, அக்கலை வல்லார் குறிப்பிட்ட இடங்களில் காணப்படும் சிவபெருமானின் ஆடல் கோலத்தை ஆய்ந்து பார்க் கின்ற பொழுது, அவை யாவும் காலத்தால் பிற்பட்டவை என்பது எளிதில் புலனாகின்றது.

இதே முடிபிற்கு வேறொரு வகையில் அறுபது ஆண்டுகளுக்கு (1913) முன்னர் டாக்டர் ஆனந்த குமாரசுவாமி வந்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்:

> சிவபெருமானின் நடன கோலம் ஐயவோலில் உள்ள துர்க்கை கோயிலில் காணப்படுவது உண்மை. அது குப்தர் காலத்தைச் சேர்ந்தது. சிறிது பிற்பட்ட காலத்தில் எலி பெண்ட்டா குகையில் இத்தகைய சிற்பம் ஒன்று காணப்படு கிறது. அக்கல் சிற்பங்களில் நடராசப் பெருமானின் வடிவத்

[10] இராசமாணிக்கனார், மா.: பல்லவர் வரலாறு, பக்.305.

> தோடு பொருந்தக் கூடிய மூல வடிவத்தையோ, சமமான சிற்ப வடிவத்தையோ நாம் காணமுடியவில்லை. எனவே, அவ் வடிவத்தை வெண்கலச் சிலையாகச் செய்யும் கலையைத் திராவிடச் சிற்பக் கலையியல் குழுவினரே முதன் முதல் படைத்தனர் என்பது புலனாகின்றது"[11]

என்னும் கருத்து கருதத்தக்கது.

சாளுக்கியரின் தலைநகராயிருந்த வாதாபி (பாதாமி) யில் ஒரு குகைக் கோயில் உள்ளது. அதனுடைய சுவரில் பதினாறு கைகளையுடைய ஒரு சிவதாண்டவச் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. அந்தக் குகை குடையப்பட்ட காலம் கி. பி. 578 ஆம் ஆண்டெனக் கருதப்படுகிறது. முதலாவது, அங்குக் காணப்படும் சிற்பம் சிவபெருமானின் ஊழிக் கூத்தைக் குறிப்பதாகும். அதற்கு முன்பே கி, பி. ஐந்தாம் நூற்றாண்டிலேயே ஆனந்த தாண்டவமாடும் நடராசப் பெருமானின் திருவுருவம், திருக்கோயிலில் வைத்து வணங்கப்பட்டதை நாம் முன்னரே கண்டோம்.

எனவே, தமிழகத்தின் கோயில்களில் வழிபடு தெய்வமாக வைத்துப் போற்றப்படும் (ஆனந்த தாண்டவமாடும்) நடராசப் பெருமானின் திருவுருவம், வடநாட்டில் அல்லது தக்கணத்தில் காணப்படும் திரிபுராந்தக தாண்டவம், ஊர்த்துவ தாண்டவம் போன்ற சிற்ப வடிவங்களிலிருந்து முற்றிலும் வேறுபட்டது என்று நாம் கூறலாம். பல்லவர் காலத்திற்கு முன்பே அச்சிற்ப வடிவம் தமிழகத்தில் படைக்கப்பட்டது என்பதும், நாயன்மார்கள் காலத்தில் சிவபெருமானின் வழிபடு மூர்த்தங்களுள் பெருஞ் சிறப்புடையதாக அது கருதப்பட்டது என்பதும் இங்கு நினைவு கூர்தற்கு உரியதாகும். சோழப் பேரரசர் காலத்தில் நடராசப் பெருமானின் திருவுருவத்தைப் படைக்கும் கலை உச்சநிலையை அடைந்தது. அதனால், நேர்த்தியும், நுட்பமான வேலைப்பாடும், வலிவும் பொலிவும் வாய்ந்த நடராசர் சிலைகள் வெண்கலத்தால் செய்யப்பட்டன. வெண்கலச் சிலைகளை இத்துணைச் சிறப்புடையதாகப் படைத்துத் தந்தவர்கள் சோழர் ஆட்சிக் காலத்திய தமிழகக் கலைஞர்களேயாவர். இவர்களுக்கு இணையாக வேறுயாரையும் இந்திய வரலாற்றில் நாம் காண முடியவில்லை. இக் கலையுணர்த்தும் மொழி குறிப்பிட்ட ஒரு காலத்திற்கோ, குறிப்பிட்ட ஓரிடத்திற்கோ உரியதன்று; எக்காலத்து மக்களும்

[11] Coomaraswamy ,Ananda K. : Introduction to Indian Art, P. 62.

எங்குள்ள மக்களும் எளிதில் புரிந்துகொள்ளத் தக்கது அம்மொழி; என்றும் ஆன்மிக வுணர்வு படைத்த மக்களின் இதயங்களில் கொஞ்சும் மொழியாக அது விளங்குகிறது.[12]

இராசராசன் காலத்தில், தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் நடராசர் திருமேனி எழுந்தருளுவிக்கப் பட்டது. அத் திருமேனிக்கு ஆடவல்லார் என்பது பெயர். அதனுடன் சிவகாம சுந்தரியின் சிலையும் அமைக்கப்பட்டுள்ளது. ஆடவல்லார் சிலையைச் சோழ வேந்தன் இராசராசனும், ஆடவல்லார் நம்பிராட்டியார் உமாபரமேசுவரியின் சிலையைப் பேரரசனுடைய திருத்தமக்கையார் குந்தவைப் பிராட்டியும் எழுந்தருளச் செய்துள்ளனர். இன்றும் தஞ்சைப் பெரிய கோயிலில் அத் தெய்வத் திருமேனிகள் வழிபடும் மூர்த்தங்களாக இருந்து வருகின்றன.

இந்த ஆடவல்லாருடைய வடிவம் மூன்று கண்களும், நான்கு தோள்களும், அமைதிப் பண்பும், செந்நிறமும், புன் முறுவல் பூக்கும் திருமுகமும் உடையது; மண்டையோட்டையும் கொக்கின் இறகையும், ஊமத்தைப் பூவையும், எருக்கம் பூவை யும், கங்கையையும், பிறைச்சந்திரனையும் திருமுடியில் அணியப் பெற்றிருக்கும்; வலது திருவடி நினைவற்ற முயலகன்மேல் ஊன்றி நிற்கும் நிலையிலும், இடது அடி தூக்கிய திருவடியாகச் சிறிது வளைந்தும் காணப்படும்; வலது கைகள் இரண்டனுள், முன்கை அடைக்கலம் நல்குவதாகவும், பின்கை உடுக்கை ஏந்தியதாகவும் இலங்கும். இடது கைகள் இரண்டனுள், முன்கை வீசித் தொங்க விடப்பட்டதாகவும், பின்கை அனல் ஏந்திய தாகவும் அமைக்கப்படும். இடச்செவியில் திருத்தோடும், வலச் செவியில் மகர குண்டலமும் அணி செய்யும்; அடைக்கலம் வழங்கும் அருட்கரத்தில் பாம்பணி பளிச்சிடும், இடையிலே புலித்தோல் ஆடை இறுகக் கட்டப்பட்டும், உத்தரியம் ஆட்டத்தினால் உண்டாகும் காற்றினால் அலைப்புண்டு நிற்கும். இத்திருமேனியைச் சுற்றி நீண்ட வட்ட வடிவில் திருவாசி சூழ்ந்து இருக்கிறது. இறைவனின் விரிந்த சடை முடி இரு பக்கங்களிலும் திருவாசியைத் தொட்டவண்ணம் அலைவதைப் போன்று தோன்றும். திருவாசியின் இடையிடையே அனற் பிழம்பின் நாக்குகளைப் போன்ற வடிவங்கள் அமைக்கப் பட்டுள்ளன.

12 Rowland, Benjamin: The Art and Architecture of India, P. 198.

அடுத்துள்ள சிவகாம சுந்தரியின் திருவுருவம் திரிபங்க அமைப்புடையது; நீண்ட கால்களுள் வலது கால் சற்று மிகுதியாக இடுப்புக்கு அருகில் வளைந்தும் இடதுகால் சிறிது முழங்கால் பகுதியில் வளைந்தும் காணப்படுகின்றன, வலது கை தாமரை மொட்டினை ஏந்தியுள்ள பாணியிலும், இடது கை பெண்மையின் பெருஞ்சிறப்பைப் புலப்படுத்தும் வகையிலும் உடல் வளைவிற்கு ஏற்ற வகையில் தொங்கிய வண்ணம் தோற்றமளிக்கின்றன. திருமுடியோடு கூடிய திருமுகத்தில் கருணையும் களிப்பும் கலந்து காணப்படுகின்றன. அணிகள் பல அம்மையை அழகு படுத்துகின்றன. அம்மையின் திருநோக்கு இறைவனின் ஆடலில் பதிந்துள்ளதைப் பார்க்கிறோம்.

இவ்விரு தெய்வத் திருமேனிகளின் திருமுகங்கள், சொற்களால் சொல்லொணாத கவர்ச்சி மிகு பொலிவுடன் ஒளிருகின்றன. இவ்விரு வடிவங்களும் சொல்லால் விளக்க முடியாத உயர்ந்ததொரு மெய்ப் பொருளை நமக்கு எடுத்துரைக்கின்றன.

ஆடவல்லானின் திருக்கூத்தின் உள்ளுறை பொருளை யாரும் எளிதில் உணர இயலாது; அவரவருடைய உள்ளப் பண்பாட்டிற்கும், ஆன்மிக வுணர்வுக்கும் ஏற்ப அதனை உணர்ந்து, போற்றி வருகின்றனர். நடராசரின் திருவடிவம் சிவனருட் பேறுகிய முத்தியின் முடிவைக் குறிக்கிறது சிவபெருமானே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐவகைத் தொழில்களைச் செய்து வருகின்றான் என்னும் உண்மையை உணர்த்தும் வகையில் குறியீட்டமர்பு (Sympolism)களினால் நடராசரின் திருவுருவம் படைக்கப்பட்டிருக்கிறது.[13] உடுக்கை யேந்திய கை உலகத்தின் படைப்பையும், அருட்கை காத்தலையும், அனலேந்திய கை மும்மலங்களை அழித்தலையும், தொங்கும் கை தம்முடைய திருவடி சேர்தலே வீடு பேறு என்பதைச் சுட்டுதலையும் புலப்படுத்துகின்றன. ஊன்றிய திருவடி ஆன்மாக்களை மறைத்தலையும், தூக்கிய திருவடி ஆன்மாக்களுக்கு அருள் புரியும் திருவடித் திறத்தையும் தெள்ளிதில் உணர்த்துகின்றன. ஊன்றிய திருவடியின் கீழே உணர்வற்றுக் கிடக்கும் முயலகன் ஆணவ மலத்தின் அடையாளம். ஆணவ மலத்தை அடக்கியொடுக்கினால், உயிர்கள் மெய்யறிவைப்

13 காண்க:

தோற்றந் துடியதனில்; தோயுந் திதியமைப்பிற்;
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்;— ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம்; முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

(உண்மை விளக்கம்: 36)

பெற இயலும். அதை உயிர்களினுல் அடக்கி யொடுக்க முடியாது. இறைவனுலேயே ஆணவ மலத்தை அடக்கி யொடுக்க முடியும். இவ்வுண்மையை உணர்த்துவதே முயலகனை நடராசப் பெருமான், தம் அடியில் கிடத்தி அழுத்திக் கொண்டிருப்பதாகும்.

இத் திருமேனியில் மெய்ஞ்ஞானப் பொருளும் கலைநயச் சிறப்பும் ஒருங்கே அமைந்துள்ளன. கலைக் கண் கொண்டு காண்பவரும் அம்பலவாணரின் திருக் கூத்தின் இன்ப வெள்ளத்தில் மூழ்கித் திளைக்கின்றனர்.

> சிவபெருமானுடைய திருநடனத்தின் தலைமையான சிறப்பியல்புகள் மூவகையாகும்; இப்பேரண்டத்தினுள் நடைபெறும் எல்லா வகையான இயக்கங்களுக்கும், இனிய சந்தம் பொருந்திய செயல் முறைகள் அனைத்திற்கும் இவ்வடிவம் தலையூற்ருய் அமைகிறது. இதனைத் திருவாசி புலப்படுத்துகிறது; இரண்டாவதாக மாயை என்னும் சேற்றிலிருந்து மனிதரின் எண்ணற்ற ஆன்மாக்களை விடுதலை பெறச் செய்வதே அவனுடைய திருக்கூத்தின் நோக்கமாகும்; மூன்ருவதாக அவன் நட மிடும் சிற்றம்பலம் என்பது பேரண்டத்தின் நடு மையமாகும். அது மனிதனுடைய இதயத்தின் உள்ளே இருக்கிறது என்பதை உணர்த்துவதே அவன் நடம் புரியும் இடமாகும்.

> ......மாண்புமிகு கலைப் பிழம்பாக விளங்கும் இத்தெய்வத் திருமேனியே அறிவியல், சமயம், கலை ஆகிய மூன்றும் ஒன்ருய் இணைந்த ஏற்றமிகு கலைப் படைப்பாகும். ஓரினத்தார்க்கோ, ஒரு நூற்ருண்டைச் சேர்ந்த சிந்தனையாளர்க்கோ மட்டும் ஏற்புடையதாகாமல், எல்லா நாடுகளிலும் எல்லாக் காலங்களிலும் தோன்றக் கூடிய தத்துவ ஞானிகளையும், பக்தர்களையும், கலைஞர்களையும் கவரக் கூடிய மறைக் குறிப்போடு கூடிய எழில்மிகு வடிவம் உடையதாகவும் மனித வாழ்க்கையில் ஒன்ருேடொன்று ஒவ்வாத உணர்வுகளின் சிக்கலை அவிழ்க்கும் இயல்பினதும் இயற்கையின் கோட்பாடாய் விளங்குவதும் இத்தெய்வத் திருமேனியாகும். இதை முதற்கண், தமது தியானத்தால் தோற்றுவித்தவர் கலைஞரான இருஷிகளாவர். அவர்களுடைய ஆழ்ந்த சிந்தனைத் திறனும், அருள் உணர்வும் வியப்பூட்டும் வகையில் பெருக்கு எடுத்து ஓடுகின்றது. தமது ஞான யோகக் காட்சியை உருவமாகச் செய்ய முயலுவோர்க்

கெல்லாம் இந்த நடன வடிவமானது தன்கண் உறையும் அழிக்கும் ஆற்றல், அருளுமாற்றல் ஆகியவற்றின் விளக்கத் தால் மிக்க மேன்மையுடையதாகத் தோன்றுகிறது.

.........இந்நடராச வடிவம் உண்மையை உணர்த்துவது மட்டுமன்று; அன்பைப் புலப்படுத்துவதுமாகும். அருள் நோக்கத்தாலேயே அவன் ஆடுகின்றான்; அவ் வாட்டத்தின் மூலம் எண்ணற்ற ஆன்மாக்களுக்கு பிறவித் தளையிலிருந்து விடுதலை நல்குகின்றான்[14]

என்று ஆனந்த குமாரசுவாமி மொழிந்துள்ளமை கருதத் தக்கது.

பல்வேறு இனங்களைச் சேர்ந்த தத்துவ ஞானிகளின் கற்பனைக்கு இம்மூன்றின் (சமயம், கலை, அறிவியல்) ஒன்றிய பண்பு ஒளியூட்டியிருக்கலாம். ஆனால், இந்திய நடராசரின் வடிவமே அவை யாவற்றையும் விட மிகவும் தெளிவானது; அளவை இயல் முறைக்குப் பொருந்தி வரக்கூடியது; மன வெழுச்சிகளைத் தூண்டுவது. இவற்றின் மூலம் வாழ்க்கை என்பது அழியாப் பேராக்க நிலை என்னும் கருத்தினை உணர்த்துகிறது[15]

என்று அவர் மொழிந்துள்ளார். தமிழ்ப் பண்பாட்டில் மூழ்கித் திளைத்த கலை வல்லாரின் இதயவொலி, இதில் இணைந்தும் இழைந் தும் உள்ளதை நாம் கேட்க முடிகிறது.

இனி, மேலைநாட்டு அறிஞர் பெருமக்கள் பலர், இத்தெய்வத் திருமேனியைப் பற்றித் தெரிவித்துள்ள ஓரிரு கருத்துகளைக் காண்போம்.

சிவனுடைய நடனம்—நாதாந்த நடனம்—அண்டத்தின் எல்லா வகையான ஆற்றல்களும் விசைகளும் செயல்படும் நிலையை அறிவிக்கிறது. பேரண்டத்தினுள் சக்தி எவ்வாறு இயங்குகிறது என்பதையும் உருவகப் படுத்தி உணர்த்து கிறது. இவை யிரண்டையும் திராவிடருடைய கற்பனை யாற்றல் இணைத்து ஓர் அழகிய கலைச் செல்வத்தை உலகிற்கு அளித்திருக்கிறது[16]

என்று பெஞ்சமின் ரோலண்டு திராவிடருடைய கற்பனையின் நோக்கையும் போக்கையும் கண்டு வியப்புறுகிறார்.

14 Coomaraswamy, Ananda K., The Dance of Siva, PP. 65-66.
15 Coomaraswamy, Ananda, K. : Bronzes from Ceylon, p. 10.
16 Rowland, Benjamin, : The Art and Architecture of India, P. 198

உலகப் புகழ் பெற்ற பிரான்சு நாட்டுக் கலைக் கோமானுகிய அகஸ்தே ரூடின் (**Auguste Rodin**) இந்நடராசர் சிலையைக் கண்டு மெய்ம் மறந்த நிலையில் ஒன்றிப்போய்விட்டவராவர். தாம் பெற்ற இன்பத்தை, அவர் சொற்களிலே வடித்துத் தந்துள்ளார். நாமும் அதனைப் பருகி, மகிழ்வோம்:

இது (நடராசரின் சிலை) தொலைகிழக்கு நாட்டின் கலை! வாழ்க்கையில் மலர்ந்துள்ள வண்ண மலர்! வாழ்க்கை ஓர் ஆறு! அதில் காற்றும், கதிரவனும், மேம்பட்ட உணர்ச்சியும் பொங்கி வருகின்றன!

அந்தக் காலத்தில் மனித உடலின் தெய்விகத் தன்மையை நாம் அடைந்தோம்; காரணம் தோற்றத்தோடு நாம் மிகவும் அருகில் இருந்ததால் அன்று. நம்முடைய வடிவம் அன்றும் இன்றும் ஒரே வகையாகத்தான் இருந்து வருகிறது! ஆனால், நம்முடைய மனம் இப்பொழுது அடிமைப்பட்டுக் கிடக்கின்றது! எல்லாவற்றிலும் இருந்து அது நம்மை விடுவிக்கப் போவதாக நம்புகின்றோமே, அதில் தான் மனம் அடிமையாகி விட்டது. நம்முடைய வழி தவறி நாம் வந்து விட்டோம். நம்முடைய சுவை யுணர்வும் பாழாகி விட்டது......

குறிப்பிட்ட ஒரு கோணத்தில் நெருங்கிப் பார்க்கின்ற பொழுது நேர்த்தி மிக்க பிறைச் சந்திரனைப் போன்று சிவ பெருமான் தோன்றுகிறார்! இந்த வடிவத்தின் பெருமித நோக்கில் எத்தகைய அறிவொளி பளிச்சிடுகிறது!

இன்று; இந்த வெண்கலச் சிலையில் உள்ள அந்த அழகு மாற்ற முடியாதது! கண்ணுக்குப் புலனுகாத ஒளியியக்கத்தின் அழகு அதில் தவழுகிறது!

அவ்வொளியினை இடம் பெயரச் செய்வோமானல்...... அசையாத தசை நார்களை ஒருவன் காணமுடியும்! அவை எல்லாம் புடைத்து எழுவதற்கு ஆயத்தமாக நிற்கின்றன.

தலை சிறந்த இக் கலைப் படைப்பில் நிழல் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நகர்ந்து கொண்டே இருக்கிறது. இதனுல், நம்மை மயக்கி மகிழ்விக்கும் ஒருவகைப் பண்பை அது பெறுகிறது. நெடுங்காலமாக அமைதி கொண்டிருந்த......... அறியப்படாத சூழலிலிருந்து ஆழ்ந்த மென்மை வெளிப்படுகிறது.

வடிவ அமைப்பு முறையில் பொருந்தியுள்ள கருத்துத் தூண்டலை என்னென்பது? வடிவத்தில் படர்ந்துள்ள அநுபூதி உணர்வினை எவ்வாறு எடுத்து உரைப்பது? எல்லாம் தெய்விகத் தன்மையோடு ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளன. இதனால், அவ்வடிவில் குழப்பம் விளைவிக்கத் தக்க பண்புகளோ வெறுப்பு ஊட்டுகின்ற இயல்புகளோ இம்மியளவும் இடம் பெறவில்லை! எல்லாம், அவ்வவற்றிற்குரிய இடத்தில் பொருத்தமாக அமைந்துள்ளதாகவே தோன்றுகிறது! பொதுவாக ஒய்வுறக்கம் பொருந்திய நிலையில் இருந்தாலும் கைகள் மாறி மாறிச் சுழல்வதை யாரும் புரிந்து கொள்ளலாம்! மெலிந்து நீண்ட கால்கள் நிலத்தின் மீது விளையாடுகின்றன.

கலைஞர்களுடைய கருத்துப்படி இத் திருக்கோலம் எல்லாருக்கும் நன்கு தெரிந்ததாகும். ஆனால், அதில் யாவரும் அறிந்த பொதுச் செய்திகள் ஒன்றும் இல்லை! அதன் நிற்கும் நிலையில் இயற்கை எழிலாடுகிறது! அதனாலேயே இதுவரை தொலைவாக மறைந்து கிடந்தது! இவை அனைத்திலும் யாரும், எவரும் கண்டுணர முடியாத சில கூறுகள் நின்று நிலவுகின்றன; அவை அறியப்படாத ஆழ்ந்த இயல்புகளாகும்; வாழ்க்கையின் அடிப்படையாகும். அதனுடைய அழகில் அருள் நலம் கனிந்து ஒழுகுகிறது! அவ்வருள் நலத்தை விஞ்சும் வகையில் வடிவ அமைப்பு தரப்பட்டிருக்கிறது! உடலுறுப்புகளின் வேலைப்பாடுகள் அனைத்தும் இனிமையானது! ஆனால், அது வீறுமிக்க இனிமையாக இலங்குகிறது! இதற்கு மேல் அதன் கலையழகை எடுத்துரைக்க முடியாமல் சொற்கள் தடுமாறுகின்றன............[17]

இதைவிட, வேறு யாரும் சிறப்பாக நடராச வெண்கலச் சிலைகளின் மாட்சியை, நம் மனக் கண் முன்னால் படம் பிடித்துக் காட்ட இயலாது. பேரரசன் இராசராசன் காலத்தில், வெண்கலச் சிலைகளைச் செய்யும் கலை, உயர்ந்தும் சிறந்தும் விளங்கியது; பலவகைப்பட்ட வடிவ அமைப்புகளைப் படைப்பதில் மாபெரும் சாதனைகளைக் காணத் தொடங்கியது. 'தலைசிறந்த தென்னிந்திய வெண்கலச் சிலைகள், உலகத்தின் உலோகச் சிற்பக்கலைப் படைப்புகளின் நடுவே, நேர்த்தி மிக்க சாதனையாக வீறுடன்

17 பேராசிரியர் காலிதாஸ் நாகர் பிரஞ்சு மொழியிலிருந்து ஆங்கிலத்தில் தந்த முக்கிய பகுதியின் தமிழாக்கம். காண்க: Rupam, 1921; pp. 10-12.

விளங்குகின்றன'[18] என்று வின்செண்ட் ஸ்மித் மொழிந்துள்ளார். அதற்குச் சிறப்புமிக்க சான்றாக இராசராசன் காலத்திய படைப்புகள் விளங்குகின்றன.

## ஓவியக் கலை

இராசராசன் காலத்திய திருக்கோயில்களில் இடம் பெற்ற மற்றொரு முக்கியமான கலை ஓவியமாகும். இரண்டே பரப்பு எல்லைகளைக் கொண்ட ஓவியக் கலையினைத் தமிழ் மக்கள் நன்கு போற்றி வளர்த்துள்ளனர். இடைக்காலத் தமிழ் மக்கள், சமய உணர்வினையும் பண்பாட்டையும் வளர்ப்பதற்கு ஓவியக் கலையைப் பயன்படுத்தி யுள்ளனர். கோயில்களை வண்ணப் பொலிவுடன் கண்ணுக்கு இனியதாகக் காட்சியளிக்கச் செய்யும் அருந்திறன் ஓவியக் கலைக்கு உண்டு. வித்தகர் இயற்றிய கண்கவர் ஓவியங்கள் திருக் கோயிலைக் கலைக் கோயிலாக மாற்றியுள்ளன.

### ஓவியக் கலையின் நோக்கும் போக்கும்

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் காணப்படும் ஓவியங்கள் யாவும் வரிவடிவ (linear) இயல்புடையன. அதில் மேற்கு நாட்டுக் கலையில் காணப்படும் ஆழம் (Depth) என்னும் மூன்றாவது பரப்பு அளவை கையாளப் படுவதில்லை. இதனால், தமிழகத்து ஓவியர்கள் தீட்டிய ஓவியங்கள், பெரிய சுவரோவியங்களாய் உள்ளன. அவை நுண்ணிய சுவரோவியமாயினும் காட்சியின் விளக்கங்கள் மிகத் தெளிவாகவும், இயற்கையாகவும் வரையப்பட்டுள்ளன. ஆனால், மைய வடிவங்கள் ஆழ அளவில்லாமலேயே தீட்டப்பட்டுள்ளன.

இந்திய ஓவியக் கலையின் சிறப்பியல்புகள் அனைத்தும், இராசராசன் காலத்திய ஓவியக் கலையில் நன்கு பதிந்துள்ளன. ஒரே வகையான வடிவ அமைப்பைத் திரும்பத் திரும்பப் பின்பற்றும் பழக்கம் இந்தியக் கலைஞர் அறியாத ஒன்றாகும். வடிவ அமைப்பின் மரபைவிடச் சுவையுணர்வின் மரபே, இந்திய ஓவியக் கலையின் தலையாய பண்பாகத் திகழ்கிறது; வெளியமைப்பு யாதாக இருப்பினும், உட்கருத்து ஒன்றாகவே இருந்து வந்தது.

இந்திய ஓவியக் கலைக்கு மற்றொரு சிறப்பியல்பும் உண்டு. ஓவியத்தின் ஒவ்வொரு கூறும் ஒவ்வோர் உட்கருத்தைப் புலப்படுத்தும். ஓவியத்தில் இடம் பெறும் ஒவ்வொரு காட்சி

[18] Smith, Vincent A.: A Hfstory of Fine Art in India and Ceylon, p. 127.

யும் ஒவ்வொரு கருத்தைத் தாங்கிச் செல்லும் ஊர்தியாகும். அக்கருத்திற் கேற்பக் காட்சியின் ஒவ்வொரு பகுதியும் அமைக் கப் பட்டது. ஓவியத்தில் பயன்படுத்தப் பட்டுள்ள வண்ணங் கள் மனநிலேகளை (Moods) உணர்த்துகின்றன. உடலசைவு களும் தோற்றமும் உள்ளக் கிளர்ச்சியைக் காட்டுகின்றன[19]

என்று டாக்டர் ஸ்டெல்லா கிராம்ரிஷ் (Kramrisch, St.) கூற் றுக்கு இராசராசன் காலத்திய ஓவியங்கள் சான்று பகருகின்றன.

கி.பி. பத்தாம் நூற்ருண்டில் இயற்றப்பட்ட இலக்கியங் களில் ஓவியம் வரைவதற்குரிய எழுதுகோல் (வட்டிகை), ஓவியம் எழுதும் பலகை (வட்டிகைப் பலகை), வண்ணக் கலவை பற்றிய குறிப்புகள் பல உள்ளன.[20] ஓவியர் தங்கள் ஒண்மதி காட்டும் (வட்டிகைப்) பலகை வான் **துகிலிகை**யால் இயக்குதற் கரியதோர் உருவு [20a] என்பதை நோக்குக. மங்கையரின் எழில் மிகு தோற் றத்தை, ஓவியக் கலேஞர் எழுதிய ஓவியப் பாவை போன்றது என்று ஒப்பிட்டுரைக்கும் வழக்கமும் இருந்தது.[21]

## பெரிய கோயிலின் ஓவியங்கள்

இராசராசனல் கட்டப்பட்ட தஞ்சைப் பெருவுடையார் கோயிலில், ஓவியக்கலேயின் சிறப்பு மிக்க வளர்ச்சியையும் வனப் பையும் நாம் காணுகின்ருேம். 1933ஆம் ஆண்டில் அண்ணு மலேப் பல்கலேக் கழக வரலாற்றுப் பேராசிரியரான ச. க. கோவிந்தசாமிப் பிள்ளே அவர்கள் இவ்வோவியங்களேக் கண்டு பிடித்தார். அன்றுவரை, இவ்வோவியங்களேத் தஞ்சை நாயக்க மன்னர் காலத்தில் தீட்டப்பட்ட ஓவியங்கள் மறைத்துக் கொண் டிருந்தன. இவற்றைக் கண்டுபிடித்த நாள் முதல், சோழர் காலத் திய ஓவியங்களின் எழிலும், அவை அமைந்துள்ள இடத்தின் பரப்பும், சித்திரிக்கும் கதைகளும், தீட்டியிருக்கும் நேர்த்தியான முறையும் காண்பவர் கண்களேயும் கருத்தையும் கவர்ந்து வரு கின்றன

### ஓவியத்தின் நிலேக்களம்

இவ்வோவியங்கள் சுவரோவிய முறையில் (Mural) அமைக் கப்பட்டுள்ளன. சுவரின் மீது கரடு முரடான காரை பூசப்பட் டும், அது ஈரமாக இருக்கும் பொழுதே, அதன்மேல் வழவழப்

19 Kramrisch, St.: op. cit, p. 48.
20 சீவக சிந். குண. 259.
20a பதினோரம் திருமுறை. ஆளுடை. திருமும். 28.
21 சீவக. காந். 210; சுரமஞ். 23, 55.

பான சுதை பூசப்பட்டும் தளம் அமைக்கப்படும். அதன் மேல் ஓவியம் தீட்டப்படும் முறை சுவரோவிய முறையாகும். இச் சுவ ரோவியங்களில் கறுப்பு, மஞ்சள், அரக்கு, சிவப்பு, பச்சை, நீலம், மஞ்சள் கலந்த பச்சை, அரைகுறையான நீலம் போன்ற வண் ணங்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இவற்றுள் கறுப்பு வண் ணத்தைத் தவிர, மற்ற வண்ணங்கள் எல்லாம் இயற்கையில் கிடைத்த தாதுப் பொருள்களிலிருந்து எடுக்கப்பட்டவை என்று கலையியல் வல்லார் கூறுகின்றனர்.

தஞ்சைப் பெரிய கோயிலின் கருவறையினைச் சுற்றி உள்ள இருண்ட சுற்றுலையின் இரு பக்கங்களிலும் கவின் மிகு ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. தொடக்கத்தில், இராசராசன் காலத்தில் வரையப்பட்ட ஓவியங்கள் இச்சுவர்களை அணி செய்தன. காலப் போக்கில் நடைபெற்ற புதுப்பித்தலும் பழுது பார்த்தலும், புதிய அமைப்புகளைச் சேர்த்தலும் போன்ற செயல்களால் பழைய ஓவியங்களை மறைத்து விடும் அளவிற்குப் புதிய மேற் பரப்பைக் கொண்ட அடுக்கு அமைந்து விட்டது. அதைப் பைய அகற்றிய பின்னர், அதனடியில் மறைந்து கிடக்கும் சோழர் காலத்திய ஓவியங்கள் வெளிப் பட்டன. இவ்வோவியங்கள் பண்டைப் பல்லவரின் ஓவியக் கலை முறைக்கும், பிற் காலத்திய விசய நகரக் கலைப் பண்புக்கும் இடையே முக்கியமானதொரு தொடர்பினை அமைத்துத் தருகின்றன. இவ்வோவியங்களின் உதவியைக் கொண்டு முற் காலத்திய ஓவியக் கலைப்பாணியின் சிறப் பியல்பு களையும், பிற் காலத்திய ஓவியக் கலையின் நோக்கையும் போக்கை யும் இனிதுணர முடிகிறது.[22]

கருவறையைச் சுற்றியுள்ள சுற்றுலைச் சுவர்கள் உயரமாகவும் அகலமாகவும் பேரளவில் ஓவியங்கள் வரைவதற்கு ஏற்றவை யாகவும் உள்ளன. மேற்குப் பக்கத்திலுள்ள சுவரின் நடுவில் நடராசரின் சிற்பம் ஒன்று இருக்கிறது. அதன் இரு மருங்கிலும் ஓவியங்கள் காணப் படுகின்றன. அவை யாவும் சைவ சமயச் சார்புடையனவாகும்.

## யோக தட்சணாமூர்த்தி

ஒரு பக்கச் சுவரில், முதலில் உள்ளது சிவபெருமானின் யோக நிலையாகும். மான் தோலின்மீது காலை மடித்து அர்த்த யோகப் பட்டத்துடன் சிவன் யோகத்தில் அமர்ந்துள்ளார்.

[22] Sivaramamurti, C. : South Indian Paintings, p. 82.

அந்நிலை உயிர்த் துடிப்புடைய குருதேவரை நமக்கு நினைவூட்டு கிறது. அதனுடைய எழில் மிகு தோற்றமும் அமைதி நிறைந்த பெருமிதமும் நம் கருத்தைக் கவருவதாகும். சொல்லரிய நெறியை, 'இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டி'ச் சொல்லா மல் சொல்லிவிடும் பெருந்திறனை இவ்வோவியம் உணர்த்துகிறது. இத்தெய்வ வடிவத்தைச் சூழ்ந்து பக்தர்களும் சிவ கணங்களும் வணங்குகின்ற காட்சி திருக் கயிலாயத்தை நினைவூட்டுகிறது.

**திருக் கயிலாயக் காட்சி**

இதையடுத்து வேலைப்பாடு மிக்க ஒரு போர்வையையும் நான்கு தந்தங்களையும் கொண்ட ஒரு வெள்ளை யானை நிற்கிறது. அதன் மீது தாடியுள்ள ஓர் இளைஞன் அமர்ந்துள்ளான். அவன் பாடிக் கொண்டும் கையிலுள்ள தாளத்தினால் தாளம் போட்டுக் கொண்டும் சவாரி செய்கின்றான். இதற்கு வலப் பக்கத்தில் விரைவாகப் பாய்ந்து செல்லும் குதிரையின் மீது, நல்ல உடற் கட்டும் பெருமிதத் தோற்றமும் உடைய ஒருவன் ஊர்ந்து செல்லுகிறான். இவ்வோவியங்களின் உச்சியில் இடப்புற, வலப்புற மூலைகளில் கந்தர்வர்கள் கூட்டமாக நின்று கயிலை நோக்கி விரைந்து வரும் அவ் விருவர் மீது மலர் மாரி பொழிகின்றனர். சிலர் இசைக் கருவிகளை மீட்டி இசை பாடுகின்றனர். தாளம் கொட்டுவோன் மீசை வைத்திருக்கிறான்; அவனுடைய நீண்ட முடியை அள்ளிச் செருகியிருக்கிறான்; அதில் பூச்சரம் தொங்கு கிறது.

இவ்வோவியத்தில் வெள்ளை யானை மீது அமர்ந்திருப்பது நம்பி யாரூரராவார்; குதிரை மீது அமர்ந்து சவாரி செய்பவர் சேர மான் பெருமாள் நாயனார் ஆவார். இவ்விருவரும் கயிலையிலுள்ள இறைவனைக் காணச் சென்றனர் என்பது பழைய வரலாறு. அங்கு அவர்கள் இறைவனைக் கண்டு வணங்கச் செல்லுவதும், அவர்களை வரவேற்பதும், இறைவன் யோக நிலையில் பூதகணங்கள் புடை சூழ நிற்பதும் கவர்ச்சிமிகு ஓவியங்களாகக் காட்சி தருகின்றன.

இவ்வோவியத்தில் ஒரு புதுமைப் பண்பை நாம் காணுகின் றோம். சுந்தரரும் சேரமானும் வான்வழியாகக் கயிலைக்குச் சென் றனர் என்று சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகின்றார்.[23] ஆனால் இவ்வோவியத்தில் யானையும் குதிரையும் நீரில் நடந்து செல்லுகின் றன; நீரில் அலைகளும் மீன்களும் தெளிவாகத் தெரிகின்றன. இத

[23] பெரியபுராணம். வெள்ளானை. 85.

னால். சேக்கிழாருக்கு முன் நாட்டில் சுந்தரரும் சேரமானும் கடல் வழியே கயிலாயம் சென்றனர் என்னும் கருத்தே பெருவழக்காக இருந்திருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது.

## தடுத்தாட்கொண்ட வரலாறு

இவற்றிற்கு அடுத்து வரையப்பட்டுள்ள ஓவியத்தில், பல தூண்களைக் கொண்ட பெரிய மண்டபம் ஒன்று காணப்படுகிறது. அதில் அந்தணர்கள் கூடியுள்ளனர். அவர்களுக்கு நடுவே ஒரு கையில் ஓலைக் குடை பிடித்துக் கொண்டும், மற்றொரு கையில் ஒரு சுவடியை அவையோருக்குக் காட்டிய வண்ணம் ஒரு முதியவர் நிற்கின்றார். அவருக்கு நேராகப் பணிவுடன் நிற்கும் ஓர் இளைஞன் காணப்படுகின்றான். அம்மண்டபத்திற்கு வலப் பக்கத்தில் கோயில் விமான மொன்றும், அதற்குள் நுழைய விரைந்து செல் லும் பார்ப்பனர் கூட்டம் ஒன்றும் காட்சி தருகின்றன.

இவ்வோவியக் காட்சி சுந்தரமூர்த்தி நாயனாரின் வாழ்க்கை யினைச் சித்திரிப்பதாகும். சுந்தரரின் திருமணத்து அன்று, இறைவன் கிழ வேதியனாக வந்து அவரைத் தடுத்தாட் கொண்ட வரலாறு எளிய முறையில் ஆனால், உயிர்த்துடிப்புமிக்க வகையில் இங்கு ஓவியமாகத் தீட்டப் பட்டுள்ளது. அம் மண்டபத்தில் சூழ்ந்துள்ள மக்களின் முகத்தில் அச்சமும் ஐயுறவும் வியப்புணர் வோடு கலந்து தாண்டவமாடுகின்றன. மொத்தத்தில் இவ் வோவியம் உயிர்த் துடிப்புடன் பொலிகிறது; மின்னாற்றலால் தாக்குண்ட மக்களின் மன நிலையையும், ஏதோ ஒருவகையான நெருக்கடியை அனைவரும் உணர்ந்து அஞ்சுவதையும் நம் மனக் கண் முன்னால் கொண்டுவந்து நிறுத்துகிறது. சுந்தரர் கதையில் உள்ள நாடகப் பண்புமிகு இந்நிகழ்ச்சி, சுவை நலங் கனிந்த ஒன்றாக இங்குக் காட்டப்பட்டிருக்கிறது.

## அன்றாட வாழ்க்கை ஓவியம்

மற்றோர் இடத்தில் எழில்மிகு இளம் பெண் ஒருத்தி சமையலறையில் சமைப்பதும், வேறொருத்தி வேகும் அரிசியைக் கரண்டியால் கிளறுவதும், மற்றொருத்தி அடுப்பினுள் விறகு வைப்பதும் நாள்தோறும் நாட்டு மக்களுடைய வாழ்க்கையில் நடைபெறும் நிகழ்ச்சிகளாகும். இவற்றைப் போன்றே, மண் பாண்டத்திலிருந்து தண்ணீரை ஒரு பெண் ஊற்றும் காட்சியும், வேறொருத்தி தன் கணவனுக்கு உணவு படைக்கும் காட்சியும் கவினுறத் தீட்டப்பட்டுள்ளன. இக்குடும்ப ஓவியத்தில் நிகழ்வியல்

பாங்கு குடிகொண்டிருக்கிறது. இராசராசன் காலத்திய ஓவியக் கலைஞர், பொதுமக்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை அழகோவியங் களாகத் தீட்டியுள்ளமை வியப்பிற்குரிய செய்தியாகும். சமயச் சார்பையும் அரசமரபின் செல்வச் செழிப்புமிக்க வாழ்வையும் படம் பிடித்துக் காட்டிய ஓவியர்கள், ஏழை யெளிய மக்களின் அன்றாட வாழ்க்கையை ஓவியமாக வரைந்திருப்பது அவர் களுடைய உள்ளப் பண்பாட்டின் சிறப்பினை உணர்த்துகிறது.

### தில்லைத் திருக்காட்சி

இச்சுவரின் வேறொரு பகுதியில், தில்லைப் பொன்னம் பலத்தைப் போன்றதொரு கூரையும், அம்பலவாணரின் திரு வுருவத்தின் ஒரு பகுதியும், அதன் அருகில் அரச கோலத்துடன் ஒருவன் தொழுவதும் அவனுடன் மூன்று மகளிர் கூப்பிய கை களுடன் வணங்குவதும், சித்திரிக்கப்பட்டுள்ளன. அவர்களைச் சூழ்ந்து அரசனுடைய பரிவாரங்களும் இறைவனை வணங்குகின் றன. மற்றொரு பக்கத்தில் கோயில் குருக்களும் பக்தர்கள் சிலரும் காட்சி தருகின்றனர். அவர்களுடைய வடிவங்கள் உணர்ச்சிக் கனிவும் சமய வேட்கைத் துடிப்பும் உடையனவாகத் தோன்றுகின்றன. இத் தில்லைத் திருக்காட்சியில் இறைவனை வணங்குகின்ற அரசன், நம் இராசராசனகவே இருக்கவேண்டும் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.[24] அரச குடியினரின் தோற்றம் பண்பாடும் நேர்த்தியும் வாய்ந்ததாகக் காட்டப் பட்டுள்ளது. இங்குள்ள பெண்களின் வடிவங்கள் மிகவும் நுட்ப மாகவும், விளக்கமாகவும் தீட்டப்பட்டுள்ளன. அவர்கள் அனைவரும் பூவேலைப் பாடும், கரைகளைக் கொண்டதுமான ஆடைகளை அணிந்துள்ளனர்; முத்து மாலைகளும் மற்றும் பல அணிகளும் அவர்களுடைய அழகிற்கு அழகு செய்கின்றன.

### மங்கையரின் மாண்புமிகு ஓவியங்கள்

மேற்கண்ட சுவருக்கு எதிர்ப் புறத்தில் உள்ள சுவரில், அழகிய ஆடைகளையும், வேலைப்பாடு வாய்ந்த அணிகளையும் பூண்டு சொகு சுடன் அமர்ந்துள்ள இரு பெண்களின் வடிவங்கள், அக்காலத்திய பெண்மையின் அழகோவியங்களாகத் திகழ்கின்றன. அவர் களுக்கு அடியில் மூன்று பெண்களின் தலைகள் வரையப்பட்டுள்ளன. அவற்றிற்கு அடுத்து, கூட்டம் கூட்டமாக அமர்ந்துள்ள இருபது எழிலரசிகளின் சிற்றோவியங்கள் காணப்படுகின்றன.

[24] Nilakanta Sastri, K. A.: op cit. p. 741.

## இராசராசனும் கருவூர்த்தேவரும்

இந்தச் சிற்றோவியங்களுக்குச் சிறிது தொலைவில் இராசராசனும், கருவூர்த் தேவரும் காட்சி தருகின்றனர். அரசனும், அரச குருவும் பெருமிதத் தோற்றத்தோடு, ஆன்மிக ஆளுமையும் வாய்க்கப் பெற்றவர்களாக விளங்குகின்றனர். அவர்களுடைய திருவுருவங்களைக் கூர்ந்து நோக்குகின்ற பொழுது, எவ்வளவு நுட்பமாக அரசனையும், துறவியையும் வேறுபடுத்திக் காட்ட ஓவியக் கலைஞன் பல்வகைத் திறன்களைப் பயன்படுத்தியுள்ளான் என்பது புலனாகின்றது.

## திரிபுராந்தகர்

வட புறச் சுவர் முழுவதிலும், சிவபெருமான் திரிபுரத்து அசுரர்களை எதிர்த்துப் போரிடுவதற்குக் கொண்ட போர்க்கோலம் பேரளவில் தீட்டப் பட்டுள்ளது. இவ் வோவியம் ஒரு போர்க் களக் காட்சியைப் படம் பிடித்துக் காட்டுகிறது. தேரின்மேல் நின்ற கோலத்தில் இருக்கும் சிவபெருமானுடைய வடிவம் ஓவியத்தில் பாதிப் பக்கத்தில் அமைந்துள்ளது. இது 3.66 மீட்டர் (12 அடி) உயரமும் 3.35 மீட்டர் (10 அடி) அகலமும் உள்ளது. பூமியாகிய தேரில் சிவபெருமான் ஏறி நிற்கிறார். மேருவை வில்லாக வளைத்து, கையில் அவர் ஏந்தியுள்ளார். நான்மறைகளாகிய குதிரைகள் பூட்டப்பட்ட தேரைப் பிரமன் ஓட்டுகின்றான். விநாயகரும் முருகனும் கொற்றவையும் துணையாக அத்தேரைச் சூழ்ந்து செல்லுகின்றனர். சிவனுடைய விறுவிறுப்பான போர்க் கோலப் பொலிவும்,•சிலிர்ப்புண்டாக்கும் முகத் தோற்றமும், முக்கண்ணனின் அழிவுச் செயலைக் கா பவர் அஞ்சும் வகையில் காட்டுகின்றன. எஞ்சியுள்ள பக்கத்தில் திரிபுராசுரர்களும் அவர்களுடைய பெரும்படைப் பரிவாரங்களும் தீட்டப்பட்டுள்ளனர்.

திரிபுரம் எரிக்கும் விரிசடைக் கடவுளுக்கு எட்டுக் கைகள் உள்ளன. அவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு வகைப் போர்க் கருவி காணப்படுகிறது, அவருடைய புருவங்கள் வில்போல் வளைந்துள்ளன; நெற்றிக் கண் பிதுங்கிக் கொ டிருக்கிறது; மூக்குத் துவாரங்கள் அகன்று திறந்துள்ளன; போருக்கு அறை கூவும் பாவனையில், தலை நிமிர்ந்து வீறுடன் விளங்குகிறது. முகத்தில் சீற்றத்தின் அறிகுறிஇல்லை. ஆயினும், பெருமிதப் பண்பும், வீரவுணர்ச்சி பொங்கியெழும் பேராற்றலும் புலப்படுகின்றன. இதழ்களிலும் கண்களிலும் ஏளனப் புன்முறுவல் தவழ்கிறது.

மற்றொரு புறத்தில் அசுரர்கள், தம் காதல் மனைவியரின் சொல்லைக் கேளாமல் போர் புரியும் காட்சி தீட்டப்பட்டுள்ளது. அசுரரும் அசுர மகளிரும் மனித இயற்கைக்கு மாறான தோற்ற முடையவர்களாகக் காட்டப்படவில்லை. உருண்டு திரண்ட தசை நார்களும், கனல் கக்கும் விழிகளும், மீசையும் உடையவராய் அஞ்சா நெஞ்சத்துடன் போர் புரிகின்றனர். அச்சங் கொண்ட அசுர மகளிர், இடையிடையே தங்கள் துணிச்சல் மிகுந்த கணவ ரின் கழுத்தைக் கட்டிக் கொண்டு புலம்புகின்றனர். அவ்வசுர மகளிர், மானிடப் பெண்களைப் போன்றே பெண்மையின் மென்மை வாய்ந்த மெல்லியலாராகவும் எழில்மிகு மகளிராகவும் சித்திரிக்கப் பட்டுள்ளனர். சுருங்கச் சொல்லுவது என்றால் இத் திரிபுராந்தகரின் ஓவியம் 'பேசும் பொற்சித்திரமாக'ப் பொலிவுறு கிறது. இத்திரிபுர தகனக் காட்சிக்கு இணையாக ஓவியத்திலோ சிற்பத்திலோ இந்தியாவில் மட்டுமின்றி, வேறு நாடுகளிலும் ஒரு போர்க்களக் காட்சி ஓவியத்தைக் காண்பது அரிது எனக் கூறலாம்.[25]

## நடன மாதர்

தேவ அரம்பையர் சிலர், நடனமாடும் காட்சி ஓவியமாக ஒரு புறத்தில் தீட்டப்பட்டுள்ளது. அந்நடன மகளிர் மெலிந்த இடையும், எளிதில் குழைந்து துவள்கின்ற வடிவமும், தலை ஒரு பக்கம் சிறிது சாய்ந்த தோற்றமும் உடையவராகச் சித்திரிக்கப் பட்டுள்ளனர். எழில்மிகு அவிநயக் குறிப்புடன் பொருந்திய கையும், பல்வேறு வகையான வளைவுகளைக் கொண்ட சமநிலை பிறழாத உடல் வனப்பும், ஆடல் மகளின் கலைத்திறனைச் சிறந்த முறையில் வெளிப்படச் செய்கின்றன. ஆடல் மகளிர் 'கைவழி நயனம் செல்ல கண்வழி மனமும் செல்ல' நடனமாடும் கோலத் தைச் சோழர் காலத்திய ஓவியக் கலைஞன் பொன்றாப் புகழ் வாய்ந்த ஓவியமாகத் தீட்டியுள்ளான்; கவர்ச்சிமிகு அணி கலன்கள் பலவற்றை அணிவித்து அவன் அவர்களை அழகுபடுத்தி யுள்ளான். இந்நடன மாதர் மூவரின் ஓவியங்களும் தமிழகக் கலைஞன் கனவுலகில் கண்ட காரிகையரைக் கவின் பெறக் காட்டுகின்றன.

இதைப் போன்ற பற்பல ஓவியங்கள் தஞ்சைப் பெரு வுடையார் கோயிலில், சோழர் காலத் தமிழகத்தின் ஓவியக் கலை வளர்ச்சிக்குச் சான்றாக இருந்து வருகின்றன.

[25] Sivaramamurti, C.: op. cit. p. 88.

## ஓவியங்களின் சிறப்பியல்புகள்

இச்சோழர் கால ஓவியங்கள் கவர்ச்சியும் மாட்சியும் உடையன; பயன்படுத்தப்பட்டுள்ள வண்ணங்கள் நம்முடைய கருத்தை ஈர்க்கின்றன. இக்கலையில் இராசராசன் காலத்திய ஓவியக் கலைஞர் பெற்றிருந்த தேர்ச்சியைப் புலப்படுத்துவதோடு, சைவ சமயத்திடத்துப் பேரரசன் கொண்டிருந்த ஆழ்ந்த நம்பிக்கையையும் அவை வெளிப்படுத்துகின்றன.

இந்தியாவின் பிற பகுதிகளில் காணப்படும் பழைய ஓவியங்களைப் போன்றே, இவை யாவும் முதலில் எல்லைக் கோடுகள் வரையப்பட்டு, பின்னர் வண்ணம் தீட்டப்பட்டனவாகும். இக் கோடுகள் மிகவும் நுட்பமான துகிலிகையால் தீட்டப்பட்டிருப்பது புலனாகின்றது. உடல் தசையின் நிறத்தைப் புலப்படுத்த தூய வெண்மை, மஞ்சள், இளங்காவி, பச்சை நிற வண்ணங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. கைவிரல்கள், மூக்கு, இதழ் முதலிய உடலுறுப்புகள் மிக நுட்பமாகவும் செம்மையாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளன. பல்வகை பூவேலைப்பாடுகள் அமைந்த கரைகளையுடைய ஆடைகளும், பலவகையான முடியணிகளும் காதணிகளும் கழுத்து அணிகளும் ஆண், பெண்கள் இருபாலரையும் எழிலுற்று விளங்கச் செய்கின்றன. பெண்கள் மூக்குத்தி அணிந்திருக்கவில்லை.

இவ்வோவியங்களில் இடம் பெற்றுள்ள யானை, குதிரை, எருது, சிங்கம் போன்ற விலங்குகளும் மயில் போன்ற பறவைகளும் கலையழகு மிக்கனவாக உள்ளன. யானையும் குதிரையும் அரசருடையன என்பதை அறிவிக்கும் வகையில் நன்கு அலங்கரிக்கப்பட்டுள்ளன.

இவ்வோவியங்களுள் காணப்படும் ஆண் வடிவங்களில் ஒசிவும், மென்மையின் சாயலும் படிந்துள்ளன. எனினும், ஆண்மையின் வீறு குறையாமல் போற்றிக் காக்கப்பட்டுள்ளது. பெரும்பாலான ஆண்கள் தாடி வைத்துள்ளனர்; சிலர் அரும்பு மீசைக்காரர்களாக உள்ளனர். அசுரர்கள் மட்டும் பெரிய மீசையுடையவர்களாகச் சித்திரிக்கப்பட்டுள்ளனர். எல்லா ஆண்களும் குடுமி யுடையவர்களாகக் காணப்படுகின்றனர். இவற்றால் கி.பி. பத்தாம், பதினோராம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த தமிழர்கள் இருவகையான மீசையை வைத்துக் கொண்டிருந்தனர் என்பது தெரிகிறது. மற்றும் சிலர் தாடி வைத்துக் கொள்ளும் பழக்கம் உடையவர்களாக இருந்தனர் என்பதையும் நாம் அறிகிறோம்.

மகளிர் ஓவியங்கள் பலவற்றை நாம் முன்னரே கண்டோம். அம்மகளிர் நீண்டு சோர்ந்த சேல் விழியுடையவராகத் தீட்டப் பட்டுள்ளனர். அவர்களுடைய வில்லையொத்த புருவங்களும் 'பொங்கிவரும் பெருநிலவு போன்ற ஒளி முகமும்', மணமும் சுவையும் கனிந்த இதழ்களும், பருத்து முழுநிறைவுற்ற கொங்கைகளும், ஒரு புறம் ஒசிந்து தோன்றும் மின்னிடையும் மண்ணுலக மங்கையரோ, விண்ணுலக அரம்பையரோ எனக் காண்பவர் மயங்கும் வண்ணம் வரையப் பட்டுள்ளன. மிக எளிதில் புலனுகர் உணர்வைத் தூண்டக்கூடிய தோற்றத்தையும், மனத்தை மயக்கும் உடல் வனப்பையும் கொண்டு பெண்மை நலஞ் சிறந்த பேரழகிகளை மெல்லிய ஆடை மூடி மறைக்குமாறு, திறமையாக இவ்வோவியங்களைத் தீட்டி யுள்ளனர். இதனுல், அக் கலைஞருடைய நயமிகு நாகரிகப் பண்பினை உணர்ந்து நாம் போற்றுகிறோம்.

மகளிருடைய கூந்தல் ஒப்பனையில் மிகுந்த கருத்தை அவ்வோவியர்கள் செலுத்தியுள்ளனர். இன்றைய 'நவநாகரிக' மகளிர் அழகுற முடிக்கும் கூடைக் கொண்டைகளையும், பெருத்த வட்டக் கொண்டைகளையும் இராசராசன் காலத்திய மேட்டுக் குடி மகளிர் வனப்புமிகு வகையில் போட்டுக் கொண்டிருந்ததை இவ்வோவியங்களில் நாம் காணுகின்றோம். அம்மங்கையரின் நெற்றியிலே சுருள் சுருளாகத் தொங்கும் மயிர்த்திரள் மெல்லிய பூங்காற்றில் அசைந்தாடுகின்றன. மகளிர் மென்துகிலைச் சேலையாக இடுப்பில் உடுத்தியுள்ளனர். அது பல மடிப்புகளைக் கொண்டு கணுக்கால் வரையில் பரவலாகத் தொங்குகிறது. அவற்றில் பல்வகை வண்ணங்களில் பூவேலைப்பாடு செய்யப்பட்டுள்ளன. பொதுவாகப் பெண்களுடைய உடலின் மேற்பகுதியைச் சேலையின் ஒரு பகுதியைக் கொண்டு மூடிமறைக்கும் வழக்கம் தோன்றவில்லை. இதற்குப் பதிலாக இடத் தோளிலிருந்து வலக் கையின் கீழ் சென்று மார்பகங்களை மூடும் வகையில் உடலில் ஒரு சிறு துண்டைப் போர்த்தியுள்ளனர். அதை இழுத்து, உடலின் பின்புறத்திலோ, பக்கவாட்டிலோ முடிச்சுப் போட்டுக் கொண்டிருந்தனர். இவை யாவும் இங்குள்ள பெண்களின் ஓவியங்களால் புலனுகின்றன.

இராசராச சோழன் காலத்திய ஓவியங்கள் அக்கால மக்கள் வாழ்க்கையின் மேம்பாட்டையும், சிறப்பையும், பண்பாட்டையும் ஓடும் திரைப்படமாக்கிக் காட்டுகின்றன; பொன்னம்பலத்தில் நடனமாடும் அம்பலவாணரின் தெய்வத் திருமேனியே மன்னர் மன்னனுல் ஆர்வத்தோடு வழிபடும் தெய்வமாகப் பெரிதும் போற்றப்பட்டமை புலனுகின்றது; சோழப் பெருமன்னர்களின் போர்

விருப்பாற்றலையும், போரியல் அகக்காட்சியையும், இலட்சியங்களையும் பொதுவாகவும், சிறப்பாக இராசராச சோழனின் போர்த் துறை வெற்றிவாகைகளையும் திரிபுராந்தகரின் திருக்கோலக் காட்சியில் உருவகப் படுத்திக் காட்டப் பட்டுள்ளன[26] என்று கருதுவாருமுளர்.

சோழப் பெருமன்னனுடைய காலத்தில் தீட்டப்பட்ட ஓவியங்கள், வடிவத்தால் வாழ்க்கையையும், பொருளால் நோக்கத்தையும், குறிப்பால் கருத்தையும் காட்டுகின்றன. அக்காலத்திய ஓவியக் கலைஞன் 'இறைவனை எப்பொருளிலும் மனிதன் காணுகின்றான்' என்னும் உண்மையை உணர்த்துவதோடு, 'எல்லாப் பொருள்களிலும் தெய்விக இயல்பு குடிகொண்டிருக்கிறது' என்னும் கருத்தையும் நினைவூட்டுகிறான்.

## இசைக் கலை

முத்தமிழ் என்று இயல், இசை, நாடகத்தினைப் போற்றும் மரபு, பன்னெடுங்காலமாகத் தமிழரிடையே இருந்துவருவதாகும். முத்தமிழை வேறு வேறாகப் பிரித்துப் பேசினும், பிரிக்க முடியாதபடி ஒன்றாய்ப் பின்னிப் பிணைந்து நிற்கிறது. மக்களினத்தின் அறிவாற்றல், மனக்கருத்தாக அரும்பி இசையாய்ப் பூத்து, கூத்தாய்க் கனிந்து, உயரிய வாழ்க்கையாக அது இனிக்கக் காண்கிறோம். அழகுக் கலைகளுள் தலையாயவை இவ்வியல், இசை நாடகங்களாகும். இவற்றுள் இசையையும் நாடகத்தையும் நாம் இங்குக் காண்போம்.

சொல்லக் கருதும் கருத்துகளைக் கேட்போர் விரும்பி ஏற்றுக் கொள்ளுமாறு, இனிய ஓசையோடு கூடிய சொற்களால் புலப்படுத்துவது இசையாகும். கருவி இசையில் சொல்லற்ற ஒலியே பெருவாழ்வு பெறுகிறது. கலைகளிலே, இசைக் கலைக்கு ஒரு தனிப் பெருஞ் சிறப்புண்டு. பிற கலைகள் எல்லாம் இரண்டு அல்லது மூன்று பரப்பு அளவெல்லைகளையுடையன. இசைக் கலைக்கு ஒரேவொரு பரப்பு அளவெல்லை உண்டு. அது தான் ஒலி வெள்ளம். அதற்குச் சந்தம், இன்னோசை, பண்ணிசைவு என்னும் மூன்று இயல்புகள் உண்டு. இசைக் கலை சங்க காலம் முதற் கொண்டு தமிழ் மக்களால் நன்கு போற்றி வளர்க்கப்பட்டன.

[26] Sivaramamurti, C. : op. cit. p. 88.

சோழப் பேரரசனுடைய காலத்தில் இசைத் தமிழ் நன்கு வளர்ச்சியுற்றிருந்தது. பல்லவர் காலத்தில் இயற்றப்பட்ட இன்னிசைப் பாக்களான தேவாரத்தையும் திவ்வியப் பிரபந்தத்தையும் நாடு முழுவதிலும் பரவச் செய்த பெருமை சோழர்களையே சாரும்.

## தெய்வத் தமிழிசை

திருமுறை கண்ட சோழன் என்று பாராட்டப் படுபவன் இராசராசன். நம்பியாண்டார் நம்பிகள் தேவாரப் பதிகங்களைத் தொகை வகைப் படுத்திய பின்னர், திருநீலகண்ட யாழ்ப் பாணரின் மரபிலே வந்த ஓர் அம்மையிடத்து, அவற்றிற்குரிய பண்களை வகுத்தளிக்குமாறு வேண்டினர். அவ்வம்மையார் பஞ்சமம் முதல் காந்தாரம் இறுதியாகக் கொண்ட 23 பண்களில் தேவாரப் பாடல்களைப் பொருத்திப் பாடும் மரபினைத் தொடங்கிக் கொடுத்தார். அது முதல் தேவாரப் பாடல்கள் இசையோடும் பக்க வாச்சியங்களோடும் பாடும் வழக்கம் உண்டாயிற்று.

தஞ்சைப் பெரிய கோயிலில் தேவாரத் திருப்பதிகத்தை ஓதுவதற்கு இராசராச சோழன் 48 பிடாரரை அமர்த்திய செய்தியை முன்னரே நாம் கண்டோம். தேவாரம் ஓதுங்கால் உடுக்கையும் கொட்டி மத்தளமும் வாசிப்பது அக்காலத்திய வழக்கம். இதைப் போன்றே, திருவிளாங்குடியில் இடிந்து கிடக்கும் சிவன் கோயிலிற் கண்ட இராசராசனுடைய 28 ஆம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டு, அவ்வூர்த் தேவர்க்கு முன் திருப்பதியம் விண்ணப்பம் செய்யும் அடிகள்மார் நான்கு பேருக்கு ஊதியம் அளிக்க அவ்வூர்ச்சபை முன் வந்ததைத் தெரிவிக்கிறது.[27]

தேவாரத் திருப்பதிகங்களுக்கு வகுக்கப்பட்ட பண்களைக் கி.பி. பதின்மூன்றும் நூற்றாண்டில் வடநாட்டு இசைவாணரான **சாரங்க தேவர் சங்கீத இரத்நாகரம்** என்னும் தம் இசைநூலில், **தேவாரவர்த்தினி** என்று குறிப்பிட்டிருப்பது இங்குக் கருதத்தக்கதாகும். இரண்டு நூற்றாண்டுகளுக்குள் தேவாரப் பண் மரபு இந்திய இசைவாணர்களின் கருத்தைக் கவர்ந்து விட்டமை, இசைத் தமிழ் வரலாற்றில் ஒரு சிறப்புமிக்க செய்தியாகும்.

[27] Inscriptions of Pudukkotta State, No. 90.

தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் தமிழிசை பாடுவதற்கும், ஆரியம் பாடுவதற்கும், தனித்தனி இசைவாணர்களைப் பேரரசன் அமர்த்தியுள்ளான். பாட்டிசைக்கும் பாணனையும், வேதமோத கானபாடிகளையும் காந்தர்வர் எனப்படும் இசை பாடுவோர் எழுபத்தைந்து பேரையும் அவன் பணி புரியச் செய்துள்ளான்.[28] மற்றும் காமரப் பேரரையன், வாத்திய மாராயன் எனப்பட்ட இசைவாணர்களும் அக்கோயிலில் இசைப்பணி புரிந்தனர்.

கருவூர்த் தேவர், தஞ்சைப் பெருவுடையாரைப் போற்றிப் பாடியுள்ளார். அந்த இசைப்பாக்கள், ஒன்பதாவது திருமுறையில் 'திருவிசைப்பாக்கள்' என்னும் பகுதியில் சேர்க்கப் பட்டுள்ளன. இவ்வாறு சேர்க்கப் பட்டமை இசைக்கு அக்காலத்தில் இருந்து வந்த சிறப்பினை அறிவிக்கிறது.

## இசைக் கருவிகள்

முரசு, கொட்டி மத்தளம், உடுக்கை, சகடை, கரடிகை, உவச்சப் பறை போன்ற தோல் கருவிகளும், முரலியம், வங்கியம், பாடலியம், முத்திரைச் சங்கு முதலிய துளைக் கருவிகளும், யாழ், வீணை போன்ற நரம்புக் கருவியும், தாளம் போன்ற கஞ்சக் கருவியும் அக்காலத்தில் வழக்கிலிருந்தன. பையப் பைய 'யாழ்' எனும் இசைக் கருவி பெற்றிருந்த பெருவாழ்வை வீணை கைப்பற்றிக் கொள்ளத் தொடங்கியதையும் நாம் காணுகின்றோம்.

## நாடகக் கலை

இசைத் தமிழோடு நெருங்கிய தொடர்புடையது நாடகத் தமிழ். இதனைப் பொதுவாக ஆடல் கலை என்று அறிஞர் போற்றுவர். செவிகளை இன்புறுத்துவதோடு கண்களுக்கு இனிய காட்சிகளை நல்குவது ஆடல் கலை! குதித்துக் குதித்தாடுவது கூத்து எனப்பட்டது. 'கதையைத் தழுவி வரும் கூத்தினை' நாடகம் என்பர்.

## நடனக் கலை

தஞ்சைப் பெரிய கோயிலில் இசை பாடுவதற்கும் நடனமாடுவதற்கும் தளிச்சேரிப் பெண்களை, இராசராசன் தஞ்சை மாநகரில் குடியேற்றியதை நாம் முன்னரே கண்டோம். நடன மாதர்

[28] S. I. I; Vol. 2; No, 66.

நானூற்றுவரையும், இசை பாடுகிறவர், இசையாசிரியர், இசைக் கருவியாளர் ஐந்நூற்றுக்கு மேற்பட்டவரையும் அங்குக் குடி யேற்றி, அவன் மானியம் வழங்கியதைக் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது.

ஆடல் மகளிருக்கு நட்டவம் செய்த நட்டுவனர் சோழ நிருத்திர மாராயன், நிருத்தப் பேரரையன், சாக்கைக் கூத்தன் முதலியோருக்கு இராசராசன் மானியம் வழங்கியுள்ளமையும் இங்குக் கருதத் தக்கதாகும்.[29]

### ஓவியச் சான்று

தஞ்சைப் பெருவுடையார் கோயில் திருவுண்ணாழிகையின் உட்புறச் சுவரில், நம் பேரரசன் காலத்திய ஆடலழகிகள் நடன மாடும் ஓவியங்கள் காணப்படுகின்றன. அவர் தம் கூந்தல் ஒப்பனை, உடைச் சிறப்பு, வடிவ அமைப்பு, முகப் பொலிவு, அவிநயக் குறிப்பு ஆகிய அனைத்தையும் அவ்வோவியங்கள் நுட்ப மாகவும், தெளிவாகவும் உணர்த்துவதிலிருந்து, அக்காலத்தில் ஆடல் கலை அடைந்திருந்த முன்னேற்றத்தை நாம் உய்த் துணரலாம்.

### ஆரியக் கூத்து

திருவாவடுதுறைக் கோயிலில் புரட்டாசித் திங்களில் திருவிழா நடைபெறும். அப்பொழுது திருமூல நாயனருடைய நாடகமும், ஆரியக் கூத்து ஏழு அங்கமும் ஆடுவதற்குக் **குமரன் சீகண்டன்** என்பவருக்கு நிருத்திய போகமாக நிலம் அளிக்கப்பட்டதையும், அவன் சாக்கைக் காணி உடையான் என்பதையும் இராசராச னுடைய ஒன்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகிறது.[30]

### சாக்கைக் கூத்து

கீழைப் பழுவூரில் உள்ள பரகேசரி வர்மனுடைய ஆறும் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, திருவாலந்துறை நல்லூரில் ஐப்பசித் திங்களில் நடைபெறும் திருவிழாவில், அசுவனி நாளில், சாக்கைக் கூத்து மூன்று அங்கங்கள் நிகழ்த்த ஆலையூர்ச் சாக்கைக்கு ஒன்றரைக் கழஞ்சு பொன்னும் மூன்று கல நெல்லும் அளிக்கப் பட்டதைத் தெரிவிக்கிறது.[31]

[29] S.I.I., Vol. 2, No. 66.
[30] 120 of 19 5.
[31] 250 of 1926.

## இராசராசேசுவர நாடகம்

இந்நாடகம் இராசராசன் காலத்தில் இயற்றப்பெற்றதாகும். இராசராசனது பிறப்புவளர்ப்புகளையும், வீரம் தியாகம் முதலிய அருஞ்செயல்களையும் அவன் தஞ்சைப் பெருவுடையார் கோயிலை எடுப்பித்த வரலாற்றையும் பற்றிப் பாடப்பட்ட நாடகநூல் இது.[32] வைகாசித் திங்களில் நடைபெற்ற பெரிய திருவிழாவில் தஞ்சைப் பெரிய கோயிலில் நடித்துக் காட்டுவதற்குச் **சாந்திக் கூத்தன்** திருவாளன் திருமுது குன்றன் ஆன விஜய ராஜேந்திர ஆசாரியனுக்கும் அவன் கால்வழியினருக்கும் இரண்டாம் இராசேந்திர சோழன் 120 கலம் நெல்லை ஆண்டு தோறும் ஊதியமாக அளிக்க நிவந்தம் அளித்துள்ளான். இச்செய்தியை அவனுடைய ஆறுவது ஆட்சியாண்டுக் கல்வெட்டால்[33] அறிகிறோம்.

## இராசராச நாடகப் பெரியன்

பேரரசன் இராசராசன் காலத்தில் திருப்பந்தணை நல்லூர்க் கோயிலில் நட்டுவப் பங்கு, மெய்ம்மட்டுப்பங்கு (நட்டுவத்துக்கு மத்தளம் வாசிக்கும் உரிமை) ஆகியவற்றைப் பெற்று இருந்தவன் **ஹாஸ்யன் விக்கிரமாதித்தன் அச்சனை இராசராச நாடகப் பெரியன்** ஆவான். இராசராச நாடகப் பெரியன் என்னும் பட்டம், இராசராச நாடகத்தில் இவனுக்கு இருந்த பெரும் புலமையை விளக்குவதாகும்.[34]

தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் இராசராசன் காலத்திலேயே, இராசராச நாடகம் நடிக்கப் பட்டமைக்கு மேற்கண்ட குறிப்பு சிறப்புமிக்க சான்றாகும். அவனுக்குப் பின்னரும், பெரிய திருவிழாவின் போது அந்நாடகம் நடிக்கப்பட்டு வந்ததை இரண்டாம் இராசேந்திரனுடைய கல்வெட்டு எடுத்துரைக்கின்றது. ஆனால், அந்நாடகம் இன்று நமக்குக் கிடைக்க வில்லை. அதனுடைய அமைப்பும், பாத்திரப் படைப்பும் எவ்வாறிருந்தன என்பதை நாம் அறியமுடியவில்லை.

## ஊர்வலத்தில் நாட்டிய மகளிர்

இராசராசனுடைய இருபத்தி மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று தாதாபுரத்தில் காணப்படுகின்றது. திருவிழாக் காலத்தில் இரவிக்குல மாணிக்க ஈசுவரரும், குந்தவை

[32] மு. இராகவையங்கார்: சாசனத் தமிழ்க்கவி சரிதம், பக். 87-88
[33] 55 of 1893; S. I. I Vol 2; No. 67.
[34] இரண்டாம் திருமுறை--தருமபுர ஆதீனப் பதிப்பு, பக், 95.

விண்ணகரப் பெருமாளும் ஊர்வலம் வருவர். அப்பொழுது, நடன மகளிர் ஊர்வலத்தில் நாட்டியமாடிக் கொண்டும், இன்னிசைப் பாடல்களைப் பாடிக் கொண்டும் செல்லுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. இச்செய்தியை அக்கல்வெட்டு தெரிவிக்கிறது.[35]

## குந்தவையின் நடனம்

இராசராசனுடைய தமக்கையான குந்தவைப் பிராட்டியார், மேலே குறிப்பிட்ட இரவிக்குல மாணிக்க ஈசுவரரின் திருமுன்னர் நடனமாடுவதைப் போன்றதொரு சிற்பம், அக்கோயிலில் காணப் படுகின்றது.[36] இதனால், அரச குடும்பத்தைச் சேர்ந்த மகளிர் நடனக் கலையில் பயிற்சி பெற்றிருந்தனர் என்று கருதலாம். ஆனால், அவர்கள் பொது மேடைகளில் நடனமாடினர் என்று கூறுவது தவறாகும்.

## நாடக சாலை

'பழைய தமிழ் நாடக மேடை' என்னும் கட்டுரையில், பேராசிரியர் திரு ச. க. கோவிந்தசாமிப் பிள்ளை, சோழர் காலத்தில் **நாடக சாலை மண்டபம்** என்பது திருக்கோயில்களிலும், **கோயில் நாடக சாலை** என்பது அரசர்களுடைய அரண்மனை களிலும், அரங்குகள் என்பவை ஊர்ப் பொதுவிடங்களிலும் இருந்தன[37] என்று குறிப்பிட்டுள்ளார்.

கருவூர்த் தேவர், தஞ்சைப் பெரிய கோயிலில் நாடக சாலை இருந்ததை,

மின்னெடும் புருவத் திளமயி லனையார்
விலங்கல் செய் **நாடகசாலை**
இன்னடம் பயிலும் இஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே

என்னும் பாடலில் தெரிவித்துள்ளார். இதே காலத்தில் திருவாவடுதுறைக் கோயிலில் **சதிர்ச்சாலை மண்டபம்** ஒன்று இருந்ததையும் அறிகிறோம்.

[35] 8 of 1919.
[36] 17 of 1919.
[37] Annamalai University Journal, Vol. 2, 1934; P. 48.

## தலைக் கோலி

நாட்டிய மாடிய பெண்களில் சிறந்தவருக்குத் **தலைக் கோலி** என்னும் பட்டம் அளித்துப் பாராட்டும் மரபு சோழ மன்னர் காலத்தில், வழக்கிலிருந்ததைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

மேற்கண்ட குறிப்புகளிலிருந்து ஆடவரும் நாட்டியமாடினர் என்பது புலனாகின்றது. அவரவர்கள் ஆடிய கூத்திற்கேற்பச் சாக்கையன், சாந்திக் கூத்தன் என்றும் சுட்டப்பட்டனர். நாட்டியத்தை ஆடியவர்களுக்கு நிருத்தப் பேரரையன், நிருத்த மாராயன் என்னும் பட்டங்கள் கொடுக்கப்பட்டன; நாடகம் ஆடியவருக்கு நாடகமய்யன் என்னும் பட்டப் பெயர் வழங்கியது.

அம்பலத்தில் ஆனந்தக்கூத்து ஆடும் அம்பலவாணரின் வெண் கலச் சிலைகள் செய்யும் கலை இக்காலத்தில் மிகச் சிறந்த நிலையை அடைந்திருந்ததை இவ்வியலின் முற்பகுதியில் நாம் கண்டோம். இவை யாவும் கூத்தும் பாட்டும், நடனமும் நாடகமும் இராச ராசன் காலத்தில் நன்கு போற்றி வளர்க்கப்பட்டதை எடுத் தியம்புகின்றன.

ஒரு நாட்டின் நாகரிகச் சிறப்பை அறிவதற்கு, அந்நாட்டில் அழகுக் கலைகள் அடைந்துள்ள முன்னேற்றத்தையும் முதிர்ச்சியை யும் அளவு கோலாகக் கொண்டு அறியலாம் என்பர். சோழப் பேரரசன் இராசராசன் காலத்தில் 'ஆய கலைகள் அறுபத்து நான்குமே' போற்றி வளர்க்கப்பட்டதை இந்நூலின் மூன்றும் பகுதியில் நாம் கண்டோம். அழகுக் கலைகளான இசையும் நாடகமும், சிற்பமும் சித்திரமும் தமிழக வரலாற்றின் வேறெக் காலத்தையும் விட, இக்காலத்தில் மிக வுயர்ந்ததோர் நிலையை அடைந்திருந்ததை நாம் அறிகிறோம். இதனால், நம் பேரரசன் காலத்திய தமிழ் மக்கள் 'நயத்தகு நனிநாகரிக'ராக விளங்கியதில் வியப்பிற்கு இடமில்லை.

# 22. தமிழ் மொழியின் நிலை

முத்தமிழுள் முதன்மையானதாக விளங்குவது இயற்றமிழ். இது சொற்களாலாகியது; சொல்லோ ஒலி வடிவம் உடையது. இவ்வொலி வடிவம் இசைக்கு முதன்மையானது; இயற்றமிழுக்கு இரண்டாம் நிலையாகத் தேவைப்படுவது. நமது கண்ணிற்கும் கருத்திற்கும் புலனாகும் பொருள்களின் இயல்பினை, விளக்குவதற்கு ஏற்ற சொல்லமைப்பினையுடையது இயற்றமிழ். மக்களின் உள்ளத்தே எழும் கருத்துகளின் அமைதியே இயற்றமிழ். இயற்றமிழ் என்பது தமிழ் மொழியின் இயல்பினை நன்கு வெளிப்படுத்தும் வகையில் இயற்றப்பட்ட இலக்கியங்களையும், இலக்கணங்களையும் குறிப்பதாகும்.

இவ்விலக்கண இலக்கியங்களுக்கு மூலமாக இருப்பது மொழி. காலந்தோறும், வாழும் மக்களின் மனவளத்திற்கும், அறிவாற்றலுக்கும் ஏற்பு மொழியின் வளர்ச்சியில் மாற்றங்களும் திரிபுகளும் உண்டாகின்றன. குறிப்பிட்ட ஒரே காலத்திலும் கூட, வட்டார வேறுபாடுகள் ஒரு மொழியில் உண்டாவது இயற்கை.

முதலில் நாம் இராசராசன் காலத்திய தமிழ் மொழியின் இயல்புகளைக் காண்போம். பின்னர் அக்காலத்தில் உண்டான இலக்கிய வளர்ச்சியின் ஏற்றமிகு நிலையினைப் பார்க்கலாம்.

## தமிழ் மொழியின் நிலை

இராசராசன் காலத்திய தமிழ்மொழி அமைப்பினை அறிவதற்குப் பெரிதும் கல்வெட்டுகள் உதவுகின்றன. அவற்றோடு ஒரு சில இலக்கண, இலக்கியங்களும் துணை நிற்கின்றன.

## ஒலியியல் அமைப்பு

தமிழ்மொழியில் வழங்கிவரும் ஒலிகளின் ஒலிப்பு முறையில், அதிகமான வேறுபாடு இக்காலத்தில் புதியதாக ஒன்றும் தோன்றவில்லை. பல்லவர் காலத்தில் தோன்றத் தொடங்கிய ஒலிப்பு முறை வேறுபாடுகள், சோழப் பேரரசர் காலத்தில் பெருவழக்குற்றன.

மொழி முதலில் வரும் உகரத்தை இதழ்ச்சாயல் பெற்ற குவியிதழ் பின் நா உயிரொலி என்போம். இதனை, இராசராசன் காலத்தில் ஒகரமாக ஒலித்தனர் என்று கருத வேண்டியுள்ளது. அவனுடைய பட்டத்து அரசியான **உலகமாதேவியைக்** குறிப்பிடும் இடங்களில் எல்லாம் 'ஒலோக மாதேவியார்' என்றே ஐம்பதிற்கு மேற்பட்ட இடங்களில் கல்வெட்டுகளில் பொறிக்கப் பட்டுள்ளன.[1] இதற்கு மொழியியல் அமைப்பில் நாம் ஒரு விளக்கம் தர இயலும். உகரத்தைப் போன்றே ஒகரமும் இதழ்ச்சாயல் பெற்ற குவியிதழ் பின்நா இடையுயிர் ஒலியாகும். இரண்டிற்கும் ஒலிப்பு முயற்சியில் வேறுபாடில்லை. உகரம் பின்நா உயிரொலி; ஒகரம் பின்நா இடையுயிரொலி இந்தச் சிறு வேறுபாட்டின் காரணமாகத்தான் ஒன்றை மற்றொன்றாக மயங்கி ஒலிக்கும் வழக்கம் உண்டாயிற்று.

முன்னுயிரொலிகள் யகரப் பண்பும், பின்னுயிர் ஒலிகள் வகரப் பண்பும் பெற்று மொழி முதலில் வழங்குவது இராசராசன் காலத்திய கல்வெட்டுகளில் காணப்படும் சிறப்பியல்பாகும். உகரம் ஒகரமாக ஒலிக்கப்பட்டதைப் போன்றே, இகரம் யகரமாக மொழிக்கு முதலில் ஒலிக்கப்பட்டதை நாம் காணுகின்றோம்.

எ-டு :

யிந்நாயனர் (இந்நாயனர்)
யிப்பூசைக்கு (இப்பூசைக்கு)[2]

இவ்வழக்கு இன்றைய பேச்சுத் தமிழில் பெருவழக்காக உள்ளமை இங்குக் கருதத்தக்கது. தொல்காப்பியர் காலத்தில் சொல்லின்

[1] "இவர் நம்பிராட்டியார் ஒலொகமா தெவியார்க்குக் குடுத்தன"—S. I I; Vol. 2; Pt. 2; No. 38: PP, 152-161 இதில் மொழிமுதல் உயிர்மெய்யில் உள்ள ஒகரம் உகரமாகத் திரிந்து (கொடுத்தன—குடுந்தன) வழங்குவதையும் காணலாம்.

[2] S. I. I., Vol. 2; pt 2; PP. 173

ஈற்றில் யகரம் இகரமாகத் திரியும் என்று குறிப்பிட்டுள்ளார்.[3] இதற்கு நேர்மாருகச் சோழர் காலம் முதல், மொழிக்கு முதலில் வரும் இகரம், யகரமாகத் திரித்து ஒலிக்கப்பட்டு வருகிறது.

சங்க காலத்தில் வல்லின மெய்யெழுத்துகள் எல்லாச் சூழ் நிலையிலும் ஒலிப்பில் ஒலியாகவே ஒலிக்கப்பட்டன. பல்லவர் காலத்திலும் இந்நிலையே நீடித்தது. இதனைத் தமிழகத்தின் பழைய குகைக் கல்வெட்டுகளிலும் குமரிலபட்டர் மேற்கோளாகக் காட்டியுள்ள தமிழ்ச் சொற்களிலும், வடமொழிக் கிரந்த எழுத்துகளில் எழுதப்பட்ட தமிழ்ச் சொற்களிலும் நாம் காணுகின்றோம். ஆனால், இச்சோழப் பேரரசன் காலத்திற்குள், உயிர்களுக்கு இடையிலும், மெல்லெழுத்திற்குப் பின்னும் வரும் வல்லெழுத்து ஒலிப்புடை ஒலியாக ஒலிக்கத் தொடங்கியது.

எ-டு :

*மலைத் தலங்கள் மீதேறி மாதவங்கள் செய்து*
(ஆளுடை. பிள். மும்ம. 14)

*தாளின் சரணம் தருஞ்சண்பை*
(ஆளுடை. திருவந். 62)

*இலைகுலாம் பதணத்து இஞ்சிசூழ் தஞ்சை*
(திருவிசை. 9:1)

என்பன இலக்கியச் சான்றுகளாகும். கல்வெட்டுகளிலும் இவ்வியல்பினைக் காணுகின்றோம்.

கோச்செங்கணன்; நல்லடிக்கோன்; அரிஞ்சிகா
(அன்பில் செப்பேடு)[4]

தென்வன் மூவேந்த வேளான்......திருஞான சம்பந்த அடிகளுக்குக் கொடுத்த......மணிவடம் ஒன்று'
(தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு)[5]

என்னும் இலக்கிய, கல்வெட்டுச் சான்றுகளில் க(k)—க(g) ஆகவும், ப(p)—ப(b) ஆகவும், ச(c)—ஜ(j) ஆகவும் ஒலிக்கத் தொடங்கியதை அறிகிறோம். இதைப்போன்று ட(d)—ட(dh) ஆக (ஒலிப்புடை ஒலியாக)வும் ஒலித்தமை இங்குக் கருதத்தக்கது. இத்தகைய ஒலித்திரிபிற்கு, வடமொழிச் சொற்களை மிகுதியாகக் கடன் வாங்கித் தமிழில் எழுதத் தொடங்கியமையும், அதனால்

3. தொல். 357.
4. E. I. XV PP. 60-61
5. S. I. I; Vol. 2: pt.2: No. 38, PP. 152-161

வடமொழி ஒலிப்பு முறைத் தாக்கம் தமிழ் ஒலிகளில் உண்டானமையுமே காரணங்களாகும்.[6] கல்வெட்டுகளிலும் இத்தகைய பண்பை நாம் மிகுதியாகக் காணுகின்றோம். 'சந்திர' 'தேவேந்திர' போன்ற வடமொழிச் சொற்களின் ஒலிப்புமுறை இயல்பு, தமிழ்ச் சொற்களில் மெல்லினத்தை அடுத்து வரும் வல்லின மெய் யெழுத்துகளின் ஒலிப்பில் மாற்றத்தை உண்டாக்கி இருக்கின்றன. மங்கலம் என்னும் சொல்லில் 'க'வும், பல்லினத்தைச் சேர்ந்த 'த' (t) மூக்கின (மெல்லின) ஒலியான 'ம' (m) வை அடுத்து வரும்பொழுது, மூக்கினமாகி மாறி ஒலித்தலை 'ஆத்மா' என்னும் சொல்லில் காணுகின்றோம்.

ஞகரம் நகரமாகத் திரிந்து ஒலிக்கும் வழக்கம் பையப் பையப் பெருகலாயிற்று.

எ-டு: ஞாயிறு—நாயிறு[7]

மற்றும் னகர நகரங்களுக்கு இடையே ஒலி வேற்றுமை குறைந்து, இரண்டும் ஒன்றே என்று கருதக் கூடிய நிலையும் தோன்றியது.

ழகரம் ளகரம் போல் ஒலிப்பது பெருவழக்காயிற்று. இதனால் சில சமயங்களில் ளகரம், ழகரமாகத் திரிக்கப்பட்டது. இதன் விளைவாகப் புணர்ச்சியில் ளகரம் டகரமாகவும், ணகரமாகவும் திரிந்து வரும் நிலை உண்டாயிற்று. 'சோழ' என்னும் சொல் 'சோள' என்று கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ளதைக் காணுகின்றோம்.[8] இராசராசன் காலத்திலும் இராசேந்திரன் காலத்திலும் வாழ்ந்தவர் கருவூர்த்தேவராவர். அவர், கங்கை கொண்ட சோழேச்சரத்தைப் போற்றிப் பத்துப் பாடல்கள் பாடியுள்ளார். ஒன்பதாந் திருமுறையில் திருவிசைப்பாப் பகுதியில் அப்பாடல்களைக் காணலாம். அந்தப் பாக்கள் ஒவ்வொன்றும், 'கங்கை கொண்ட **சோளேச்சரத்**தானே!' என முடிகிறது.[9] அவ்வடிவில் 'சோழேச்சுரம்' என்பது **சோளேச்சுரம்** என்று வழங்கப் பட்டுள்ளதைக் காணலாம்.

6 காண்க:- நன்னூல், 147
7 சங்க காலத்தில் இதற்கு நேர்மாறான வழக்காய் இருந்தது.
எ-டு நிணம்—ஞிணம்; நெகிழ்—ஞெகிழ்.
8 'சோளமண்டலம்' S. I. I Vol 3: pt. I, No I P. 6.
9 திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, காசிமடம் வெளியீடு, திருப்பனந்தாள், பக். 168-181.

திருவாய்க் கேள்வி என்பது அரசனுடைய உடன் கூட்டத்து அதிகாரிகளுள் ஒருவனுடைய பெயர். அப்பெயரைத் 'திருவாய்க் **கேழ்வி**' என்றே கல்வெட்டுகள் சுட்டுகின்றன. இங்கு ளகரம் ழகர மாகத் திரிந்தமை புலனாகின்றது.[10] இது அருகிய வழக்கு எனலாம்.

பதினோராம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இயற்றப்பட்ட வீரசோழியம் என்னும் இலக்கண நூலின் ஆசிரியர், ழகரம் ளகர மாகத் திரிவதை ஏற்றுக் கொண்டு, அதற்கு இலக்கண விதியும் வகுத்துள்ளார். ளகரத்திற்குரிய விதிகளை எல்லாம், ழகரத்துக்கு அவர் பொருத்திக் காட்டியுள்ளார்.[11] அவர் கருத்துப்படி,

ழ்+த் = ட் அல்லது ட்ட் எனத் திரியும்.
ழ்+ந் = ண எனத் திரியும்.

இவற்றிற்குச் சோழர் காலத்திய இலக்கியங்களிலும், கல்வெட்டு களிலும் சான்றுகள் பல உள்ளன.

எ.டு :

திகழ்+தசக்கரம் = திகட சக்கரம்

(கந்த புராணம், 1)

கீழ்+நோக்கிய = கீணோக்கிய[12]
சோழ+நாடு = சோணாடு[13]

இதற்கு மாறாக, சம்ஸ்கிருதச் சொற்களைத் தமிழ்ப்படுத்திய பொழுது, வடமொழியில் உள்ள நா மடித் தடையொலி எழுத்துக ளான டி, ஷ போன்றவற்றைத் தமிழில் ழகரமாக எழுதலாயினர்.

எ-டு

நாடி—நாழி
உஷா—உழை
பாஷா—பாழை

றகர மெய் இரட்டித்தபோது, சில இடங்களில் **தகர**மாகவும், வேறு சில இடங்களில் **டகர**மாகவும் ஒலிக்கும் வழக்கு இக் காலத் தில் நிலைபெறத் தொடங்கியது. தொல்காப்பியர் காலத்தில். றகரம் நடுவல்லண்ண நாமடித் தடையொலியாக ஒலிக்கப்பட்டது. இன்று கடையண்ண நா மடி ஒலியாக அது ஒலிக்கப்படுகிறது. இம்

10 **காண்க**:-S. I. I. Vol 2; pt.I. pp. 106-107.
11 **வீரசோழியம்**, சூ. **15**
12 S.I.I. Vol. 8; P 82; l. 21
13 S.I.I. Vol. 2; pt. I., pp. 92-94

மாற்றம் பதினோராம் நூற்றாண்டிற்கு முன்பே வழக்கிற்கு வந்திருக்க வேண்டும் என்பதை வீரசோழியம் தெரிவிக்கிறது. ஆற்றுக்கால், சேற்றுநிலம், வெற்றிலை, பற்றியது போன்ற சொற்கள் ஆத்துக் கால், சேத்து நிலம், வெச்சிலை, பத்தியது என்று பேச்சு வழக்கில் திரிந்ததை அந் நூல் எடுத்துரைக்கிறது.[14] இத்திரிபினை நாம் கல்வெட்டுகளிலும் காணுகின்றோம். 'திருவையாற்றில்' என்பதை 'திருவையாத்தில்' என்றும், 'திருச்சிற்றம்பலவன்' என்பதை திருச்சித்தம்பலவன்[15] என்றும் எழுதும் முறை அரும் பலாயிற்று. இவற்றிலிருந்து, சோழர் காலத்திற்கு முன்பே வல்லின றகரம் இரட்டித்து (ற்ற) வருமிடங்களில் வல்லினத் தகரமாகத் (த்த) திரியத் தொடங்கிவிட்டமை புலனாகின்றது.

றகரம் டகரமாகத் திரிந்தமையும் இங்குக் கருதத்தக்கதாகும். சங்க காலத்தில் டகரம், நுனி நா கடையண்ண நா மடி வொலியாக ஒலிக்கப்பட்டிருக்க வேண்டும்.[16] ஆனால், இன்று வல்லண்ண நா மடி ஒலியாக ஒலிக்கப் படுகிறது. இம்மாற்றம் எக்காலத்தில் உண்டாயிற்று என்பதை ஆராய்கின்ற பொழுது, பெரிதும் வீர சோழியம் என்னும் இலக்கணநூல் இயற்றப் படுவதற்கு முன்பே, இவ்வழக்கு உண்டானமை தெரிகிறது. வடமொழியில் உள்ள டகரத்தை நுனி நா வல்லண்ணத் தடையொலியாக ஒலிப்பது மரபு, அதைப் போன்று தமிழின் டகரத்தையும் ஒலிக்கத் தொடங்கியமையால் இக்கோளாறு உண்டாயிற்று. பல்லவர் காலத்தில் இவ்வழக்கு தொடங்கி இருக்கலாம்; சோழர் காலத்தில் இம் முறை பெருவழக்காயிற்று.

எ-டு :

பற்று—பட்டு[17]
பெருநற்கிள்ளி—பெருநட்கிள்ளி[18]

மற்றும், அக்காலத்தில் நகரம் னகரம் போன்று ஒலிக்கப்பட்டதைக் காணுகின்றோம். நகரம் பல்லினவொலியாகப் பண்டைக் காலத்தில் ஒலிக்கப்பட்டது. ஆனால், சோழர் காலத்தில் கடையண்ண வொலியாகிய னகரம் போல் ஒலிக்கப்படலாயிற்று.

14 வீர சோழியம்; சூ. 82 உரை
15 633 of 1902
16 தொல். 91
17 அகரப்பற்று வள்ளியப்பற்று என்றும் மானியமாக வழங்கப்பட்ட ஊர்கள் அகரப்பட்டு, வன்னியப்பட்டு என்றும் திரிந்துள்ளன. இன்று, 'பட்டு' திரிந்து 'பேட்டை' யாகி இருக்கிறது.
18 வீர இராசேந்திரனின் கன்னியாகுமரி வடமொழிக் கல்வெட்டைக் காண்க: Epigraphia Indica, Vol. 18; No. 4; ll. 400-402

எ-டு :

நாயனர் — ஞயனர்
பன்னிரண்டாவது — பந்நிரண்டாவது
திருநாள் — திருனள்

இன்றைய பேச்சுத் தமிழில், மொழி முதலிலும், இரட்டிக்கும் இடங்களிலும் நகரம் ஒலிக்கப்படுகிறது; பிற இடங்களில், இவ் வெழுத்தொலி, னகரமாகவே ஒலிக்கப்படுவது இங்குக் கருதத் தக்கது.

## சொல்லமைப்பு

யகரம் ஆகாரத்தோடு மட்டுமே (யா) மொழிக்கு முதலில் வரும் என்பது பழந்தமிழ் மரபாகும். ஆனல், சோழப் பேரரசர் காலத்தில் அ, ஆ, உ, ஊ, ஓ, ஔ என்பனவற்றோடு சேர்ந்து யகரம் மொழிக்கு முதலில் வருகின்றன. எ-டு: யுகம், யூகி, யோகம், யௌவனம். இவ்வழக்கு வடமொழிச் சொற்களைப் பெரிதும் மாற்றமின்றி, அப்படியே தமிழில் மிகுதியாக வழங்கிய தன் விளைவாகும். இவ்வழக்காற்றினை வீரசோழிய இலக்கண நூலாரும், நன்னூலாரும் ஏற்றுக்கொண்டு, விதி வகுத்துள்ளனர்.

உடம்படு மெய்களான யகர வகரங்கள் இலக்கியத்துள்ளும் கல்வெட்டுகளிலும் பெருவழக்கு பெற்றுள்ளன. தொல்காப்பிய ஞர் உடம்படு மெய்கள் தோன்றும் இடத்தை வரையறுத்துக் கூறவில்லை. ஆனல், வீர சோழியம் உடம்படு மெய் தோன்றும் சூழலை முதன் முதலாக வரையறுத்துக் கூறுகின்றது.[19] மூன்றும் வேற்றுமை உருபான 'ஒடு' என்பது மட்டுமல்லாமல் ஆல் என்னும் உருபும் இக்காலத்தில் வழங்கத் தலைப்பட்டன.

எ-டு :

'ஆடவல்லானல் நிசதம் அளக்கக் கடவ'[20]

'நாம்' என்னும் உளப்பாட்டுத் தன்மைக்கு ஏற்றாற்போல 'நான்' எனும் ஒருமை வடிவம் புதியதாகப் படைத்துக் கொள்ளப் பட்டது. 'நான்' என்னும் வழக்கும், யாங்கள், நாங்கள் என் னும் இரட்டைப் பன்மை வழக்கும் இக்காலத்தில் பெருகின. நீ, நீயிர் என்ற முன்னிலை யொருமைக்கும் பன்மைக்கும் மாறாக 'நீர்' என்ற வடிவமும், நீங்கள் என்னும் இரட்டைப் பன்மை வழக்கமும் தோன்றின.

19 வீரசோழியம். பக்.7.
20 S.I.I., Vol. 2; No. 64.

'யார்' என்னும் சொல் வடிவத்தில் உள்ள யகரம் கெட்டு 'ஆர்' எனத் திரிந்த வழக்குற்றது. இதைப் போன்று, 'அம்' என்ற தன்மைப் பன்மை ஈறு, 'ஓம்' எனத் திரியலாயிற்று. சென்றனம் என்னும் வடிவம் சென்றோம் என்றாயிற்று.

எ-டு :

சிலாலேகை செய்து கொ(கு)டுத்தோம்[21]

'கள்' விகுதி உயர்திணைப் பன்மையைக் குறிக்கலாயிற்று. காலம் காட்டும் இடைநிலைகள் சில புதியதாக வழக்கிற்கு வந்துள்ளன. 'கிறு', 'ஆநின்று' என்னும் நிகழ் கால இடைநிலைகள் பல்லவர் காலத்தில் அருகிய வழக்காகும். இக்காலத்தில் இவை பெரு வழக்குற்றன. இறந்த கால இடை நிலைகளாக த், ட், ற் வழங்கப்பட்டுள்ளன. நன்னூலார் இவற்றிற்கு விதி வகுத்துள்ளார். இவற்றைப் போன்றே எதிர் காலத்தைக் காட்டும் இடைநிலைகளாக வ், ப் வழங்கப்பட்டன.

வியங்கோள் வினை முன்னிலையிலும் தன்மையிலும் சோழர் காலத்தில் பெரு வழக்கிற்கு வந்தது.

## வடமொழிக் கலப்பு

பிற மொழி (வட)ச் சொற்களை மிகுதியாகக் கடன் வாங்கிய காலம் இது. கடன் வாங்கும் பொழுது, அச்சொற்களைத் தமிழின் ஒலி இயல்பிற்கு ஏற்றவாறு மாற்றியும், திருத்தியும் அமைத்துக் கொள்ளும் மரபினைக் கல்வெட்டு எழுதியவர்கள் போற்றிப் பின்பற்றவில்லை. வடசொற்களை அப்படியே, கிரந்த எழுத்துகளைக் கொண்டு தமிழ்ச் சொற்களின் இடையிடையே எள்ளும் கொள்ளும் கலந்ததைப் போல, கலந்து எழுதியுள்ளனர்.

இராசராசன் காலத்திய தமிழ்மொழியின் ஒலியியல் அமைப்பிலும், சொற்களஞ்சியத்திலும் வடமொழியின் தாக்குறவு கணிசமான அளவிற்கு உண்டாயிற்று. அதனால், பழைய மரபுகள் சில சிதைந்தன; சில புதிய மரபுகள் மெல்ல அரும்பலாயின. காலப் போக்கில் இப்பண்புகள் பல்கிப் பெருகின. இன்றைய பேச்சுத் தமிழின் கூறுகள் பல அன்றைய கல்வெட்டுகளில் இடம் பெற்றுள்ளன. ஆயினும், இலக்கியம் படைத்த மூதறிஞர்கள், அவற்றைப் பேரளவிற்குப் புறக்கணித்து வந்துள்ளனர். ஒரு பக்கம் வட

[21] S.I.I., Vol. 3; pt. I; No. 15; P. 24.

மொழித் தாக்கம் பெருகிக் கொண்டிருந்த நேரத்தில், தமிழின் அருமை பெருமைகளைச் சமய வுணர்வாகிய பாலில் கலந்து, நாட்டு மக்களுக்குப் புலவர் பெருமக்கள் ஊட்டி வந்தனர். இருந்தமிழ்,[22] பொய்ம்மை இலாத் தமிழ்,[23] செந்தமிழ்,[24] ஞானத்தமிழ்,[25] ஒண்முத்தமிழ்,[26] முத்தமிழ்,[27] அருந்தமிழ்,[28] நற்றமிழ்,[29] மதுரத்தமிழ்,[30] தண்டமிழ்,[31] சுந்தரமார் தமிழ்[32] என்று பலவாருகத் தமிழ் மொழியினை நம்பியாண்டார் நம்பி என்னும் சைவப் பெரியார் போற்றிப் பாடியுள்ளார்.

சோற்றுச் சுவை தவிர, தமிழ்ச்சுவை அறியாதவரைக் கம்பங்கள் (தூண்கள், மரக்கட்டைகள்) என்று அவர் இழிவாகக் குறிப்பிடுகிருர்.

அவிழ்ச்சுவை யேஅறிந் தரனடி பரவும்
**தமிழ்ச்சுவை** அறியாத் **தம்பங்கள்**[33]

என்று அவர் தாக்குகிருர்.

தமிழ்மொழியின் தூய்மையைக் காக்க இராசராச சோழன் காலத்திய தமிழர் மறந்தனர். ஆயினும், தமிழ் மொழியால் வளர்க்கப்பட்ட பண்பாட்டைப் போற்றி வளர்க்க அவர்கள் முயன்றனர் என்பது இதனல் புலனுகின்றது.

22 திருத்தொண்டர் திருவந்தாதி, 26
23 ஷை 49
24 ஆளுடை. திருவத். 70, 79
25 ஷை, 94; திருமும். 11
36 ஆளுடை. திருமும். 23
27 ஆளுடை. திருவுலா 65
28 ஆளுடை, திருக். 1
29 ஷை, 3.
30 ஷை, 21
31 ,, 43
32 ,, 45
33 ஆளுடை. திருமும். 4:20-21

# 23. தமிழ் இலக்கிய வளர்ச்சி

இராசராசன் கலைகள் பலவற்றைப் போற்றிய காவலனாக விளங்கினான், இதை நாம் முன்னரே கண்டோம். கலைகளிலே சிறந்தது, உயர்ந்தது எனப் போற்றப் படுவது இலக்கியக் கலை. அக்கலை வளர்ச்சிக்கு நம் பேரரசன் தந்த ஆக்கமும் ஊக்கமும் எத் தகையது என்பதை மதிப்பிடுவது மிகவும் கடினமான செயலாகும். இராசராசன் காலத்திய சிறப்புமிக்க புலவர்களின் பெயர்களே நமக்குத் தெரியவில்லை. அவர்கள் இயற்றிய இலக்கியப் படைப்பு கள் யாவை என்பதை நாம் அறிய இயலவில்லை. பேரரசனுடைய அத்தாணி மண்டபத்தை அணிசெய்த அவைக்களம் புலவர் யாரா கிலும் இருந்திருந்தால், நமக்கு அவருடைய பெயரைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு கிடைக்காமல் போய் இருக்காது. முதலாம் குலோத்துங்கன் காலத்திற்குப் பின்னர் ஒட்டக் கூத்தர் போன் றோர் சோழப் பேரரசனின் அவைக்களப் புலவராகச் சீரும் சிறப்பு முற்று விளங்கினர். அதைப் போன்று, சோழப் பெருவேந்தன் இராசராசன் காலத்தில் பீடுமிக்க புலவர்கள் வாழ்ந்தமைக்குச் சான்றுகள் யாதும் கிடைக்கவில்லை. இதனால், அவைக்கள இலக் கியம் (Court poetry) படைப்பதற்குரிய சூழல் அக்காலத்தில் அமையவில்லை என்பது புலனாகின்றது.

**இராசராசன் போற்றிய புலவர்**

இராசராசனின் தந்தையான இரண்டாம் பராந்தக சோழர் பாட்டிசைக்கும் பாவலராக விளங்கியதை நாடு நன்கு அறியும். அவருடைய அரும்பெறல் மைந்தனான இராசராசனுக்குப் **பண்டித சோழன்** என்னும் பட்டப்பெயர் வழங்கியதை நாம் அறிவோம். இத்தகைய அரசனுடைய ஆட்சிக் காலத்தில், தமிழகத்திலே புல வர்கள் வாழாமலா போயிருப்பர்? நாட்டின் பல பகுதிகளில் பரவ

லாக இருந்திருப்பர். ஆனல், அரசன் ஆதரித்த புலவர் ஒருவரு டைய பெயரைக்கூட, கல்வெட்டுகளில் நாம் காணமுடியவில்லே. இது நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது.

சோழப் பெருங்குடியைச் சேர்ந்த மன்னர்கள் பலரும் இரர்ச ராசன் காலம் வரையில் பேரரசை நிறுவுவதிலேயே கருத்தாக இருந்தனர். அதனல், போர்க் களத்திலேயே, தங்கள் வாழ்நாளின் பெரும் பகுதியை அவர்கள் கழிக்க நேர்ந்தது. இராசராசனு டைய ஆட்சிக் காலத்தில் நாட்டில் அமைதி நிலவிய காலங்களில், திருக்கோயில் எழுப்பும் திருப்பணியில் அவன் ஈடுபட்டான்.

நம்பியாண்டார் நம்பிகளின் உதவியால், தேவாரத் திருப் பதிகங்களேத் தேடி அவற்றைச் சைவத் திருமுறைகளாக வகுத் துத் தமிழுலகிற்கு அவன் அளித்தான். இந்த ஒரு செயலிற்கே, தமிழிலக்கிய வரலாற்றில் அவனுடைய பெயரைப் பொன்னெழுத் துக்களால் பொறிக்க வேண்டும். இன்றைய உலக அறிஞர்கள் தமிழிலுள்ள பக்தி இலக்கியத்தை மிகச் சிறப்பாகப் போற்றுகின்ற னர். ''இடைக்காலத் தமிழ் இலக்கியத்தின் மாட்சிக்கும் சிறப்பிற் கும் நிலேக்களனுக இருப்பவை சைவ, வைணவ சமய ஆசாரியர் களின் அருட்பாடல்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லே. அவை, உலகின் மாண்புமிகு சமய இலக்கியத்துள் சிறப்பு மிக்கவை யாகும்''[1] என்று எ. எல். பாஷம் குறிப்பிட்டுள்ளமை இங்குக் கரு தத்தக்கது. இத்தகைய சிறப்புமிக்க பக்தி இலக்கியத்தின் செம் பாதியாகிய சைவத் திருமுறைகளுள், முக்கியமான தேவாரத் தைத் தேடிக் கண்டுபிடித்து, கிடைத்தவற்றை தொகைவகைப் படுத்தி உலகிற்கு வழங்கிய பேரறிவாளனும் பெருந்தகையுமான இராசராசனே நம் சிறு செந்நாவால் போற்ற இயலுமா?

அவன் எடுப்பித்த் தஞ்சை இராசேச்சுரத்தைப் போற்றிப் பாடிப் பெருமை செய்ய கபில பரணரோ, இளங்கோவோ பெருந் தேவனரோ மூவர் முதலிகளோ மாணிக்க வாசகரோ உயிருடன் இல்லே. இக்குறையைக் கருவூர்த் தேவர் என்ற சிவயோகி போக் கியதை நாடு நன்கு அறியும். தஞ்சைப் பெருவுடையாரைத் தானே அவர் போற்றிப் பாடியுள்ளார்? 'அவருடைய தஞ்சைத் திருவிசைப்பாவில் இராசராசனே எங்கும் குறிப்பிட வில்லேயே?' என்னும் எண்ணம் நம்மில் பலருக்கு எழலாம். முற்றும் துறந்த முனிவராகிய கருவூர்த் தேவர் 'மானிடம் பாடா' மாண்புமிக்கோ ராவர். தஞ்சைப் பெரிய கோயில் சிற்பத்திலும், ஓவியத்திலும் நம் பேரரசன், தன் குருநாதரான கருவூர்த் தேவரோடு ஒருங்

[1] Basham, A. L·: The Wonder That Was India, p. 476

கிருக்கும் கோலம் காட்டப்பட்டிருக்கிறது. அத்துணை நெருக்க மாகப் பேரரசனேடு பழகிய அவர், இறைவனை யல்லாமல் வேறு யாரையும் பாடுவதில்லை என்னும் நோன்பினை நோற்றவராதல் வேண்டும்.

இவ்விரு சமயச் சான்றேர்களும் மிகப் பெரும் புலவர்கள் என் பதைப் பின்னர் நாம் விரிவாகக் காணலாம். இவ்விருவரையும் போற்றியாதரித்த புரவலன் இராசராசன் என்று கூறினல், அது தவருகாது.

## இலக்கியத்தின் நோக்கும் போக்கும்

இராசராசன் ஆட்சி புரிந்த பத்து, பதிேைராம் நூற்ருண்டு களில் இயற்றப்பட்ட இலக்கியங்கள் யாவும் சமயச் சார்புடை யன. தமிழகத்தில் கி. பி.ஆரும் நூற்ருண்டு முதல் ஒன்பதாம் நூற்ருண்டுவரை பக்தி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. அதன் விளைவாக மக்களுடைய உள்ளம் எல்லாம் ‘அவனடி’ சேர்தலை நாடியது. நாடெங்கும் திருக்கோயில்கள் தோன்றின; அவற்றில் தேர்த் திருவிழாக்கள் மாறி மாறி நடைபெற்ற வண்ணம் இருந்தன. இறைவனுடைய பேராற்றலையும் பேரறிவையும் விளக்குவதோடு, அவன் அன்பர்களுக்கு எளியனும் தன்மையை எடுத்துரைக்கும் கதைகள் பல பெருகிக் கொண்டிருந்தன. இவற்றேடு, தமிழ் மக்களின் இதயக் கதவுகளைத் தட்டி, ஆன்மிக விழிப்புணர்ச்சியை ஊட்டிய நாயன்மார்கள் ஆழ்வார்கள் ஆகி யோரின் ‘அற்புதச் செயல்களும்’ திருப்பாடல்களும் மக்க ளிடையே ஆன்மிக வேட்கையைக் கிளர்ந்து எழச் செய் திருந்தன.

இந்நிலையில், அடியோடு அழிந்தொழியாது குற்றுயிரோடு, இறப்பை எதிர்த்துப் புறச் சமயங்கள் போராடிக் கொண்டிருந் தன. அவை புதுவாழ்வு பெறத் துடித்தன. இதனல் தத்தம் சமயக் கருத்துகளை, மக்கள் எளிதில் புரிந்து கொள்ளத் தக்க வகையில் கவர்ச்சிமிகு கதைகள் வாயிலாக மக்களிடையே அவை பரப்பி வந்தன. இக்காரணங்களால், சமயச் சார்பான இலக்கி யங்களே—சமயப் போர்வையில் தனிமனிதனுடைய உள்ளக் கிளர்ச்சிகளை மறைத்துக் கொண்ட இலக்கியங்களே—இக் காலத்தில் படைக்கப்பட்டன.

தத்தம் சமயக் கருத்துகளைப் பரப்புவதற்கு என்றே சில காப்பியங்களைச் சமயவாதியர் இயற்றினர். ஆயினும் அவற்றில் கதைச் செறிவோ, காப்பியக் கட்டுக்கோப்போ சிறப்புற்று விளங்கவில்லை. கற்பனைத் திறனையும், காப்பியச் சுவையையும் விட அறிவுறுத்துவதே அவற்றின் இயல்பாக அமைந்தன.

அனைவருக்கும் எளிதில் பயன்படத்தக்க வகையில் சிற்றிலக்கியங்கள் பல இக்காலத்தில் தோன்றின. இரட்டை மணிமாலை, அந்தாதி, விருத்தம், மும்மணிக் கோவை, உலாமாலை, கலம்பகம், ஏகாதசமாலை போன்ற சிற்றிலக்கியங்கள் இயற்றப்பட்டன, இவை அனைத்தும் சமயக் கருத்துகளை மையமாகக் கொண்டே சுற்றிச் சுழன்றன.

தமிழ் மொழியின் இலக்கணம் எழுத்து, சொல், பொருள் என்னும் முக்கூறுகளை யுடையது. பல்லவர் காலத்திற்கு முன்பே பொருளிலக்கணத்திலிருந்து யாப்பு இலக்கணம் பிரிந்து, தனியாக வளரத் தொடங்கியது. வடமொழியின் தாக்குறவால் புதிய பாக்களும் பாவினங்களும் தமிழில் தோன்றின. இவற்றையெல்லாம் அளவிட்டுரைப்பதற்குச், செய்யுளுக்கு இலக்கணமாகிய யாப்பிலக்கணம் தமிழில் பல்கிப் பெருகியது.

இலக்கண, இலக்கியப் படைப்புகளுக்கு மிகவும் இன்றியமையாது தேவைப்படுவது சொற்பொருள் ஆராய்ச்சியாகும். ஒரு சொல்லுணர்த்தும் பல்வேறு பொருள்களையும், பல சொற்களுணர்த்தும் ஒரு பொருளையும் நன்குணர்ந்தால்தான் சொல் நயம், பொருள்நயம் தோன்ற, பாட்டு இயற்ற இயலும். மேலும், பழைய இலக்கியங்களைப் பயில்வோருக்குப் பல்வேறு சொற்களின் பொருளினை எளிதில் அறிவதற்குக் கையேடுகள் தேவைப்பட்டன. இவற்றோடு, வடமொழிச் சொற்கள் ஏராளமாகத் தமிழில் கலந்து விட்டமையால், அவற்றின் பொருளையும் அறிந்துகொள்ள வேண்டிய நெருக்கடி நாட்டு மக்களுக்கு உண்டாயிற்று. இத்தேவைகளை எல்லாம் நிறைவேற்றும் வகையில் **நிகண்டுகள்** எனப்பட்ட 'செய்யுள் அகராதிகள்' இக்காலத்தில் இயற்றப்பட்டன.

நில வளத்தோடு நீர்வளமும். குடி வளத்தோடு கோனாட்சி வளமும் அன்றைய தமிழ் நாட்டினைச் செல்வச் செழிப்புமிக்க திருநாடாக்கின. இதனாலுண்டான அமைதியான சூழல், சமயக் கல்வியிலும் மரபுவழி வந்த தமிழ்க் கல்வியிலும் பெரும்பாலான மக்கள் பயிற்சி பெற வாய்ப்பு அளித்தது. பல்லவர் காலத்திற்கு முற்

பட்ட இலக்கண இலக்கியங்களில், மக்கள், தங்கள் கருத்தைச் செலுத்தினர்; சற்றேறக் குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தில் இயற்றப்பட்ட அந்நூல்கள், அவர்களுக்குப் 'புரியாப் புதிரா'கத் தோன்றின. எனவே, தமிழில் புலமை மிக்கோர், அப் பழம் பெரும் நூல்களுக்கு உரை விளக்கம் எழுதத் தொடங்கினர். இதைத் தொடர்ந்து பழைய நூல்களுக்கு உரையெழுதுவதையே சிறந்த இலக்கியப் பணியாகக் கருதிய அறிஞர் பெருமக்கள் பலர் தோன்றினர். அவர்களுடைய அயரா உழைப்பும் குன்றாத பேரார்வமும் தமிழ் உரைநடையின் தோற்றத்திற்குக் கால் கோள் விழா எடுத்தன; பையப் பைய, **தமிழ் உரைநடைக் குழவி** தவழ்ந்து விளையாடத் தொடங்கியது.

இராசராசன் தொடங்கிவைத்த 'மெய்க் கீர்த்தி' அமைக்கும் முறை கல்வெட்டுத் தமிழில் கவிதை நடையைப் புகுத்தியது. இத்தகைய பல்வேறு போக்குகளைக் கொண்டதாகத் தமிழ் இலக்கியம் இராசராசன் காலத்தில் தழைத் தோங்கலாயிற்று.

## சமய இலக்கியம்

தமிழகத்தில் சைவ, வைணவ, சமண சமயங்கள் தழைத் தோங்கிய காலம் அது; பௌத்தம் அடைக்கலம் அடைந்து இருந்த இடத்தை (நாகப்பட்டினத்தை)த்தான் நாம் அறிய முடிகிறது. மேற் குறிப்பிட்ட மூன்றனுள்ளும் சைவ சமயம் பெரு வாழ்வு பெற்றிருந்தது. விசயாலய சோழனின் மரபில் வந்த அரசர் அனைவரும் சைவ சமயிகளாக இருந்தமை, சைவ சமயத்திற்கு இரண்டாவது பொற்காலத்தை உருவாக்கிக் கொடுத்தது. அதனால் சைவ சமயச் சார்பான இலக்கியங்கள் கணிசமான அளவிற்குப் படைக்கப்பட்டன,

## நம்பியாண்டார் நம்பி

பழுத்த சைவ சமயச் சான்றோராகவும், முதுபெரும் புலவராகவும் திகழ்ந்தவர் நம்பியாண்டார் நம்பி. அவர் சிற்றிலக்கியங்கள் பத்தினை இயற்றியுள்ளார். அவை, பன்னிரு திருமுறைகளுள் பதினோராந் திருமுறையில் முப்பத்தொன்று முதல் நாற்பது வரை எண்ணுள்ள பத்து நூல்களாகச் சேர்க்கப்பட்டுள்ளன. அவற்றுள் முதல் இரண்டு நூல்கள் தெய்வத்தைப் பற்றியன. அவருடைய சொந்த ஊரான திருநாரையூரில் எழுந்தருளியுள்ள விநாயகரைப் போற்றிப் பாடியது முதல் நூலாகும். திருநாரையூர் விநாயகர் திரு இரட்டை மணிமாலை என்பது அதன் பெய

ராகும்; வெண்பாவும் கலித்துறையுமாகப் பாடப்பட்ட 20 பாடல்களையுடையது. இரண்டாவது நூல் கோயில் 'திருப்பண்ணி யர் விருத்தம்' என்பதாகும். சைவர்களுக்குக் 'கோயில்' என்பது தில்லைச் சிற்றம்பலமாகும். அக்கோயிலில் திருநடனம் புரிகின்ற அம்பலவாணரின் பேரில் பாடப்பட்டது இந்நூல். 'திருவை நமக்குச் செய்கின்றவராக வைத்துச் சிவபெருமானைப் பாடியது'. இதனை, 'பொன்றலில்லா அச்செல்வம் எய்திட வேண்டுதியேல்' என்னும் எழுபதாம் செய்யுளடி தெரிவிக்கிறது. இந் நூலில், சாக்கிய நாயனர்(செ. 32, 68), அதிபத்தர் (40), ஏயர் கோன் கலிக்காமர்(54), சேந்தனர்(26) என்னும் அடியார்கள் குறிக்கப் பெற்றுள்ளனர். திருச்சிற்றம்பலக் கோவையை இயற்றி யருளியவர் திருவாதவூர்ச் சிவபாத்தியன் என்று நம்பி மொழிந் துள்ளார்.

வருவா சகத்தினில் முற்றுணர்ந்
 தோனைவண் தில்லை மன்னைத்
**திருவாத வூர்ச்சிவ பாத்தியன்**
 **செய்திருச் சிற்றம்பலப்**
**பொருளார் தருதிக் கோவை**

(கோ. திருப். வி. 58)

வரகுணனுடைய சிவபக்தியின் சிறப்பை ஒரு செய்யுளில்(62) அவர் எடுத்துரைத்துள்ளார். இந்நூலில் எழுபது கட்டளைக் கலித் துறைப் பாடல்கள் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன.

நம்பியாண்டார் நம்பிகள் அருளிச் செய்த **திருத்தொண்டர் திருவந்தாதி** தமிழிலக்கிய வரலாற்றிலும், சைவ சமய வரலாற்றி லும் சிறப்பிடத்தைப் பெற்றுள்ளது. நம்பியாரூரர் பாடியருளிய திருத்தொண்டத் தொகையை அடியொற்றி, சிறிது விரிவாகச் சிவனடியார்கள் அறுபத்து மூவரின் வரலாற்றைப் பக்திச் சுவை சொட்டச் சொட்ட அவர் பாடியுள்ளார். எண்பத்தொன்பது பாடல்களைக் கொண்டது இந்நூல். பதினொரு பாடல்களில் சுந்தரரைப் போற்றி அவர் பாடியுள்ளார். தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள இராசேந்திர சோழனுடைய கல்வெட்டு ஒன்றில், மெய்ப்பொருள் நாயனர், "'தத்தா நமரே காண்' என்ற மிலாடுடையார்"[2] என்று குறிப்பிட்டுள்ளார். இத் தொடரின் மூலத்தை நம்பியாண்டார் நம்பிகள், இயற்றிய திருத் தொண்டர் திருவந்தாதியில்,

[2] S.I.I, Vol. 2; pt. 2; No. 40

மற்றவன் ''**தத்தா நமரே**''
எனச் சொல்லி வானுலகம்
பெற்றவன் சேதிபன் மெய்ப்பொரு
ளாம்என்று பேசு வரே (5)

என்னும் பாடற்பகுதியில் நாம் முதன்முதலாகக் காணுகின்றோம்.

சமணரைக் கழுவிலேற்றிய வரலாறு, திருஞான சம்பந்தருடைய தேவாரத்தில் இடம் பெறவில்லை. நம்பிகள் அதனை,

அருந்தமி ழாகரன் வாதில்
அமணைக் கழுநுதி மேல்
இருந்தமிழ் நாட்டிடை ஏற்றுவித்
தோன் (26)

என்று முதன் முதலாகக் குறிப்பிட்டுள்ளார்.

பொய்யடிமை இல்லாத புலவர், 'சங்கமதில் கபிலர் பரணர் நக்கீரர் முதல் நாற்பத்தொன்பது புலவோர்' (49) என்று மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் வரலாற்றைப் பற்றிய கதையை இவர் தெரிவிக்கிறார். எண்பத்தொன்பது பாடல்கள் அந்தாதித் தொடையில் இந்நூலில் அமைந்துள்ளன. பிற்காலத்தில் திருத்தொண்டர் புராணம் பாடிய சேக்கிழாருக்கு, இந்நூல் சிறந்த வழிகாட்டியாக அமைந்தது.

இதற்கு மேல் உள்ள ஆறு சிறு நூல்களைத் திருஞான சம்பந்தரின் மீது நம்பிகள் பாடியுள்ளார். சைவ சமயக் குரவருள் முதல்வராகக் கருதப்படும் சம்பந்தர் பெருமானிடத்து நம்பிகள் பேரீடுபாடு கொண்டிருந்தார். இதனால், ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம், ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக் கோவை, ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை, ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம் என்னும் ஆறு நூல்களை அவர் இயற்றியுள்ளார்.

ஆளுடைய பிள்ளையர்ர் திருவந்தாதி சம்பந்தரின் அற்புதச் செயல்கள் சிலவற்றையும் சீர்காழியின் பெருமையையும் எடுத்துரைக்கிறது. நூறு கலித்துறைப் பாடல்களைக் கொண்டது இந்நூல். சேக்கிழார் குறிப்பிடாத ஓர் அற்புதச்—செயலை திருநனிபள்ளியில் பாலை நெய்தல் பாடியதை—இவர் குறிப்பிடுகிறார் (17). திருச்சண்பை விருத்தம் என்பது ஆளுடைய பிள்ளையின் ஊரான சீர்காழியைப் போற்றிப் பாடியது. அகவல், வெண்பா, கலித்துறையாகிய மூவகைப் பாக்களால் ஆளுடைய பிள்ளையாரின்

புகழை இந்நூல் விரித்துரைக்கிறது. ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக் கோவை. சம்பந்தரின் 'நன்மாலை ஞானத் தமிழின்' சிறப்பை எடுத்துரைக்கிறது இந்நூல்.

ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை என்னும் இலக்கியம் ஒட்டக் கூத்தர் இயற்றிய மூவருலாவிற்கு முன்னோடியாக அமைந் திருக்கிறது. உலா வரும் ஞான சம்பந்தரைப் பேதை முதல் பேரிளம் பெண் ஈறுகவுள்ள எழு பருவ மகளிரும் கண்டு, காத லாகிக் கசிந்துருகுவதை இந்நூல் சித்திரிக்கிறது. நூற்று நாற்பத் தொன்பது கலிவெண்பாக்களைக் கொண்ட இந்நூலில், அகப் பொருள் மணங் கமழுகிறது. இந்நூல் திருவுலா மாலை என்று வழங்குகிறது. மாலை என்னும் சொல் பாட்டு, இயல்பு, தன்மை என்னும் பல பொருளுடையது. இங்குத் தன்மை என்னும் பொரு ளிலேயே இச்சொல் வழங்கப்பட்டுள்ளதாகக் கொள்ளலாம். இந் நூல், ஆளுடைய பிள்ளையார் திருவுலா வரும் தன்மையைச் சொல்லும் கலிவெண் பாட்டு எனலாம். திருஞான சம்பந்தர், தேவாரத்தில் பாடியுள்ள சித்திரக் கவிகளை, இவ்வாசிரியர் இவ் வுலாவில் குறிப்பிட்டுள்ளார். சம்பந்தர் உலா வந்த தெருவின் மாட்சியை நம்பிகள்,

மீமருவும்
வெங்கதிரோன் தேர்விலங்கு மிக்குயர்ந்த மேருப்போன்று
அங்கனகத்து இஞ்சி அணிபெற்றுப் — பொங்கொளிசேர்
மாளிகையும் மன்னியசீர் மண்டபமும் ஒண்தலத்த
சூளிகையும் துற்றெழுந்த தெற்றிகளும் — வாளொளிய
நாடக சாலையும் நன்பொற் கபோதம் சேர்
பீடமைத்த மாடத்தின் பெற்றியும் — கேடில்
உருவு பெறவகுத்த அம்பலமும் ஓங்கு
தெருவும் வகுத்தசெய் குன்றும் — மருவினிய
சித்திரக்காவும் செழும் பொழிலும் வாவிகளும்
நித்திலஞ்சேர் நீடு நிலைக்களமும் — எத்திசையும்
துன்னி எழில்சிறப்பச் சோதி மலர்மடந்தை
மன்னி மகிழ்ந்துறையும் வாய்மைத்தாய்ப்......
பொய்ம்மை கடிந்து புகழ்புரிந்து பூதலத்து
மெய்ம்மை தலைசிறந்து மேதக்கும்

(ஆளு. திருவுலா. 27-36)

என்று மாட மாளிகைகளையும் நாடக சாலையையும் சித்திரச் சோலைகளையும் கொண்ட நகரை வருணித்துள்ளார். கருவூர்த் தேவர் தஞ்சை இராசராசேச்சுரத்தின் மீது பாடியுள்ள திரு

விசைப்பாவில் காணப்படும் தஞ்சை நகர வருணனையோடு நம்பிகளின் நகர வருணனையை ஒப்பிட்டுப் பார்க்கிறபொழுது இரண்டும் ஏறக்குறைய ஒரே நகரைக் குறிப்பதாகத் தோன்றுகிறது. இதனால், நம்பிகள் இவ்வுலா மாலையில் மிக நுட்பமாகப் படம் பிடித்துக் காட்டும் நகரம், தஞ்சைத் திருநகரே யெனலாம்.

ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம் சிறப்பு மிக்கதோர் நூல். இந்நூலில் பல்வகைப் பாக்களும் பாவினங்களும் கலந்து வருகின்றன. இதனால் கலம்பகம் எனப் பெயர் பெற்றது. கலம்பகத்தின் உறுப்புகள் பல. அவற்றுள் குறம், களி, கழிக்கரைப் புலம்பல், மடல், சம்பிரதம், மறம், பாண், மதங்கியார், பாணாற்றுப் படை, கைக்கிளை, மடக்கு என்பன இந்நூலுள் இடம் பெற்றுள்ளன. நந்திக் கலம்பகம் தமிழில் தோன்றிய முதற் கலம்பகம்; இத்திருக்கலம்பகம் இரண்டாவதாகும். சந்தக் கவி நயமிக்க பாடல்கள் பல இக்கலம்பகத்திற்கு வலிவும் பொலிவும் அளிக்கின்றன. இந்நூலில் நாற்பத் தொன்பது பாடல்கள் உள்ளன.

ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை என்னும் நூலில் சம்பந்தரின் அருளிச் செயல்கள் தொகுத்து உரைக்கப்படுகின்றன; 65 அடிகளைக் கொண்டது; கலிவெண்பாவால் இயற்றப்பட்டது. திருஞான சம்பந்தர் பதினாறுயிரம் பதிகம் பாடியதாக இந்நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார். இச் செய்தி ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியிலும் (15), திருவுலாமாலை(62)யிலும், திருத்தொகை(42-43)யிலும் சுட்டப்பட்டுள்ளது.

நம்பியாண்டார் நம்பிகள் இயற்றிய தெய்வப் பனுவல்களில் பத்தாவதாக விளங்குவது திருநாவுக்கரசு தேவர் திருவேகாதச மாலையாகும். பதினொரு(ஏகாதசம்) பாடல்களைக் கொண்ட நூலானமையால், ஏகாதச மாலையெனப் பெயர் பெற்றது. இந்நூலுள் திருநாவுக்கரசரின் வரலாறும் அருளிச் செயல்களும் இரத்தினச் சுருக்கமாகவும் வழிபாட்டுணர்வோடும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அவர் 'உழவாரப் படை கையில் உடையான் வைத் தனதமிழ் குருவாகக் கொடுசிவன் அடி'சூடினார் என்று ஆசிரியர், அப்பரின் அருளுள்ளப் பாங்கினைப் போற்றுகிறார். நாவுக்கரசர் 'பதிகம் ஏழெழுநூறு பகருமா கவியோகி' என்று பாராட்டப்படுகிறார்.

இந்தப் பத்து நூல்களையும் படைத்தருளிய நம்பியாண்டார் நம்பிகள், சிந்தனைச் சிறப்பும் கற்பனைத் திறனும் நன்கு கைவரப் பெற்ற கவிஞராவர். அவர், இலக்கிய இன்பத்தில் பக்திச் சுவையைக் குழைத்துக் கொடுத்துள்ளார். அவருடைய நூல்கள் பல, பிற்காலச் சிற்றிலக்கியங்களுக்கு வழிகாட்டியாக விளங்கு கின்றன. தேவாரத் திருப்பதிகங்களை அரிதின் முயன்று கண் டெடுத்து, அவற்றை ஓதியோதி உள்ளம் நெகிழ்ந்த அப்பெரி யாருக்கு, மூவர் முதலிகளிடத்தில் பேரீடுபாடு உண்டானதில் வியப்பில்லை. அவ்வீடுபாட்டு உணர்ச்சியின் வெளிப்பாடாக எட்டு நூல்கள் இலங்குகின்றன. அவருடைய நூல்களில் இராசராசன் காலத்திய சமூதாய வரலாற்றை அறிவதற்குரிய செய்திகள் பல சிறந்து விளங்குகின்றன. சைவ சமயத்தினால் வளர்க்கப்பட்ட தமிழ் இலக்கியங்களுள் நம்பியாண்டார் நம்பிகள் இயற்றிய நூல் கள், அடியார்களின் அருமை பெருமைகளை மக்களிடையே பரப் பும் அரும்பணியைச் செய்தன. அதனோடு அமையாமல், புதிய இலக்கிய வகைகள் தோன்றவும் அவை வழிவகுத்துத் தந் துள்ளன.

## கருவூர்த் தேவர்

இராசராசன் காலத்திலும் இராசேந்திரன் காலத்திலும் வாழ்ந்த சிவயோகி கருவூர்த் தேவராவர். சைவத் திருமுறை களுள் ஒன்பதாவது திருமுறையைப் பாடியவர் ஒன்பதின்மர். அவர்களுள் பத்துப் பதிகங்கள் பாடிய பெருமைக்குரியவர் கருவூர்த் தேவர். அப்பதிகங்கள் **திருவிசைப்பா** என்னும் பகுதி யில் சேர்க்கப்பட்டுள்ளன. தேவார, திருவாசகங்களுக்கு அடுத்த நிலையில், ஓதுகின்றவர் உள்ளத்தையும் கேட்கின்றவரின் உள்ளத் தையும் நெகிழ்விக்கும் ஆற்றல் இத் திருவிசைப்பாக்களுக்கு உண்டு. தம்முடைய பாடல்களுக்குரிய பண்களையும், அவர் குறித்துச் செல்லுகிறார். புறநீர்மை, காந்தாரம், பஞ்சமம் என் னும் பண்களில் அவர் பாடியுள்ளார்; ஆசிரிய விருத்தமும் கொச்சகக் கலிப்பாவும் அவர் பயன்படுத்தியுள்ள பாவினங்க ளாகும். அகப்பொருள் துறையில் திரைலோக்கிய சுந்தரப் பதி கத்தை அவர் அமைத்துள்ளார்.

அவர் பாடியருளிய திருத்தலங்கள் கோயில், திருக்களந்தை யாதித்தேச்சுரம், திருக்கீழ்க் கோட்டூர் மணியம்பலம், திரு முகத்தலை, திரைலோக்கிய சுந்தரம், கங்கை கொண்ட சோளேச் சுரம், திருப்பூவணம், திருச்சாட்டியக் குடி, தஞ்சை இராச ராசேச்சரம், திருவிடை மருதூர் என்பன. இவற்றுள் களந்தை

ஆதித்த ஈச்சுரம், திரைலோக்கிய சுந்தரம், தஞ்சை இராச ராசேச்சுரம், கங்கை கொண்ட சோளேச்சுரம் என்னும் நான்கு கோயில்களும் சோழ மன்னர்களால் கட்டப்பட்டவையாகும். அவற்றிற்குச் சிறப்பளிக்கும் வகையில் கருவூர்த் தேவர் இசைப் பாக்களைப் பாடியுள்ளார்.

தில்லை நடராசப் பெருமானைப் போற்றி வணங்கும் 'கோயில்' திருவிசைப்பாப் பகுதியில்

கண்பனி அரும்பக் கைகள்மொட் டித்துஎன்
கலைகணே! ஓலம்என்று ஓலிட்டு
என்பெலாம் உருகும் அன்பர்தம் கூட்டத்து
என்னையும் புணர்ப்பவன் கோயில்
(கோயில் 5)

என்று அடியார்களின் அன்பின் திறத்தையும், அவர்களுள் ஒரு வனைத் தம்மை இறைவன் சேர்த்துக் கொள்ளுவான் என்னும் நம்பிக்கையையும் நயமிகு சொற்களால் அவர் எடுத்தியம்புகிறார்.

பழைய அகப்பொருள் இலக்கிய மரபைப் புறக்கணித்து விடாமல், மண்ணுலகக் காதல் நெறியை மெய்யுணர்வுக் காதல் நெறியாக மாற்றிய பெருமை அருளாளர்களுக்கு உரியதாகும். அவர்களுள் கருவூர்த் தேவரும் ஒருவராவர். தம்முடைய பதிகங் களுள் ஒன்றினை முழுமையாக அவர் அகப்பொருள் துறையில் அமைத்துள்ளார். பிற பதிகங்களின் இடையிடையே சில பாடல்களை அவர் அகப்பொருள் மணங் கமழச் செய்துள்ளார்.

திரைலோக்கிய சுந்தரப் பதிகத்தில் உள்ளத்து உணர்ச்சி களுக்கு ஏற்ற வகையில் அவர் ஒலிநயமிக்க சந்த இன்பப் பாடல் கள் பலவற்றைப் பாடியுள்ளார். தெருவிலே திருவுலா வருகிறான் இறைவன். அவனைக் கண்டு காதல் வயப்பட்டாள் தலைவி; இறைவன் அருள் பெறாமல் அவள் நைந்துருகுகிறாள். அவளுடைய நிலையைக் கண்டு இறைவன் இரக்கம் காட்ட வேண்டும் என தோழி, தலைவனாகிய இறைவனை வேண்டுகின்றாள். 'இறைவனே! நழுவிய ஆடையோடும், துவளும் இடையோடும், அவிழ்ந்து தொங்கும் கூந்தலோடும் இந்த இளமங்கை நைந்துருகுவதைப் பார்த்து, ஒரு நாளேனும் நீ இரக்கம் காட்டவில்லையே!' என்று அவள் வேண்டுகிறாள். அவளுடைய தாழ்மையான வேண்டு கோளினைப் புலப்படுத்தும் வகையில் அப்பாடலின் ஓசை களி நடம் புரிகிறது.

சரிந்ததுகில் தளர்ந்தஇடை
அவிழ்ந்தகுழல் இளந்தெரிவை
இருந்தபரிசு ஒருநாள்கண்டு
இரங்காய்எம் பெருமானே
முரிந்தநடை மடந்தையர்தம்
முழங்கொலியும் வழங்கொலியும்
திருந்துவிழவு அணிகோடைத்
திரைலோக்கிய சுந்தரனே!

(திரை. சு. 10)

தஞ்சை இராசராசேச்சுரத் திருப்பதிகத்தைக் காட்டிலும், கங்கை கொண்ட சோளேச்சுரத் திருப்பதிகம் பக்திச் சுவையும், கருத்தாழமும், சித்தாந்த சாத்திரக் கருத்துகளும் மிக்குடையது. **கருதுவார் கருதும் உருவ**த்தோடு இறைவன் கங்கை கொண்ட சோளேச்சுரத்தில் காட்சி தருவதாக அவர் பாடியுள்ளார்.(5) அப்பாடல் அவருடைய பரந்த உள்ளத்தையும், தெளிந்த நோக்கினையும் காட்டுகிறது. மற்றும் அன்றைய தமிழகம் அடைந்திருந்த சமயப் பண்பாட்டின் சிறப்பையும் சுட்டுகிறது.

கருவூர்த் தேவருடைய பாடல்களில் பல அரிய சொற்கள் கையாளப்பட்டுள்ளன. பிற இலக்கியங்களில் அச்சொற்களைக் காண்பதரிது. மொழுப்பு (செறிவு), அக்கடா (வியப்பைக் குறிக்கும் கன்னட மொழிச் சொல்), அலச (வருந்த), அமரித்து (அமர்ந்து கிடத்தல்), கெந்துதல் (விளையாடுதல்), கிடையஞர் (நீரில் மிதக்கும் தக்கை போன்றவர்), கவந்திகை (போர்வை), கிழை (ஒளி), துகுக்கும் (கட்டுகின்ற), தொண்டு (கற்றை), பட்டவர்த்தனம் (இடப வாகனம்) என்னும் சொற்கள் அக் காலத்திய பேச்சுவழக்கில் வழங்கியனவாகலாம்.

## இலக்கண நூல்கள்

சங்க காலத்திற்குப் பின்னர், செய்யுள் இலக்கண நூல்கள் பல தோன்றின. அவற்றுள் பாட்டின் பண்பையும் இலக்கிய வகையையும் எடுத்துரைக்கும் நூல்களுள் பன்னிரு பாட்டியல் என்பது ஒன்று. இதனுடைய **பன்னிரு பாட்டியல்** பெயர்ப் பொருத்தத்தைப் பற்றித் தெளிவாக ஒன்றும் தெரியவில்லை. 'நூற் பெயரானது, ஆகுபெயராய் வெவ்வேறாசிரியர்களால் இயற்றப் பட்ட பாட்டிலக்கண நூல் பன்னிரண்டினை உணர்த்துவதுடன்,

அப் பன்னிரண்டு நூல்களிலிருந்து பிற்காலத்தவர் ஒருவர் எடுத்துத் தொகுத்த சூத்திரங்களை உடையதொரு தொகை நூலினையும் உணர்த்தி நிற்கும்' என்று அறிஞர் கருதுகின்றனர்.

இந்நூல் எழுத்தியல், சொல்லியல், இனவியல் என்ற மூன்று பாகுபாடுகளைக் கொண்டது. சாதி வேற்றுமையின் தாக்குறவு பாக்களைப் பாகுபாடு செய்வதில் இந்நூலகத்து நன்கு பதிந்துள்ளது. மற்றும் பொருத்தம், மங்கலச் சொல் போன்ற இடைக் காலத்திய மக்களின் மனப் போக்கினைப் படம் பிடித்துக் காட்டக் கூடிய இயல்புகள் பல இதில் நிறைந்துள்ளன. மூன்றுவது பகுதியாகிய இனவியலே சிறப்புடையதாகும். இதிலும் பாவினம் பற்றிய செய்தியே தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்தது. இப்பாவினப் பகுதி, சிற்றிலக்கியங் (பிரபந்தங்) கள் எழுபத்து நான்கின் இலக்கணத்தை முதன்முதலாக வரையறுத்துக் கூறுகிறது. மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என்னும் பாகுபாடும், வரையறையும் இந்நூலில் முதன்முதலாக இடம் பெற்றுள்ளன. பிள்ளைத்தமிழ், பரணி, கலம்பகம், உலா, கோவை, ஆற்றுப்படை, மெய்க்கீர்த்தி போன்ற இலக்கிய வகைகளுக்குத் தெளிவான விளக்கம் இந்நூலில் தரப்பட்டுள்ளது. உழத்திப் பாட்டு, கடைநிலை, கண்படை நிலை, துயிலெடை நிலை, குறத்திப் பாட்டு, பதிகம், விளக்கு நிலை போன்ற சிற்றிலக்கியங்களைப் பற்றிய செய்தி, இந்நூலில் தவிர வேறெப் பாட்டியல் நூலிலும் எடுத்துரைக்கப் படவில்லை.

'இந்நூலைத் தொகுத்தவர்' யார்? என்பதை நாம் அறிய முடியவில்லை. இந்நூலில் 'மெய்க் கீர்த்தி' க்கு இலக்கணம் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. நம் பேரரசன் இராசராசனே, முதன் முதலாக மெய்க்கீர்த்தி வரையும் பழக்கத்தை நடைமுறைக்குக் கொண்டுவந்ததை, நாம் வேறோர் பகுதியில் கண்டோம். இராசராசனுடைய மெய்க்கீர்த்தியை அடிப்படையாகக் கொண்டே, இந்நூலில் இலக்கணம் வரையப்பட்டிருக்கிறது[3] எனலாம். அவை இரண்டையும் ஒப்பிட்டுப் பார்க்கின்ற பொழுது இவ்வுண்மை எளிதிற் புலனுகின் . எனவே, இராசராசன் காலத்திலோ, அதையொட்டியோ பன்னிருபாட்டியல் என்னும் இவ்விலக்கண நூல் இயற்றப்பட்டிருக்கலாம்.

[3] காண்க: பன்னிருபாட்டியல், நூ. 197

## யாப்பருங்கலம், யாப்பருங் கலக்காரிகை

இவ்விரு நூல்களையும் அமிதசாகரர் என்னும் சமணப் பெரியார் இயற்றியுள்ளார். தமிழ்ச் செய்யுள் இலக்கண நூல்களுள் இன்று முழுமையாகக் கிடைத்துள்ள நூல்கள் இவையிரண்டேயாகும். இவற்றுள் யாப்பருங்கலம் முதலில் இயற்றப் பட்டது என்றும், அதைத் சுருக்கமாக மாணவர்க்குப் பயன்படும் வகையில் யாப்பருங் கலக்காரிகை பின்னர் இயற்றப்பட்டது என்றும் கூறுவர்.

இவ்விரு நூல்களின் ஆசிரியர் சமண சமயத்தைச் சேர்ந்தவர் என்பது இந்நூற்களில் அருகதேவனையே கடவுளாகப் போற்றி கடவுள் வாழ்த்துப் பாடியுள்ளமையாலும், மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ள செய்யுட்கள் பல அருகதேவனையும், பிற சமண சமயக் குருமார்களையும் வாழ்த்துவனவாக உள்ளமையாலும் தெரிய வருகிறது.

சமண சமயத்தில் பலவகைப் பிரிவுகள் உண்டு. அவற்றிற்குக் 'கணங்கள்' என்பது பெயர். நந்தி கணம் என்பது ஒன்று. அதன் ஒரு பிரிவு அருங்கலான்வயம் என்பதாகும். அப்பிரிவினர் திருவாரூருக்கு அருகிலுள்ள தீபங் குடியில் வாழ்ந்தனர். அவ்வூரையே, இவ்வாசிரியரும் சேர்ந்தவராகலாம் என்பது கல்வெட்டுக் கலைஞர் டி. ஏ. கோபிநாத ராவின் கருத்தாகும்.[4] பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த குணசாகர பட்டாரகர் என்ற சமண சமயச் சான்றோர் அமிதசாகரரின் குருவாக இருத்தல் கூடும் என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர்.[5] இக்குண சாகரரைப் பற்றிய கல்வெட்டுகளில் வீர நாராயணன், உத்தம சோழன் என்னும் பெயர்கள் காணப்படுகின்றன. வீரநாராயணன் என்பது முதலாம் பராந்தகனுடைய சிறப்புப் பெயராகும். உத்தமன் என்பது உத்தம சோழனைக் குறிப்பதாகும். இக்குண சாகரர் உத்தம சோழனுக்குப் பின்னர் வாழ்ந்தவர் என்பது தெரிகிறது. இக்குணசாகரரை, காரிகையின் சிறப்புப் பாயிரத்தில் அமித சாகரரின் குருவெனக் குறிப்பிடப் பட்டுள்ளமை இங்குக் கருதத்தக்கது.[6]

யாப்பருங்கலக் காரிகையை அமிதசாகரர் தொண்டை நாட்டிலுள்ள குளத்தூரில் இயற்றியோ, அரங்கேற்றியோ இருக்கிறார். இந்நிகழ்ச்சிக்கும் பின்னர் அவ்வூர், காரிகைக் குளத்தூர்

[4] காண்க: செந்தமிழ், தொகுதி 5; பக். 98-99.
[5] இராகவையங்கார், மு.: சாசனத் தமிழ்க்கவி சரிதம், பக். 43-44
[6] யாப்பருங்கலக் காரிகை, சிறப். 3

என்னும் பெயர் பெற்றது. சோழப் பேரரசில் குறுநில மன்னனாக இருந்த ஒருவன், அமித சாகரரைக் குளத்தூருக்கு வரவழைத்து, இந்நூலை இயற்றுமாறு செய்தான் என்று நீடூர்க் கல்வெட்டுகள்[7] தெரிவிக்கின்றன. அக்கல்வெட்டுகளில் 'சயங்கொண்ட சோழ மண்டலம்' என்னும் பெயரால் தொண்டை மண்டலம் சுட்டப் படுகிறது. 'சயங்கொண்ட சோழன் என்பது இராசராச சோழனுடைய சிறப்புப் பெயராகும். இராசேந்திரன் காலத்தில் காரிகைப் பேரூர் நாடு என்னும் பெயர் அம் மண்டலத்தின் ஒரு பகுதிக்கு வழங்கியது.

வீரராசேந்திரன் காலத்தில் இயற்றப்பட்ட வீரசோழியம் என்னும் இலக்கண நூலுள், யாப்பருங்கலத்தின் இறுதி நூற்பா அப்படியே எடுத்துக் கையாளப்பட்டுள்ளது. இதனாலும், அமித சாகரர் இராசேந்திர சோழனுக்கு முற்பட்ட காலத்தவர் என்பது புலனாகின்றது. இக்கருத்துகளை ஒருங்கியைத்து நோக்குகின்ற பொழுது, இந்நூல்களின் ஆசிரியர் இராசராசனுடைய ஆட்சிக்காலத்தின் (கி.பி. 985-1016) முற்பகுதியில் வாழ்ந்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

யாப்பு அணிகலமாகிய நூல் என்பது இந்நூலின் பெயருக்குரிய பொருளாகும். செய்யுளுக்கு உறுப்பான எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை ஆகிய ஆறு பகுதிகளைக் கொண்டது இந்நூல். காரிகை ஒன்பதற்கு அழகு என்பது பொருள். இந்நூல் கட்டளைக் கலித்துறையால் இயற்றப்பட்டது. இந்நூல் யாப்பருங்கலத்தை விடச் சுருக்கமாகவும், எளிமையாகவும் இயற்றப்பட்டதாகும். இன்று பெருவழக்கிலுள்ள யாப்பிலக்கண நூல் இக்காரிகையே யாகும்.

### நிகண்டு

அகராதிக்கலை ஐரோப்பியர் நமக்குத் தந்த கொடை. அவர்களுடைய தொடர்பு உண்டாவதற்கு முன்னர், நம்முடைய மூதாதையர் வேறொரு முறையைப் பின்பற்றி வந்தனர். அம்

7 தண்டமிழ் அமிதசாகர முனியைச்
சயங்கொண்ட சோழமண் டலத்துத்
தண்சிறு குன்ற நாட்டகத்து இருத்தி
சந்தநூற் காரிகை அவனால்
கண்டவன் மருமான் காரிகைக் குளத்தூர்க்
காவலன் ... ... ...

—Epi. Indica, Vol. 8; P. 68-69

முறையால் இயற்றப்பட்ட அகராதி நூலுக்கு 'உரிச் சொற் பனுவல்' என்பது பழைய பெயர். கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டு முதல் அதனை நிகண்டு என்று வழங்கி வருகிறோம்.

**பிங்கல நிகண்டு**

பிங்கல முனிவரால் இயற்றப்பட்ட நூல் பிங்கல நிகண்டு என்னும் பெயரைப் பெற்றது. இந்நூலாசிரியர் சோழ நாட்டைச் சேர்ந்தவர். இவருடைய தந்தை அல்லது ஆசானாகக் கருதப் பெறுபவர் சேந்தன் என்பவராவர். திவாகர நிகண்டை இயற்றக் காரணமாக இருந்த சேந்தன் எனும் குறுநில மன்னன் வேறு; பிங்கல முனிவரின் தந்தை வேறு. பிங்கல முனிவரின் புரவலன் தஞ்சை மாவட்டத்து அம்பர் என்னும் ஊரின் பெரு நிலக் கிழானாவான். பிங்கலரைச் சைவ சமயத்தினராகக் கருது வதற்கு, அவருடைய நூலினுள்ளே பல அகச் சான்றுகள் உள்ளன. சிவபெருமானை, 'எனையாள் ஈசன்' என்று அவர் குறிப்பிடுவது, இங்குக் கருதத்தக்கது. பிங்கல முனிவர் கி. பி. பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராவர்.

பிங்கல நிகண்டில் பத்துத் தொகுதிகள் உள்ளன. அவை வான்வகை, வானவர் வகை, ஐயர் வகை, அவனி வகை, ஆடவர் வகை, அனுபோக வகை, பண்பிற் செயலிற் பகுதி வகை. மாப்பெயர் வகை, மரப்பெயர் வகை, ஒரு பொருட் பல்பெயர் வகை என்பன. பழைய நிகண்டுகளுள், இந்நூல் விரிவாகவும், வீளக்கமாகவும் சொற் பொருளை எடுத்துரைக் கின்றன. மொத்தம் 4184 நூற்பாக்கள் உள்ளன. இதற்குப் பிங்கலந்தை என்ற மற்றொரு பெயரும் உண்டு.

முத்தமிழின் பல்வேறு இயல்புகளையும் கூறுகளையும் மிக விரிவாகப் பிங்கல நிகண்டு கூறுகிறது. நலிவுற்றுக் கொண்டி ருந்த இசைத் தமிழின் இலக்கணத்தையும், கூறுகளையும், கருவி களின் பெயர்களையும் ஒருங்கே திரட்டி இவ்வாசிரியர் கொடுத் துள்ளார்; சிற்றிலக்கிய மரபுகளைப் பாட்டியல் இலக்கண நூல் களைப் போன்று அவர் விளக்கியுள்ளார்.

இந்நிகண்டினைப் பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்த யாப் பருங்கல விருத்தியுரையாசிரியரும், சிலப்பதிகார அரும்பத உரை யாசிரியரும் முதன்முதலாகப் பயன்படுத்தியுள்ளனர்.

**உரை நூல்கள்**

மரபு வழி வந்த தமிழ்க் கல்வி, இக்காலத்தில் பெருகலாயிற்று. பழைய தமிழ் இலக்கியங்களைக் கற்பவர் பெருகினர். அதனால், அவ்விலக்கியங்களின் உட்பொருளை உணர்ந்து, கற்கும் ஆர்வம் மிகுந்தது. இதன் விளைவாகப் பழம் பெரும் நூல்களான சங்க இலக்கியங்களுக்கு உரையெழுதுவதற்குப் பல புலவர் பெருமக்கள் முன் வந்தனர்.

உலகப் பொதுமறையாகிய திருக்குறள், அறிஞர்களுடைய கருத்தைக் கவர்ந்தன. இடைக் காலத்திலேயே திருக்குறளுக்குப் பதின்மர் உரைவிளக்கம் செய்ததை ஒரு பழம் பாடல் தெரிவிக்கிறது. அவர்களுள் மணக்குடவர் காலத்தால் முந்தியவர் என்று நம்பப்படுகிறது. இவருக்கு மணக்குடியார் என்ற வேறொரு பெயரும் வழங்கியதாகத் தெரிகிறது. 'மணக்குடி என்ற ஊரில் பிறந்து, அவ்விடத்தில் வாழ்ந்ததால் மணக்குடியர் என்று பெயர் ஏற்பட்டு, அப்பெயரே மணக்குடவர் என்று மருவிற்று' என்பாரும் உண்டு.

திருக்குறள் ஒன்றிற்கே மணக்குடவர் உரை எழுதியுள்ளார். அதற்கு உரைச் சிறப்புப் பாயிரமோ, பிற குறிப்புகளோ இடம் பெறவில்லை. இதனால், இவரைப்பற்றிய வரலாறு ஒன்றும் புலனாகவில்லை. பரிமேலழகர், திருக்குறளுக்கு உரை யெழுதுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே மணக்குடவர் உரை பெருவழக்குற்றிருந்தது என்பதை நாம் அறிகிறோம். இவரைச் சமண சமயத்தைச் சார்ந்தவர் எனக் கூறுவது பழைய மரபாகும்.

> ''மணக்குடவர் காலத்தைக் குறிப்பிடுவதற்கான திட்டமான சான்றுகள் இல்லை. திருக்குறள் உரை செய்த பதின்மரில், பரிப்பெருமாள் உரை, கிடைத்த ஐந்து உரைகளில் ஒன்று. இவ்வுரையின் காலம் கி. பி. 11 ஆம் நூற்றாண்டு என்று நிறுவப்பட்டுள்ளது. பரிப்பெருமாள் மணக்குடவர் உரையைத் தழுவியே தம் உரையைச் செய்தார்......... அவர் உண்மையில் புதிய உரையைச் செய்யவில்லை; மணக்குடவர் உரையை அப்படியே எடுத்து எழுதிக்கொண்டார். ...இதனால், மணக்குடவர் உரை பரிப்பெருமாளுக்கு முந்தியதென்பது தெளிவு. இதன் காலம் 950-1000 ஆக இருத்தல்

கூடும். ஒருகால் பரிப்பெருமாள் இவருடைய நேர் மாணுக்கராயிருந்திருக்கலாம்; அல்லது மாணுக்கர் பரம்பரையில் நெருங்கின காலத்தில் பின்வந்தவராயு மிருக்கலாம்."[8]

என்பதனுல், இவருடைய காலம், இராசராசனுடைய ஆட்சியின் முற்பகுதியாகலாம்.

மணக்குடவருடைய உரை இனிய தமிழில் எளிமையாக எழுதப் பெற்றிருக்கிறது. பெரிதும் பொழிப்புரையாக அமைக்கப் பட்டிருக்கிறது. இன்றியமையா இடங்களில் மிகச் சுருக்கமாக விளக்கங்களை இவர் எழுதியுள்ளார்; குறளின் கருத்தினைச் சுட்டிச் செல்லுகிருர். ஒத்த கருத்துகளை மேற்கோளாகக் காட்டுவது இவரிடம் மிகவும் அருகிய வழக்காக உள்ளது. வடமொழிச் சொற்களையும், கொச்சைச் சொற்களையும் மிக மிகக் குறைவாக இவர் கையாண்டுள்ளார். பெரிதும், தமிழ் மரபையொட்டி மணக்குடவர் உரை வரைந்துள்ளார். பொருட்பாலை இவர் பகுத்துக் கொண்டுள்ள முறையும், காமத்துப் பாலை வகைப் படுத்தியுள்ள வனப்பும் தமிழுணர்வைப் போற்றுவது இவருடைய நோக்கம் என்பதைத் தெரிவிக்கின்றன. மூல நூலாசிரியரான திருவள்ளுவரின் கருத்தைக் காட்ட இவர் முயலுகிருரே யொழிய, தம்முடை அறிவாற்றலைக் காட்ட முயலாமையே மணக்குடவர் உரையின் தனிப்பெருஞ் சிறப்பாகும்.

**நாராயணன் பட்டாதித்தன்**

சோழப் பேரரசன் இராசராசனுடைய வீரவரலாற்றைக் கூறும் நூல் ஒன்று கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றது. அதற்கு **இராசராச விசயம்** என்பது பெயர். அதனை நாராயணன் பட்டாதித்தன் இயற்றியதாகத் தெரிகிறது. திருவிழாக் காலத்தில் கோயிலுக்கு வரும் மக்களுக்கு இரவு நேரத்தில் இந்நூல் படித்துக் காட்டப்பட்டது. மக்கள் புரிந்து கொள்ளத் தக்க மொழியாகிய தமிழிலேயே இந்நூல் இயற்றப் பட்டிருந்ததாகக் கொள்ளலாம். மறைந்து போன தமிழ் நூல்களுள், இந்நூலும் ஒன்ருகும்.

**கல் காட்டும் தமிழ் இலக்கிய வளம்**

சோழப் பெருமன்னர்களின் கல்வெட்டுகள் ஆயிரக்கணக்கில் நமக்குக் கிடைத்துள்ளன. அவற்றுள் பழகு தமிழும், இலக்கியத் தமிழும் இணைந்தும் இழைந்தும் உறவாடுகின்றன.

[8] அருணசலம், மு,: தமிழ் இலக்கிய வரலாறு, பத்தாம் நூற்ருண்டு. பக். 149.



படம் 1. கேரளாந்தகன் (தஞ்சைப் பெரிய கோயிலின் தலைவாயில்)



படம் 2. தஞ்சைப் பெரிய கோயில் - பொதுத் தோற்றம்



படம் 3. தஞ்சைப் பெரிய கோயில் விமானம்
(பின்புறத் தோற்றம்)




படம் 5. பிச்சாடனமூர்த்தி (தஞ்சைப் பெரிய கோயில்)



படம் 6. ஆடவல்லானும் சிவகாம சுந்தரியும்



படம் 7. ஆடல் மகள் (தஞ்சைப் பெரிய கோயில் ஓவியம்)



படம் 8. இராசராசனும் கருவூர்த் தேவரும்
(தஞ்சைப் பெரிய கோயில் ஓவியம்)

பெரிதும் பேச்சுமொழி அமைப்பில் அவை பொறிக்கப்பட்டுள்ளன. எனினும், அவற்றிடையே கவின்மிகு கற்பனையோடு அமைந்த நயமிகு நற்றமிழை நாம் காண முடிகிறது.

முதலாவதாக, இராசராசனுடைய மெய்க்கீர்த்தி, கல்வெட்டுகளில் பயிலும் தமிழில் புதியதொரு திருப்பத்தை உண்டாக்கிற்று எனலாம். அகவலோசையும், சிறுபான்மை கலியோசையும் கலந்து அமைக்கப்பெற்றது மெய்க்கீர்த்தியாகும். எளிய தமிழில், ஆனால், கலைநயம் பொதுளக் கருத்துகளை எடுத்துரைப்பது மெய்க்கீர்த்தி.[9]

இராசராசனுடைய காலத்திய கல்வெட்டுகளில் தமிழ் மொழியின் சிறப்புமிக்க இயல்புகளை எடுத்துரைப்பது திருக்கோவலூர் வட்டத்தில், கீழூர் வீரட்டானேசுவரர் கோயிலின் திருவுண்ணாழிகைக்குத் தெற்கு—கிழக்கு—வடக்குப் புறச் சுவர்களில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டாகும். இராசராச சோழனின் இருபத்தேழாம் ஆட்சியாண்டில் இக் கல்வெட்டுப் பொறிக்கப் பட்டிருக்கிறது. இப் பேரரசனிடம் அதிகாரியாகப் பணிபுரிந்தவன் கம்பன் மூவேந்த வேளான் என்பவனாவான். அவன், கீழூர் வீரட்டானேசுவரர் கோயிலுக்குச் செய்துள்ள திருப்பணிகளையும், நிறுவிய நிவந்தங்களையும் இக் கல்வெட்டு எடுத்தியம்புகிறது.

இக் கல்வெட்டு அழகிய அகவற்பாவில் அமைக்கப்பட்டுள்ளது. சோழப் பெருங்குடியின் மாட்சிமிகு வரலாற்றை மிக எளிய சொற்களைக் கொண்டு, சொல் நயமும் பொருள் நயமும் சிறந்து விளங்குமாறு இந்த ஆசிரியப்பா இயற்றப்பட்டுள்ளது. இராசராசனின் பெற்றோரையும் அவன் பிறப்பையும்பற்றி இக் கல்வெட்டுக் கூறும் செய்திகளை நாம் வேறோர் இடத்தில் கண்டோம்.

சங்ககாலப் புலவரான கபிலர், வள்ளல் பாரியின் மகளை[10] மலையமானுக்குத் திருமணம் செய்துவைத்த பின்னர், தம் நண்பனின் பிரிவைத் தாங்கொணாது, முன்னர்

இடையில் காட்சி நின்னோடு
உடனுறை வாக்குக பாலே!

(புறநா. 236)

[9] இதன் விளக்கத்தை 81 ஆம் பக்கத்தில் காண்க.
[10] இக்கல்வெட்டில் பாரிக்கு ஒரே மகள் இருந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளதைக் கருதுக!

என்று வேண்டியதற்கிணங்கத் தீக்குளித்து இறந்தார். அவ்விடத்தில் நடப்பட்ட கல் ஒன்று இருந்தது என்றும் அதைக் **கபிலக்கல்** என்றும் இக் கல்வெட்டு அறிவிக்கிறது.

வன்கரை பொருது வருபுனற் பெண்ணைத்
தென்கரை யுள்ளது தீர்த்தத் துறையது
மொய்வைத் தியலு **முத்தமிழ்** நான்மைத்
தெய்வக் கவிதைச் **செஞ்சொற் கபிலன்**
**மூரிவண் டடக்கைப் பாரித னடைக்கலப்**
**பெண்ணை மலையற் குதவிப் பெண்ணை**
யலைபுனல் அழுவத் தந்தரிகடிஞ் செல
மினல்புகும் விசும்பின் வீடுபே றெண்ணிக்
கனல்புகுங் **கபிலக் கல்லது**.........[11]

(67-75)

என்னும் பகுதி பண்டைத் தமிழகத்தில் வீறுடன் விளங்கிய பேரருளாளன் பாரியின் மகளுடைய சோக வரலாற்றையும், பண்டைத் தமிழ்ச் சான்றோனின் நன்றியுணர்வுமிக்க உள்ளத்தின் இயல்பையும் நமக்கு எடுத்தியம்புகிறது. இராசராசன் காலத்தில் சங்ககால மன்னர் வரலாறு மறக்கப்படவில்லை என்பதை இதனால் நாம் அறிய முடிகிறது.

இப் பாடலில், நயமிகு சொல்லாட்சிகள் நிறைந்து காணப் படுகின்றன. அவற்றுள்

பக்தர்தம் பாடல் பயின்றது **முத்தமிழ்**
**நாவலர் நாற்கவி நவின்றது** (101-102)

என்னும் பகுதியும்,

**ஒப்பத் திருவனையவர்** முப்பத் திருவர்
**பாடல் பயின்ற நாடக** மகளிர்க்கும் (213-214)

என்னும் பகுதியும் இங்குக் குறிப்பிடத்தக்கன. இத்தகைய விழுமிய பாடலை இயற்றிய புலவன் யாரென்பதே தெரியவில்லை. தன்னுடைய இலக்கியப் படைப்பிலே தன்னுடைய உள்ளத்தையும் புலமைத் திறத்தையும் புலப்படுத்திய புலவன், புகழொளியில் தன் பெயரை மறைத்துக் கொண்டு விட்டான். இத்தகைய புலவர் பெருமக்கள் பலர், பேரரசன் இராசராசன் காலத்தில் வாழ்ந்திருக்கலாம்.

[11] S. I. I., Vol. 7; No. 863.

## தொகுப்புரை

தமிழக வரலாற்றில் முதன் முதலாக ஒரு பேரரசை நிறுவிய பெருமை இராசராசனுக்குரியதாகும்; துங்கபத்திரை முதல் ஈழம் வரை ஆற்றல்மிகு பேரரசை அவன் நிறுவினன்; அதை அப்படியே தன் மைந்தனிடம் ஒப்படைத்துவிட்டுச் சென்றான். இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் முஸ்லீம்கள் ஊடுருவிக் கொண்டிருந்த நேரத்தில், தென்னகத்தில் வலிமை வாய்ந்த பேரரசை நிறுவியதோடு அல்லாமல், அதை நன்கு கட்டிக் காத்தான் இராசராசன்.

அவனுடைய போர்க்கள வெற்றிக்கும் ஆட்சித்துறை சீர்த் திக்கும், அவனுடைய அஞ்சா நெஞ்சமும் வினைத் திட்பம் வாய்ந்த ஆளுமையுமே காரணமாகும். குடிமக்களின் நலன் நாடிய கோமானாகவும், வினைத்திட்பம் வாய்ந்த ஆட்சியாளனாகவும் ஒரு மாவீரன் விளங்கமுடியும் என்பதை மெய்ப்பித்துக் காட்டிய மாமேதை இராசராசனாவான்.

இந்திய வரலாற்றில், மௌரியப் பேரரசிற்குப் பிறகு திறமை மிக்க மையக் குவிமுக ஆட்சியமைப்பை நிறுவியவன் சோழப் பேரரசன் இராசராசனே எனக் கூறினால், அது மிகையாகாது. வலிமை மிக்க நடுவண் ஆட்சியமைப்போடு உரிமை வாய்ந்த ஊராட்சி முறையை நிலைநிறுத்தி, முடியாட்சியில் குடியாட்சி முறை கால் கொள்ள, வழி வகுத்த பேரறிவாளன் இராச ராசன்.

விடவேண்டிய நேரத்தில் விட்டு, விரட்ட வேண்டிய நேரத் தில் விரட்டிப் பகைவர்களை வென்று வாகை சூடியவன் இராச ராசன்.

பௌத்த சமயத்தினை ஆசியாவின் பல பகுதிகளில் பரப்பி யவன் அசோகன்! ஐரோப்பா முழுவதிலும் கிறித்துவ சமயத்தைப் பரப்பியவன் சார்லமேன்! 'மைவைத்த கண்டன் நெறியன்றி, மற்றோர் நெறிகருதாத் தெய்வக் குடிச் சோழன்' இராசராசன்! அவன் சைவ சமயத்தின் திருமறையைப் போற்றிக் காத்து உலகிற்கு வழங்கினன். இவ்வருஞ் செயலால் அவனைச் **சைவ சமயக் காவலன்** என உலகம் போற்றுகிறது.

இராசராசன் முத்தமிழும் தமிழ் மறையும் தழைத்தோங்கச் செய்த மன்னர் மன்னன்! உலகம் கண்டு வியக்கத்தக்க கலைக் கோயிலைக் கட்டி, காலத்தை வென்ற கலைக்கோ! சமயப்

பற்றும் சான்ருண்மையும் மிக்க பண்பாளன்! அவனுடைய புகழ் ஒளியில், தமிழ்ப் பண்பாட்டின் சிறப்பியல்புகள் புத்தொளியுடன் பிரகாசிக்கின்றன. தமிழக வரலாற்றில் அவனுடைய திருப்பெயர் பலர் புகழ் செஞ்ஞாயிருக[12] ஒளிர்கிறது. இந்திய வரலாற்றில் அவனுடைய திருப்பெயர் பொங்கிவரும் பெரு நிலவாகப் பொலிவுறுகிறது! உலக வரலாற்று ஏட்டில் அவனுடைய திருப்பெயர் வீறுடன் விளங்கும் விண்மீனுகச் சுடர் விடுகிறது!

[12] இராசராசனை, கலிங்கத்துப் பரணியின் ஆசிரியர் 'உதய பானு' (201) என்று போற்றியுள்ளமை இங்குக் கருதத்தக்கது.


இராசராசனின் பேரரசு
கி-பி-1014
மேலைச்சாளுக்கியரசு
துங்கபத்திரை
கிருஷ்ணா
வேங்கி நாடு
கலிங்கம்
வடபெண்ணை ஆறு
பொத்தப்பிநாடு
வேங்கடம்
காளத்தி
நுளம்பபாடி
கங்க நாடு
தலைக்காடு
பாலாறு
காஞ்சி
தக்கோலம்
உத்தரமேரூர்
தென்பெண்ணை
திருக்கோவலூர்
வெள்ளாறு
காவிரி
திருப்புறம்பயம்
நாகப்பட்டினம்
குடமலை நாடு
அரபிக்கடல்
வங்காளக்கடல்
கொடும்பாளூர்
தஞ்சாவூர்
வைகை
புதுக்கோட்டை
பெரியாறு
மதுரை
பாண்டியநாடு
கொல்லம்
தாமிரவருணி
சேரநாடு
விழிஞம்
காந்தளூர்ச் சாலை
முந்நீர்ப் பழந்தீவுகள்
குமரிமுனை
இந்தியப்பெருங்கடல்
அநுராதபுரம்
ஈழம்
பொலனறுவா
ரோகணம்
பேரரசின் எல்லை.

# பிற்சேர்க்கை 1

## சோழ அரச மரபு

விசயாலயன்
C. 850-71

ஆதித்த சோழன்
கி.பி. 871-907

முதலாம் பராந்தகன்
கி.பி. 907-55

இராசாதித்தியன்
கி.பி. 949

கண்டராதித்த சோழன்
கி.பி. 949-57

மதுராந்தக உத்தம சோழன்
கி.பி. 970-85

அரிஞ்சயன்
கி.பி. 956-57

இரண்டாம் பராந்தகன்
(சுந்தர சோழன்)
கி.பி. 957-70

குந்தவைப் பிராட்டி
(மணம்)
வல்லவரையன் வந்தியத்தேவன்

ஆதித்த கரிகாலன்

இராசராசன்
கி.பி. 985-1016

இராசேந்திரன்
கி.பி. 1012-44

சந்திரமல்லி
(மாதேவடிகள்)

குந்தவை
(மணம்)
விமலாதித்தன்

# பிற்சேர்க்கை 2

## இராசராசன் வரலாற்றில் முக்கிய நிகழ்ச்சிகள்

1. கி.பி. 985 — முடிசூட்டு விழா
2. ,, 988 — காந்தளூர்ச்சாலை கலமறுத்தல் (கடற் போர்)
3. ,, 990 — மலைநாட்டுப் போர்
4. ,, 992 — பாண்டி மண்டலம் சோழப் பேரரசில் இணைக்கப்படுதல்
5. ,, ,, — ஈழப் படையெடுப்பு
6. ,, 998-9 - மேலைச்சாளுக்கியருடன் போர்
7. ,, 998 — வேங்கி நாட்டைக் கைப்பற்றல்
8. ,, 999 — சத்தியாசிரயனை வேங்கி நாட்டிற்கு மன்னனாக்குதல்
9. ,, 1000 — குந்தவை விமலாதித்தன் திருமணம்
10. ,, 1001 — நாடு முழுவதிலும் நிலத்தை அளந்து மதிப்பீடு செய்தல்
11. ,, 1010 — தஞ்சைப் பெரிய கோயிலின் குடமுழுக்கு விழா
12. ,, 1012 — இராசேந்திரனுக்கு இளவரசு பட்டம் சூட்டல்
13. ,, 1013 — முந்நீர்ப் பழந்தீவுகளைக் கைப்பற்றல் (கடற்போர்)
14. ,, 1016 — இராசராசனின் மறைவு

# மேற்கோள் நூற்பட்டியல்

## (1) தமிழ் நூல்கள் (வரலாறு)


அருணாசலம், மு., தமிழ் இலக்கிய வரலாறு, பத்தாம் நூற்றாண்டு, காந்தி வித்தியாலயம், திருச்சிற்றம்பலம், 1972.

இராகவையங்கார், மு., சாசனத் தமிழ்க்கவி சரிதம். இரண்டாம் பதிப்பு, மதுரை, 1958.

இராசமாணிக்கனார், மா., (1) பல்லவர் வரலாறு, கழகம், சென்னை, 1944. (2) பெரியபுராண ஆராய்ச்சி, மாடல் பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1948.

உலகநாத பிள்ளை, எல்., முதல் இராசராச சோழன், தஞ்சை 1941.

கணேசன், சா., இராசராச சோழன், தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை, 1968.

கோபிநாதராவ், து. அ., சோழ வமிச சரித்திரச் சுருக்கம், செந்தமிழ்ப் பிரசுரம், மதுரை, 1925.

சதாசிவப் பண்டாரத்தார், தி. வை., (1) பிற்காலச் சோழர் சரித்திரம், 3 தொகுதிகள், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1958, 1957, 1961. (2) இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுகளும், தொல்காப்பியர் நூலகம், சிதம்பரம், 1961. (3) கல்வெட்டுகளால் அறியப் பெறும் உண்மைகள், தொல்காப்பியர் நூலகம்,சிதம்பரம், 1961.

சுப்பிரமணியன், தி. ந., கங்கை கொண்ட சோழன், விவேக போதினி, மயிலாப்பூர், (n. d.)

சுப்பிரமணியாச்சாரியார், வெ. சு., கரிகாலர் மூவர், ஔவை நூலகம், சென்னை, 1958.

சோமசுந்தரம் பிள்ளை, ஜே. எம்., (1) இராசராசேச்சுரமும் பிற சோழர் கோயில்களும், தஞ்சை, 1958. (2) சோழர் கோயிற் பணிகள், ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1950.

தாணு அம்மாள்., பிற்காலச் சோழர் காலத்துத் தமிழ் இலக்கியம், சென்னைப் பல்கலைக் கழகம், 1936.

திருநாவுக்கரசு, க. த., (1) தமிழர் நாகரிக வரலாறு, தொல் காப்பியர் நூலகம், சிதம்பரம், 1962. (2) இந்திய வரலாறு, மூன்றும் பகுதி (வின்செண்ட் ஸ்மித்தின் தமிழாக்கம்), தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1967.

துரை அரங்கசாமி, மொ. அ., சங்ககாலச் சிறப்புப் பெயர்கள், பாரி நிலையம், சென்னை 1960.

தசிக விநாயகம் பிள்ளை, சி., கவிமணியின் உரை மணிகள், பாரி நிலையம், சென்னை, 1965.

நவரத்தினம், க., தென் இந்திய சிற்ப வடிவங்கள், யாழ்ப் பாணம், 1941.

பாலசுந்தரம், எ., இராஜராஜ சோழன், நாஷனல் பப்ளி கேஷன்ஸ், சென்னை, 1946.

பிள்ளை, கே. கே., தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1972.

வரதராசனார், மு., தமிழ் இலக்கிய வரலாறு, சாகித்திய அக்கா தெமி, புது தில்லி, 1972.

வெள்ளைவாரணனார், க., பன்னிரு திருமுறை வரலாறு, முதற் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1962.

வேங்கடசாமி, மயிலை, சீனி., தமிழர் வளர்த்த அழகுக் கலைகள், பாரி நிலையம், சென்னை, 1956.

ஜகதீச ஐயர், பி. வி., இராஜராஜ சோழன் 1, சீனிவாச வரதாச்சாரி கம்பெனி, சென்னை, 1923.

## இதழ்கள்

செந்தமிழ், மதுரைத் தமிழ்ச்சங்கம், தொகுதி 5. தமிழ்ப் பொழில், கரந்தைத் தமிழ்ச் சங்கம், துணர் 7; மலர் 10.

## கல்வெட்டுகளும் செப்பேடுகளும்

தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள் முதற்பகுதி, பதிப்பு ஆசிரியர் இரா. நாகசாமி, தொல்பொருளாய்வுத் துறை, சென்னை, *1969*.

தென்னிந்திய கோயிற் சாசனங்கள், 3 தொகுதிகள், கீழ்த் திசைச் சுவடி நூலகம், சென்னை, *1953-58*.

பாண்டியர் செப்பேடுகள் பத்து, தமிழ் வரலாற்றுக் கழகம், சென்னை, *1967*.

## (2) Historical Studies in English

Altekar, A. S., A History of Village Communities in Western India, Madras, *1927*.

Appadurai, A., Economic Conditions in Southern India, 2 Vols, University of Madras, *1936*.

Aravamuthan, T. G., *(1)* The Portrait Sculpture in South India, India Society, London, *1931*. *(2)* Kaveri, Maukhari and the Sangam Age, Madras, 1925.

Arokiaswami, M., (1) The Early History of the Vellar Basin, Bombay, *1954*. *(2)* The Kongu Country, Univ. of Madras, *1956*.

Basham, A. L., *(1)* The Wonder that was India, Longmans, Bombay, *1963*. *(2)* Studies in Indian History and Culture, Sambodhi Publications, Calcutta, *1964*.

Bhandarkar, D. R., Ancient India, Carmichael Lectures, Calcutta, *1918*.

Biddulph, C. H., Coins of the Cholas, The Numismatic Society of India, Varanasi, 1968.

Brown, C. J., The Coins of India, The Heritage of India Series, Calcutta, *1922*.

Brown, Percy., Indian Architecture, Vol. *1*; D. B. Taraporevala, Bombay, *1971*.

Buhler, G., (Tr.) The Laws of Manu, The Sacred Books of the East Series, Oxford, 1886.

Coomaraswami, A. K., *(1)* The Dance of Siva, The Sunwise Turn Inc., New York, *1924*. (*2*) Introduction to Indian Art. Munshiram Manoharlal, Delhi, *1969*. *(3)* History of Indian and Indonesian Art, Edward Goldston, London, *1927*.

Desai, P. B., A History of Karnataka, Karnataka University, Dharwar, *1970*.

Desikachari, Sir T., South Indian Coins, Madras, *1933*.

Elliot, Sir Walter., Coins of Southern India, London, *1886*.

Kanakhasabhai, V., The Tamils Eighteen Hundred Years Ago, Saiva Siddhanta Publishing Society, Madras, *1956*.

Kane, P. V., History of Dharmasastra, Vol. *1*; pt. *2*, Bhandarkar Research Institute, Poona, *1930-34*.

Kramrisch, Stella., *(1)* Indian Sculpture, Heritage of India Series, Y.M.C.A.; Calcutta, *1933*. (*2*) The Hindu Temple, *2* Vols. Calcutta University, Calcutta, *1946*. (*3*) The Art of India, The Phaidon Press, London, *1954*.

Krishna Rao, M. V., The Gangas of Talkad, B. G. Paul, & Co; Madras, *1936*.

Krishnamurti, S. R., The Cultural Developments in the Chola Period, Annamalai University, *1966*.

Krishnaswami Aiyangar, S., *(1)* Evolution of Hindu Administrative Institutions, University of Madras, Madras, *1931*. *(2)* Some Contributions of South India to Indian Culture, University of Calcutta, *1923*. *(3)* History of Tiruppati, Vol. *1*., Tiruppati Devasthanam, *1937*. *(4)* Ancient India and South Indian Culture, *2* Vols., Oriental Book Agency, Poona, *1941*. (*5*) Dr. S. K. Aiyangar's Commemoration Volume, Madras, *1935*.

Mahalingam, T. V., *(1)* Banas in South India, Madras, *1956*. *(2)* South Indian Polity, University of Madras, *1967*.

